# குறள்நெறி

மின்னிதழ்:50 மார்கழி-17--தி.பி.2053 சனவரி-1- பொ.ஆ.2023



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



பொறுப்பாசிரியர் -மறைமலை இலக்குவனார் -
இணையாசிரியர் -முனைவர் தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

# திருவள்ளுவர் சமணரே என அறுதியிட்டுரைக்கிறார் அறிஞர் காஞ்சிபுரம் தி.அனந்தநாத நயினார்! உடன்பட்டுரைக்கி றார் தமிழ்த்தென்றல் திரு.வி.க.!!


ஏலாசாரியார்.
(திருக்குறளாசிரியர்)

நூலின் தலைப்பு:
திருக்குறள் ஆராய்ச்சியும் ஜைநசமய சித்தாந்த விளக்கமும்
ஆசிரியர்;காஞ்சிபுரம் தி.அனந்தநாத நயினார்
சென்னை சிரீ ஆதிமூலம் அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது பிரஜோற்பத்தி தை மாதம்

'சமணமுனிவர் ஏலாசாரியார்'தான் திருக்குறள் இயற்றியதாக நம்பப்படுகிறது.
அவரது திருவுருவே இந் நூலில் திருக்குறளாசிரியர் படம் என வழங்கப்பட்டுள்ளது.

திருக்குறள் கடவுள் வாழ்த்தைப் பீடிகையாக் கொண்டு, இந்நூலாசிரியர் அரியதோர் ஆராய்ச்சி நிகழ்த்தித் திருவள்ளுவர் ஜைநர் என்று நிறுவிக் காட்டியுள்ளார். இம்முடிபைத்-- திருவள்ளுவர் நெறி அருணெறி அல்லது பொது நெறிக்குரிய விருஷபதேவர் ஜைநம் என்றும், பிற்காலத்தில் பல திறக் கட்டுக்களால் கட்டுண்டு குறுகிய ஜைநம் அன்றென்றும்-- பாகு படுத்தி ஏற்க என் மனம் ஒருப்படுகிறது. பெண், வீடுபேற்றிற்குத் தடையாயிருப்பவள் என்பதும், பெண்ணை வெறுத்தல் துறவு என்பதும், இன்னோரன்ன பிறவும் பிற்கால ஜைநத்திற் காணப்படுகின்றன. இவைகள் இக்கால ஜைநர்களிடைக் கருத்து வேற்றுமையையும் விளைத்து வருகின்றன.

திருவள்ளுவர், "பெண்ணிற் பெருந்தக்க யாவுள " என்று பெண் பெருமை பேசிய பெரியவர் ; பெண்ணை வெறுத்தல் துறவு என்று யாண்டுங் கூறாத அறவோர்.

பெண்ணுலகைப்பற்றித் திருவள்ளுவர் கொண்ட கருத்தை, என்னால் யாக்கப் பெற்ற "பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை " என்னும் நூலில்' 'இயற்கை யறம்' என்னும் பகுதியில் தெருட்டிக் கூறியுள்ளேன். "பெண் வழிச் சேறல்" என்னும் அதிகாரத்தின் உள்ளக் கிடக்கை அப்பகுதியில் விளங்க ஓதப்பட்டிருக்கிறது.

பிறசமய மறுப்புரைகள் இந்நூற்கண் ஆங்காங்கே காணப்படுகின்றன. மறுப்புரைகள் இக்காலப் போக்குக்கு நலஞ் செய்யா என்பது எனது கருத்து. சமயங்களிலுள்ள பொதுமையையுணர்த்தி, மக்களின் ஒருமைப் பாட்டுக்கு உழைக்கப் புகுதலே காலப் போக்குக்குரிய முறையாகும். இந்நூற்கண் போந்துள்ள பிற சமய மறுப்புரைகள் அவ்வச் சமயப் பௌராணிகத்தைப் பொருளாக் கொண்டெழுந்தனவாகத் தோன்றுகின்றன. பௌராணிகம் ஒரோவழிக் கடந்த வரலாறுகளைக் கூறுவது. ஆதலால் பொருளாராய்ச்சியிற் புகுவோர் பௌராணிகத்தை முற்றுங் கோடல் சிறப்பன்று.

இந்நூலாசிரியர், திருக்குறள் கடவுள் வாழ்த்துக்கு விரிந்த ஆராய்ச்சியுரை காணப் புகுந்து, அதனிடைப் பயன் தரத்தக்க பொருள் பல பெய்திருத்தல் அவாது பன்னூற் பயிற்சியைப் புலப்படுத்துகிறது. ஸ்ரீராமபிரான் கொலை  வினை புரியவில்லை யென்றும், திரௌபதை ஐவர்க்கு நாயகியாய் வாழ்க்கைப்பட வில்லை யென்றும் ஜைந ராமாயண பாரதங்களை ஆதாரமாகக் கிளத்தி வெளியிட்டுள்ள உட்கிடக்கைகளும், இன்ன பிறவுங் கழிபேருவகையூட்டுகின் றன. ஆராய்ச்சி மிகுந்த இந்நாளில் ஜைந ராமாயண பாரதங்களைப் பலர் தொடாதிருத்தல் வருந்தத் தக்கது, பண்டைச் சமண நூல்களை ஆராய்வதால் பல நுட்பங் கள் அறிதல் கூடுமென்று எனது அநுபவங் கொண்டு சொல்கிறேன். நன்முயற்சியில் தலைப்பட்டுழைத்து இந்நூலைத் தமிழுலகிற்குதவிய அறிஞர் - திருவாளர் - தி. அநந்த நாத நயினார் அவர்கட்கு எனது நன்றி யறிதல் உரியதாக, இந்நூலைத் தமிழுலகம் ஆதரிப்பதாக,

சென்னை, 24-7-1930. திரு. வி. கலியாணசுந்தரன்

## கூத்தாட்டு அவைக்குழாம்

--முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம்

கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று . என்பது திருக்குறளில் ஒரு குறள் . " செல்வம் நிலையாது . அது அழிந்துவிடும் என்பது இதன் கருத்து !

இது நிலையாமை என்ற தலைப்பில் வந்த ஒன்று .

இவ்வுலகில் தோன்றும் பொருள்கள் அனைத்துமே அழியக் கூடியன " என்பதே நிலையாமை என்பதின் பொருள் .

" நிலையில்லாதவைகளை நிலைத்து நிற்கக்கூடியவை எண்ணுவது அறிவுடையவர்க்கு இழிவு " என்று முதற்குறளில் கூறிய வள்ளுவர் , அடுத்து " நிலைத்து நில்லாதவைகளில் செல்வமும் ஒன்று " என்று இக்குறளில் கூறுகிறார் .

" குறைந்த செல்வம் ஒருக்கால் அழியலாம் ; நிறைந்த செல்வம் எப்படி அழியும் " நினைப்பவரை நோக்கியே எச்சரிக்கை செய்கிறது இக்குறள் .

எவ்வளவு பெரிய செல்வமாயினும் அழிந்து வீடும் " என்பதை இக்குறளில் உள்ள பெருஞ்செல்வம் என்பது மெய்ப்பிக்கும் . என என்று " அது ஒரு பெருஞ்செல்வம் எப்படி இருக்கும் ? என்ற கேள்விக்கு , வள்ளுவர் , நாடகக் கொட்டகைகளில் மக்கள் திரண்டு வந்திருப்பது போல என்று விடை கூறியிருப்பது பெரிதும் வியக்கக்கூடியதாகும் ,

எங்கெங்கோ மக்கள் பெருங்கூட்டமாகக் கூடியிருக்க அவற்றையெல்லாம் விட்டுவிட்டு , நடப்பதைக் கண்டு மகிழக் கூடியிருக்கும் கலைஞர்களின் கூட்டத்தை மட்டும் பெருஞ்செல்வத்திற்கு உவமையாகக் காட்டியிருப்பது அவரது கலையுள்ளத்தையே நமக்குக் காட்டுவதாக இருக்கிறது .

எப்படி நாடகக் கொட்டகைக்கு மக்கள் ஒவ்வொருவராக வந்து பின் பெருங்கூட்டமாகக் காணப்படுகிறார்களோ , அப்படியே ஒருவனுக்குச் செல்வமும் சிறிது சிறிதாக வந்து , பின் பெருஞ்செல்வமாகத் திரண்டு காட்சியளிக்கும் என்ற கருத்தையும் இக்குறளிற் கண்டு மகிழுங்கள் .

நாடகத்திற்கு வரும்போது தனித்தனியாக வந்த மக்கள் , நாடகம் முடிந்தபிறகு ஒன்று சேர்ந்து ஒரேயடியாய்ப் போய்விடுவதைப் போல , வருங்காலத்தில் கொஞ்சங் கொஞ்சமாய் வந்த செல்வம் , போகுங்காலத்தில் ஒரேயடியாய்ப் போய்விடும் என்ற உண்மையை , இக்குறள் வெகு அருமையாக விளக்கிக்கொண்டிருக்கிறது .
நாடகக் கொட்டகைக்கு மக்கள் வரும்போது , ஒரு வழியில் மட்டும் வந்து போகும் போது பல வழிகளிலும் போய்விடுவதுபோல , செல்வமும் ஒரு வழியில் வந்து , போகும் போது பல வழிகளிலும் போய்விடும் என்ற கருத்தை இக்குறள் மிகவும் அழுத்தமாகவே கூறிக் கொண்டிருக்கிறது .
செல்வம் வரும்போது மகிழ்வும் , போகும்போது சோர்வும் ஒருவனுக்கு எப்படி உண்டாகும் என்பதைக் காட்ட , நாடகத்தைக் காணவரும் மக்களிடம் வரும்போது காணப்படும் மகிழ்வையும் , போகும்போது காணப்படும் சோர்வையும் உவமையாகக் காட்டியிருப்பது பெரிதும் நயமுடைய தாகக் காணப்படுகிறது .
" நாடகத்தை முன்வைத்து மக்கள் கூடுவதும் , பிறகு கலைவதும் போல , ஒருவனது செயலை முன்வைத்துச் செல்வம் சேர்வதும் பிறகு அழிவதும் ஏற்படும் " என்ற கருத்தும் இக்குறளில் புதை பொருளாகப் புதைந்து காணப்படுகிறது .
இக்குறளில் உள்ள போக்கும் என்ற சொல்லில் ம் ஒன்றிருந்து , போவதும் அப்படியே ! என்று கூறுவதால் , வருவதும் அப்படியே , இருப்பதும் அப்படியே , என்றும் கூறாமற் கூறுவதைக் கண்டு மகிழுங்கள் .
நாடகம் காணவரும்போது மகிழ்வு ; காணும் போது இன்பம் ; கலையும் போது சோர்வு உண்டாவதுபோல , ஒருவனுக்குச் செல்வம் வரும்போது மகிழ்வும் , துய்க்கும் இன்பமும் , தொலையும் போது துன்பமும் ஏற்படும் என்ற இக்கருத்தும் இக்குறளில் இல்லாமலில்லை .
ஒரே கூத்தாட்டு அவையை , மக்கள் நிறைந்து காணப்படும் போது நிறைந்த செல்வத்திற்கும் , குறைந்து காணப்படும்போது குறைந்த செல்வத்திற்கும் , கலைந்து போய்விட்ட பிறகு வறுமையின் இருப்பிடத்திற்கும் உவமை காட்டுவது எண்ணி எண்ணி வியக்கக்கூடியதாகும் .
கூத்தாட்டு அவைக்குழாம் ஒன்றல்ல ; இரண்டு . ஒன்று கூத்தாட்டு அவையில் கூடுகின்ற குழாம் ; மற்றொன்று கூத்தாட்டு அவையில் நடிக்கின்ற குழாம் போது என்பது ஆகவே நடிகர்களின் நடை , உடை , நடிப்பு , வேடம் , கதை , காட்சி அனைத்தும் பொய் ; நிலையற்றவை . நாடகம் முடிந்ததும் , அவை அனைத்தும் அழிந்து ஒழிந்து ஒன்றுமே யில்லாமற் போய்விடும் . அது போலவே உனது

செல்வத்தின் தோற்றமும் இருப்பும் அழிவும் என்பதை வற்புறுத்தவே இக்குறள் தோன்றியிருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது .
செல்வம் வருகின்ற வேகத்தைவிட அது அழிகின்ற வேகம் அதிகமாக இருக்கும் என்பது கலைஞர்களைப் பொறுத்தவரையில் 100 க்கு 95 பங்கு உண்மையாக இருக்கும் என்பதை எண்ணியே , வள்ளுவர் கூத்தாட்டு அவையை , குழுவை , உவமையாகக் கொண்டாரோ ? என்றும் எண்ண வேண்டியிருக்கிறது .
செல்வம் நிலையாது ! நிலையாது ! அது என்றும் அது என்றும் உன்னிடம் நிலைத்து நிற்கும் என்றெண்ணி ஏமாற்றம் அடையாதே .
நடைபெறும் அவையில் கூடிக்கலையும் குழுவினரைப்போல ஒருநாள் அது உன்னைவிட்டு ஒழிந்து போய்விடும் . ஆதலின் அறஞ்செய் . அது நல்லது ! என்பது இக்குறளின் திரண்ட கருத்து .
சிலப்பதிகாரத்தின் காலத்திற்கு முன்னுள்ள வள்ளுவர் காலத்திலும் நாடகக்கலை இருந்து வந்திருக்கிறது . நாடகங்கள் பல வள்ளுவர் காலத்தில் நடைபெற்றிருக்கின்றன . நாடகம் பார்ப்பதில் வள்ளுவருக்கும் விருப்பம் நாடகத்தையும் கண்டு களித்திருக்கிறார் . அதுவும் எல்லோருக்கும் முன்னே சென்று அமர்ந்து பார்த்திருக்கின்றார் . முன்புறத்தில் மட்டுமல்ல ; பின் புறத்திலும் திரும்பிப் பார்த்து கூட்டத்தின் பெருக்கைக் கணக்கிட்டு மகிழ்ந்திருக்கிறார் . நாடகம் முடிந்தபிறகு நெருக்கடியில் அகப்படாமல் இருந்து கடைசியாகவே கூத்து கண்டு வெளிவந்திருக்கிறார் . நாடக அவையை கலையை , கலைஞர்களைச் செல்வமாகக் கருதியிருக்கிறார் . வெறுஞ்செல்வமாக அல்ல ; பெருஞ் செல்வமாகவே கருதியிருக்கின்றார் என்ற இதுவும் , இது போன்ற பிறவும் , இக்குறளால் அறிந்து மகிழலாம் . குறளைப் படியுங்கள் , விரும்பிப் படியுங்கள் . மேற்போக்காக அல்ல ; கருத்தூன்றிப் படியுங்கள் . எழுதுவதற்காக அல்ல , பேசுவதற்காக அல்ல , நடப்பதற்காக என்று படியுங்கள் . அப்படிப் படித்தால் அது உங்கள் வாழ்வை வளமாக்கும் .
வாழட்டும் குறள் நெறி !

# உலகின் முதல் புரட்சியாளர் திருவள்ளுவர்

-செந்தமிழ் அரிமா சி.இலக்குவனார்

கி.மு ஏழாம் நூற்றாண்டில் தோன்றிய தொல்காப்பியர் பிறமொழித் தாக்குதலால் தமிழ் அழிந்து போவதைத் தடுத்து நிறுத்தினார். திருவள்ளுவர் அயல் மக்கள் செல்வாக்கால் தமிழ்ப் பண்பாடு அழிந்து போவதைத் தடுத்து நிறுத்தினார். தமிழ்மக்களின் பண்பாட்டில் காணப்பட்ட நல்வாழ்வுக்குப் பொருந்தாதவற்றையும் களைந்தெறிய அறிவுரை கூறியுள்ளார்.

'புரட்சி' என்பது மக்கள் வாழ்வில் காணப்படும் பொருந்தாத மூட நம்பிக்கைக் கொள்கைகளை எதிர்த்துப் போர் முழக்கம் செய்து மாற்றி அமைக்க முயல்வதே ஆகும். பழைமையைப் புரட்டிவிட்டு. அகற்றிவிட்டு - புதுமையைப் புகுத்துவதுதான் புரட்சி. புரட்சி என்றால் பூசலும் போரும், கொள்ளையும், கொலையும் தோன்றுமென்று கருதலாம். மேலைநாடுகளில் அவ்வாறுதான் புரட்சிகள் நடந்துள்ளன. ஆனால் திருவள்ளுவர் செய்துள்ளது எண்ணப் புரட்சியாகும். எண்ணமே செயலின் அடிப்படையாகும். அதனால் செயலின் தாய் எண்ணம் என்பர் மேனாட்டார்.

எண்ணம் திண்ணியதாக உருவானால் செயல்தானே தோன்றிவிடும். எண்ணம் தோன்றுமிடம் மனம், அம் மனம் தூய்மையாக இருக்க வேண்டு மென்று வள்ளுவர் கூறுவதே ஒரு புரட்சியாகும். மனம் தூய்மையாக இருத்தலே அறம் என்கின்றார். மனம் தூய்மையற்று என்ன நற்செயல்கள் செய்தாலும் அவை பயன்படா. வெறும் ஆர்ப்பரவ வேட்கைக்கு உரியனவாகிவிடும்.

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்
ஆகுல நீர பிற(குறள் 34)

என்பதை நோக்குமின்.

எவ்வகையினும் சாதியாலோ நிறத்தாலோ பொருளாலோ வேறுபாடு அற்று வாழ்ந்த தமிழ் மக்களிடையே சாதி வேறுபாடுகள் புகத்தொடங்கின. அச்சாதி வேறுபாடுகள்

இன்றும் அகன்றுவிடவில்லை. மக்களை அலைக்கழித்து வருகின்றன. வள்ளுவர் அன்றே “பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்” என்றார்.

தமிழ்நாட்டில் இரக்கத்திற் சிறந்து அருள் உளம் கொண்டு, மக்களுக்கும் பிற உயிர்களுக்கும் தொண்டாற்றுகின்றவர்களை அந்தணர் என்று அழைத்து வந்தனர். அவர்களே மக்களின் தலைவர்களாகவும் மதிக்கப்பட்டனர். வெளிநாட்டிலிருந்து வந்த சிலர் தம்மைப் பிறப்பால் உயர்ந்தவராகக் கூறிக் கொண்டு அந்தணர் என்றும், ஐயர் என்றும் அழைத்துக்கொண்டனர். ஆனால் செயலில் வன்கண்மை பூண்டு தம் கூட்டத்தினர் அல்லாதவரை ஒடுக்கியும் இழித்தும் விலங்கினும் கீழாக நடத்தி வந்தனர். அதனால் வள்ளுவர் அந்தணர் யார் என்று விளக்கம் கொடுத்துப் போலி அந்தணர்களைப் புறக்கணிக்க வழி கோலினார்.

அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ் வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான் (குறள் 30)

என்று முழக்கம் விடுத்துள்ளமை காண்க.

ஒருவனுடைய ஏற்றத்தாழ்வு அவன் போன பிறவியில் செய்துள்ள புண்ணிய பாவங்களுக்கேற்பவே உண்டாகும். சிலர் பல்லக்கில் (அக்காலத்தில் மகிழுந்து இல்லை) ஏறிச் செல்கின்றனர் என்றால். அவர்கள் போன பிறவியில் புண்ணியம் செய்தவர்கள் ஆவார்கள்; அதனைச் சுமந்து செல்பவர்கள் போன பிறவியில் பாவம் செய்தவர்கள் ஆவார்கள் என்று கூறி வந்தனர். இக்கூற்று மிகமிகக் கொடியது; உண்மைக்கு மாறுபட்டது. இன்று காண்கின்றோம். அறஞ்சாரா நெறியில் அளவுகடந்து பொருளீட்டியவர் அழகார்ந்த வியன் உந்தில் ஆர்ப்பரவுடன் செல்கின்றனர். அறநெறி கோடாது வாழ்கின்றவர் அடக்கமாக நடக்கின்றார். வியன் உந்தில் வீறு தோன்றச் செல்லுகின்றவர் புண்ணியம் செய்தவர் என்றும், கால் நோவ நடந்து செல்லுகின்றவர் கடும் பாவம் செய்தவர் என்றும் கழறுதல் பொருந்துமா? பொருந்தாது அன்றோ?

ஆகவே திருவள்ளுவர்,

அறத்தாறு இதுவென வேண்டா; சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை. (குறள் 37)

எனச் சினந்து உரைத்தார். இதன் உண்மைப் பொருள்: பல்லக்கில் ஏறியிருப்பவரையும் அதனைச் சுமந்து செல்பவரையும் காட்டி இதுதான் அறவழியென்று கூறற்க என்பதாகும். பிற்காலத்தார் அவ்வுண்மைப் பொருளை மறைத்து வேறுவகையாகக் கூறி விட்டனர். ஏனெனில் உண்மைப் பொருளை அறிந்த மாந்தர் பல்லக்கில் செல்லுபவரை வாளாவிட்டுவிட மாட்டார் என்று அஞ்சியே அவ்வாறு கூறினார்.

உண்மைப் பொருளுணரின் பல்லக்கில் செல்லுபவரைக் கீழே இறக்கிப் பல்லக்கைச் சுக்குநூறாக உடைத்துத் தள்ளி விடுவரன்றோ.

கொடுத்தல் நன்றுதான். ஆனால் ஆளறிந்து கொடுக்க வேண்டும். சிலருக்குக் கொடுத்தால்தான் வீடுபேறு கிட்டும். வேறு சிலருக்குக் கொடுத்தால் நரகம்தான் கிட்டும் என்றனர். கொடுத்தலால் வீடுபேறு அடைதல் போன்றே பெறுதலாலும் வீடுபேறு அடையலாம் என்ற கொள்கை பரப்பப்பட்டு வந்தது. ஆனால், பழந்தமிழர் கொள்கையோ இதனின்றும் வேறுபட்டது.

“ஈயென இரத்தல் இழிந்தது; ஈயேன் என்றல் அதனினும் இழிந்ததாகும்; கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தது; கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்த தாகும்.” இவ்வாறு கூறி ஒழுகி வந்தனர் பழந்தமிழர்.

திருவள்ளுவர் இத் தமிழ்க் கொள்கையில் ஊறி முதிர்ந்தவர். ஆகவே அவர் கூறினார்,

நல்லாறு எனினும் கொளல் தீது; மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று. (குறள் 222)

பிறரிடம் ஒன்றைப் பெறுவது சிறந்த வாழ்வு நெறியாகும் (யாசகம் புருட இலட்சணம்) என்று சிலர் கூறினாலும் பிறரிடம் ஒன்றைக் கொள்ளுதல் கொடுங்குற்றமே. கொடுப்பதனால் வீடு கிட்டாது எனத் தெரிந்தாலும் கொடுத் தலே நல்ல செயலாகும்.

வீடு (மோட்சம்) கிட்டாது என்றாலும் கொடு; வீடு கிட்டுமென்றாலும் வாங்காதே என்பது எத்தகைய புரட்சிக் கொள்கையாகும் என்பதை எண்ணுமின்!

வேள்விகளைச் செய்து ஆற்றலைப் பெறலாம் - அடைதற்கரியனவற்றை அடையலாம் என்ற கூற்றில் மயங்கி வேள்வியை அறியாத் தமிழ்நாட்டில் வேள்வி செய்தலைப் பெருங் கடனாகச் செய்தனர் சிலர். தமிழரசர்களில் சிலர் எளிதில் எதையும் பெறலாம் என்று எண்ணி வேள்விகளைச் செய்வதற்கு ஊக்கமும் ஆக்கமும் அளித்தனர். பல வேள்விகளைச் செய்த அரசர்க்குப் பல்வேள்வி செய்தோன் என்ற பட்டமும் கொடுக்கப்பட்டது. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பதே சான்றாகும்.

அவ்வேள்விகளில் ஆடு, மாடு, குதிரைகளைக் கொன்றனர். மக்கள் நலன் அடைய மக்களைக் கொல்லுதல் அறமாகுமா? பேரருளாளர் வள்ளுவர் தம் எதிர்ப்புக் குரலை எழுப்பினார். அரச சீற்றத்திற்கு ஆளாவோமே என்று அஞ்சினார் இலர்.

அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத்து உண்ணாமை நன்று. (குறள் 259)

என ஓங்கி முழங்கினார். வேள்விகளைச் செய்யாதே; வீணில் உயிரைக் கொல்லாதே என்பது வியத்தகு புரட்சி அன்றோ? வேந்தரை எதிர்ப்பது அக்காலத்தில் சாகும் தண்டனைக்கு ஆட்படுத்துமே!

மகளிரின் உயர்வுக்காகப் போராட்டம் தொடங்கிய முதல் புரட்சியாளரும் வள்ளுவரே. பெண்களின் சமநிலைக்காக அவர் கூறியுள்ள கருத்துகள் இன்றும் என்றும் பொன்போலப் போற்றத்தக்கன. மனைவியை வாழ்க்கைத்துணை என முதன்முதலாக அழைத்தவரும் அவரே. கணவனும் மனைவியும் நண்பர் போன்று வாழ்தல் வேண்டும் என்று கட்டுரைத்தவரும் அவரே. ஆண் மகனுடைய ஒழுக்கத்திற்குப் பெண்மகளை எடுத்துக்காட்டாகக் கூறியவரும் இப்பெரியரே.

ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு. (குறள் 974)

என்பதை நோக்குக. இல்லதென் இல்லவள் மாண்பானால்? உள்ளதென் என்று எல்லாம் மனைவியால்தான் என மகளிரை உயர்த்திக் கூறினார். இவ்வாறு மகளிரை உயர்வுபடுத்தும் வள்ளுவர், மகளிரைச் சிறுமைப்படுத்தினால் வாளாயிருப்பாரா?

சிலர் தம் மனைவியின்பால் ஐயங்கொண்டு தாம் இல்லாத காலத்தில் கெட்டுவிடுவாள் என்று அஞ்சி, தன் இனிய நல்வாழ்வுத் துணையைக் காவலுக்கு ஆட்படுத்தினர். வீட்டினுள் பூட்டி வைத்தனர். மகளிர் விரும்பின் எக்காவலையும் கடந்து எதனையும் செய்யும் ஆற்றலுடையவர். இதனை அறியாது ஏன் அவர்களைச் சிறுமைப்படுத்திச் சிறையிட வேண்டும்? அவர்களே தம்மைக் காத்துக் கொள்வர். ஆதலின் திருவள்ளுவர் ஆடவரை நோக்கிச் சிறைகாக்கும் காப்பு என்ன செய்யும்? “மகளிர் நிறைகாக்கும் காப்பே தலை” என்று கழறினார்.

மக்கட் பேறு ஏற்றுக்கு என்ற வினாவுக்கு விடையாகப் பரிமேலழகர் கூறுகின்றார் :

“புதல்வரைப் பெறுதல், அஃதாவது இரு பிறப்பாளர் மூவரானும் இயல்பாக இறுக்கப்படும் கடன் மூன்றனுள், முனிவர் கடன் கேள்வியானும், தேவர் கடன் வேள்வியானும் தென்புலத்தார் கடன் புதல்வரைப் பெறுதலான் யாம் அல்லாது இறுகப்படாமையின், அக்கடன் இறுத்தற் பொருட்டு நன் மக்களைப் பெறுதல். ஆகவே மக்களின் கடன் தென்புலத்தார்க்குக் கடன் செலுத்துதல் ஆகும் என்று நம்பி வந்தனர் என்று தெரிகின்றது.”

தென் புலத்தார் என்பவர் பிதிரர் ஆவார். படைப்புக் காலத்து அயனால் படைக்கப்பட்டது கடவுட்சாதி. அவர்க்கிடம் தென்திசையாதலின் ‘தென் புலத்தார்’ என்றார். இவ்வாறு கூறுபவர் பரிமேலழகர்.

‘பிதிரர்’ என்பார் இறந்து போன முன்னோர் அல்லர் என்பது அவர் கருத்து. ஆனால், இன்று பெற்றோர் இறந்து போனால் அவரை நினைத்து அவர்தாம் பிதிரர் என்று கருதி அவர்தம் மக்கள் அவர் இறந்த நாளில் புரோகிதரை அழைத்துப் பொன்னும் பொருளும் கொடுக்கின்றனர். இதனை திதி, திவசம், சிரார்த்தம் என்றெல்லாம் அழைப்பர். மக்கள் தம் தந்தைக்குச் செய்யும் கடன் இதுதான் என்று இன்றும் பலர் கருதுகின்றனர்.

ஆனால் வள்ளுவரோ இதனை ஏற்றுக் கொண்டார் இலர். வெளிப்படையாகவே மறுத்துள்ளார்.

மகன் தந்தைக்கு ஆற்றும்உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்எனும் சொல் (குறள் 70)

என்று முழங்கினார்.

மகன் தந்தைக்குச் செய்யும் கடனாவது எல்லா வகையாலும் சிறந்து விளங்கும் இவனைப் பெறுவதற்கு இவன் தந்தை என்ன தவம் செய்தானோ? என்று உலகத்தார் சொல்லும் சொல்லை உண்டாக்குதல் ஆகும் என்பது இக் காலத்திற்கும் எக்காலத்திற்கும் பொருந்துமன்றோ?

# பேராசிரியர் சி.இலக்குவனாரின்” வள்ளுவர் வகுத்த இல்லறம்”

இலக்குவனார் திருவள்ளுவன்

தமிழ்ப்போராளி பேராசிரியர் முனைவர் சி.இலக்குவனார், தொல்காப்பியம், சங்க இலக்கியம், திருக்குறள் முதலியவற்றை மக்கள் இலக்கிமாக மாற்றியவர்; சொற்பொழிவுகள், மாலை நேர வகுப்புகள், விடுமுறைக்கால வகுப்புகள், நூல்கள், இதழ்கள் வாயிலாக இலக்கியங்களின் மூலம் தமிழ் மொழியின் தொன்மை, இலக்கியச் சிறப்பு, பண்பாட்டுச் செழுமை, நாகரிக வளமை முதலியவற்றை மக்களின் உள்ளங்களில் பதித்தவர். “வள்ளுவர் கண்ட இல்லறம்” நூல் மூலம் இல்லறத்தின் சிறப்பை அவர் எடுத்துரைத்தார். அவற்றுள் சிலவற்றை நாம் பார்ப்போம்.

**இல்லத் தலைமைக்குரியவர்கள் பெண்களே!**

பெண்ணுரிமையைப் போற்றிப் பெண்களுக்கான தலைமையை வலியுறுத்தியவர் இலக்குவனார். “இல்லாளோடு கூடி வாழ்தலே இல்வாழ்க்கை எனப்படும். இல்லாள் என்பது வீட்டிற்குரியாள் எனும் பொருளைத்தரும். இல்லான் என்பதோ ஒன்றும் இல்லான், வறியன் எனும் பொருள்களைத் தரும். ஆதலின், இல்லத் தலைமைக்குரியவர்கள் பெண்களே எனத் தமிழ் முன்னோர் கருதியுள்ளனார் என்றும் பெண்ணினத்தின் முதன்மையைப் போற்றி வாழ்வியலில் அவ்வினத் தலைமையையும் ஏற்றுள்ளனர் என்றும் தெளியலாம். இல்லறம் செம்மையுற்றால்தான் நாட்டில் நல்வாழ்வு உண்டாகும். பல இல்லறங்களால் அமைந்ததே நாடு. (For, in as much as every family is a part of a state. – Aristotle: Politics; page 78) ( வள்ளுவர் கண்ட இல்லறம் அல்லது காதல் வாழ்க்கை பக்கம் 9)” என இல்லறத்தின் சிறப்பையும் இல்லத்தரசிகளின் உயர்வையும் விளக்குகிறார்.

**மனைவியின் சிறப்புகளைத் தொகுத்துரைப்பதே திருக்குறளின் இல்லறவியல்!**

இல்வாழ்க்கைக்குத் துணையாகிய மனைவியின் சிறப்புகளைத் தொகுத்துரைப்பதே திருக்குறளின் இல்லறவியல் என்கிறார்.

மணந்தவரினின்றும் உள்ளம் பிரிதல் கூடாது என்கிறார். “நல்வாழ்க்கைக்குத் துணையாய் இருக்கக்கூடியவள் மனைவியேயாவாள். அவள் தன் கொண்ட கணவனிடம் நீங்காத அன்புடையவளாய் இருத்தல் வேண்டும். தன் கணவனைவிட அழகிலோ, செல்வத்திலோ, ஆண்மையிலோ, கல்வியிலோ, இன்னும் பிற சிறப்புகளிலோ சிறந்த வேறு ஓர் ஆடவனைக் காணுமிடத்து, அவன்பால் மனம் செல்லுதல் கூடாது. அவ்விதம் செல்லாமல் இருக்கும் நிலைமை திண்மை நிலை உளங்கலங்கா நிலை. தமிழ் நாட்டில் உளங்கலங்கும் நிலை என்பது நினைக்கக் கூடாத ஒன்று. ஆனால், மேனாடுகளில் ஒருவனை மணந்த பெண் பிறிதோர் ஆடவனை ஏதேனும் ஒரு காரணத்தால் விரும்பி முன்பு மணந்தவனிடம் விலக்குப் பெற்றுப் புதியவனை மணந்து கொள்ளுதல் மன்பதை வழக்குக்கும் அறநெறிக்கும் உட்பட்டதாகவே உளது. ஆனால், இவ்வாறு உளங்கலங்கி, மறுமணம் செய்து கொள்ளுதலால் இல்லற வாழ்வில் பல இடர்ப்பாடுகள் தோன்றும். இம்முறைக்கு இடம் கொடுப்பின், நினைந்தவுடன் மணந்து சினந்தவுடனேயோ, முந்தையவரினும் சிறப்பு மிக்கவரைக் கண்டவுடனேயோ பிரிவது என்றால் இல்லற வாழ்வு உடைகலம்போல் உறுதி பயவாது. ஆதலின், காதலித்து மணந்தவரினின்றும் உள்ளம் பிரிதல் கூடாது. அதற்கு உளத்திண்மைதான் வேண்டும். அதுதான் கற்பு எனப்படுகின்றது” என விளக்குகிறார். (வள்ளுவர் கண்ட இல்லறம் அல்லது காதல் வாழ்க்கை பக்கம் 22-23)

**ஆண்களுக்கும் கற்பு வேண்டியதுதான்**

கற்பு நெறி பெண்டிர்க்குத்தானா? ஆடவர்க்கு வேண்டியதின்றோ என வினவி ஆண்களுக்கும் கற்பு வேண்டியதுதான் என்கிறார். “ஆடவனும் தன் மனைவியைவிட அழகு முதலிய சிறப்புகளில் மிக்காள் ஒருத்தியை விரும்பி உளங்கலங்குவானோயானால் அப்பொழுதும் இடர்ப்பாடு தோன்றும். அவள் சீறியெழுதல் கூடும் செற்றமும் கலாமும் மிகுந்து இல்லற இன்பம் சிதைந்து விடும். ஆகவேதான் திருவள்ளுவர் “கற்பு என்னும் திண்மை உண்டாகப் பெறின்” எனப் பொதுப்படக் கூறியுள்ளார். இருபாலாரிடத்தினும் கற்பு நிலை பெறுகின்ற போதுதான் பெண்ணின் பெருமை நன்கு வெளிப்படும்” என்கிறார்.( வள்ளுவர் கண்ட இல்லறம் அல்லது காதல் வாழ்க்கை பக்கம் 25-26)

மகளின் கருத்தறிந்து மணத்துணைவரைத் தேர்ந்தெடுக்கவும்!

“ இன்று பெற்றோரும் உற்றோரும் துணைவனுக்குத் துணைவியையும் துணைவிக்குத் துணைவனையும் ஓடி ஆடி நாடிச் சேர்க்கின்றனர். சேர்க்கும் போது எல்லாப் பொருத்தங்களையும் இனிதே காண முயல்கின்றனர். ஆனால், உள்ளப் பொருத்தம் உளதா என உசாவுவதை ஒதுக்கி விடுகின்றனர். இதனால் துயருறுவோர் ஆண்களினும் பெண்களே பெரும்பான்மையர் ஆகிவிடுகின்றனர். தம் மகளுக்கு வேண்டும் துணிகளையும் கூட மகளின் கருத்தறிந்து அவள் விருப்பப்படியே தேர்ந்தெடுக்கின்றனர். சில ஆண்டுகள், சில திங்கள்கள், சில நாட்கள் பயன்படக்கூடிய பொருள்களைப் பெறுங்கால் மகளின் கருத்தையறியும் பெற்றோர், வாழ் நாள் முழுவதும் துணையாய் இருந்து வாழ்க்கைத் தேரைச் செலுத்துதற்குரிய கடப்பாட்டுடன் உடலும் உயிருமாய் ஒன்றி இயைந்து வாழவேண்டிய ஒருவரைத் தேட வேண்டியபோது மகளைப் புறக்கணிப்பது கொடுமையினும் கொடுமையன்றோ? ஆனால், பண்டு தமிழ்நாட்டில் தம் துணைவரைத் தேர்ந்தெடுப்பதில் மகளிர்க்கு முழுஉரிமை அளிக்கப்பட்டிருந்தது. இதனைத் தொல்காப்பியமும் சங்க இலக்கியங்களும் நன்கு வெளிப்படுத்துகின்றன.” (வள்ளுவர் கண்ட இல்லறம் அல்லது காதல் வாழ்க்கை பக்கம் 31)

**இன்பத்துப்பால் தமிழர் காதலறத்தின் நெறிமுறையே!**

“இவ்வாறு மணவாழ்க்கையை மேற்கொள்வதன் முன்னர்த் தலைவனும் தலைவியும் கண்டு தெளிந்து ஒன்று கூடும் நிலையையும், ஒன்றிவாழும் நிலையையும், அவ்வமயங்களில் இருவரிடையேயும் உண்டாகும் நிலை வேறுபாடுகளையும் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் அஃதாவது புணர்ச்சி, பிரிவு, இருத்தல், ஊடல், இரங்கல் எனும் திணை வகைகளாக இலக்கியங்களில் எழில் மிகக் கூறியுள்ளனர். திருவள்ளுவர் பழந்தமிழ் இலக்கண இலக்கிய மரபை ஒட்டி அக வாழ்வை அழகுறத் தீட்டியுள்ளார். வாழ்வைப் புலப்படுத்தும் இலட்சியமாகவும் இலக்கியம் வெளிப்படுத்தும் வாழ்வாகவும் கூறப்பட்டுள்ள இன்பத்துப்பால் தமிழர் காதலறத்தின் நெறிமுறையேயன்றி, வடவர் முறையைப் பின்பற்றியதன்று. இது வடமொழி நூலான காம சூத்திர மொழி பெயர்ப்போ தழுவிய ஒன்றோ அன்று. திருக்குறள்

இன்பத்துப்பாலையும் வடமொழியின் காமசூத்திரத்தையும் ஒப்ப நோக்குவார்க்கு இவ்வுண்மை எளிதிற் புலனாகும்.” (வள்ளுவர் கண்ட இல்லறம் அல்லது காதல் வாழ்க்கை பக்கம் 32-33)

இன்பத்துப் பால் ஒப்புயர்வற்ற இலக்கியக் காட்சிகளாக அமைந்துள்ளது.

“இன்பத்துப் பால் காதலரின் உறவு முறையை விளக்கப் போந்ததாயினும், காதலர்கள் இன்னின்னவாறு நடந்துகொள்ள வேண்டுமென்று விதிமுறையில் கூறாது, அவர்களையே நம்முன் நிறுத்தி ஒழுகச் செய்து விடுகின்றது. அதனாலேயே, இப்பகுதி ஒப்புயர்வற்ற இலக்கியக் காட்சிகளாகவும் அமைந்து கற்போர் உள்ளத்தைக் களிப்புக் கடலில் ஆழ்த்தும் பான்மையைதாய் உள்ளது.” (வள்ளுவர் கண்ட இல்லறம் அல்லது காதல் வாழ்க்கை பக்கம் 33)

உழைப்பிற்கும் உரிமை வாழ்விற்கும் மதிப்பளிக்கும் திருவள்ளுவர்

“தம்இல் இருந்து தமதுபாத் துண்டற்றால்

அம்மா அரிவை முயக்கு.””

“அம்=அழகிய; மா=மாமை நிறம் பொருந்திய; அரிவை=நங்கையது; முயக்கம்=புணர்ச்சி யின்பம்; தம்இல் இருந்து=தமக்குரிய வீட்டிலிருந்து கொண்டு; தமது பாத்து=தாமே உழைத்துத் தேடியதை இல்லாதார்க்குப் பங்கிட்டுக் கொடுத்துத் தமக்குரிய பங்கை; உண்டு அற்று =உண்டதனால் அடையும் இன்பத்தை ஒக்கும்.

காதலியுடன் கூடிப் பெறும் இன்பத்தைத் தனக்குரிய வீட்டில் தனக்குரிய பங்கை உண்பதனால் உண்டாகும் இன்பத்திற்கு ஒப்பிடுவது உழைப்புக்கும் பிறர்க்கு ஈதலுக்கும் உரிமை வாழ்வுக்கும் திருவள்ளுவர் எவ்வளவு மதிப்புக் கொடுக்கின்றார் என்பதைப் புலப்படுத்துகின்றது.

பிறர் வீட்டிலிருந்து கொண்டு பிறர் உழைப்பால் வருவதை உண்பதில் இன்பம் காண இயலாது என்பதையும் அவர் அறிவுறுத்துகின்றார்."(வள்ளுவர் கண்ட இல்லறம் அல்லது காதல் வாழ்க்கை, பக்கம் 49-50)

**திருக்குறளின் கற்பியல் உயர்ந்த இலக்கியம்**

தலைவன் பால் தலைவி கொண்டுள்ள உயர் பேரன்பும், தலைவன் தலைவிபால் கொண்டுள்ள தணியாக் காதலும் நன்கு சொல்லோவியப் படுத்தப்பட்டு உயர்ந்த இலக்கியமென அறிந்தோர் போற்றத்தக்க வகையில் அமைந்துள்ளமை பயின்று பயின்று இன்புறத்தக்கது. (வள்ளுவர் கண்ட இல்லறம் அல்லது காதல் வாழ்க்கை, பக்கம் 80)

மக்கட்பேறு இன்றியாமையாதது

இப்பொழுதெல்லாம் தற்பாலுறவுகள் பெருகி வருகின்றன. இதன் மூலம் மக்கட்பேறுகளுக்கு முற்றுப்புள்ளி இட்டு வருகின்றனர். மக்கட்பேறு தமிழர் நெறி என்பதைத் திருவள்ளுவர் மூலம் இலக்குவனார் விளக்குகிறார்.

"காதலால் பிணிப்புண்டு காதலனும் காதலயும் நாடறி நன்மணம் செய்து கொண்டு ஊடியும் கூடியும் இன்பம் நுகர்ந்து வாழுங்காலை மக்களைப் பெறுதல். திருமணத்தின் விளைவுதான் மக்களைப் பெறுதல். மக்களினம் அற்றுப்போகாமலிருத்தற்கும் நாடு நாடாகவே சிறப்புறுதற்கும் மக்கட்பேறு இன்றியாமையாதது. மக்களின்றேல் நாடு ஏது? ஆட்சி ஏது? கலை ஏது? பண்பு ஏது? ஆதலின் மக்களைப் பெற்றுத்தான் மனையறம் காத்தல் வேண்டும்.

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே."

எனத் தொல்காப்பியர் கூறியுள்ளமையும் காண்க." (வள்ளுவர் கண்ட இல்லறம் அல்லது காதல் வாழ்க்கை, பக்கம் 200)

புதல்வர் தொடர்பான ஆரியக் கொள்கை தமிழர் வாழ்வியல் நெறிக்கு உடம்பாடன்று

தென்புலத்தார் கடனிறுத்தற்கும், ‘புத் என்னும் நரகத்தைக் கடத்தற்கும் புதல்வரைப் பெறல் வேண்டும் என்னும் கொள்கை தமிழர் வாழ்வியல் நெறிக்கு உடம்பாடன்று. (வள்ளுவர் கண்ட இல்லறம் அல்லது காதல் வாழ்க்கை, பக்கம் 200)

முடிவுரை

இவ்வாறு இருபதாம் நூற்றாண்டுத் திருவள்ளுவர் எனப் போற்றப்படும் பேராசிரியர் சி.இலக்குவனார் திருக்குறள் உணர்த்தும் இல்லறச் சிறப்பை நமக்கு இனியதாக எடுத்துரைக்கிறார்.

கற்புநிலை என்று சொல்ல வந்தால் இரு

கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம்

என்று இன்றைக்குப் புரட்சிக் கவி பாரதியார்(பெண்கள் விடுதலைக்கும்மி: 17-18) சொல்லியதே பழந்தமிழர் நெறி எனத் திருவள்ளுவரின் திருக்குறள் மூலம் நமக்கு விளக்கியுள்ளார். திருவள்ளுவரின் திருக்குறள் தரும் கற்பியல், உடலுறவு சார்ந்ததாக இல்லாமல் உள்ள உறவு குறித்த உயர்ந்த இலக்கியம் என்பதைச் சிறப்பாக விதந்தோதியுள்ளர்.

இலக்குவனார் வழியில் இல்லறச்சிறப்பை உணர்ந்து நல்லறம் நடத்துவோம்!

# குறள்நெறி

மின்னிதழ்:51 தை-2--தி.பி.2054 சனவரி-16- பொ.ஆ.2023





நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்





பொறுப் பாசிரியர் -மறைமலை இலக்குவனார் -
இணையாசிரியர் -முனைவர் தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல



**அழ பகீரதன்**

**செருக்கற்புலம்,சுழிபுரம்**

குறள்நெறி தந்த இலக்குவனார் வழி
அறம்சார் பணியில் ஆண்டிரண்டு தேறி
திறம்எனப் போற்ற அறிவினைப் பரப்பி
திருவள்ளுவ முப்பால் தகுந்த அறிஞர்
தீட்டியநல் ஆய்வுகள் செறிந்த இதழாய்
இணைய வழியில் பெற்றோம் மகிழ்ந்து

செம்மொழி தமிழில் தொல் இலக்கியமாய்
ஈரடியில் வாழ்வின் விளக்கமாய் அமைந்து
தம்மொழி எதிலும் புலப்பட விரிந்துலவித்
தரணியில் எங்கும் குறள்நெறி பரவுதே!
பன்னா டெங்கும் தமிழின் பெருமையை
நன்றே இயம்பிடும் குறள்நெறி இதழே!

இன்பம் ஒன்றே இலக்கென களவியலும்
ஒன்றிய வாழ்வே தொடர்ந்திட கற்பியலும்
நன்றே இயற்ற இணையராய் இல்லறமும்
இனமாய் கூடுகையில் அரசியல் நெறியதும்
ஈற்றில் துறவுநிலை தூயதாய் ஆக்கலும்
ஈட்டிய நெறியாய் தந்தது குறள்நெறியே!

கற்றதற்குத் தக நிற்கவென இயம்பிய
குறள்நெறி கற்றுக் குவலயத்து மாந்தர்
அறம்சார் வாழ்வில் ஒப்ப எவரையும்
திறம்எனக் கண்டு நட்பு பூண்டே
ஒழுகிடு வாழ்வில் பண்பாடு தன்னை
ஓம்பல் வேண்டுவதே குறள்நெறி என்போம்

**அழ.பகீரதன்,ஓய்வுநிலை வங்கியாளர்**
**இலங்கை,கவிஞர்,ஆசிரியர்,எங்கள் முற்றம்**
**யாழ் மாவட்ட செயலாளர்,தேசிய**
**கலைஇலக்கியப் பேரவை,இலங்கை**



**மலர்மாமணி பெ.இளஞ்செழியன்**

குறள்நெறி இதழே! உன்றன்
கொள்கைக்கே இணையே திங்கே
மறவர் இலக்குவ னாரின்
மாத்தமிழ்ப் போர்வாள் நீயே!
அறநெறி புகட்ட வந்த
அறிவான மேடை நீதான்!
பிறநெறி மனுக்கூட் டத்தார்
பித்தத்தை நொறுக்கு வாய்நீ!
மறைமலை எனது நண்பர்
மலையினும் உரமு டையார்!
நிறைமதி போல்வார்,எந்த
நிலையிலும் தளரா நெஞ்சர்!
குறையெலாம் ஒழிவ தற்கே
'குறள்நெறி' தருகின் றாரே!
சிறைப்பட்டுக் கிடக்கும் நம்மோர்
சிறப்பினை மீட்டெ டுப்பார்!
தகவுடை அறிஞர் பல்லோர்
தகுதுணை யாக உள்ளார்!
தகத்தகாயக் கட்டு ரைகள்
தருகின்றார்! குறளா சானைச்
செகமெங்கும் எடுத்துச் செல்வோம்!
சிந்தனை வளர்ப்போம்! தீமை
புகுமெனில் மிதிப்போம்! தீயோர்
புளுகினைப் புதைப்போம் தீயில்!

குறள்நெறி மின்னிதழுக்கு இரண்டு ஆண்டு நிறைவு.குறள்நெறிக்கு அறுபது அகவை.



## வள்ளுவம் பரவவேண்டும்

## புலவர் இரா. இளங்குமரன்

தமிழன் பெருமை உரைத்தற்குத்
தக்க தேதும் உண்டேயோ?
அமுதம் எந்தம் மொழி என்றால்
'ஆஆ" உலகில் எத்துணைப்பேர்
அமுத மொழியில் திளைக்கின்றார்?
அளக்க வேண்டாம்" எனச் சொல்லி
உமிழாக் குறையாய்ப் பழிக்கின்றார்.
உள்ளம் நைய அம்மம்மா! 1

'ஆண்ட மொழியெம் மொழி' என்றால்.
அழகாம் உங்கள் மொழி'யென்று
மாண்ட மொழிக்காய் வாழ்வாரும்
மட்டம் தட்டப் பார்க்கின்றார்.
ஆண்டு வந்த அன்னியரோ
"அடிமை ஆகிக் கிடந்தீரே!
வேண்டும் இந்தப் புக மென்று
விரைவாய் வாயை அடைக்கின்றார்.

'பழமை மொழியெம் தமிழென்றால்,
'பழமைக் கென்றோர் புகழுண்டோ?
மொழியில் இளமை முதுமையெனும்
முரட்டுப் பேச்சால் பயனுண்டோ?
விழுப்ப மான அறிவியல்கள்
விரிந்த ஆய்வுப் பெருநூல்கள்
எழுந்த துண்டோ உம்மொழியில்"
என்றே குடு வைக்கின்றார் 3
"உலகம் வியக்கும் இலக்கண நூல்
உடையோம் உணர்மின்" என்றாவே.
"புலம்ப வேண்டாம் புகழுடையிர்!
புதைய லாக இருந்தாலும்
பலவாய்க் கட்டுப் பாடுகளைப்
படைத்து மொழியைச் சிறையிட்டீர்
இலகும் பெருமை இதுதானோ",
என்றும் புலம்ப ஆளுண்டே! 4
மொழியைத் தவிர்த்துவளத்தாலோ,
முயற்சி ஊக்கம் இவற்றாலோ
கொழிக்கும் செல்வம்
கொடைவண்மை
கூர்த்த மூளை இவற்றாலோ
எழுச்சி கிளர்ச்சி இவற்றாலோ
ஏதும் போட்டி போடற்கு
வழியே இல்லை உலகோடு
வாய்த்ததேதும் உண்டேயோ? 5

6. "உலகக் குன்றில் ஒரு தாமாய்
உயரத் துயரே நின்றிருந்து
புலமைத் தலைக்கோல்
தனைப்பெற்றுப் பொருந்தும்
அறத்தைப் புகன் றுள்ள
தலைவர் பெருமான் வள்ளுவனார்
தனிநூல் உடையோம்'"
எனச்சொன்னால்
தலையைத் தாழ்த்தி நிற்கின்றார்,
தடையொன்றுரைக்க வழியற்றே

7 திருவள் ளுவத்திவ் சிறப்பாலே
திகழுந் தமிழன் நன்றியுடன்
பெருகுஞ் செல்வம் எனப்பேணிப்
பெரிதும் அதனைப் பரப்புதலே
உரிய கடனாம் இதைவிட்டால்
உலகப் புகழை அடை தற்காம்
அரிய வழியை இழந் தவனே;
ஆய்வுப் பேறும் இழந் தவனே!
(குறள் நெறி 15-1-1964 பக்கம்
இரண்டு)

**ஐம்பத்தொன்பது**
**ஆண்டுகளுக்கு முன்பு**



முத்தமிழ்க் காவலரின் முத்துப்பந்தல்

## மலர்க குறள் நெறி!

-முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம்

சான்றாண்மை என்பது தமிழர் நெறி.அது தமிழ்மக்களின் சொந்தச் சொத்து. மனிதரிடத்து காணப்பெறுகின்ற உயர்ந்த குணங்களிலெல்லாம் மிகச்சிறந்து விளங்கும் ஒன்றே ‘‘சான்றாண்மை’’ எனப்பெறும்.

இது இன்று மறைந்து வருகின்றது. உலகம் செழிக்க வேண்டுமாயின் சான்றாண்மைத்தன்மை மறுபடியும் மலர்ந்தாக வேண்டும். அதற்குரிய ஒரே வழி குறள்நெறியைப் பரப்புவதே.

அப்பெரும் பணியை இன்று மலரும் "குறள் நெறி" விரைந்து செய்யும் என நம்புகிறேன்.

இன்று சட்டமன்றத்தில் திருவள்ளுவரின் படம் இடம் பெற்றிருக்கின்றது. இது போதாது. திருவள்ளுவர்நெறி இடம் பெறவேண்டும். ஆட்சி செய்பவர் உள்ளத்திலோ, அண்டை மாநிலத்திலோ மட்டுமல்ல இந்தியா முழுவதுமே இந்நெறி பரவ, தமிழக அரசு முயலவேண்டும். இதற்குரிய முயற்சியை இன்று வெளிவரும் "குறள் நெறி’’ எளிதிற் செய்யலாம்.

இத் தைத் திங்கள் முதல் நாளில் திருவள்ளுவர் தொடர் ஆண்டு 1995 எனப்பிறந்திருக்கின்றது. இன்னும் 5ஆண்டுகள் சென்று பிறக்கின்ற தைத்திங்கள் முதல் நாளில் திருவள்ளுவர் தொடர் ஆண்டு 2000 எனப் பிறக்கும். அந்த ஈராயிர ஆண்டு விழாவை இந்தியா முழுவதும் கொண்டாட தமிழக அரசு முயல் வேண்டும். இதற்குரியதைச் செய்ய இன்று மலரும் "குறள் நெறி" இப்போதிருந்தே முயன்றாகவேண்டும்.

குறள் தோன்றிய, சங்கந் தோன்றிய மதுரையிலிருந்து தோன்றும் இக் 'குறள்நெறி" நன்கு தழைத்து தமிழகம் மட்டுமின்றி, பிற நாடுகளிலும் குறள் நெறியைப் பரப்பி, சிறப்படையவேண்டும் என வாழ்த்துகிறேன்.

நாடுசெழிக்க, மொழிவளர, மக்கள் நல்வாழ்வுவாழக் குறள் நெறி நழைத்தாகவேண்டும்.

வாழட்டும் தமிழ் இனம்! வளரட்டும் குறள் நெறி!



# வாழ்வு நெறி

--டாக்டர் வ.சு.ப. மாணிக்கம்

பலருக்கு ஆராய நூல் வேண்டும், சொற்பொழிவாற்றக் கருத்து வேண்டும் என்பதற்காகத் திருவள்ளு திருக்குறளை இயற்றவில்லை. எல்லாரும் வாழ வேண்டும்; எப்படி வாழ்விப்பது என்ற தலையாய நோக் கமே திருக்குறட் பிறப்பிற்குக் காரணம். இந்நோக்கம் எல்லாக் குறள்களிலும் வெளிப்படக் காணலாம். மிகக் கீழானார்க்கும் உயர்வுண்டு; இயல்பாகவுள்ளவர்க்கும் மேலுயர்வு உண்டு; மிகவுயர்ந்தார்க்கும் மேன்மேலு யர்ச்சியுண்டு என்ற நம்பிக்கையைத் திருக்குறள் நமக்கு ஊட்டுகின்றது.

தாழ்ந்தாரைப் பார்த்துச் சோர்வடைய வேண்டாம் எனவும், உயர்ந்தாரைப் பார்த்து அமைதியடைய வேண் டாம் எனவும் ஊக்கமும் ஆக்கமும் தருவது திருக்குறள். எல்லார்க்கும் பொதுவான அறங்களைக் கூறுவது குறள் என்று சொல்லி வருகின்றோம்.  இது எவ்வளவு தவறான கருத்து? எவ்வளவு வீழ்வான கருத்து? பொதுவறம் கூறாது அவரவர்க்குப் பொருத்தமான அறங்கூறுவதே குறள். இதுவே குறளின் தனிச்சிறப்பு. பொதுவறம் செயற்படுமா? பொதுமடம் துப்புரவுப்படுமா?

‘’நிதி மிகுத்தவர் பொற்குவை தாரீர், நிதி குறைந்த வர் காசுகள் தாரீர், அதுவுமற்றவர் வாய்ச் சொல் அரு ளீர்" என்று பொருள்நிலைக்கு ஏற்ற அறம் பாரதியார் கூறியிருப்பதை அறிவோம். அதுபோல் உலகுபுகழ் வள்ளுவர் ஒவ்வொருவரையும் தனித் தனியாக முன்னேற்ற வேண்டி அவரவர் செய்வதற்கு ஏற்ற அறங் கூறியுள்ளார். அறத்திற்காக அறம் எழுதவில்லை அவர். இவ்வுண்மையை இப்போது நாம்தெளிந்து வருகின்றோம். யாரையும் முன்னேற்றிவிடவல்ல.து முப்பால் என்பதனை ஊரறிய உலகறியத் தெளிவிக்க வேண்டும். 'என்நிலைக்கு ஏற்ற அறம் இந்நூலில் உண்டு; ஆதலால் எனக்கும் முன்னேற்றம் உண்டு' என்னும் மெய்ந்நம்பிக்கையோடு திருக்குறளைப் படியுங்கள்.(15-1-1964-குறள் நெறி)



## குறள்நெறிக்கு அறுபது ஆண்டு

### 15/1/1964 ஆம் ஆண்டு வெளிவந்த

### குறள்நெறி இதழின் தலையங்கம்

மலர் 1 | திருவள்ளுவராண்டு1995 தை 2 (15-1-64) | இதழ் 1

வள்ளுவர் நெறியில் வையகம் வாழ்க

## நமது குறிக்கோள்

மக்கள் அனைவரும், கல்வி. அறிவு. ஒழுக்கங்களிற் சிறந்து இன்பவாழ்வு எய்தி உறுபசியும், ஓவாய் பிணியும், செறுபகையும் சேராது. என்றும் மக்களாகவே வாழ்தல் வேண்டும். இந்நிலையை இனிதிற் பெறுவதற்கு வழிகாட்டுவதே குறள்நெறி ஆகும்

தெய்வப்புலவர் திருவள்ளுவர் யாத்துள்ள திருக்குறள் நெறியில் மக்கள் ஒழுகு வரேல், மாநிலத்தில், போரும் பூசலும் அற்று, 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' எனும் கோட்பாடு நிலைத்து, 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனும் பண்பு சிறந்து. அன்பும் அறனும் அரசோச்சும்; அச்சமும் அவலமும் கனவிலும் உளவாகா. மொழிவழி நாடுகள் அமைந்து, ஆள்வோரும் ஆளப்படுவோரும் இன்றி, படையெடுப்பும் முற்றுகையும் நீங்கி, மக்கள் நன்மைக்காக மக்களால் ஆளப்படும் மக்களாட்சி மாண்புற்று விளங்கும். ஆகவே நாட்டு மக்களை நல்லறமாம் குறள் நெறியில் வாழச்செய்வதே நமது குறிக் கோளாகும். இது நிறைவேற யாம் ஆற்றும் தொண்டுக்கு ஒல்லும் வகையால் உதவுமாறு அன்போடு வேண்டுகின்றோம்.

*வாழ்க தமிழ்மொழி: வளர்க குறள்நெறி*
*உழவர் திருநாள்; புலவர் பெருநாள்*
*மக்கள் மகிழ்நாள்; வண்டமிழ்ப் பொங்கலில்*
*எடுக்கும் சூளுரை இன்தமிழ் போற்றலே.*
*பொங்குசு பாலே! பொலிக நல்வளம்!*
*பசியும் பிணியும் பகையும் நீங்கி*
*வசியும் வளனும் சுரந்து வையகம்*
*குறளநெறி போற்றிக் கூடிவாழ்கவே.*
*குறள்நெறி மலரவும குடியரசோங்கவும்*
*ஆற்றுவோம் தொண்டே அனைவரும் வம்மின்:*
*போற்றுவோம் இறையை; பொங்குக இன்பமே!*
*சி.இலக்குவன்*



தாத்தா வ.சுப.மாணிக்கனாரின் கட்டுரை 15/1/1964 இதழில் வெளிவந்ததனை முன் பக்கத்தில் படித்தீர்கள்.இதோ இந்த இதழில் வ.சுப. ஐயாவின் பேரனைப் பற்றியும் பேரன் கட்டுரை பற்றியும் படியுங்கள்.

ஆண்டுதோறும் வெளியிடப்படும் விகடன் இயர்புக் போட்டித் தேர்வு எழுதுவோர், பள்ளி, கல்லூரி மாணவர்கள், பொது வாசிப்பில் ஆர்வம்கொண்ட வாசகர்கள், தங்கள் குழந்தைகளின் பொது அறிவை வளர்க்க விரும்பும் பெற்றோர்கள் என அனைத்துத் தரப்பினருக்கும் பயன்படும் வகையில் உருவாக்கப்பட்டுள்ளது. 2013-ம் ஆண்டு முதல் வெளியிடப்பட்டுவரும் 'விகடன் இயர் புக்' பொது அறிவுத் தகவல் களஞ்சியமாக விளங்குகிறது

இதனை ஆவணக்களஞ்சியம் என்று தமிழில் அழைக்கலாமா?அவ்வாறாயின் விகடன் ஆவணக்களஞ்சியம் 2023 வழக்கம்போலவே பல்துறை வல்லுநர்களைக் கொண்டு பல்வேறு கருப்பொருள்களில் சிறப்புக் கட்டுரைகளைக் கொண்டு வெளிவந்துள்ளது. நம் உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தின் சிறப்புறு பேராசிரியரும் பொருளாதார வல்லுநருமாகிய திரு.சோம.வீரப்பன் அவர்கள் இந்தக் களஞ்சியத்தைத் தொடர்ந்து படித்து வருகிறார்.அவ்வப்போது அவரும் கட்டுரை நல்கிவருகிறார். இந்த ஆண்டுக்குரிய விகடன் ஆவணக்களஞ்சியத்தில் அவரை ஒரு கட்டுரை பெரிதும் கவர்ந்துள்ளது."தெளிந்த நல் அறிவு" என்பது அக் கட்டுரையின் தலைப்பு. சோம.வீ.அவர்களின் உள்ளத்தில் குடிகொண்டுள்ள திருக்குறளின் ஒரு கூறு அக் கட்டுரையில் சிறப்புறப் பகுத்தாயப்பட்டுள்ளது.அதனை எழுதியவர் மிகப் பெரும்புகழ்வாய்ந்த நரம்பியல் அறுவைமருத்துவர் டாக்டர் சுப.திருப்பதி அவர்கள், அவர் ஒரு மருத்துவமேதை என்றால் அவரது தாத்தா நாடறிந்த தமிழறிஞர்;ஆமாம் வ.சுப.மாணிக்கனார் என்னும்- தமிழ்நாடு போற்றும்- தமிழறிஞர்தான் அவரது தாத்தா.இவர் அவரது தம்பிவழிப் பேரான்.

அப்படி என்ன எழுதியுள்ளார் டாக்டர் சுப.திருப்பதி?

‘தெளிந்த நல் அறிவு’ என்னும் தலைப்பைத் தாங்கிய அவரது  கட்டுரை இவ்வாறு தொடங்குகிறது,

“ ‘தெளிந்த நல் அறிவு’ என்பது சி. சுப்பிரமணிய பாரதியின்  வேண்டுதல் வேட்கை. நாம் அறிவுப்பிறப்பினர். அறிவு என்பது நம் வாழ்வியலுக்கு இன்றியமையாதது – அழிவு வராமல் காக்கும் கருவி; எப்பகையும் அழிக்க முடியாறு ஊக்கத்தைத் தற்காக்கும் அரண்.

அந் நெறியானது, எக்காலத்தும் நல்லன பயப்பதாக இருத்தல் வேண்டும், இக்காலச்சூழலில் தெளிவாக இருத்தலும் வேண்டும்.”

முதன்மை மூளை நரம்பியல் அறுவை மருத்துவர் எவ்வளவு தெளிவான நடையில் சுருங்கிய சொற்றொடர்களில் சுவையூட்டும் வகையில் தொடங்குகிறார் பாருங்கள். பதிப்புரிமைச் சட்டத்தை மீறி அக் கட்டுரையை நாம் இங்கே மறுபதிப்புச் செய்வது நம் நோக்கமில்லை;ஆர்வத்தை நிறைவு செய்ய விகடன் ஆவணக்களஞ்சியம்2023 வாங்கிப் படியுங்கள்.

மூளைநரம்பியல் அறுவைவல்லுநர் கேட்கும் வினாக்களைப் பாருங்கள்:

கல்வியும் அறிவும் ஒன்றா?  அறிவு என்றால் கல்வியறிவு மட்டும்தானா?

அறிவு அறிதல் என்பது கற்று அறிதல் மட்டுமா? அவரவர் உணர்வால் கண்டு கொள்ளும் பட்டறிவு மட்டுமா? இவற்றினும் மேலே உண்டா?

என்னும் அடுக்கு வினாக்கள் படிப்போர் சிந்தனைக்கு அறைகூவல் விடுத்து மேலும் சிந்திக்கவும் கற்றனவற்றை மறு ஆய்வுசெய்யவும் தூண்டுகிறதல்லவா?

புகழ்வாய்ந்த இயக்குநர்கள் காமராவை(படப்பதிவுக்கருவியை) நாம் எதிர்பாரா நேரத்தில் எதிர்நோக்காத கோணத்தை நோக்கித் திருப்புவதைப் போலக் கட்டுரையாளர் இப்போது நம் கவனத்தை அப்படியே திருக்குறளின்பக்கம் திருப்புகிறார்.

| | | | |
|---|---|---|---|
| கற்றறிவு | ஊறும் அறிவு | கடனறிவு | செயற்கை அறிவு |
| கேள்வியறிவு | அவை அறிவு | பொருள்காணும் அறிவு | இயற்கை அறிவு |
| கையறிவு | அஞ்சல் அறிவு | ஆயும் அறிவு | உண்மை அறிவு |
| புல்லறிவு | வலியறிவு | மாண்ட அறிவு | மெய்யறிவு |
| காரறிவு | குறிப்பறிவு | சிறந்த அறிவு | உய்யும் அறிவு |
| வாலறிவு | ஒத்தது அறிவு | ஆன்ற அறிவு | உறையும் அறிவு |
| இடன் அறிவு | ஆவது அறிவு | நுண்ணறிவு | செய்ந்நன்றி அறிவு |
| கால அறிவு | ஏதிரதாக் காக்கும் | பேரறிவு | ஒப்புரவறிவு |
| ஆகும் அறிவு | அறிவு | அறிந்த அறிவு | அன்பறிவு |

அடேயப்பா! எத்தனைஅறிவுகளை வள்ளுவர் அடுக்கியுள்ளார்?நமக்கு ஆறறிவு என்கிறார்களே?இவற்றில் ஓரறிவாவது உள்ளதா?அறிதோறு அறியாமை காண்டல் இதுதானா? அடுக்கிவரும் இந்த ஐயங்களுக்குப் படிக்கப்படிக்கத்தான் விடை கிடைக்கும். இத்துணைச் சிறப்புமிக்க மருத்துவரிடம் நாமும் ஒரு கேள்வி கேட்டுவைப்போம். ஐயா! வாலறிவு,காரறிவு என்னும் முரண்களை வள்ளுவர் கூறுகிறார்.இதனைக் கேட்டவுடன் White matter x Grey matter என்னும் முரண் நினைவுக்கு வரவில்லையா?கொஞ்சம் பொருத்தமும் உள்ளதே? என்ன கருதுகிறீர்கள்?

சுப. திருப்பதி,முதன்மை மூளை நரம்பியல் அறுவையியல் மருத்துவர்.
பிறந்தநாள் : 16.11.1973
பிறந்த ஊர்: மதுரை பூர்வீக ஊர்:மேலைச்சிவபுரி
வாழும் ஊர்: திருச்சிராப்பள்ளி
பெற்றோர்: வ.சுப.திரு. சுப்பையா – விசாலாட்சி
மனைவி: அருள்மொழிமக்கள்: சிபி சுப்பையா; நிலா
பள்ளிக்கல்வி: காமகோடி வித்யாலயா, திருச்சிராப்பள்ளி.
MBBS - தஞ்சாவூர் மருத்துவக் கல்லூரி; MCh (Neurosurgery) - மதுரை மருத்துவக் கல்லூரி
சிறப்புப் பயிற்சிகள்: AIIMS, புது தில்லி; KEM மருத்துவமனை, மும்பை;
Fujita Health University, ஜப்பான்; CMC, வேலூர்
PGDMLE (சட்ட மருத்துவம்) - NLSIU, பெங்களூரு

ஆய்வுகள் - மூளை நரம்பியல்; சட்ட மருத்துவம்.
பல தேசிய, சர்வதேச மாநாடுகளில் விளக்கக்காட்சியுரைகள்/ சொற்பொழிவுகள்;
பல மருத்துவ இதழ்களில்/ நூல்களில், கட்டுரைகள்/பாடங்கள்.
பலவித அமைப்பியல்/ மாநாடுகள் பொறுப்புகள்.
மாநில/ தேசிய/ சர்வதேச மருத்துவ அமைப்புகளில் உறுப்பினர்.
இலக்கியம், சமூகவியல் சொற்பொழிவுகள்/கட்டுரைகள்/ செயல்பாடுகள்/ சிறுகதைகள்.'களம்' ஊள்ளிட்ட இலக்கிய/சமூக அமைப்புகளில் உறுப்பினர்.
நிறுவனர், வ.சுப. அறநிலை

வாழ்வியல் செயல் நோக்கங்கள்:
சாலை விபத்துகள் அற்ற இந்தியா,மருத்துவ மாண்பு
மொழியியல்; மரபியல்; மனிதவியல்; உளவியல்; மூளை இயங்கியல் சார்ந்த தொடர் ஆய்வுகள்
திருக்குறள் - செயல் நூல் மட்டுமல்ல, உலக நூல்
பழந்தமிழ் நூல்கள் - பாதுகாப்பு, ஆவணப்படுத்துதல், மறுபதிப்பு, மொழிமாற்றம் ,வாசிப்பு; தொடர் கல்வி
கூடியவரை அறம் சார்ந்த எளிய மனிதநேய வாழ்வு.
போர்கள் அற்ற அமைதியான உலகம். மனிதர்களை இயற்கையை ஒருங்கிணைக்கும் அறிவியல்.

வந்த வழியே ஓடிப் போய்விடு!
மல்லுக்கட்டும் சண்டி மாட்டினைச்
சொல்லிக் கட்டி அடக்கி ஆள்வோம்.
இத்தனை நாளாய் இல்லா தவையா
இந்து இந்தி இரண்டு கொம்புகள்?
எந்த வழியில் எம்மை மிரட்டினும்
வந்த வழியே திருப்பி அனுப்புவோம்!
துள்ளிக் கிட்டே வந்த மாடே!
சல்லிக்கட்டு வீரப் பரம்பரை
திமிலைப் பிடித்துத் திமிரை அடக்கும்!
ஓடிப் போனால் உனக்கு நல்லது!
.



அறிஞர்மு.வ.அவர்களின் வாழ்த்துப்பா

**குறள் நெறி வாழ்க**

அறத்துடன் நற்பொருளும் அன்பும் உரைத்த
திறன்மிக்க வள்ளுவர் தீந்தமிழ் வெல்க
குறள்நெறி வாழ்க குறுநோக் கொழிக
சிறந்தொளிர்க செம்மை நலம்,

*--தமிழ்ப்பேராசிரியர் மு வரதராசனார்*

குறள்நெறி

*மின்னிதழ்:53 தை-18--தி.பி.2054 பெப்புருவரி-1- பொ.ஆ.2023*

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்





## அறிஞர் அண்ணா நினைவுச்சிறப்பிதழ்

## அறிஞர் அண்ணாவிற்குப் பாவியல் வாழ்த்து

டாக்டர். சி. இலக்குவனார் எம்.ஏ.எம்.ஓ.எல்., பிஎச்.டி.

**அண்ணாவின் பெருமை**



உலக முதன்மொழி உயர்தனிச் செம்மொழி
இலக்கணச் செப்பமும் இலக்கிய வளமும்
இயல்பாய்க் கொண்டே இலங்கிடும் தொன்மொழி
கற்போர் தம்மைக் காமுறச் செயும்மொழி
என்றே போற்றிடும் இனிய தமிழ்மொழி
தன்னிடம் சுருங்கித் தாழ்நிலை யுற்றுமே
அல்லற் பட்டே ஆற்றா தழுதிட
“அடிமை களைந்து உரிமை யளிப்பேன்,
அஞ்சுதல் தவிர்க ; அரற்றுதல் விடுக”
என்னு மாப்போல் இன்தமிழ் நாட்டின்
ஆட்சியை ஏற்றுள அறிஞர் பெருமான்
அண்ணா பெருமை அறையப் போமோ?

**அன்புத் தலைவர்**



சித்திரப் பாவையின் செயலற் றிருக்கக்
கேட்போ ருள்ளம் கிளர்ந்தெழு மாறு
சொலுந்திறன் கொண்டே தேர்மில் நெறியில்
மக்களைக் கவர்ந்த மாபே ரியக்கம்
அமைத்து முதல்வராய் அரியணை யேறிய
தலைவர் இவர்போல் தரணியில் உண்டோ?
பகையையும் நட்பாய்ப் பாங்குடன் கருதி
குற்றம் மறந்து சுற்றமாய் ஆக்கிடும்
அன்பில் பெரியார் : அணைத்துச் செல்வதில்
அண்ண னேஇவர் ; ஆதலின் இவரை
வயதில் முதியரும் வாயும் மனமும்
இன்புறும் வகையில் எம்அண் ணாஎன
எவர்உளங் களிலும் இனிதே குடிகொளும்
அன்புத் தலைவராய் ஆட்சி செய்பவர் ;



**தமிழக இலெனின்**

மாறு பட்டோரும் மகிழ்ந்திடு மாறு
கொள்கையை விட்டே குலவுவோர் போன்றே
விட்டுக் கொடுத்தே வேண்டுவன முடிக்கும்
அரசியல் சதுரை அணியாய்ப் பெற்றவர்.
மார்க்சின் நெறியை வையகம் ஏற்க,
திட்டம் தீட்டிச் செயல்முறைப் படுத்திய
உருசியப் பெரியார் உயர்புகழ் இலெனின்போல்
வள்ளுவர் நெறியை வையகம் ஏற்க
உள்ளி உள்ளி உழைத்திடும் திறலர்;



**பசிப்பிணி மருத்துவர்**

முதலமைச் சராக முதல் நிலை யுற்றதும்,
காட்சிக் கெளியராய்க் கடுஞ்சொ லற்றராய்,
பழமை போற்றும் பண்புமிக் குடையராய்,
அற்றார் அழிபசி தீர்க்கும் நெறியில்
எந்த நாட்டிலும் எவரும் கொணரா
ஒருபடி அரிசி ஒருஉரு பாயெனும்
திட்டம் புகுத்தினர் : தீர்ந்தது பசியும்.
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோர் எனும்
உயர்புகழ் பெற்றனர்; உணவினும் சீரிய



**தமிழ்க் காவலர்**

உயிரினும் விழுமிய ஒண்மொழி காக்க
இந்தியாம் அரவு இன்றமிழ் அணங்கைப்
பற்றிச் சுற்றிடா வண்ணம் பயில்தரு
கல்விப் பூங்கா காத்திடும் வேலியாம்
இருமொழித் திட்டம் இயற்றினர் இனிதே !
அகத்து நாட்டில் அவரவர் மொழியும்
புறத்து நாட்டின் புதுமை தெரிய
ஆங்கிலம் எனுமோர் அறிவு மொழியும்
எவர்க்கும் சாலும் ; இம்மொழிக் கொள்கையே.
இந்தியக் கண்டம் இணைந்து திகழும்
வாய்ப்பினை நல்கும் ; வல்லாண் மையால்
விரும்பா மொழியை அரும்பாம் சிறார் தலை



சுமத்தின் பெறுவது சொல்லொணாத் துயரே!
ஒற்றுமை நாடி வேற்றுமை விதைக்கும்
இன்னாச் செயலுக் கிறுதி கண்டார். எங்குந் தமிழே :
எதிலுந் தமிழே ; எல்லாந் தமிழிலே எனும்நிலை ஆக்கினார்.
உலக அரங்கில் உயர்இடம் பெற்றிட,
உலகத் தமிழ்மா நாடுறு துணையாகச்
சிறப்புற நடாத்திச் சேர்த்தனர் புகழை.



**அமெரிக்காவின் அழைப்பு**

போட்டியும் பூசலும் புன்முறைச் செயல்களும்,
நாட்டினை அலைக்கும் நலமல் செய்திகள்
எங்குங் கேட்பினும் இன்றமிழ் நாட்டில்,
அறிஞர் அண்ணா ஆளுந் திறனால்
அமைதியும் ஒழுங்கும் அரியணை வீற்றுள,
என்பதை யறிந்த இருநில மாந்தர்
தத்தம் நாட்டில் தலைவர் அண்ணா
காட்சி தந்து களிப்பினை நல்க
அழைக்க எண்ணவே அமெரிக் காதான்
முந்திக் கொண்டது; எதிலும் முன்நிற்கும்
செல்வச் சிறப்புடை சீரார் திறனால்.



**அண்ணாவின் இசைவு**

உலகப் புகழுடை உயர்பே ரரசியல்
தலைவர் தம்மைத் தம்மிடம் அழைத்து
சிறப்புச் செய்யும் சீர்மிகு ஏல்எனும்
பல்கலைக் கழகம் பாங்குடன் அழைத்திட
அறிஞர் அண்ணா அன்புடன் ஏற்றனர்.



**தமிழ் உரு**

ஆயிரக் கணக்கில் அமெரிக்கா சென்றுளர்.
தமிழராய்ச் சென்று தமிழ்ப்புகழ் பரப்பியோர்
விரல்விட் டெண்ணும் மிகச்சில ரேயே.
தம்புகழ் அறிந்தோர் தமிழ்ப்புகழ் அறிந்திட
ஒல்காப் புகழுடைத் தொல்காப்பியத் தையும்
உலகப் பொதுமறை உயர்திருக் குறளையும்





நெஞ்சை யள்ளும் நீள்புகழ்ச் சிலம்பையும்
தம்முடன் கொண்டே தமிழ்உரு வெடுத்துச்
செல்வது மானவும் தீந்தமிழ் நாட்டினர்
பண்பெலாம் திரண்டு பருவுடல் கொண்டு
அகல்வது போலவும் அன்பர்பல் லாயிரவர்
மீனம் பாக்க விண்வழித் துறையில்
உவகை பொங்க ஒருங்கு திரண்டு
வாழ்த்துக் கூறி வணங்கிகை கூப்பிட

**சொக்கலிங்கனார்**

இன்துணை யாக இனியசொக் கலிங்கனார்
புன்னகை பூத்த பொலிவு முகமும்
அன்பும் பண்பும் அடக்கமும் ஆற்றலும்
தமக்குறு அணிகளாய்த் தாங்கும் தோற்றமும்
கொண்டு அண்ணாவின் குறிவழி ஒழுகிடும்
தனிச்செயல ராகத் தழுவும் நிழல்போல்
உடன்வழி கொள்ள உலகப் பயணம்
ஏப்பிரல் திங்களில் ஏற்றுமே பிரிந்தனர்.
ஞாயிறு பிரியும் நல்மரை மலரென
வாடிய முகமுடன் மகிழ்ந்தே நின்றோம்.
சென்னையின் ஆளுநர் சீர்மிகு ஏல்துரை
உதவிய கொடையால் உயிர்ப்புற் றோங்கிய
பல்கலைக் கழகம் பயின்றஎண் டன்சப் (Hendon Chubb)
பமைத்த அறக்கட் டளையால் அரசியல்
உயர்பேரறிஞரை உவந்து அழைத்து
மாணவர் தம்முடன் மகிழ்ந்து குலவி
உண்டு உறைந்து ஒருசில நாட்கள்
தோழமை கொள்ளும் தூயநல் திட்டம்
அமெரிக்க ரல்லா அரசியல் தலைவர்
இதுவரை எவரும் எய்தினர் அல்லர்.

**அண்ணாவின் சிறப்பு**

அண்ணா பெற்றனர் அத்தகு சிறப்பை
அறிவுடை ஒருவரை அயலரும் போற்றுவர்.

கழக ஆட்சியில்
நாடும் மொழியும் உயர்வுபெறும்!
இலக்குவனர் கருத்து!

சென்னை, பிப் 28— கழகம் பெருவெற்றி பெற்றதைக் குறித்து அறிஞர் அண்ணா அவர்கட்கு பேராசிரியர் டாக்டர் இலக்குவனார் அவர்கள் தந்தி மூலம் வாழ்த்துச் செய்தி அனுப்பியுள்ளார். வாழ்த்துச் செய்தியில் குறிப்பிட்டுள்ளதாவது—

"தனிப்பலமே அரசு அமைக்கும் வகையில் வெற்றி பெற்றுள்ளதை அறிந்து களிப்புக் கடலில் ஆழ்ந்துள்ளோம். தங்கள் தலைமையில் அமையவிருக்கும் அரசு, நாட்டையும் மொழியையும் உயர் நிலைக்குக் கொண்டு செல்லுமென்று நம்புகின்றோம்! வெல்க!"

இலக்குவனாரால் கல்லூரிக்குப் பெருமை!

இலக்குவனார் அவர்கள் புகழ் பெற்றப் பெரும் பேராசிரியர். அவர் எந்தக் கல்லூரியில் பணியாற்றினாலும் அந்தக் கல்லூரிக்குத்தான் பெருமை. தொல்காப்பியத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து அதன் பெருமையை உலகம் அறிந்து கொள்ளச் செய்தவர் இலக்குவனார்.

அவர் இந்தி எதிர்ப்பு இயக்கம் நடந்தபோது வேலையிழந்தார். அவருக்கு நல்லதொரு வேலையாகப் போட்டுத் தரவேண்டும் என்று தீர்மானம் போட்டிருப்பதில் எனக்கு ஒரு புறத்தில் வருத்தம் இருக்கவே செய்கிறது.

இதைக்கூடவா நாங்கள் செய்யமாட்டோம்? இதைக்கூடவா நீங்கள் சொல்லி நாங்கள் செய்ய வேண்டும் என்று நினைக்கிறீர்கள்?

உண்மையைச் சொல்வதானால் இலக்குவனாருக்கு நல்ல வேலை தருவது என்று நாங்கள் தீர்மானித்து இரண்டு மாதமாகிறது.

இருந்தபோதிலும் நீங்கள் இப்படித் தீர்மானம் போடுவது உங்கள் சாமார்த்தியத்தைக் காட்டலாம்!

நாங்கள் கொடைக்கானலில் தீர்மானம் போட்டோம். இலக்குவனாருக்கு நல்ல வேலை கிடைத்தது என்று மாணவர்கள் பாத்தியதை கொண்டாடலாம்.

என்ன இருந்தாலும் உங்கள் அண்ணன் அல்லவா?

நானும் எனது பாத்தியதையை விடுவதாயில்லை! நாங்கள் முன்பே அதுபற்றித் தீர்மானித்தாகி விட்டது.



ஞாயிறு தன்னை நற்குடை மறைக்குமோ?
ஐந்து நாட்கள் அன்புறு தோழராய்
திமோத்தி துவைத்துக் கல்லூரி கொண்டே
பெரும்பே றுற்றதாய் பெரிதும் மகிழ்ந்தது.
மாணவர் குழாமும் மற்றுள அறிஞரும்
பேரா சிரியரும் அவர்தம் பெண்டிரும்
விருந்துகள் அளித்தே விருந்தினைப் பெற்றனர்.
வினாதலும் விடுத்தலும் விரைவாய் இயல
அண்ணா வின்திற னறிந்து மகிழ்ந்தனர்.

**கருத்து விளக்கம்**

இந்தியக் கண்டம் இனிய அமைதியை
நாடி யுழைக்கும் நற்பணிக் குரியது
ஆங்கிலம் ஒன்றே அறிவையும் இணைப்பையும்
இனிதே நல்கும் ; இந்திநல் காது.
இந்தியா முழுதும் இயங்கும் கட்சி
காங்கிர சன்றிப் பிறி தொன் றில்லை
இனியொரு கட்சி ஏற்படல் எளிதோ?
பல்விதக் கட்சிகள் பாங்குடன் இணைந்தால்
கூட்டணி தோன்றிக் கூடி எதிர்க்கலாம்.
மாநிலக் கட்சிகள் மாற்றும் திறனில
மைய அரசினை மாநிலக் கட்சிகள்
தம்இயல் துறந்து தனியொரு நிறமின்றி
பொதுவாய் அமைத்திடல் பொறுக்கிய
கட்சி மக்களைக் கைவிட் டதாகும்"
எனும்நற் கருத்துகள் எடுத்து விளக்கினர்.

**நேருவுக்குப் பின்..**

நேருவின் பின்னர் நீள்பெருந் தலைவருள்
ஒருவரே யாகி உயரிய ஆட்சியும்
பொறுப்பார் தலைமையும் புகழுறு தமிழகம்
பெற்றிடச் செய்த பெருமகன் என்றே
"நகர முழக்கம்" நவின்று புகழ்ந்தது.

**அச்சத்தால் விளைந்த ஆதிக்க வெறி!**

- அறிஞர் அண்ணா

இலக்குவனார் பாராட்டு விழாவில் பேசியது.



**தமிழகச் சிறப்பு**



உழவுத் துறையிலும் உணவுத் துறையிலும்
அறிவன அறிந்து அங்குள மக்களின்
அன்பில் ஆழ்ந்தும் அறிவால் ஆழ்த்தியும்
தமிழகச் சிறப்பைத் தாம்கொண்டு சென்ற
பொருளால், நூல்களால், புகல்திரைச் சுருளால்
உரையால், செயலால் உணர்த்தி மீண்டனர்.

**தமிழகக் குடியரசு**

அமெரிக் காவின் ஆட்சித் தலைவரே
அறிஞரைக் கண்டு அன்பிற் கலந்திலர்.
தமிழகம் தனிக்குடி யரசாய்த் தனது
அறிவுசால் தலைவரை அனுப்பிலை யன்றோ?
தேடி வரும்நாள் சேய்மை யிலின்று.



**சப்பானியச் செலவு**

உழைப்பால் உயர்ந்து ஓங்கிடு சப்பான்
அன்புடன் அழைத்திட அங்குஞ் சென்றே
உழவிலுந் தொழிலிலு முயர் அறி வியலிலுந்
தம்மொழிப் பற்றிலுந் தாளாண் மையிலுஞ்
சிறப்புறு மாற்றைச் சிந்தையில் தேக்கி
இன்றமிழ் நாட்டை எல்லாத் துறையிலும்
உயர்த்துந் திட்டம் உளத்திற் பெற்றே
சென்ற இட மெல்லாஞ் சிறப்பினை எய்தி
நாட்டுக் குறுபயன் நன்கு தெரிந்தே
தாயைக் கூடும் தலைமகன் போல
தமிழ்நா டடைந்தார் ; தண்மதி கண்ட
கடலெனத் திரண்டு களித்தனர் மக்கள்.
பொறாமைத் தீயினர் புழுங்கினர் அகத்தே.

**அண்ணா வாழ்க**

மக்கள் நலனே மாண்புறு கடனாய்த்
தக்கன ஆற்றித் தகவில அகற்றி

என்றும் இனியராய் ஏழைகள் தோழராய்
ஆட்சித் தேரை அணியுறச் செலுத்தி
உலகப் புகழ்பெறும் உயர்நலப் பேற்றுடன்
அறுபதாம் ஆண்டை அடையும் அண்ணா
இளைஞர்க்கு இளைஞராய் என்றும் வாழ்க!
வாழ்க்கைத் துணைவியாம் மகளிர் தலைவியாம்
இராணி அம்மையார் இனிய புரப்புடன்
நின்று வாழ்க ! நீள் தமிழ்ப் பகையை
வென்று வாழ்கவே ! வெல்க தமிழே !



## தமிழ்ப் பண்டிதர்கட்கு!

அறிஞர் அண்ணா

தமிழ்ப் பண்டிதர்களே,

வணக்கம்.

இன்று பெரியார் அவர்கள் தொடுத்துள்ளது புராண இதிகாசப் போரைக் கண்டு தமிழ்க்கலை அழியலாமா? தமிழிலக்கியம், மறையலாமா? என்றெல்லாம் கூப்பாடு போடுகின்றீர்கள். தமிழ்க் கலையை - தமிழிலக்கியத்தை இழந்துவிட, தமிழர் நலத்திற் கருத்திழந்தாரேயன்றி, மற்றையோர் எப்படி ஒப்ப முடியும்? பெரியார் கூட்டத்தார், தமிழர் நலத்தில் கருத்திழந்தவர் என்று யாராவது சொல்ல முடியுமா? தமிழர் முன்னேற்றத்திற்கென அல்லும் பகலும் ஓயாது உழைக்கும் ஒரு கூட்டத்தினர், தமிழ்க்கலைகளை ஒழிக்க முனைகின்றனர் என்றால், அது வியப்பாகவன்றோ இருக்கிறது! தமிழ்க்கலைகளை ஒழிக்க எங்களுக்கென்ன பயித்தியமா? தமிழர் முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ளவைகளைத் தமிழ்க்கலை என்பது எவ்வாறு பொருந்தும்? என்று அவர்கள் கேட்கின்றார்கள். ஆம் உண்மையே. தமிழர்க்குத் தமிழ்க் கலை என்பது சந்தேகமறத் தெரியாவிட்டால், அவற்றைக் காக்கவோ, அவசியம் நேரின் அவற்றிற்கென உயிர் கொடுக்கவோ எப்படி முடியும்? எனக்கும் அதைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆசை எழுந்ததால் இதை எழுத முன்வந்தேன். ஆகையால் கீழ்க்காணும் என் ஐயங்கட்குத் தக்க விடை யளிப்பீரானால், என் போன்ற சந்தேகிகட்கும் தாங்கள் பேருபகாரம் செய்தவராவீர்கள். அதோடு மட்டுமன்று, உங்கள் சிரமம் குறைய, உங்கட்காக நாங்களும் வாதாடுவோம். ஆதலால், இவ் ஐயங்களை

“அநாவசியமானது! குதர்க்கமானது!” என அலட்சியப் படுத்திவிடாமல், பதில் தர வேண்டுகிறேன்.

1. நாம் தமிழர்களென ஒப்புக்கொள்ளுகின்றோம்; தமிழர்க்குரிய கலைகள் யாவை?

2. தொல்காப்பியமும் சங்க இலக்கியங்களுந்தான் தமிழ்க் கலைகளா? அல்லது அவற்றிற்குப் பின்தோன்றிய காப்பியங்கள், புராண இதிகாசங்கள் முதலியவைகளும் தமிழ்க்கலைகளா?

3. தமிழ்க்கலைகளின் லட்சணங்கள் என்ன? அவை தமிழர்க்குப் போதிக்கும் நெறி யாவை?

4. தமிழர்க்கு அறிவைப் போதித்துத், தன்மானத்தையூட்டி, முன்னேற்றத்திற்கு வழிகாட்டும் நூல்கள் என்னென்ன உண்டு?

5. தமிழர்தம் கலைகளில், ஆரியத்தை உயர்வென ஒப்பாத நூல்களோ, அவர்தம் கொள்கைகளைப் புகுத்தாதோ நூல்களோ ஏதேனும் உண்டா? உண்டெனில் அவை யாவை?

6. தொல்காப்பியம் ஓர் ஆரியரால் எழுதப்பட்டதென்று சொல்வதை நீங்கள் ஒப்புகிறீர்களா? அதில் ஆரியத்திற்கு ஆதரவும் உயர்வும் அளிக்கப்பட்டிருக்கிற தென்பதை, நீங்கள் மறுக்க முடியுமா?

7. சங்க இலக்கியங்கள் பலவற்றில், ஆரிய கொள்கைகள் புகுத்தப்பட்டிருக்கவில்லையா? தமிழ்க்கலைகளில் ஆரியத்திற்கு இடமிருக்கலாமா? அவற்றைப்போக்க நீங்கள் ஏதேனும் முயற்சி செய்ததுண்டா? முயல்வீர்களா?

8. தமிழ் எழுத்துடைய நூல்கள் - தமிழரால் எழுதப்பட்ட நூல்கள் யாவும் தமிழ்க்கலைகளாகுமா? ஷேக்ஸ்பியர் நாடகத்தை ஒரு தமிழர் தமிழில் மொழிபெயர்த்தால், அது தமிழ்க்கலையாகுமா? அதேபோல், கிறிஸ்து - இஸ்லாம் ஆகிய பிறமதக் கொள்கைகளைத் தமிழில் மொழிபெயர்த்தால், அவை தமிழர் தம் மதமாகுமா? இலக்கியமாகுமா? இல்லையெனில், ஆரியமதக் கொள்கைகளையும் உணர்த்தக்கூடியதும் அதனோடு தமிழரை இழித்தும் பழித்தும் கூறக்கூடியதுமான புராண இதிகாசங்களைத் தமிழ்க்கலைகள் என்னலாமா? அவை இந்த முறையில் எழுதப்பட்டவையன்று என்பதையாவது நிரூபிக்க முடியுமா?

9. தமிழர்க்குக் கொள்கை என்ன? சைவமும் வைணவமும் சாதியாச்சாரமுந்தானா? அவற்றிற்கு ஆதாரம் என்ன? அவற்றைப் பற்றிய கொள்கைகளை வலியுறுத்தும் நூற்கள், தமிழர்க்குக் கலைகளாகுமா?

10. தமிழரை இழிவுபடுத்தக் கூடியதும், தமிழரின் தன்மதிப்பைப் போக்கக் கூடியதும், தமிழர் தம் அறிவை மாய்க்கக் கூடியதும், தமிழரை மூடநம்பிக்கையில் ஆழ்த்தக்

கூடியதும், தமிழர்க்கு அடிமை நிலையே சதமெனப் போதிக்கக் கூடியதும், தமிழரை - தமிழரல்லாத ஒரு வகுப்பினர்க்கு வேசிமகனாய் இருக்க ஒப்ப வைப்பதும் ஆகிய நூற்கள் தமிழ்க் கலைகளா? இல்லை யெனில், அவற்றை ஒழிப்பதில் நீங்கள் ஏன் குறுக்கிடுகிறீர்கள்?

11. புராண இதிகாசங்கள் மேற்கண்ட இழிவுகளை நமக்கு அளிக்கவில்லையா, இல்லையெனில், தகுந்த ஆதாரத்தோடு கூறுவீர்களா?

12. தமிழர்தம் அறிவை வளர்ப்பதும், அறியாமை மூட நம்பிக்கை, அடிமை இழிவு ஆகியவற்றைப் போக்குவதும், முன்னேற்றத்தைப் போதிப்பதும், தன்மானத்தை ஊட்டுவதும் இன்ப வாழ்வுக்கு வழிகாட்டுவதும், ஆரிய உயர்வை - அதன் விஷத்தை நீக்கக் கூடியதுமாகிய உயர்நெறிகளையே தமிழ்க்கலைகள் கொண்டிருக்க வேண்டும் என்பதை நீங்கள் ஒப்புகின்றீர்களா? அப்படியானால், இவற்றிற்கு மாறான நெறிகளைக் கொண்டுள்ள நூற்களைத் தமிழ்க்கலைகள் அல்லவென்று சொல்லவும், அவற்றைத் தமிழரிடையே செல்வாக்கற்ற நிலையில் ஆக்கவும் முன் வருவீர்களா?

13. ‘ஆரியர் உயர்வு - தமிழர் தாழ்வு’ இதனைப் போதிக்க எழுந்தவைகளே புராண இதிகாசங்கள் என்பதை நீங்கள் ஒப்புகின்றீர்களா?

14. புராண இதிகாசங்கள் ஒழியக்கூடாதென்றால், மக்களிடம் அறியாமை, மூடநம்பிக்கை, அடிமை, தன்மானமற்ற செயல், ஆகியவை நிலைத்திருக்க வேண்டுமென்பதை நீங்கள் ஒப்புகின்றீர்கள் என்பதுதானே பொருள்?

15. தமிழர்க்குச் சாதி பேதம் உண்டா? பல தெய்வ வணக்கம் உண்டா? இல்லையெனில் அவற்றைப் போதிக்கின்ற - ஆதரிக்கின்ற நூற்களைக் கலைகளென்று போற்றுவதேன்?

16. காதல் மணம் இன்பவாழ்வையளிக்கும் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா? பழந்தமிழர் திருமண முறை காதலோடியைந்தது என்று நீங்கள்தானே சொல்கிறீர்கள். அந்த முறை, இன்று சமுதாயத்தில் இகழப்படுவானேன்? அப்படி இகழப்படுவதை நீங்கள் ஆதரிக்கிறீர்களா? இல்லையெனில், விதியின்மேல் பழிபோட்டு விளையாட்டுத் திருமணம் நடைபெற்று வருவதைத் தடுக்க நீங்கள் என்ன செய்தீர்கள்? அத்தகைய திருமணத்தைச் சிறந்ததென்று நடத்திக் காட்டிப் போதிக்கின்ற நூற்களை நீங்கள் போற்றுவதில்லையா?

17. பெண்கள், ஆண்களின் அடிமைகள் - போகக் கருவிகள் என்பதுதான் உங்கள் எண்ணமா? இல்லையெனில், அத்தகைய நிலையைச் சமுதாயத்தில் மேலும் மேலும் வளர்த்து வரக்கூடிய நூற்களை நீங்கள் ஆதரிப்பானேன்? பழந்தமிழர் காலத்தில் இன்றைய நிலைதான் பெண்கட்கு இருந்ததா?

18. ஒரு நாட்டின் வீழ்ச்சிக்கும் தாழ்ச்சிக்கும் புலவர்களே காரணம் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்களா? அப்படியானால், நம் நாடு எந்த நிலையிலிருக்கிறது? ஏன்? அந் நிலையை மாற்ற நீங்கள் இதுவரை என்ன செய்துள்ளீர்கள்? செய்யப் போவரென்ன?

19. தமிழர்கள் 100க்கு 93 பேர் தற்குறிகளாக இருப்பதேன்? தமிழர் தம் அறியாமையைப் போக்குவது தமிழ்ப் பண்டிதர்களின் கடமையல்லவா? அல்லது, அவர்கள் அந்நிலையிலேயே இருக்கவேண்டுமென்பதை நீங்கள் ஒப்புகிறீர்களா?

20. முன்னேற்றம், பகுத்தறிவு, தன்மானம் இவை உமக்கு வேம்பா? இல்லையெனில், அவற்றை மக்களிடம் புகுத்தாதிருப்பதேன்? புகுத்துவோரையாவது முணு முணுக்காதிருக்கின்றீரா?

21. ஆரியக் கோட்பாடுகள் தமிழர்க்கு அவசியமா? இல்லை யென்றால் அதை இந்நாட்டினின்றும் அகற்ற நீங்கள் செய்த காரியமென்ன? இனியாவது செய்யப் போவதென்ன?

22. பழந்தமிழர் வாழ்வு - அவர் தம் புகழ் ஆகியவை சீரழிந்து போவதற்குத் துணையாக இருந்தவர்கள், பண்டிதர்களும் அரசர்களுந்தானே? இன்று தமிழரசர் துணை உங்கட்கிருந்தால், பெரியாரையும் அவர் தம் கூட்டத்தாரையும் - சமணரைச் சைவர்கள் செய்தது போல் - தண்டிக்காமல் விட்டு வைக்கச் சம்மதப்படுவீர்களா?

23. ஆரியப் பாம்புக்குப் பால் வார்த்து, அதனைக் காபந்தோடு வளர்ப்பவர்கள் பண்டிதர்களல்லவா? இல்லையெனில், இத்தனை புராணேதிகாசங்கள் எப்படித் தோன்றின? யாரால் தோன்றின?

24. பழந்தமிழரைக் குறிப்பிடும் போது ‘மறத்தமிழ் வீரர்கள்’ என்ற பெருமையோடு பேசுகிறீர்கள். இன்று அந்த நிலை உண்டா? இல்லையெனில், அதனைப் போக்கியது எது? ஆரியமெனில், அதனைப் போக்க நீங்கள் செய்ததென்ன? அதைப் புகுத்தியுள்ள நூற்களைக் கலைகள் என்று போற்றுவானேன்?

இன்னும் எவ்வளவோ சந்தேகங்கள் எழுகின்றன. விரிவு கண்டால் உங்கட்கு வெறுப்பேற்படும் என்றஞ்சியே இத்துடன் நிறுத்திக்கொள்கிறேன். இவற்றிற்கு உங்களின் நேர்மையான பதில் கிடைக்குமானால், அதனால் எனக்கு மட்டுமன்று, தமிழ் நாட்டுக்கே நல்ல பலன் விளையும் என்பதை வணக்கத்தோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

திராவிடநாடு---8.8.1943

# வள்ளுவர் காட்டும் நோயற்ற வாழ்வு

**அன்பு செயா, சிட்னி, ஆத்திரேலியா.**

மானிட வாழ்க்கைக்குத் தேவையான செல்வங்கள் பல இருந்தாலும் பலர் பொருட்செல்வமே தலையாயதென்று எண்ணிக்கொண்டு, அந்தச் செல்வத்தை தேடிப் பெருக்குவதிலேயே ஓடியோடித் தங்கள் வாழ்நாள் முழுவதும் முனைப்பு காட்டுகின்றனர் என்பதை இவ்வுலகில் காணமுடிகிறது. அப்படிப்பட்ட ஓய்வற்ற வாழ்க்கையின் இறுதிக் கட்டத்தில் தங்கள் உடல் நலம் கெட்டு, தேடிய செல்வத்தை மருந்துக்கும் மருத்துவருக்கும் கொடுக்கவேண்டிய நிலைக்கு உள்ளாகி, அமைதியற்ற வாழ்க்கைக்குத் தள்ளப்படுகிறார்கள். அந்த நிலை நமக்கு வரும் என்பதை காலத்தில் உணர்ந்து கொள்வது அனைவருக்கும் இன்றியமையாத ஒன்றாகும்.

நம் முன்னோர்கள் கூறியதுபோல, நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்பதை உணர்ந்து நாம் ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் நோயின்றி வாழ்ந்தாலே அமைதியான வாழ்க்கையாக அது அமையும். அதுவே நம்மிடம் பெருஞ்செல்வம் இருப்பதற்குச் சமமாகும். அதுவே பயனுள்ள வாழ்க்கையுமாகும்.

அப்படி ஒரு நோயற்ற வாழ்க்கையை வாழ்வதற்காக நாம் எடுத்துக் கொள்ளவேண்டிய வழிமுறைகளையும் முன்னெச்சரிக்கைகளையும் நம் முன்னோர்கள் எடுத்துக் கூறியுள்ளனர். அவற்றில் சிலவற்றை நம் வள்ளுவப் பெருந்தகை அடிக்கோடிட்டுக் காட்டியுள்ளார். அவற்றைச் சற்று உற்று நோக்குவோம்.
வள்ளுவப் பெருந்தகை அவருடைய காலத்திற்கு முன்னரே பல சித்த மருத்துவ நூல்கள் இருந்ததை நமக்கு உணர்த்தி, அந்த நூல்களில் கூறப்பட்ட வாதம், பித்தம், சிலேத்துமம் பற்றிக் குறிப்பிடுகின்றார். வாதம் என்பதன் பொருளில் அடங்கும் வாய்வு என்று நாம் சொல்லுகின்ற வாயுவும், கல்லீரலில் உள்ள ஒரு சுரப்பியில் சுரக்கும் பித்தநீரும், சிலேத்துமம் என்னும் சளியும் நமது உடலில் இருக்கவேண்டியஅளவில் இருந்து குறைந்தாலும், அதிகமானாலும் நமக்கு நோய் வந்து சேரும் என்பதை,

மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று, (குறள் - 941)

என்ற குறளின் மூலம் கூறியுள்ளார்.
சரி அப்படி நோய் வந்தால் மருந்து சாப்பிட்டுக்கொள்ளலாம் என்று நினைப்பவர்களுக்கு,

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும். (குறள் - 435)

என்று, தீங்கு வருவதற்கு முன்பே காக்க முயலாதவனுடைய வாழ்க்கை தீயில் பட்ட தூசி போல் அழிந்துவிடும் என்றும் கூறிச் சென்றுள்ளார்.
அதோடு நின்றுவிடமால், மருந்தே தேவைப்படாத நிலையில் நம் உடம்பைப் பாதுகாக்கின்ற வழியையும் வள்ளுவர் பெருமான் நமக்குக் காட்டியுள்ளார்.

மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின். (குறள் - 942)

என்று, நோய் வந்து சேருவதை எப்படித் தடுக்கலாம் என்ற கேள்விக்கு உபாயம் கூற முனைந்த வள்ளுவர் 'நாம் முன்பு சாப்பிட்ட உணவுப் பொருட்களில் நமது உடம்பு ஏற்றுக்கொள்ளாத பொருள்களை விலக்கிவிட்டு சாப்பிடுதல் அவசியம் என்று கூறுகின்றார். இது allergy என்று ஆங்கிலத்தில் அழைக்கப்படும் ஒவ்வாமையைக் குறிப்பிடுகின்றது. அதற்கு மேலும் ஒரு படி சென்று, முன்பு சாப்பிட்ட உணவு நன்றாக செரித்தபிறகு சாப்பிடுதல் போன்ற ஒழுக்கங்களைக் கடைபிடித்தாலே மருந்து சாப்பிட வேண்டிய நிலைமைத் தவிர்க்கலாம் என்று ஐயன் உணர்த்துகின்றார்.
இதையறிந்த நம் முன்னோர்கள் சில வேளைகளில் உண்ணா நோன்புபைக் கடைபிடித்தல் நமது உடல் நலத்திற்குப் பலனளிக்கும் என்று கூறிச் சென்றுள்ளனர்.
இதையே வள்ளுவர் பெருமானும்,

உண்ணாது நோற்பர் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பானின் பின். (குறள் - 160)

என்ற குறளில் உண்ணா நோன்பிருப்பவர்கள் சிறந்தவர்கள் என்பதன் மூலம் நோன்பிருத்துல் சிறந்தது என்று குறிப்பிடுகின்றார்.
அடுத்து, அளவாக உண்பதின் முக்கியத்துவத்தை வலியுறுத்தும் வள்ளுவர் பெருமான்,

அற்றால் அளவறிந்து உண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு. (குறள் - 943)

என்று, தான் முன்பு உண்ட உணவு செரித்து விட்டதை அறிந்து அதன் பின்னர் உண்பது உடம்பைப் பெற்ற நாம் அதைப் பலகாலம் காப்பாற்றிக் கொள்வதற்கான வழியாகும் என்று எடுத்துரைக்கின்றார். செரித்த உணவே நமது உடல்

செயல்படுவதற்கு இன்றியமையாத தேவையான சக்தியைக் கொடுக்கும் என்று அறிவியலும் கூறுகின்றது.

சரி, உண்ட உணவு செரித்து விட்டது என்று தெரிந்து கொண்டோம், இப்போது அடுத்த வேளை உணவை உண்ணலாம் தானே என்ற கேள்விக்கு,

**அற்றது** அறிந்து கடைபிடித்து மாறுஅல்ல
துய்க்க துவரப் பசித்து. (குறள் - 944)

என்று, முன்பு சாப்பிட்ட உணவு செரித்துவிட்டது, ஆனால் பசி இல்லை அப்படிப்பட்ட நிலையில் பசிவந்த பிறகு மட்டுமே உண்ண வேண்டும், மேலும் முன்பு நமது உடல் ஏற்றுக்கொண்ட அதே வகையான உணவை உண்பதே நல்லது என்று பதிலுரைக்கின்றார்.

நாம் உண்ணும் உணவின் வகையைப் பற்றி மீண்டும் வலியுறுத்தும் முகமாக திருவள்ளுவர்,

மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துஉண்ணின்
ஊறுபாடு இல்லை உயிர்க்கு. (குறள் - 945),

என்று, மேலே குறிப்பிட்டது போல், உணவு முறையில் மாற்றம் செய்யாது உண்டு வந்தால் நமக்குத் துன்பம் தருகின்ற நோய்கள் நம்மை அணுகாது என்று உறுதி அளிக்கின்றார்.

எல்லாம் சரி, பசித்த பிறகே சாப்பிடுகிறேன், என் உடம்பு ஏற்றுக்கொண்ட உணவு வகையையே சாப்பிடுகிறேன், அந்த உணவை அடிக்கடி சாப்பிட்டுக்கொண்டே இருக்கலாமென்று நினைப்பவர்களுக்கு,

இழிவுஅறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபே ரிரையான்கண் நோய். (குறள் - 946),

என்று, சிறப்பான அந்த உணவையும் அளவோடுதான் உண்ணவேண்டும். அப்படிப் பட்டவர்களுக்கு நோயில்லாத இன்பமும் நிலைத்து நிற்கும். அதற்கு மாறாக, அளவுக்கு அதிகமாக உண்பவர்களுக்கு நோயும் அவர்களை விட்டு நீங்காது அவர்களிடம் நிலைத்து நிற்கும் என்பதை விளக்குகின்றார். இந்தக் கருத்தையே, 'அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு' என்று நம் முன்னோர்கள் கூறியுள்ளனர்.

அந்தக் கருத்தையே மீண்டும் வலியுறுத்தும் வள்ளுவர் பெருமான்,

தீஅளவு அன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோய்அளவு இன்றிப் படும். (குறள் - 947)

என்று, பசி என்னும் தீயானது நம்முள்ளே எழும்போது, அந்த தீயைத் தணிப்பதற்குத் தேவையான அளவு மட்டும் உண்ணவேண்டும். அப்படி இல்லாமல், பசியை அடக்கவேண்டும் என்பதற்காகப் பெருந்தீனியாகத் தின்றால், நோய் நொடிகளும் அளவுக்கு அதிகமாக நம்மைப் பற்றிக்கொள்ளும் என்று பரிவுடன் நம்மை எச்சரிக்கின்றார்.

நீதி வெண்பாவில், “ஒரு வேளை உண்பவன் யோகி, இருவேளை உண்பவன் போகி, மூவேளை உண்பவன் வியாதியளானகிய ரோகி, நான்கு வேளை உண்பவன் போகி போகியே அதாவது அவன் உயிர் உடலைவிட்டு விரைவில் நீங்கும்” என்ற பொருளில் கூறப்பட்ட பாடலை இங்கே நினைவு கூர்வது பொறுத்தமாக இருக்குமென்று நினைக்கிறேன்.

ஒருபோது யோகியே ஒண்டளிர்க்கை மாதே!
இருபோது போகியே யென்ப - திரிபோது
ரோகியே நான்குபோ(து) உண்பான் உடல்விட்டுப்
போகியே யென்று புகல்.” (நீதிவெண்பா - 9).

சரி, முன்பு வள்ளுவர் கூறிய அறிவுரைகளை சரியாகச் செவிமடுக்காமல் இருந்துவிட்டோம். நோயும் வந்தவிட்டது. மேற்கொண்டு என்ன செய்யலாம்? மருத்துவரிடம் சென்றால் அவர் என்ன செய்வார்? என்ற கேள்விகள் எழுகின்றன. இதுவரை நோய் வராமல் தடுக்க வழிகளைக் காட்டிய வள்ளுவப் பெருந்தகை, இப்போது நோய் தீர்க்கும் மருத்துவர்களுக்கு சில குறிப்புகளைத் தரும் முகமாக,

நோய்நாடி நோய்முதல்நாடி அது தணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். (குறள் - 948)

என்று, "வந்துள்ள நோயானது என்ன விதமான நோய் என்பதை முதலில் கண்டறியவேண்டும். பின்னர் அந்த நோய் வந்ததற்கான காரணத்தைக் கண்டறிய வேண்டும். அதன்பிறகு அந்த நோயின் தாக்கத்தைத் தணிப்பதற்கான வழிகளைக்

கண்டறிந்து அதற்கேற்ப மருத்துவம் செய்யவேண்டுமென்று” மருத்துவர்களுக்கு அறிவுரை கூறுவதுடன்,

உற்றான் அளவும் பிணிஅளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல். (குறள் - 949)

என்று, மருத்துவம் கற்றவர் நோய்வாய்ப் பட்டவனின் நிலைமையை, அவனுடைய வயது, உடல் பலம், எவ்வளவு காலமாக அவன் அந்த நோயால் பீடிக்கப்பட்டிருக்கிறான், மற்ற பாதிப்புகள் என்னென்ன போன்றவற்றை நன்றாக சீர்தூக்கிப் பார்த்து அதற்குத் தகுந்தாற் போல் மருத்துவம் செய்யவேண்டும் என்று வழிமுறைகளையும் கூறுகின்றார்.

இவற்றையெல்லாம் நமக்கு அறிவுறுத்திய வள்ளுவப்பெருந்தகை, மருந்துக்கான விளக்கத்தை “மருந்து” என்ற அதிகாரத்தின் இறுதிக் குறளில்,

உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்று
அப்பால்நாற் கூற்றே மருந்து. (குறள் - 950),

என்று நோய்க்கான மருந்து, மருத்துவம் என்பது அந்த நோயையை உடையவன், அதனைத் தீர்க்கும் மருத்துவன், அதற்கு உதவுகின்ற மருந்து, நான்காவதாக அந்த மருந்தை அளிப்பவன், சரியாகக் கொடுப்பவன் என்று நான்கு பகுதிகளைக் கொண்டது என்று வள்ளுவப் பெருந்தகை கூறுகின்றார்.

இந்த நான்கு பகுதிகளில் ஒவ்வொன்றிலும் நான்கு கூறுகள் உள்ளதாக பரிமேலழகர் தன்னுடைய உரையில் மிகவும் சிறப்பாக விளக்கியுள்ளார்.

முதலாவதாக, உற்றவனாகிய நோயுற்றவனை எடுத்துக்கொண்டால் - அவனுடைய பொருளுடைமை, மருத்துவர் கூறியதைப் பின்பற்றும் பாங்கு, நோயின் பாதிப்பு எந்த அளவில் உள்ளது என்பதை மருத்துவருக்கு விளக்கக்கூடிய திறமை, மருந்தினால் உண்டாகும் சில சிரமங்களைப் பொறுத்துக்கொள்ளுதல் என்ற நான்கு கூறுகள் உள்ளன. இதிலிருந்து அந்தக் காலத்திலேயே மருந்துகளினால் உண்டாகும் பக்க விளைவுகள் பற்றி நம் முன்னோர்கள் அறிந்திருந்தார்கள் என்பது புலனாகிறது.

இரண்டாவதாக, தீர்ப்பானாகிய மருத்துவனை எடுத்துக்கொண்டால் நோயைக்கண்டு அச்சாமை, தான் கற்றறிந்த மருத்துவத்தில் சிறப்பான அறிவைப் பெற்றிருத்தல், நோய் தீர்க்கும் பணியில் அனுபவம் பெற்றிருத்தல், தன்னுடைய சொல்லிலும் செயலிலும் உண்மையாக இருத்தல். அதாவது, நோயாளியின் உண்மையான நிலையை உள்ளது உள்ளபடி நோயாளிக்குத் தெரிவிப்பதுடன் நோயாளிக்கு நம்பிக்கை அளித்தல் இன்றியமையாததாக ஆகின்றது.

மூன்றாவதாக, மருந்தின் வகையைப் பார்த்தோமானால் நோயின் பல நிலைகளையும் தீர்க்கும் தன்மை, வீரியம் மிகுந்திருத்தல், எளிதில் செலுத்தக் கூடியதாக இருத்தல், நோயின் தாக்கத்துக்கு ஏற்ப பலனளித்தல்.

நான்காவதாக, மருந்தை அளிப்பவன், செவிலியர் போன்றவர்கள் - நோயாளியிடம் அன்பு காட்டுதல், தன்னுடைய சொல்லிலும் செயலிலும் தூய்மையாக இருத்தல், சொன்னபடியே செய்தல், தான் நோயாளிக்குக் கொடுக்கின்ற மருந்தினால் உண்டாகும் விளைவுகளை பற்றிய அறிவுடைமை என்ற நான்கு கூறுகள்.

இவ்வாறு இந்த நான்கு பகுதிகள் ஒவ்வொன்றும் மேலே குறிப்பிட்ட நான்கு கூறுகளை உள்ளடக்கியதாக அமைந்திருக்கவேண்டும். அதுவே மருந்து, மருத்துவம் என்று வள்ளுவர் உணர்த்துவதாக பரிமேலழகர் விளக்குகின்றார்.

இறுதியாக, 'வருமுன்னர்க் காவாதான்- என்று தொடங்கும் குறளில் வள்ளுவர் பெருமான் எச்சரிப்பதை நினைவில் கொண்டு, நோய் வரமால் தடுப்பதற்கான வழிகளைப் பின்பற்றி நாம் அனைவரும் நலமுடன் வாழ்வோம்.

## அண்ணா!எங்கள் அண்ணா!

-மறைமலை இலக்குவனார்

செந்நாப் புலவர் அனைவரும் வாழ்வில்
பண்ணார் தமிழைப் பயின்றதன் நோக்கமே
அண்ணா புகழை அமைவுடன் பாடவே!
ஒளிதிகழ் உதய ஞாயிறாய்த் தோன்றி
இருளில் உறங்கிய தமிழரை எழுப்பி
மருளை நீக்கி மதிபெறச் செய்தார்!
எழுத்துத் திறத்தால் இளைஞரை ஈர்த்தார்!
அடுக்குத் தமிழால் அகன்ற அறிவால்
ஆயிர மாயிரம் அன்பர் திரண்டனர்;
திரைப்படந் தனிலே உரையும் கருத்தும்
புரட்சியைத் தூண்டவே கிளர்ச்சி வகுத்தன;
அரசியல் களந்தனில் சிறப்பிடம் பெற்றார்;
அண்ணா எங்கள் அண்ணா என்றே

அணிவகுத் தெழுந்தனர் அன்புத் தம்பிகள்;
மொழியே விழியாய் முனைப்புடன் போற்றிப்
பழிசேர் இந்தித் திணிப்பை எதிர்த்தார்!
ஓட்டைக் குடிசை ஒடுங்கிய வயிறுடன்
வாட்டம் எய்திய வறியவர் எல்லாம்
கோட்டை செல்லும் பாதை சமைத்தார்!
முன்னைப் புகழை மீட்டிடும் வகையில்
அன்னைத் தமிழ்க்கே அரியணை அளித்தார்!
உலகெலாம் தமிழ்ஒலி ஓங்கிடச் செய்தார்!
உழவுக் கூலியாய் ஒடுங்கிக் கிடந்தவர்
அரசுப் பணிகளில் அமர்ந்திடச் செய்தார்!
சமூக நீதியைச் சமைக்கும் வழியைச்
சால்புறக் கண்டார் பெரியார் வழியிலே!
அடித்தள மக்கள் வசித்திடும் குடிசை
நெருப்பில் எரிந்தும் மழையால் சரிந்தும்
வருந்திடச் செய்யும் கொடுமை போக்கவே
உயர்ந்த மாடிகள் கட்டிக் கொடுத்தார்!
உறைவிடம் அளிக்கும் உயர்பணி யாற்றினார்.
மாற்றுக் கட்சித் தலைவரை மதித்தார்!
ஊற்றிக் கொடுத்தே உடல்நலன் அழிக்கும்
மதுக்கடை தவிர்த்தார்!பதுக்கலை ஒழித்தார்!
அரிசியும் எண்ணெயும் அனைவரும் பெற்றிடப்
பங்கீட் டுக்கடைப் பணிதனை முடுக்கினார்!
அண்ணா புரிந்த ஆட்சியின் மாட்சியை
இந்நாளில்  இந்தியா முழுதும் போற்றுதே!
அண்ணா எங்கள் அண்ணா உம்மை
எண்ணா நாளிலை! எழுதா ஆளிலை!
எம்மைத் தவித்தே ஏங்க விட்டீரே!
ஒருமுறை உமது திருமுகம் கண்டால்
உறுதுயர் மறந்து உவகை கொள்வோம்!
அகன்ற நெற்றியும் அருள்மிகு முகமும்
பொடியால் புடைத்த பொலிவுறு மூக்கும்
குறுகுறு விழியும் குழந்தைச் சிரிப்பும்
வெற்றிலைக் கறையுடன் விளங்கிடும் இதழும்
அணிற்பல் வரிசையும் அன்புப் பார்வையும்
இன்னொரு தடவை கண்டிட ஆசை!
அண்ணா எங்கள் அருந்தமிழ் மன்னா
கண்ணாய்ப் போற்றுவோம் காட்சி தாராயோ!
அண்ணலே வருக! அண்ணனே வருக!
இன்னலைத் தவிர்த்து இன்பமே பெருக
இன்றே வருகவே! இங்கே வருகவே!





# குறள்நெறி

*மின்னிதழ்:53 மாசி-4--தி.பி.2054 பெப்புருவரி-16- பொ.ஆ.2023*

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்







அகமதாபாத்து தமிழ்ச் சங்கத்தில்
திருவள்ளுவரின் சிலை திறப்பு

வள்ளுவர் மாலை – நாட்டியப் பாடல்



தித், தித், தை; தாம் தித், தித், தை;
தித்தக்கு தத்தக்கு தத்த தாம்;
குத்தகிட்டகிண்ண தொங்க தக்குதாம் தொங்க
தங்குகு தங்குகு தங்குகு தித்தாம்
குத்தகிட்டகிண்ண தொங்க தக்குதாம் தொங்க
தாதங்கி தங்கி கிடதக தித்தித் தை
தத் தத் தாம தத்தாம்
திருகிட கிடதக திக்கும்தாரி
அருமறை தந்தவர், உலகப்புலவர்
குறள்நெறி நல்கிய வள்ளுவர் வெல்க!
தீந்தமிழ் வள்ளுவம் வெல்க! வெல்க!
தீந்தமிழ் வள்ளுவம் வெல்க! வெல்க!
தீந்தமிழ் வள்ளுவம் வெல்க! வெல்க!
ஞாலப் புலவனை
அறநெறித் தலைவனை
தொங்கிட கிடதக தொக்குந்தரி
என்றென்றும் போற்றிப் புகழ்ந்திடுவோம்!
திக்கிட கிடதக தீக்குந்தாரி – வள்ளுவர் நூலை
கற்றவர் வாழ்வில் உயர்ந்திடுவார்
உக்குடுதாம் உக்குடுதை
என்றென்றும் வாழ்வில் உயர்ந்திடுவார்
தாக்கு திக்கு தாகிட கற்போம் குறள்வழி நிற்போம்
தங்கி கிடதக தித்தித்தை
தீந்தமிழ் வள்ளுவம் வெல்க! வெல்க!
தீந்தமிழ் வள்ளுவம் வெல்க! வெல்க!



(நாட்டியத் தொடக்கத்தில் கணபதி கௌத்துவம் எனப் பாடுகிறார்கள்.
அதற்கு மாற்றாகப் பாடுவதற்கான பாடல்)

– இலக்குவனார் திருவள்ளுவன்

சொற்கட்டு : கலைமாமணி செல்வம்

# இன்றைய உலகுக்குக் குறள் கூறும் அறிவுரைகள்

----திருக்குறளார் முனைவர் இர. பிரபாகரன்



முன்னுரை

இவ்வுலகில் மனிதர்கள் நெடுங்காலமாகவே தங்களுடைய வாழ்க்கையில் பலவகையான துன்பங்களைச் சந்தித்துக்கொண்டிருக்கிறார்கள்; மற்ற உயிரினங்களும் பல இன்னல்களைச் சந்தித்துக்கொண்டிருக்கின்றன. இத்தகைய துன்பங்களுக்கு முடிவுகாண வேண்டும் என்ற நோக்கத்தோடு ஐக்கிய நாடுகளின் அவையைச் சார்ந்த அறிஞர்கள் 2015 ஆம் ஆண்டு, நிலையான வளர்ச்சிக்கான பதினேழு இலக்குகளை முடிவு செய்தார்கள். ஆங்கிலத்தில், அவை ‘United Nations Organization’s Sustainable Development Goals’ என்று அழைக்கப்படுகின்றன. அந்த இலக்குகளை 2030 ஆம் ஆண்டுக்குள் அடைய வேண்டும் என்பது அவர்களின் திட்டம். அந்த இலக்குகளை அடைந்தால் உலகில் வறுமை, பிணி, வன்முறை மற்றும் சுற்றுச் சூழல் சீரழிவு ஆகியவற்றால் வரும் பெரும் துன்பங்களைப் பெருமளவில் குறைத்துவிடலாம் என்பது ஐ. நா. அவை அறிஞர்களின் கருத்து. இந்த நான்கு பெரும் துன்பங்களும் வள்ளுவர் வாழ்ந்த காலத்திலும் இருந்தன. அவற்றை எப்படித் தவிர்க்கலாம் என்பதைப் பற்றி வள்ளுவர் பல குறட்பாக்களில் கூறும் கருத்துக்களை ஆய்வு செய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

வறுமை

ஏறத்தாழ 2,500 ஆண்டுகளுக்குமுன், கிரேக்கத்திலும், ரோமாபுரியிலும் மக்கள் மிகுந்த வறுமையில் இருந்ததாக வரலாறு கூறுகிறது. தமிழ் நாட்டில், சங்க காலத்தில் புலவர்களும் பாணர்களும் வறுமையில் வாடி, வள்ளல்களையும் மன்னர்களையும் நாடிச் சென்று பரிசு பெற்றதாக சங்க இலக்கியம் கூறுகிறது. எல்லாக் காலங்களிலும் வறுமையில் வாடிய மனிதர்கள் இருந்திருக்கிறார்கள். இன்றும் கோடிக்கணக்கான மக்கள் கொடிய வறுமையின் பிடியில் சிக்கித் தவிக்கிறார்கள்.

மன்னன் கொடையிலும் ஈகையிலும் சிறந்து விளங்கி, வறுமையில் இருப்பவர்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்று இறைமாட்சி என்ற அதிகாரத்தில் வள்ளுவர்

கூறுகிறார். ஒரு நாட்டில் உள்ள வறுமையை மன்னனால் மட்டுமே ஒழிக்க முடியாது என்பதை உணர்ந்த வள்ளுவர், "வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை (குறள் – 221)" என்று ஈகைக்கு இலக்கணம் வகுக்கிறார். மேலும், "தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டு (குறள் – 212)." என்று, கைம்மாறு கருதாமல் பெய்யும் மழைபோல், பொருள் இல்லாதவர்களுக்குப் பொருள் உள்ளவர்கள் உதவி செய்ய வேண்டும் என்று வள்ளுவர் வலியுறுத்துகிறார். "இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்துகெடுக உலகியற்றி யான் (குறள் -1062)." என்று இறைவனையே வள்ளுவர் சாடுகிறார். எவரும் இரந்து உயிர் வாழும் நிலை இல்லாமல் இருக்க வேண்டுமானால், மன்னனும், மக்கள் அனைவரும் தங்களால் இயன்றவரை வறியவர்களுக்கு உதவி செய்து அவர்களின் நல்வாழ்விற்கு வழி வகுக்க வேண்டும் என்பது வள்ளுவரின் கருத்தாகத் தோன்றுகிறது. வறுமையில் இருந்து, பசியென்று வந்து கேட்பவர்க்கு உணவு அளிப்பதால் மட்டும் வறுமையை ஒழிக்க முடியாது. வறுமையில் இருப்பவர்கள் வறுமையில் இருந்து நீங்கி வளமான வாழ்வு வாழ்வதற்கு அரசும் செல்வம் உள்ளவர்களும் வழிவகுக்க வேண்டும் என்பதுதான் ஈகை மற்றும் ஒப்புரவு ஆகிய அதிகாரங்களில் வள்ளுவர் கூறும் கருத்து.

பிணி

வறுமையைப்போல் பிணியும் இவ்வுலகை நெடுங்காலமாகவே துன்புறுத்திவருகிறது. மருந்து என்ற அதிகாரத்தில், "முன்பு உண்ட உணவு செறித்த பிறகு, மாறுபாடு இல்லாத உணவை அளவோடு உண்டால் உடலுக்குக் கேடு விளைவிக்கும் நோய்கள் வாரா (குறட்பாக்கள் 942, 945)." என்று வள்ளுவர் கூறுகிறார். இவ்வாறு உண்பதனால் எல்லா நோய்களையும் தவிர்க்க முடியாது என்பதை அறிந்த வள்ளுவர், "உறுபசியும் ஓவாப் பிணியும் (குறள் – 734)" இல்லாமல் இருப்பதுதான் சிறந்த நாடு என்று மன்னனுக்கு அறிவுரை கூறுகிறார். மரபுவழி வரும் நோய்கள், புற்று நோய்கள், கொடுந்தொற்று நோய்கள் போன்ற கொடிய நோய்களைத் தவிர்ப்பதற்கும் அவற்றை குணப்படுத்துவதற்கும் ஆட்சியில் இருப்பவர்கள் பொறுப்பேற்று ஓவாப் பிணிகளை அழிக்க வேண்டும் என்பதுதான் வள்ளுவரின் கருத்தாகத் தோன்றுகிறது.

வன்முறை

இவ்வுலகம் தோன்றிய நாள் முதல் இன்றுவரை பலவகையான வன்முறைச் செயல்கள் தொடர்ந்து நடந்துவருகின்றன. ஆதாமுக்கும் ஏவாளுக்கும் பிறந்த கேய்ன், ஏபல் என்ற இரு மகன்களில் ஒருவன் மற்றொருவனைக் கொன்றதாக விவிலியத்தில்

காண்கிறோம். போர், கொலை, கொள்ளை, கற்பழிப்பு போன்ற வன்முறைகளும் மற்றும் பல வன்முறைகளும் நெடுங்காலமாகவே உலகில் தொடர்ந்து நடைபெற்றுவருகின்றன. ”இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை வேண்டும் பிறன்கண் செயல் (குறள் – 316)”, என்று இன்னாசெய்யாமைக்கு இலக்கணம் வகுத்த வள்ளுவர், ”எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம் மாணாசெய்யாமை தலை (குறள் – 317)” என்று அறிவுரை கூறுகிறார். இன்னா செய்யாமை மற்றும் கொல்லாமை ஆகிய அதிகாரங்களில் வன்முறைகளைக் கண்டிப்பதோடு மட்டுமல்லாமல் அவற்றைத் தவிர்க்க வேண்டும் என்ற கருத்தையும் வள்ளுவர் வலியுறுத்துகிறார்.

சுற்றுச் சூழல் சீரழிவு

தங்களுடைய உணவுக்குத் தேவையான பெரும்பாலான பொருட்களை வேட்டையாடிச் சேகரித்த மனிதர்கள், ஏறத்தாழ பதினோராயிரம் ஆண்டுகளுக்குமுன், வேளாண்மை செய்யத் தொடங்கியவுடன் காடு திருத்திக் கழனி ஆக்கினார்கள். அதிலிருந்து சுற்றுச் சூழல் சீரழிவு தொடங்கியதாக யுவால் நோவா ஹராரி (Yuval Noah Harari) என்ற வரலாற்று ஆசிரியர் தன்னுடைய Sapiens – A Brief History of Humankind என்ற நூலில் குறிப்பிடுகிறார். மனிதர்கள் சென்ற இடங்களில் எல்லாம் விலங்குகளைக் கொன்றார்கள்; காடுகளை அழித்தார்கள்; சுற்றுச் சூழல் சீரழிவு நடைபெறத் தொடங்கியது. பதினெட்டாம் நூற்றாண்டில் தொடங்கிய தொழிற்புரட்சிக்குப் பிறகு நிலக்கரி அதிகமாகப் பயன்படுத்தப்பட்டது. பின்னர் பத்தொன்பதாம் நூற்றாண்டில் சீருந்துகளும், இருபதாம் நூற்றாண்டில் விமானங்களும் வரத் தொடங்கிய பிறகு, கல்லெண்ணெய் (Petroleum) அதிகமாகப் பயன்படுத்தப்பட்டுவருகிறது. நிலக்கரி, கல்லெண்ணெய் போன்ற புதைபடிவ எரிபொருள்களை (புதைபடிவ எரிபொருள் - Fossil Fuel) எரிக்கும்போது, அவை நாம் சுவாசிக்கும் காற்றை மாசுபடுத்துவது மட்டுமல்லாமல், கரியமில வாயுவை அதிக அளவில் காற்றில் வெளிப்படுத்துகின்றன. அதனால் வளிமண்டலமும் புவியும் வெப்பமடையும் வாய்ப்பு ஏற்படுகிறது. புவி வெப்பமடைவதால், வானிலையில் கடுமையான மாற்றங்கள் ஏற்படுகின்றன. இது தொடர்ந்து நடைபெற்றால் கடல் மட்டம் உயரும்; கடலோரங்களில் உள்ள ஊர்கள் நீரில் மூழ்கும். தொழிற்சாலைகளிலிருந்து வெளிவரும் கழிவுப்பொருள்கள் நிலத்தையும் நீரையும் பாழக்குகின்றன. நெகிழியாலான (நெகிழி - Plastics) பொருட்கள் நிலத்தையும் கடல் நீரையும் மாசுபடுத்துவது மட்டுமல்லாமல் அங்கு வாழும் விலங்குகளுக்குத் தீமை விளைவிக்கின்றன. இவ்வாறு, ஆகாயத்தையும், நிலத்தையும், நீரையும் காற்றையும்

தொடர்ந்து மாசுபடுத்தினால் அது நம்முடைய வாழ்வுக்கும் மற்ற உயிரினங்களின் வாழ்வுக்கும் கேடு விளைவிக்கும் என்று விஞ்ஞானிகள் உறுதியாகக் கூறுகிறார்கள்.

வள்ளுவர் காலத்தில், மனிதர்கள் சுற்றுச் சூழலுக்கு அதிக அளவில் கேடு விளைவிக்கவில்லை. விஞ்ஞானம் மற்றும் தொழில் நுட்ப வளர்ச்சியால் மனிதர்கள் சுற்றுச் சூழலுக்குச் செய்யும் தீமைகள் அதிகரித்துவிட்டன. சுற்றுச் சூழல் பாதுகாப்பிற்கும் வள்ளுவர் சில அறிவுரைகளைக் கூறுகிறார்.

இக்காலத்தில் வாழும் மனிதர்களுக்கு மட்டும் இவ்வுலகம் சொந்தமானதன்று. நமது அடுத்த தலைமுறையினர்களுக்கும், இக்காலத்தில் வாழும் மற்ற உயிரினங்களுக்கும் அவைகளின் சந்ததிகளுக்கும் இவ்வுலகம் சொந்தமானது. ஆகவே, உலகைப் பாழாக்கி, அதை வாழ்வதற்கு ஏற்ற இடமாக இல்லாமல் அழிப்பதற்கு நமக்கு எந்த உரிமையும் இல்லை. சுற்றுச் சூழலுக்கு கேடுகள் வருவதற்குக் காரணம் விஞ்ஞானம் மற்றும் தொழில் நூட்பம் ஆகிய துறைகளின் வளர்ச்சியால் கண்டுபிடிக்கப்பட்டுப் பயன்படுத்தப்பட்டுவரும் செயற்கைப் பொருள்கள்தான். செயற்கைப் பொருள்களால் பல நன்மைகள் இருப்பதால், அவற்றைத் தவிர்க்க முடியாது. செயற்கையாக எதைச் செய்தாலும் அது இயற்கைக்கு முரணானதாக இல்லாமல் இருக்க வேண்டும் என்றும் அதை இயற்கையோடு இணைத்துச் செயல்படுத்த வேண்டும் என்ற கருத்தையும், "செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து இயற்கை அறிந்து செயல் (குறள் – 637)." என்ற குறளில் வள்ளுவர் எச்சரிக்கிறார்.

"எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை அதிர வருவதோர் நோய் (குறள் – 429)" என்ற வள்ளுவரின் அறிவுரைக்கேற்ப, விஞ்ஞானிகள் கூறும் அறிவுரைகளைப் பின்பற்றி, சுற்றுச் சூழலின் சீரழிவைத் தடுத்து, நம்மையும் நமது சந்ததியினரையும் மற்ற உயிரினங்களையும் எதிர்காலத்தில் வரவிருக்கும் பேரழிவிலிருந்து பாதுகாத்துக்கொள்வது நமது தலையாய கடமை.

முடிவுரை

வறுமை, பிணி, வன்முறை, சுற்றுச் சூழல் சீரழிவால் வரும் தீமைகளைத் தவிர்ப்பதற்கு வள்ளுவர் கூறும் அறிவுரைகள் எக்காலத்திற்கும் எந்நாட்டவர்க்கும் ஏற்றவை. மனித சமுதாயம் இதுவரை அவற்றைப் பின்பற்றத் தவறிவிட்டது. இனி வருங்காலத்திலாவது வள்ளுவரின் அறிவுரைகளைப் பின்பற்றி நாம் வாழ்வாங்கு வாழ வேண்டும்.

# பகுத்தறிவுக் கடவுள் (RATIONALISTIC GOD)



---Dr. சுப. திருப்பதி MBBS, MCh, FNS, PGDMLE
முதன்மை மூளை நரம்பியல் அறுவை சிகிச்சை சிறப்பு மருத்துவர்,திருச்சிராப்பள்ளி.
(thiruneuro@gmail.com -9655240705)

பகுத்தறிவு என்பது கடவுள் மறுப்பு அன்று.
(பகுத்தறிவு- Reasoning, Rationale ; கடவுள் மறுப்பு – Atheism)
பகுத்தறிவு என்பது ஆறறிவுப்பிறப்பாகிய மனிதர் அனைவருக்கும்உடைமையானஉயர்தனிஅறிவுநிலை.
வலியறிந்து, காலமறிந்து, இடனறிந்து, தம் அறிவைத் தாம் வாழும் உலகச்சூழலுக்கு ஏற்ப பொருத்திக்கொண்டு,சிற்றினம் சேராமல் தம்மின்பெரியாரைத்துணைக்கோடி , நட்புப் பேணி , தம்சுற்றத்தின் குறிப்பறிந்து, அவையறிந்து , வினை செயலாற்றும் வகையான அறிவுதான் பகுத்தறிவு.
திருக்குறளின் கடவுள் (இந்தச் சொல்லை எந்தக்குறளிலும்பயன்படுத்தவில்லை)/தெய்வம்/இறை என்பது ஒரு உணர்வு – தன்மை - பண்பு –கருத்து – அறிவு - செயல் நிறைவு நிலை.(Idealistic Concept)

ஆதிபகவன்
வாலறிவன்
மலர்மிசைஏகினான்
வேண்டுதல் வேண்டாமைஇலான்
பொறிவாயில்ஐந்தவித்தான்
தனக்குவமைஇல்லாதான்
அறவாழி அந்தணன்
எண்குணத்தான்
இறைவன்
பற்றற்றான்
வகுத்தான்
வானோர் / வானத்தவர்
உலகியற்றியான்
...... இப்படியாக

சுப. திருப்பதி,முதன்மை மூளை நரம்பியல் அறுவையியல் மருத்துவர்.
பிறந்தநாள் : 16.11.1973
பிறந்த ஊர்: மதுரை பூர்வீக ஊர்:மேலைச்சிவபுரி வாழும் ஊர்: திருச்சிராப்பள்ளி
பெற்றோர்: வ.சுப.திரு. சுப்பையா – விசாலாட்சி
மனைவி: அருள்மொழிமக்கள்: சிபி சுப்பையா; நிலா
பள்ளிக்கல்வி: காமகோடி வித்யாலயா, திருச்சிராப்பள்ளி.
MBBS - தஞ்சாவூர் மருத்துவக் கல்லூரி; MCh (Neurosurgery) - மதுரை மருத்துவக் கல்லூரி
சிறப்புப் பயிற்சிகள்: AIIMS, புது தில்லி; KEM மருத்துவமனை, மும்பை;
Fujita Health University, ஜப்பான்; CMC, வேலூர்
PGDMLE (சட்ட மருத்துவம்) - NLSIU, பெங்களூரு
ஆய்வுகள் - மூளை நரம்பியல்; சட்ட மருத்துவம்.

வாலறிவாகவும்(தூய அறிவு)விளங்குகின்றகடவுள் தன்மையைநாம்தான்,பலவாறு பகுத்தறியமுற்பட்டுஅறநெறியில்ஒழுகி, மெய்யறிவாய் உணர்தல் வேண்டும்.

- இந்த வையத்துவாழ்க்கையில், மன்னவனாய் முறை செய்து காப்பாற்றி, இயல்பனாய் வாழ்வாங்குவாழ்ந்தவர்களை மக்கள் இறை என்றும், தெய்வம் என்றும் கருதி எஞ்ஞான்றும் போற்றுவார்கள்
- தக்க சூழ்நிலை அமைய வாய்க்கா எனினும் , சோம்பலின்றித்தன் குடி உயர விடாமுயற்சியுடன்முனைந்துமெய்வருத்திஉழைப்பவர்க்கு,உரிய பலனைத்தெய்வமானதுஅளிக்கும். எவ்வாறு?!

அத்தகையோரில் இருந்து வேறுபட்டு அன்று . அவருக்கு உற்ற துணையாகமுன்நின்று ; அவர்தம்உழைப்புடன் இரண்டறக் கலந்து .

- வேண்டுதல் வேண்டாமை என்பது கடவுட்தன்மையாகும். ஆனால் பெரும்பாலான நடைமுறை வாழ்வியலுக்குவேண்டுவனபலவாகும். அதற்கேற்பத் தத்தம் பணியை முயன்று தவமாகச் செய்தால்,வேண்டியவற்றைவேண்டியவாறுஎய்த முடியும் . முயற்சி திருவினையாக்கும் .

தம் அகத்திற்கு உகந்தவேண்டுவனவற்றை,
வேண்டாமலேகுறிப்புணர்வாகஐயப்படாமல்அறிபவர், தெய்வம் எனக்கருதத்தக்கவரே (வேண்டத்தக்கதுஅறிவோய் நீ!..... ).
அப்படியாக அறியக்கூடிய காதல் வாழ்க்கைத்துணை,கண்கண்டதெய்வம் ஆவார் (என் தேவையை யார் அறிவார்?!... உன்னைப்போல் தெய்வம் ஒன்றே அறியும் ).
அத்தகையவரின் அரவணைப்பில் பாதுகாப்பாய் உணரக்கூடிய இவ்வுலகைவிடவா, கண்காணா உருவினை உணரவிழையும் உலகானது உயிருக்கு இனிமை பயக்கும்?

- நல்ல முகமலர்ச்சியுடன், உட்கார வைத்து விருந்து பரிமாறக்கூடிய இல்லறம் பேணுபவர்அகங்களில், இறைத்தன்மைநிலைபெறும் (உள்ளம் பெருங்கோயில்28)
- முன்னோர் (நீத்தார்), தெய்வமெனக்கொண்டோர், விருந்தினர்,சுற்றத்தினர், மனம் மொழி மெய்களால் ஆன தான் (ஊனுடம்பு ஆலயம் )– இவை முறையே பேணுதற்குரிய தலையாய நிலைக்களங்கள்.
- மேலும், இல்லறஆயத்தாரும், துறவறம் மேற்கொள்வாரும், இல்லறம் சிறந்து பயிற்றுவித்தகிழவோரும், தத்தம் இயல்புப்போக்கிற்கு ஏற்றவாறு நல்லாற்றல்புரிவதற்கு, இல்வாழ்வார்எனப்படும்தாளாற்றல்நிலையினரேஇன்றியமையாத்துணையாக விளங்குவர்.
- வேறு மேன்மையான உலகத்தை எதிர்நோக்கி,அதற்குரியநல்ல நெறிகள்என்றுக்கருதப்படுபவற்றை ஆற்றும் ஏனையோர், இவ்வுலகத்திற்குஎதனையும்ஈயாமல்இல்லறத்தாரிடம்கொளல்மட்டுமேஎளிதென எஞ்ஞான்றும் எதிர்பார்த்து அமர்ந்து இருப்பாரானால்அவரும்தீயவரே.அத்தகைய உலகம் கிட்டாது என்று உணர்த்தப்பட்டாலும், (எத்தகைய எதிர்பார்ப்பும் இல்லாமல் ) அனைத்துயிர்க்கும்ஈதலைக்கடமையெனஇயன்றளவுசெயலாற்றுபவர்தாம்நல்லவராவர்.

• அத்தகையவரில்,உயிர் என்பது தனக்கு மட்டும் உரித்தானதன்றுஎன்பதனை உணர்ந்து, மற்றைய உயிர்களைக் கொன்றுதன் உணவாக்கிக் கொள்ளும் தக்க வாய்ப்பினைக்கூடமறுத்துவிடுபவரை, ஏனைய மன்னுயிரெல்லாம் தொழுது இறையெனஉணரச்செய்யும்.

இந்த உள்ளோங்கிய நிலையில், ஆயிரம் ஆக்கம் வேண்டி அவியுணவை வேறு எந்த மேற்கடவுளருக்குப்படைப்பது?!

• வேள்வி என்பது தன்னிடம் உள்ளவற்றைவிரும்பிப்படைப்பது.

அவற்றுள்விருந்தோம்பல் என்பது தலையான வேள்வி; எளிதில் இயலும் செயல்நெறி.

அத்தகையபபயன்வாய்பு அளிக்கும் விருந்தினரே கடவுள்.

(‘அதிதிதேவோபவ’ – விருந்தினரைக்கடவுளாகக்கருதுக).

விருந்தோம்பலைத் தன் வாழ்வியல்நெறியாகக் கொண்டு ஒழகுபவரும், நல்ல நிலைமையுற்று (வானத்தவர்க்கு நல் விருந்தெனக்) கடவுள் தன்மைபெறுவர் .

• எத்தகைய விருந்திற்கும்பலவகைப் பொருட்களின் சேர்க்கை இன்றியமையாதது.

அவை யாவும் ஆக அடிப்படையான வான்வழிநீர் (மழை) இன்றி அமையாது.

அந்த வானையும் கடந்து உள்ளிருப்பவர் என்று கருதப்படும் கடவுளருக்குவிருந்தெனஅர்ப்பணித்துப் படைக்கும் வழிவழிமுறைகளானசிறப்புச் செய்தல், பூசைகளும் கூட,வான்மழைபெய்யும் காலத்துப்பொய்த்துப்போனால் வறட்சி உறும்.

• நடைமுறையில், வானத்தையும் கடந்துமேன்மையெனக்கருதக்கூடியஅவ்வுலகத்தைஎதிர்நோக்கித் தானம் தவம் செய்தாலும், அவைமனதளவில்கூடத்தங்காது, (எந்தவிதக்கைம்மாறும் வேண்டாத) மாரிமழையை வானம்இவ்வியன்உலகத்திற்குவழங்காது போனால் ; (உள்நின்று பசிவருத்தும்பட்சத்தில்) செய்தலும் இயலாது,பெய்யாது பொய்த்து விட்டால் .

• “மானம் குலம் கல்வி வண்மை அறிவுடைமை
தானம் தவம் முயற்சி தாளாண்மை - தேனின்
கசிவந்தசொல்லியர்மேற்காமுறுதல்பத்தும்
பசி வந்திடப் பறந்து போம்” .

உள்ளாற்றல் கொண்டு பசியைஒருசிலரால்ஒரளவிற்குத்தான்உணர்வினால்பொறுக்க இயலும். ஆனால், அதனை மாற்றும் ஆற்றல்உணவிற்கே உண்டு ;அளவில் நிறைய அல்லாமல் ,நிறைவாய் வேண்டும் - உள்ளத்திற்கும்,உலகத்திற்கும்:

- தன் உழைப்பினால் ஆன உணவு
- தன் வீட்டில் தன் பங்கு உணவு
- விருந்தோம்பல்
- பகுத்துண்டுபல்லுயிர் ஓம்புதல்

இவற்றையும் மீறி,இரந்துதான் உயிர் வாழ்தல் வேண்டியிருக்கிறது என்ற இழிநிலையில்இவ்வுலகம்இயங்குமானால்,உலகங்களைஇயற்றியவன் என்று கருதப்படும்

பரமன், பரந்து கெடுவானாக. (தனி ஒருவனுக்குஉணவில்லை எனில் ஜகத்தினைஅழித்திடுவோம் )

• வசதி வாய்ப்பு இருக்கும் பொழுது, பரிவுடன் விருந்துவேள்விஓம்பாமல், வறுமை உற்ற தருவாயில் தாம் பற்றற்றவர் என்று விளம்புவதுவருத்தத்தினாலே தவிர, விருப்பத்தினால் அன்று.

•சடங்குகளாவன, தூய்மைக்கானசெயல்பாடுகளே. அவையாவன, புறத்தூய்மைக்குநீர்க்குளியலும், அகத்தூய்மைக்குவாய்மையுமாம்.
ஏனென்றால், 'புண்ணிய தீர்த்தங்கள்' என்று சொல்லப்படும் மாசுபட்டநீர்நிலைகளிலும் கூட மூழ்கி எழுந்து (பலவாறு மயிரைக்மழித்தும் சடை வளர்த்தும் ) வெளித்தோற்றத்திற்கு மட்டும் தான் மாசற்றவர் என்று பறைசாற்றிகொண்டு, ஆனால் மனதுக்கு உள்ளே (உலகம் பழித்தற்குரிய) மாசுகள்பலவற்றைமறைத்துக் கொண்டு ஒழுகும் மக்கள் பலராவர்.

• தானம் தவம் செய்வதைவிட, மனம் மொழி மெய்களால் வாய்மை பேணுவதேதலையாயது . அதன் விளைவாக, யான் எனது என்ற செருக்கு அற்றுப்போகும்; உயிர் உயர் நிலை உணரும் (வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்) ; அன்பு அருளாகும், பொருள் அதற்குத்துணையாகும் . மன மாசுகளான ஐயப்பாடுகள்நீங்கித் தெளிவு உண்டாகி எவ்வுலகமும்தன்னுலகமாகஉணரப்படும் . இந்த மெய்யுணர்வேஇறையுணர்வாகும்.
(தெய்வம் நீ என்று உணர் )
இப்படியாக,மேன்மேலும் பலவாறு எஞ்ஞான்றும் எல்லா உயிர்களைக் கடந்தும், உள்ளுமாய் நீக்கமற நிறைந்து,இயக்கி இயங்கும், உயிருக்கு ஆக்கமானஇக்கடவுள்தன்மையைஅவ்வப்போதாவதுஉணர்ந்திருப்போம்; உணரவேண்டும்.
இதற்குரியமுதன்மைப்பகுத்தறிவுக்கூறுகளானஅறன்வலியுறுத்திக்கொள்ளுதல் , நீத்தார் பெருமையின் துணை , வான் சிறப்பின் இன்றியமையாமை முதலியனவற்றை மனத்தில் இருத்திக்கொண்டு, இவ்வுலகில் தக்கமுறையில்செயலாற்றிவாழ்வாங்கு வாழ்ந்து, நம் கடவுளை நாமே வாழ்த்துவோம் .
ஆக, பகுத்தறிவு என்பது கடவுளைமறுப்பதன்று, வெறுப்பதும் அன்று; அதனைக் கொண்டு கடவுள் தன்மையை உணர முயல்வதே!

அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவது எவன்? 46
செவியுணவிற் கேள்வி யுடையார்அவியுணவின்
ஆன்றாரோடொப்பர்நிலத்து. 413

## அகமதாபாத்து தமிழ்ச் சங்கத்தில் திருவள்ளுவரின் சிலை திறப்பு விழா

குசராத்து  மாநிலம் அகமதாபாத்து தமிழ்ச் சங்கத்தின் சார்பில் 12 ஆம் தேதி மணிநகர் சிரீ கிருட்டிணா தமிழ்ப் பள்ளி வளாகத்தில் உலகப் பொதுமறையாம் திருக்குறளைத் தந்த அய்யன் திருவள்ளுவரின் சிலை திறப்பு விழா, புதிய தமிழ்ப் பள்ளிக்கூடத்தின் அடிக்கல் நாட்டு விழா மற்றும் பொங்கல் விழா நடைபெற்றது.இந்த விழாவில் தமிழ்நாடு அரசின் சார்பாகத் தமிழ் வளர்ச்சித் துறை மற்றும் தொழில் துறை அமைச்சர் தங்கம் தென்னரசு கலந்துகொண்டார். அமைச்சர் தலைமையில் தமிழ்ச் சங்கத் தலைவர் கவிதாசன் நிர்வாகிகள் பிரபாகரன், திருநாவுக்கரசு, இராசா நரேசு ஆகியோர் முன்னிலையில் விழா நடைபெற்றது.திருவள்ளுவர் சிலையை விஜிபி உலகத் தமிழ்ச் சங்கத்தின் தலைவர் வி.ஜி. சந்தோசம் வழங்கினார்.இஃது இவர் வழங்கிய 147வது சிலையாகும். இந்நிகழ்வின் சிறப்பு விருந்தினர்களாக குசராத்து அரசின் கூட்டுறவுத்துறை அமைச்சர் செகதீசு ஈசுவர் விசுவகர்மா, புதுவை யூனியன் பிரதேசத்தின் உள்துறை அமைச்சர் நமச்சிவாயம், கூட்டுறவுத் துறை அமைச்சர் சாய் சரவணன், முன்னாள் அமைச்சர் கல்யாணசுந்தரம், மதிமுக துணைப் பொதுச் செயலாளரும் மல்லைத் தமிழ்ச் சங்கத்தின் தலைவருமான மல்லை சத்யா, அகமதாபாத்து மாநகராட்சி மாநகரத் தந்தை கீர்த்தி குமார் மற்றும் தமிழகத்தைச் சேர்ந்த குசராத்தில் பணியாற்றும் இந்திய ஆட்சிப் பணியாளர்களான தென்னரசன், இரஞ்சித் குமார், நாகராசன் மற்றும் ஓய்வு பெற்ற இந்திய ஆட்சிப் பணியாளர் செகதீசன் ஆகியோர் சிறப்பு விருந்தினர்களாகப் பங்கேற்றனர். உலகளாவிய அளவில் தமிழர்களின் பெருமை, தமிழ் பண்பாடு ஆகியவற்றின் சிறப்புகள் குறித்து அமைச்சர் தங்கம் தென்னரசு இந்த நிகழ்வில் பேசினார்.

# குறள் நெறி

-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-

*மின்னிதழ்:55 மாசி-24--தி.பி.2054 மார்ச்சு-8- பொ.ஆ.2023*





நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்


## உலக உழைக்கும் மகளிர்நாள் சிறப்பிதழ்







உழைக்கும் கைகளுக்கு ஓய்வில்லை;
உய்வடைந்திட ஒரு வழியுமில்லை;
அடிமைத் துயரே சாசனமா?
மகளிர் நாள் ஒரு சாங்கியமா?

# பண்பும் பயனும் அது

-கவிஞர் பா. தென்றல்



கவிஞர் பா.தென்றல், எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்,
சிரீ கார்த்திகேயன் தொடக்கப் பள்ளி, காரைக்குடி.
நிறுவனர்-தேவதைகள் கூட்டம்.
நிறுவனர்-அண்ணஞ்சார் நூலகம்.
.கொரோனா பெருந்தொற்றுக் காலத்தில் ஆகத்து 2020 முதல் "வாசல் பள்ளி" தொடங்கி குழந்தைகள் வீட்டுக்கே சென்று வாசலில் அமர்ந்து பாடங்கள் கற்பித்தவர்.

முன்னுரை :

குறளமுதம் பருகிடவே திருக்குறளை நானெடுத்தேன். என் குரலோங்கப் படித்திருந்தேன். பல குறள்கள் படித்துவிட்டேன். பல முறையும் படித்துவிட்டேன். அவற்றினிலோர் குறள்தான் என் மனத்தினில் பதிந்தது.மன மகிழ்ச்சி பயந்தது. சொல்லின் எளிமை கண்டு நான் வியந்ததை எழுதவில்லை இப்போது. சொற்பொருளின் வீச்சு கண்டு மனம் மகிழ்ந்ததைப் பகிர்கின்றேன் என் கட்டுரையில்.

நானறிந்த வள்ளுவர்

கவிச்சக்கரவர்த்தி கம்பனை நாமக்கல்லார் புகழ்ந்துரைத்த வார்த்தைகளையே நான் சிறிது மாற்றம் செய்து வள்ளுவருக்குப் பொருத்தி அழகு பார்க்கின்றேன். ஆமாம், 1330 குறட்பாக்களை இந்த வள்ளுவப் பெருந்தகை தம் குறுகிய வாழ்நாள்களுக்குள் எழுதியதெப்படி என்று வியந்து நோக்குகையில், எண்ணியெண்ணித் திட்டமிட்டு இயற்றினாரோ, எண்ணாமல் எங்கிருந்தோ கொட்டினாரோ என்று கேட்டுப் பார்த்துக் கொள்கின்றேன் என்னை நானே.

என் சிற்றறிவில் தோன்றியதை விடுத்து, ரா.பி. சேதுப் பிள்ளை கூறியிருப்பதைப் பார்ப்போம்.

"தமிழ்நாடு செய்த தவக் கொழுந்து
நாமெல்லாம் செய்த நற்றவத்தின் பயன்
ஓராயிரம் ஆண்டுகள் ஓய்ந்து கிடந்த பின்னே
வாராது வந்த மாமணி.
ஒரு மாமணியாய் உலகிற்கு ஓங்கிய
திருமாமணி திருவள்ளுவர்"

என்று ஒரே பாடலில் தெய்வப்புலவரின் பெருமைகளையெல்லாம் விளக்கிவிட்டார் அவர். இனி நானென்ன சொல்ல?

திருக்குறளின் மேன்மை

அடுத்ததாகத் திருக்குறளில் இடம்பெற்றுள்ள குறட்பாக்களின் பெருமைகளைக் கண்ணுறுவோம் என்று அமர்ந்தேன். அதற்கும் ஒரு பாடல் கண்டேன், ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பது போல்.

பாவேந்தர் பாரதிதாசனின் வரிகள் அவை.

“இல்லாததில்லை; சொல்லாததில்லை;

பொல்லாததில்லை ; வெல்லாததில்லை;

இணையில்லை மானிடத்தே”.

இந்த வரிகளைப் படித்ததும் வேறு எந்த வார்த்தையும் இதை விடத் தெளிவாக, அழகாக விளக்கமாகத் திருக்குறளின் மேன்மையினைப் பறைசாற்றும் என்றெனக்குத் தோன்றவில்லையாதலால், இத்துடன் இதை முடித்து, அடுத்த பக்கம் செல்கின்றேன்.

என்னைக் கவர்ந்த குறள்.

”அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை

பண்பும் பயனும் அது.“ (குறள் 45)

இப்பூவுலகில் இல்வாழ்க்கையின் தத்துவத்தை மிக அழகாகக் கூறும் குறள் இது என்பதில் யாவருக்கும் மாற்றுக் கருத்துத் தோன்ற இடமளிக்காத குறள்.

உரையாசிரியர்கள் கூற்று

டாக்டர் மு.வரதராசனார் தம் உரையில், ”ஒருவன் இல்வாழ்க்கையில் தன் துணைவி மேல் செய்யத் தகும் அன்பினையும், பிறருக்குப் பகுத்து உண்டலாகிய அறத்தினையும் உடைத்தாயின்; அவ்வுடைமை அதற்குப் பண்பும் பயனும் ஆகும்” என்கிறார்.

மணக்குடவரின் உரை, “இல்வாழ்க்கையாகிய நிலை யாவர் மாட்டும் அன்பு செய்தலையும், அறஞ்செய்தலையும் உடைத்தாயின், அதற்குக் குணமாவதும், பயனாவதும் அவ்விரண்டினையும் உடைமைதானே.பயன் வேறு வேண்டாம்; தனக்கும் பிறர்க்கும் உண்டான முகமலர்ச்சி தானே அமையும்” என்பது.

மேற்கோள்களுடன் என்னுரை

திருமண நிகழ்ச்சிகளில் இந்தக் குறளைச் சிறு வயது முதல் கேட்டு வளர்ந்தவள். பொருள் புரியாத வயதில் என் தாயிடம், இந்தக் குறள் பற்றி அதிகம் கேட்டுத் தெரிந்து கொண்டவள். தமிழ்ப்பண்டிதர்கள் முதல் பாமரர்கள் வரை அனைவருக்கும் விளங்கும் எளிய குறட்பா இது.

குறுந்தொகையில், ”செம்புலப் பெயல்நீர் போல, அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே” என்று கணவன் மனைவியிடையே ஊற்றெடுக்கும் காதல் பற்றிச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆனால் அன்புற்று இன்புற்று வாழும் வாழ்க்கையோடு அறத்தினையும் இணைத்தவர் வள்ளுவர்.

இதே போல், அம்மூவனாரும், தேவகுலத்தாரும் ஏன் நம் கண்ணதாசனும் முறையே ‘இம்மை மாறி மறுமையாகிலும்’, ‘நிலத்தினும் பெரிதே’, ‘நான் பேச நினைப்பதெல்லாம்’… ஆகிய பாடல்களில் இல்லற இன்பத்தை வெகு சிறப்பாகப் பாடியுள்ளனர். எனவே இல்லறத்தின் அடிப்படை அம்சம் அன்புதான் என்பது புலனாகின்றது.

கலைஞர் கருணாநிதி தம் உரையில், ‘பெற்றோர், வாழ்க்கைத் துணை, குழந்தைகள் என இம்மூவருக்கும் துணையாக இருத்தல் வேண்டும்’ என்கிறார். சாலமன் பாப்பையா இன்னும் ஒரு படி மேற்சென்று, மேற்சொன்ன பட்டியலுடன் உறவினர்களையும் இணைக்கிறார்.

இதுவே பெருஞ்சித்திரனாரின் வள்ளல் தன்மையில் இன்னும் விரிகிறது. “கடனாகக் கொடுத்தவர்களுக்கும், நீ விரும்புபவர்களுக்கும், உன்னிடம் அன்பாய் இருப்பவர்களுக்கும், இன்னார்க்கு என்று எண்ணாது, என்னிடமும் கேளாது, எல்லார்க்கும் பகிர்ந்து கொடு மனைகிழவோய்” என்னும்போது, இல்வாழ்க்கையோடு வள்ளுவர் இணைத்த அறம் உயிர் பெற்றது.

தண்ணீர்ப் பந்தலமைத்துச் சிவத்தொண்டு புரிந்த திருநாவுக்கரசர், விதைநெல்லும் உப்பற்ற வேளைக்கீரையும் சமைத்துச் சிவனடியார்க்கீந்த இளையான்குடி மாறநாயனார், பிள்ளைக்கறி சமைத்தமுது படைத்த சிறுத்தொண்ட நாயனார் ஆகியோரின் இல்வாழ்க்கை, பண்பும் பயனுமாய்க் கழிந்த அனுபவங்கள் ஆகும். இன்னும் பாரதியும், பேகனும், பாரியும், வள்ளலாரும், மனு நீதிச் சோழனும் என்று இவ்வழியில் உதாரணங்கள் காட்டலாம். “அறம் செய விரும்பு” என்று ஔவை தொடங்கிய வாழ்வியல் நெறி, நரிவெரூஉர்த் தலையார், கணியன் பூங்குன்றன் முதலியோரால் வழி மொழியப்பட்டதையும் இங்கு சுட்டலாம்.

முடிவுரை

வள்ளுவர் கூற்றிற்கிணங்க, இல்லற வாழ்வில் அன்பும் அறனும் பெருக்கி, அதன்வழிப் பண்பும் பயனும் கண்டு வாழ்ந்தால், அது கணவன் மனைவிக்கு மட்டுமல்ல, அவர்கள் வாழ்கின்ற சமுதாயத்திற்கே நன்மையும் மகிழ்ச்சியும் பயக்கும் என்பது உறுதி. ”பெண்ணின் பெருந்தக்க யாவுள” என்று வாழ்க்கைத் துணைநலம், 54 ஆம் குறளில், இல்வாழ்க்கையில் கற்பு என்னும் உறுதி நிலை இருக்கப் பெற்றால், ஆண் பெறும் பேறு அதைவிட வேறில்லை என்று கூறப்படுகிறது. இங்கு, ஆணும் பெண்ணும் இல்வாழ்க்கையில் இணைந்து அன்பும் அறனும் உடைத்தாயின், அதுவே அவ்வாழ்க்கைக்குப் பண்பும் பயனுமாய்ப் பெரும்பேறாக அமைகிறது என்றே உறுதியாகக் கூறலாம்.

இதுவரை வெளியிட்டுள்ள நூல்கள்:

1.உயிர் பருகும் மழை (கவிதைத் தொகுப்பு)

2. நீசமாக எண்ணாதே நீச்சலடிக்கக் கற்றுக்கொடு (கட்டுரைத்தொகுப்பு)

3. வானவில்லும் வண்ணத்துப்பூச்சிகளும் (கட்டுரைகள்)

திருப்பூர் சக்தி விருது, இலட்சிய ஆசிரியர் விருது, கல்விச் செம்மல், கலைச்சுடர், சிறந்த ஆசிரியர், நிலாச்சுடர் விருது, சிகரம் தொட்ட ஆசிரியர், ஒளிரும் ஆசிரியர் உள்ளிட்ட பல விருதுகளைப் பெற்றுள்ளார்.விக்கிபீடியாவில் பல கட்டுரைகளும், தொகுப்புகளும் செய்திருக்கிறார்.

புதிய தேசிய கல்விக் கொள்கை, கன்னடக் கவிதைகள், தேசிய அறிவியல் திறனறித் தேர்வுக்கான ஆங்கில நூல்கள் ஆகிய மொழிபெயர்ப்புப் பணிகளையும் செய்து வருகிறார்.பல்கலைக்கழகம் மற்றும் கல்லூரிகளில் இருபத்தைந்துக்கும் மேற்பட்ட பன்னாட்டுக் கருத்தரங்குகளில் கட்டுரைகள் சமர்ப்பித்திருக்கிறார்.

# திருக்குறள் போற்றும் பெண்மை



முனைவர் ஓசூர் மணிமேகலை

முனைவர் ஓசூர் மணிமேகலை
எம்.ஏ.பி.எட்.எம்.பில்(ஆங்கிலம்)
எம்.ஏ.(தமிழ்)டி.லிட்.
முதுகலை ஆங்கில
ஆசிரியை(ப.நி.)
ஆசிரியப் பயிற்றுநர்
-சமூக சேவகர்
- துணைத் தலைவர் -
மனாரா அறக்கட்டளை, ஓசூர்
- பல்வேறு இலக்கிய சமூக
அமைப்புகளில் உறுப்பினர்-
அமெரிக்க முத்தமிழ் நூல் ஆய்வுப்
பேரவை - நிருவாக இயக்குநர்

சமூகம் என்பது தனிமனிதர்கள் கூடி வாழும் குழுமம். சாதி,மொழி,இனம்,வகுப்பு, கிராமம், நகரம்,அரசியல்,பொருளாதாரம்,மானுடம்,ஒழுக்கம்,கல்வி,வாழ்வியல் என்று பரந்து விரியும் கூட்டமைப்பே சமூகம் என்கிறோம். இச்சமூகத்தில் ஆண் , பெண் சமத்துவம் என்பது மிக முக்கியமாகக் கருதப்படுகிறது. 'நிகரெனக் கொள்' என்றும் 'Embrace Equity'என்றும்,' பாலினச்சமத்துவத்திற்கான புதுமை மற்றும் தொழில் நுட்பம் 2023' என்ற கருவில்,கருத்தில் உலக மகளிர் நாள் இவ்வாண்டு கொண்டாடப்படுகிறது. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வள்ளுவம் இக்கருத்தைஉணர்த்தியுள்ளது என்பதை நோக்குங்கால் உலகப்பொதுமறையின் உன்னதம் புரிகின்றது. ஐயன் வள்ளுவனை உலகம் போற்றும் காரணம் புலப்படுகின்றது.

துறைகள் தோறும் பெண்டிர் என்ற பெரிதுவக்கும் நிலை இன்று நாம் காண்கிறோம். பெண்களுக்கு உரிமைகள் வழங்கப்படாத காலக்கட்டத்தில்,ஆணாதிக்கஅடக்குமுறையில் பெண்களை வீட்டில் அடைத்து வைப்பதால் என்ன பயன், மகளிரைக் காவல் வைத்துக் காக்கும் காப்பு முறையால் என்ன பயன் என்கிறார் வள்ளுவர்.

'சிறைகாக்கும் காப்பு எவன்செய்யும் மகளிர்
நிறைகாக்கும்காப்பே தலை'. (குறள் 57)

இங்கு சிறை என்பதை மகளிரின்சிந்தனைக்கும், உயர்வுக்கும் தடையாய் இருக்கும் மூட நம்பிக்கைகளும், பழமை மரபுகளும் என்று கொள்ளலாம். இல்லறத்தின் மேன்மையில் ஆண், பெண் இருவரின் பங்கும் இருக்கிறது என்கிறார் வள்ளுவர்.

'மனைமாட்சிஇல்லாள்கண்இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித்தாயினும்இல்'. (குறள் 52)

இதுதான் வாழ்வியல் நெறி. ஆண் ,பெண் சமத்துவம் இங்கு முக்கியம் என்கிறார் ஐயன். பெண்களுக்கு மட்டும் கட்டுப்பாடுகள் இருந்த காலத்தில் ஆண்களுக்கும்ஒழுக்கத்தைவலியுறுத்திய பெருமையை திருக்குறள் பெற்றுள்ளது. பொறுமை, சகிப்புத்தன்மை,விட்டுக்கொடுத்தல், விருந்தோம்பல்,அன்பும் அறனும் பேணல் என்ற வாழ்வியல் நெறிகள் இருவருக்குமே சமம் என்ற கருத்தை வலியுறுத்துகிறதுவள்ளுவம். தாயைப்பற்றிக்கூறுகையில் மறம் சார்ந்து கூறாமல் அறம் சார்ந்து விளக்குகிறார். சங்க காலத்தில் தன்மகன் வீரன், போரில் மாண்டான் என்று கேட்டாலும் பெருமிதமடையும்தாயைக்

காண்கிறோம். கல்வியில் சிறந்த மகனைக் கண்டு பெருமிதமடையும் தாயைக் கூறுகிறார் வள்ளுவர்.

‘ஈன்ற பொழுதினும்பெரிதுவக்கும்தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்’. (குறள்69)

இனி எக்காலத்திலும் தாயின் பெருமை இப்படித்தான் இருக்கும். கல்வியில் சிறந்த சமூகமேமேம்பாடடையும். மேலும் தாயின் பெருமையினைக்கள்ளுண்ணாமைஅதிகாரத்தில்கூறிச்சமுதாயத்தைச்சாடுகிறார்.

‘ஈன்றாள் முகத்தேயும்இன்னாதால்என்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி’ (குறள் 923)

தன் மகன் குடிகாரன் என்பதை உணர்ந்தால் அவனை அடியோடு வெறுத்து ஒதுக்கி விடுவாள் தாய். இப்பொறுப்புசமூகத்திற்கு வேண்டாமா என்று சாடுகிறார்.

ஆணாதிக்கச்சமுதாயத்தில்ஒட்டுமொத்தச்சமூகமும்'பெண்ணறிவு என்பது பேதமைத்தே' என்று முழங்கிக்கொண்டிருந்தனர். ஆனால் வள்ளுவர்'பெண்ணிற்பெருந்தக்கயாவுள'என்று போற்றினாரே !

பெண்ணிழிவுச் சொற்கள் சமூகத்தில் இன்றும் வேரோடிக்கிடக்கின்றன. மலடி, வாயாடி, ஓடுகாலி, கைம்பெண், விலைமகள் என்று பெண்களைக்கொச்சைப்படுத்திப் பேசும் சமூகத்தில் இன்று கூட இவற்றிற்கு ஆண்பாற்பெயர்கள் இல்லை. கண்டுபிடிக்கவும்மாட்டார்கள். ஆனால் அன்றே எதிர்ப்புக்கு குரல் கொடுத்தாரேவள்ளுவர். 'பரத்தை' என்று பெண்ணை இழிவாகக் கூறும் சமுதாயத்தில் அதே கொடுமையை இழைக்கும் ஆணிற்கு ஒரு சொல் இல்லை. 'பரத்தன்' என்ற சொல்லை தமிழிலக்கியத்தில் முதன்முதலாக எடுத்துரைத்தார் வள்ளுவர்.

‘பெண்ணியலார் எல்லாரும் கண்ணில் பொதுஉண்பர்
நண்ணேன்பரத்தநின் மார்பு’. (குறள் 1311)

இறைநிலையைப் பெண்ணுக்கு அளித்த பெருமையும் வள்ளுவனையே சாரும்.

‘அணங்குகொல்ஆய்மயில்கொல்லோகனங்குழை
மாதர்கொல்மாலுமென் நெஞ்சு’. (குறள் 1081)

'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு'என்று வானளாவப்புகழ்கின்றான் மகாகவி. 'திருக்குறள் மனித இனத்தின்இலக்கியப் பெட்டகம்'என்கிறார் பிரெஞ்சுநாட்டறிஞர்ஏரியல்.

'திருக்குறளைநூலகத்தில் படி' என்பார்கள்.'நூலகமேதிருக்குறள்தான்' என்பது என் உணர்வான கருத்து.

‘குறளென்னும்பொதுமறையைக்குன்றின்மேல்விளக்காய்க்
குவலயமே பின்பற்றும் குற்றமிலாநெறியாய்ப்
பெறற்கரியநற்பேறாய்ப் பெருமையுடன் படைத்தான்
பெருமிதத்தில்தமிழன்னைபெற்றாளேமகிழ்வே !'

பயிற்றுப்பொருளாம் வள்ளுவத்தைக் கற்றுத் தேர்ந்து,பாலினப் பாகுபாடின்றிப் பாரினில் ஆண் பெண் சமத்துவத்தை நிலைநாட்டி நல்லதொருசமுதாயத்தை நானிலம் காணச் செய்வோம்.

பெண்மையைப் போற்றும் வள்ளுவரை வணங்கிப்
பெருமிதத்துடன் கொண்டாடுவோம் பெண்டிரை!
உலக மகளிர் நாள் வாழ்த்துகள்!

முனைவர் ஓசூர் மணிமேகலை எம்.ஏ.பி.எட்.எம்.பில்.(ஆங்))எம்.ஏ.(தமிழ்)முதுகலை ஆங்கில ஆசிரியை ( பணி நிறைவு )ஆசிரியப் பயிற்றுநர்-சமூக சேவகர் - துணைத் தலைவர் - மனாரா அறக்கட்டளை, ஓசூர்- பல்வேறு இலக்கிய சமூக அமைப்புகளில் உறுப்பினர்- அமெரிக்க முத்தமிழ் நூல் ஆய்வுப் பேரவை - நிர்வாக இயக்குநர்

வெளியீடு: 11 நூல்கள்.

*வாருங்கள் சிகரம் தொடலாம்!
*உன்னைத் தேடு உனக்குள் நீயே!
*ஒரு பெண்ணின் பயணம்(Translated Eng. to Tamil)
*இலங்கை நோக்கி இலக்கியப் பயணம்(Travelogue)
*பட்டுச் செல்லமே பாட்டுப் பாட வா(children song)
*அழகின் எல்லை அங்கோர்வாட் - பயணக்கட்டுரை
* கரை தாண்டும் அலைகள்- தன்முனைக் கவிதைகள் (தமிழ்&ஆங்கிலம்)
* நம்மைச் சுற்றி ஆசிரியர்கள்- (motivational கட்டுரை)
*சிற்றுளி செதுக்கிய சிற்பம் – மரபுக்கவிதைகள்
* வெற்றி நமதே- குறள் சொல்லும் குட்டிக்கதைகள்
* மரபின் மலர்கள் (மரபுக்கவிதை -வெண்பா)

விருதுகள்

*தமிழ்ச் செம்மல் - தமிழக அரசு
*கலாம் விருது- Abdul Kalam International Trust
*நல்லாசிரியர் விருது - தமிழகக் கல்வி ஆராய்ச்சி வளர்ச்சி நிறுவனம்.
*சிகரம் தொட்ட முதுகலை ஆசிரியை- கல்வித்துறை கிருஷ்ணகிரி மாவட்டம்
*தமிழ்மணி- இலங்கை அமைச்சர்கள் வழங்கினர்
*Women Achiever-NHRD Hosur& IRCS
*கவிமாமணி - பாரதியார் விஷன்
சான்றிதழ் & பதக்கம் -மலேயா பல்கலைக் கழகம், மலேசியா for paper presentation
*உலக ஔவையார் விருது - கம்போடிய அரசு
*தமிழ்த்தாய் விருது - உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை
*தமிழன் விருது - தமிழன் TV
*Queen Aung Mei award from Cambodia govt
& பல்வேறு இலக்கிய விருதுகள்

# குறள் நெறியில் குடியாட்சி

-முனைவர் இரா.இந்திராபாய்,பெங்களூரு.



தாய் மொழி : மராத்தி.
எழுதியுள்ள நூல்கள் : புதினங்கள் ,சிறுகதைகள் , சமூக விழிப்புணர்ச்சித் தொடர்கள் , வரலாற்று நூல் , ஆய்வு நூல் .பரிசு பெற்ற நூல் : "சரித்திர நாயகன் இரண்டாம் சரபோஜி" - வரலாற்று நூல் - அறிவியல் கழகத்தில் இரண்டாம் பரிசு பெற்றுள்ளது .மொழி பெயர்க்கப்பட்ட கவிதைகள் : 1. அந்த நொடிகள் (ஆங்கிலம்).
2. புதிய உலகம் உன்கையில்! (ஆங்கிலம்).

திருவள்ளுவர். உலகிற்கு அறம் உரைத்த பெருமைக்குரியவர். அரசியல் மூலம் வாழ்வியல் நெறிகளை உணர்த்துகின்றார். அன்பின் அடித்தளத்தில் அரசியலைக் காண்கின்றார். ஒரு நாடு எவ்வாறு இருக்க வேண்டும் என்பதையும், ஓர் அரசனுக்கு அமைய வேண்டிய அரசியலறிவு குறித்தும் பேசுகின்றார். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே முடியாட்சி காலத்தில் திருக்குறள் தோன்றியிருந்தாலும் கருத்துகள் அனைத்தும் இன்றும் குடியாட்சி காலத்தில் பொருந்துவனவாக உள்ளன. புதுக்கருத்துகளைத் தரக்கூடிய அளவில் அமைந்துள்ள இரண்டடி குறட்பாக்களை ஆய்வுக் கண்ணோட்டத்துடன் காணும் போது வியப்பு மேலிடுகிறது.

அரசனுக்குரிய நற்பண்புகள்:

அரசனுக்குரிய நற்குணங்களாக அஞ்சாமை, துணிவுடைமை, ஊக்கம், தூங்காமை, மறனிழுக்காமை, (மானம்), அறிவு, கல்வி, ஈகை, கொடை, அளி, காட்சிக்கு எளிமை, கடுஞ்சொல்லன் அல்லாமை, இன்சொல் கூறல், செவி கைப்பட சொற்பொறுத்தல், அறவழி நிற்றல், முறை செய்து காப்பாற்றுதல், செங்கோல் செலுத்துதல், குடியோம்பல் முதலியவற்றை குறிப்பிடுகிறார்.

"அறன்இழுக்காது அல்லவை நீக்கி மறன்இழுக்கா
மானம் உடையது அரசு" 1

அறத்திலிருந்து தவறாது நடந்து, அறம் அல்லாதவைகளை நீக்கி, வீரத்திலிருந்து தவறாத மானம் உடையவனே அரசன் ஆவான் என்று தெளிவுபட இக்குறட்பா மூலம் விளக்குகிறார்.

ஆட்சி சிறப்பு:

நாட்டை ஆளுவதற்கான விதிமுறைகளைக் கணக்கிடுகின்றார் வள்ளுவர்!

"இயற்றலும், ஈட்டலும், காத்தலும் காத்த
வகுத்தலும் வல்லதரசு" 2

இக்குறட்பாவில் பொருள் வரும் வழிகளான இயற்றல், வந்த பொருளைச் சேர்த்தல், காத்தல், காத்ததை வகுத்துச் செலவு செய்தலின் வல்லவன் தான் அரசன்" என்று அரசனின் பணிமிகச் சுருக்கமாக உரைக்கப்பட்டுள்ளது.

"சாங்கியம், யோகம், உலகாயுதம்" இம்மூன்றும் அரசியலை ஆய்வதற்குரிய காரணங்கள் ஆகும். இது குறித்து தருக்க நூல்கள் இயம்புகின்றன.

மறைநூலுக்கும், அறத்திற்கும் அடிப்படையாக அமைவது அரசனுடைய நல்லாட்சியே, குற்றம் ஆய்ந்து நடுவு நிலைமையோடு நடப்பதே நீதியாகும். ஒரு நாட்டில் நல்லாட்சி இருப்பின் பருவமழை பொய்க்காது. பருவ மழையும், விளைச்சலும் பெருகும். அரசனுக்கு வெற்றி தருவது வேல் அன்று, கோணாத செங்கோல், இக்கருத்தை,

"வேல்அன்றி வென்றி தருவது, மன்னவன்
கோல்: அதூஉம் கோடாது எனின்" 3

என்ற இக்குறட்பா மூலம் விளக்குகிறார்.

நீதிமுறை கெடாத அரசு அரசனைக் காப்பாற்றும்.

நீதிமுறை கெடின் அரசன் தானே கெடுவான் என்று அரசனை எச்சரிப்பதாக இக்குறள் அமைகிறது.

"எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தான் தானே கெடும்" 4

என்ற வகையில் "அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும்" என்ற சிலப்பதிகாரச் செய்யுள் ஒப்புமைப் படுத்தப்படுகிறது.

குடிகளைக் காத்து குற்றங்களைக் களைதல் அரசனுக்குரிய தொழிலாகும் என்பதை

குடி புறங் காத்து ஓம்பிக் குற்றம் கடிதல்
வடு அன்று: வேந்தன் தொழில்" 5

அதாவது தண்ட நீதி எனும் அரசநீதியை வெகு அழகாக எடுத்துரைக்கிறார். அரசன் கொடியவரைத் தண்டித்து நல்லவரைக் காப்பாற்றுவது உழவன் பயிர்களைக் காப்பாற்றக் களையைக் களைவதற்கு நிகராகும் என்று அறிந்த சான்றுகள் மூலம் எளிமையாக நவில்கின்றார். இதே கருத்தை அர்த்த சாத்திரம் எடுத்தியம்புகிறது.

அரசன் கற்க வேண்டியவை:

பேரரசனாயினும் ஆன்றோர் நூல்களுக்கு மாறுபடாத ஒழுக்கமும், பொறியடக்கமும் இல்லையாயின் விரைந்து கெடுவான் என்பதை,

"கதம்காத்துக் கற்று அடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து" 6

என்ற குறட்பா தெளிவுபடுத்துகிறது.

அரசனின் இருகண்களாக ஒற்றரும், புகழ் அமைந்த நீதி நூலும் இருத்தல் வேண்டும் என்பதை,

"ஒற்றும் உரைசான்ற நூலும் இவையிரண்டும்

தெற்றென்க மன்னவன் கண்" 7

என்ற குறட்பாவில் அறிவுறுத்துகின்றார்.

அரசியல் தக்க துணையின்றி நடைபெறாது. ஆதலால் அரசன் அறிவிற்சிறந்த அறிஞர்களை நியமித்து ஆட்சி செலுத்த வேண்டுமாதலால் அத்தகையோரை ஆராய்ந்து நட்பு கொள்ளுதல் வேண்டும்.

மீண்டும் குற்றம் செய்யாதபடி குற்றத்திற்குரியதாகத் தண்டிப்பவனே அரசன் எனப்படுவான்.

நூலறிவும், ஒழுக்கமும், தூய மனதும், நன்கு பயின்ற வித்தைகளும் ஓர் அரசனுக்கு ஏற்றத்தை கொடுக்கும். இத்தகைய சிறப்பியல்புகளைப் பெற்ற அரசன் குடிமக்களை ஆளும் திறன்பெற்று எல்லா உயிர்கட்கும் நன்மைகள் புரிந்து நிலத்தைக் காத்து சிறப்பெய்துவான். இவ்வாறு ஆட்சி செய்தால் இம்மையிலும், மறுமையிலும் இன்ப மெய்துவான் என்று அர்த்த சாத்திரம் நூலும் பகர்கின்றது.

அரசனுக்குப் புகழ் சேர்ப்பவை:

அரசர்க்குப் புகழ்சேர்ப்பவை கொடை, அருள், செங்கோன்முறை, தளர்ந்த குடிகளைக் காத்தல் இந்நான்கும் உடைய அரசன் அரசர்க்கெல்லாம் விளக்கு போன்றவன் என இக்குறட்பா விளக்குகிறது.

"கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க்கு ஒளி" 8

இக்குறட்பாவின் அடிப்படையில் "ஓதல், வேட்டல், ஈதல், படைக்கலம் பயிற்றல், உயிர்களைக் காத்தல் ஆகிய ஐந்தும் அரசர்க்குரிய தர்மங்கள் என கூறும் திரையீயின் கூற்றும் ஒப்பு நோக்கத்தக்கதாகும்"

"குடிதழீஇக் கோல் ஓச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு" 9

என்ற குறட்பா குடி மக்களை அனணத்து, செங்கோல் செலுத்தும் மன்னன் அடியை உலகத்தார் பொருந்தி நிற்பர் என்ற கருத்தின்படியும் அரசனின் அரசாட்சி எதனை மையமாக வைத்து நடைபெற வேண்டுமென்பதையும் திறம்பட எடுத்தியம்புகிறது.

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறை என்று வைக்கப்படும்" 10

என்ற குறட்பாவில் முறைப்படி ஆட்சி செய்தால், அந்நாட்டு மக்கள் அரசனை தெய்வம் என்று போற்றுவார்கள் என்று இறைத்தன்மையை செவ்வனே உரைக்கின்றார்.

தளர்ந்த குடி மக்களைக் காப்பாற்றும் அரசன், அரசர்க்கெல்லாம் விளக்கு போன்றவன் என்பதிலிருந்து அக இருளைப் போக்குபவன் இறைவன், புற இருளைப் போக்குபவன் அரசன் என்று உணர முடிகிறது. ஆயினும் குடிமக்களைக் காக்கும் அரசன் தெய்வத்திற்குச் சமம் என்ற உயர்ந்த நிலையை வள்ளுவர் உரைத்திருப்பது போற்றுதற்குரியதாகும்.

தனி மனித ஒழுக்கம்:

நாட்டிற்கு அழகு நோயின்மை, செல்வம், வினளதல், இன்ப வாழ்க்கை, காவல் ஆகிய ஐந்தும் நாட்டிற்கு அழகு என்று கூறுகின்றார். வள்ளுவர் கூறும் கருத்துக்கள் முக்கூடற்பள்ளு பாடலில் தென்படுகிறது. நல்ல அரசருக்குரிய இலக்கணத்தையும் இயம்பியுள்ளார். மேலும் நெடுநல் வாடையில் கூறப்பட்டிருக்கும் “ஓடையொடு”......எனத்தொடங்கும் பாடல் கோடையில் பெய்து குளிர்விக்கும் மழையைப் போல போர்க்களத்தில் நாட்டின் வெற்றிக்காகப் போராடிய வீரர்களின் பெருமையைப் பேசும் மன்னரின் வீரமும், விவேகத்தையும் பாராட்டும் வரிகள் குறட்பாக்களோடு இணைந்து செல்கின்றன.

"ஓடையொடு பொலிந்த வினை நவில் யானை......

என்று தொடங்கும் பாடலாகும்." 11

வள்ளுவரின் வரிகளில் ஆளுமைப்பண்புகள் நிறைந்து காணப்படுகின்றன.

ஆசாரக்கோவையின் நல்லொழுக்க வித்துகளின் கருத்துகளை இவ்வாளுமைப் பண்புகளில் காணமுடிகிறது.

ஆளுமைப் பண்புகளின் மூலம் வள்ளுவர் தனி மனித ஒழுக்கத்தை நிலை நாட்டுகிறார் என்றால் மிகையாகாது!

"தோன்றின் புகழொடு தோன்றுக: அஃதுஇலார்

தோன்றலின் தோன்றாமை நன்று" 12

இக்குறட்பா ஒருவர் மனிதராக மட்டும் வாழ்ந்தால் போதாது அவர் நற்பண்புகள் நிறைந்தவராக, அருஞ்செயல்கள் செய்பவராக இருத்தல் வேண்டும்.

அக்குணங்கள் இல்லாதார் பிறக்காமல் இருப்பது நல்லது என்று வள்ளுவரின் வாக்காக ஒலிக்கிறது! இக்குறளில் வெளிப்படும் தனி மனித ஒழுக்கம் அரசனுக்கு மட்டுமல்லாமல் மனிதர்களுக்கும் பொருந்துவதாகவும், வலியுறுத்தக் கூடியதாகவும் உள்ளது.

முடிவுரை:

சாதி, மதம், மொழி, என்ற குறுகிய எண்ணங்களுக்கு இடம் தராமல் அனைவருக்கும் ஒரு பொதுவான நூலைப் படைத்திருப்பது வியப்பிற்குரியது! எனவே தான் உலகப்பொதுமறை என்றழைக்கப்படுகிறது. எந்த அறநூலிலும் காணப்பெறாத உடன்பாட்டுக் கொள்கையும், உயர்ந்த எண்ணங்களும் அமைந்திருப்பது சிறப்புக்குரியது ஆகும். சான்றாக, மற்றவர்களின் உணர்வுகளைப் புரிந்து கொள்ளுதல், நாட்டை நெறிப்படுத்தும் முகமாக அரசாட்சி அமைதல் வேண்டும் என்று கூறுதல், மக்களின் அடிப்படை உரிமைகள் பாதிக்கப்படாத வகையில் அரசு அமைதல், சமுதாயச் சார்பற்ற (சமயச்சார்பு) அரசாக அமைதல் போன்றவற்றில் பொதுவுடைமையைக் காண்பதில் வள்ளுவர் உயர்ந்து நிற்கிறார். ஆள்வோரும், மக்களும்

அன்பால், ஒன்றிணைந்து செல்வதால் அரசியலில் இல்லறவியலும் ஒளிர்கின்றது! அனைத்து குறட்பாக்களில் உள்ள கருத்துகளும் இன்று நாடாளும் மன்னனுக்கும் மக்களுக்கும் பொருந்துகின்றன! நல்ல அரசாட்சி அமைய வேண்டுமாயின் வள்ளுவரின் குறட்பாக்கள் பாலமாக அமையும் என்பதில் ஐயமில்லை.

அடிக்குறிப்புகள்:

1. திருக்குறள்: அதிகாரம் - இறைமாட்சி - குறட்பா: 4.
2. திருக்குறள்: அதிகாரம் - இறைமாட்சி - குறட்பா: 5
3. திருக்குறள்: அதிகாரம் – செங்கோன்மை - குறள்: 6
4. திருக்குறள்: அதிகாரம் – செங்கோன்மை - குறள்: 8
5. திருக்குறள்: அதிகாரம் - செங்கோன்மை – குறள்: 9
6. திருக்குறள்: அதிகாரம் - அடக்கம் உடைமை - குறள்: 10
7. திருக்குறள்: அதிகாரம் - ஒற்றாடல் - குறள்: 1
8. திருக்குறள்: அதிகாரம் - இறைமாட்சி – குறட்பா:10
9. திருக்குறள்: அதிகாரம் - செங்கோன்மை – குறட்பா:4
10. திருக்குறள்: அதிகாரம் - இறைமாட்சி - குறட்பா:8
11. நெடுநல்வாடை - ஓடையொடு….எனத்தொடங்கும் பாடல்.
12. திருக்குறள் – அதிகாரம் – புகழ் – குறட்பா:6.

பார்வை நூல்கள் : அர்த்த சாத்திரம்,நெடுநல் வாடை,முக்கூடற்பள்ளு,ஆசாரக்கோவை சிலப்பதிகாரம்,திரையீ (வேதம்)

தன் விவரக் குறிப்புகள்

பெயர் : முனைவர். இரா. இந்திராபாய்.

தாய் மொழி : மராத்தி.

எழுதியுள்ள நூல்கள் : புதினங்கள் ,சிறுகதைகள் , சமூக விழிப்புணர்ச்சித் தொடர்கள் , வரலாற்று நூல் , ஆய்வு நூல் .

பரிசு பெற்ற நூல் : “சரித்திர நாயகன் இரண்டாம் சரபோஜி” - வரலாற்று நூல் - அறிவியல் கழகத்தில் இரண்டாம் பரிசு பெற்றுள்ளது .

மொழி பெயர்க்கப்பட்ட கவிதைகள் : 1. அந்த நொடிகள் (ஆங்கிலம்).
2. புதிய உலகம் உன்கையில்! (ஆங்கிலம்).

பிற தமிழ்ப் பணிகள் : 1. வெளி நாட்டில் வாழும் மக்களுக்கு கணினி (Skype) மூலம் தமிழ் கற்பித்தல்.
2. கருத்தரங்கம், பட்டிமன்றம், கவியரங்கத்தில் - சொற்பொழிவாற்றுதல்.

பெற்ற விருதுகள் : 20 க்கும் மேற்பட்டவை.

பெருமைப் படுத்திய இதழ்கள் : தினமணி, குமுதம் சிநேகிதி, புதிய தலைமுறை.

பங்கு பெற்ற இடங்கள் : சென்னை, பெங்களூர், கம்போடியா, அந்தமான்.

# வள்ளுவம் உணர்த்தும் மகளிர் மாட்சி

---திருமதி.தாமரை சீனிவாசராவ்



உலகப் பொதுமறையாகிய திருக்குறள், சுட்டிக்காட்டாத வாழ்வியல் கருத்துகளோ, பொருளோ கிடையாது. வாழ்க்கைமுறையை நெறிப்படுத்த, மானுட வாழ்க்கையைச் செம்மைப்படுத்த, திருக்குறள் அள்ளித்தரும் நெறிகள் ஏராளம். அப்படிப்பட்ட குறளில், பெண்மையைப் பற்றி அப்படி என்னதான் கூறியிருக்கிறது? என்பதை நாம் அறியவே இந்தக் கட்டுரை முயல்கிறது. மகளிர் தினத்தைக் கொண்டாடும் இவ்வேளையில், நமது உரிமையைத் தெரிந்துகொள்ள, நேர்மையுடன் நிமிர்ந்த நன்னடையோடு, சிறப்புடன் நாம் வலம்வருவதே சிறப்பு. காலம்காலமாக பாலினச் சமத்துவத்தைப் போற்றிவரும் நமது திராவிடப்பண்பாடு. பெண்கள்படிக்கவேண்டும், சமஉரிமை பெறவேண்டும், அனைத்துவேலைகளையும் பெண்களால் செய்யமுடியும் என உறுதிப்படுத்தியுள்ளார்கள் இக்காலப்பெண்கள். ஆனால் இக்காலக் கட்டத்திலும், வேலைக்குச் செல்லும் பெண்களுக்கோ, அல்லது ஒரு குடும்பத்தலைவிக்கோ, வீட்டுவேலைகளில் ஆண்கள் உதவிசெய்வது, இன்றும் ஒரு மதிப்புக் குறைவான செயலாகவே பார்க்கப்பட்டுவருகிறது. பிள்ளைவளர்ப்பிலும் இன்னும் பாகுபாடுகள் இருக்கத்தான் செய்கின்றன. ஆணுக்கொருநீதி, பெண்ணுக்கொருநீதி எனும்நிலை இன்றும் நிலவுகிறது. அந் நீதியானது முதலில் பெண் சமகல்வி பயில்வதற்கான சிக்கலாகவே உள்ளது. வேறு ஒரு இடத்தில் வாழப்போகிறவள்தானே என்கிற போக்கு, மிகவும் வருந்தத்தக்கது. இது பெண்களை அவமானப்படுத்தும் செயலாகும். சொத்துரிமை சட்டங்களாக இயற்றப்பட்டாலும் அதிகாரத்தின் மூலம் இன்னும் மறுக்கப்பட்டுத்தான் வருகிறது. மேலும் தன்னுடைய தனித்தன்மையை வெளிப்படுத்த முடியாதவர்களாக, திறமைகளை வெளிக்காட்ட முடியாதவர்களாகவே முடக்கப்படுகின்றனர். ஆனாலும் அதையும் கடந்து பலபேர் மிகச் சிறந்த பணிகளிலும், சாதனைமுயற்சிகளிலும், அறிவியல் ஆராய்ச்சியிலிருந்து, கலை, இலக்கியம், விளையாட்டு, என பல துறைகளிலும் சிறந்துவிளங்குகின்றனர். அப்படிப்பட்ட மகளிரின் மேன்மையைப் போற்றவும், பாராட்டவும், பாதுகாக்கவும், இந்த மகளிர் தினத்தில், உறுதியேற்று, வலிமையான உடல்நலம் பேணிப்

பாதுகாத்து, வளமான பெண்கள் சமுதாயத்தை உருவாக்கவேண்டியது அனைவரின் கடமையாகும்.

அவ்விதத்தில் திருவள்ளுவர் பெண்களுக்கு கூறுவது என்னென்ன?

அறம்,பொருள்,இன்பம் என அனைத்துப்பாலிலும், ஆணும், பெண்ணும் இணைந்து செயலாற்றவேண்டிய நெறிகளையே, வள்ளுவம் பொதுவாகக் கூறுகிறது. இல்லறவியல், கற்பியல் இரண்டுமே இருவரும் இணைந்து கடமையை ஆற்றவும், அகமும், புறமும் சேர்ந்து இன்புற, மகிழ்வுடன் வாழ, நன்னெறிகளோடு வாழ வற்புறுத்துவது ஆகும்.

எனினும் பெண்கள் ஒழுக்கத்துடன் சிறந்து விளங்கினால் அவள் குடும்பம் மட்டுமன்றி ஒரு நல்ல சமுதாயத்தை உருவாக்க அடிப்படையாக அமைவது ஒரு குடும்பம்தான். அதில் உள்ள அத்தனைப் பேர்களையும் வழிநடத்தும் பொறுப்பு பெண்ணிடமே உள்ளது என்று நம்பிய காலக்கட்டம் அது. அதைத்தான் இல்வாழ்க்கை எனும் அதிகாரத்தில் இவ்வாறு கூறுகிறார்.

“அன்பும்அறனும்உடைத்தாயின்இல்வாழ்க்கை
பண்பும்பயனும்அது”(45)

இல்லத்தில் கணவனும், மனைவியும் சமமாக இருந்து, அன்போடும், பண்போடும், இல்லறத்தை நடத்தவேண்டுமெனக் கூறுகிறார். அதன் விளைவாகப் பிறருக்கு உதவும், அறனுடையதாக இருத்தல் நன்று என்கிறார். இந்த ஒரு குறளிலேயே ஒரு கணவன், மனைவி அன்புடன், அறம் ஒழுக நடக்கவேண்டுமெனக் கூறுவது, ஆணும், பெண்ணும் சமமென்பதைக் குறிக்கும் குறளாகப் பார்க்கப்படுகிறது.

“இல்லதென்இல்லவள்மாண்பானால்உள்ளதென்
இல்லவள்மாணாக்கடை” (53)

இந்தக் குறளில் சிறந்த உள்ளத்தைப் பெற்ற மனைவி ஒருவனுக்கு அமைந்துவிட்டால் அவன் வாழ்வில் அனைத்தையும் பெற்றவனாக மாறிவிடுகிறான் என்கிறது குறள். சிறந்த குணத்தைக் கொண்டவளாக இல்லத்தரசி அமைந்துவிட்டால் அவன் மற்றவற்றைப் பற்றிக் கவலைப்படுவது தேவையில்லை என்கிறார். அவ்வாறு இல்லாதவன் எதுவும் இல்லாதவன் ஆகிவிடுவான் என்கிறது இக்குறள். எனவே பெண்ணின் உயரிய குணத்தை இவ்வாறு வள்ளுவர் கூறுகிறார்.

“சிறை காக்கும்காப்புஎவன்செய்யும்மகளிர்
நிறை காக்கும்காப்பேதலை” (57)

மகளிரை எவ்விதத்திலும் அடைத்தோ, சிறையில் வைத்துப் பாதுகாப்பது பயனைத்தராது எனப் பெண்ணின் உரிமையைக் கூறுகிறார். பெண்விடுதலை பற்றிப் பல காலக்கட்டங்களில் பலர் பேசியிருந்தாலும், அக்காலத்திலேயே பெண்ணைச் சிறைவைப்பதால் மட்டுமே அவளைப் பாதுகாத்து வைத்துக்கொள்ள முடியாது, மாறாக அவள் மனத்திண்மை பெற்றவளாக வளர்க்கப்பட்டால், தனக்குக் காவலாகத் தானே தன்னைப் பாதுகாத்துக் கொள்வாள் என்கிறது வள்ளுவம். பெண்களைத் தைரியத்தோடு, சுயமரியாதையைக் காத்துக்கொள்ள முடியும் என்று இக்குறள் வலியுறுத்துவதாக எடுத்துக்கொள்ளலாம்.

“ஈன்றபொழுதின்பெரிதுவக்கும்தன்மகனைச்
சான்றோன்எனக்கேட்டதாய்” (69)

மக்கட்பேறு அதிகாரத்தில் ஒருதாயானவள் தன் பிள்ளைகள் புரிந்த நற்காரியங்களால், செயல்களால் மற்றவரால் பாராட்டப்படும்போது, அக்குழந்தையை ஈன்றெடுத்த சமயத்தில் அவள் பெற்ற மகிழ்ச்சியை விட பெரிதும் மனம்மகிழ்வாள் என்று கூறுகிறார்.

“அகனமர்ந்துசெய்யாள்உறையும்முகனமர்ந்து
நல்விருந்துஓம்புவான்இல்” (84)

ஒரு குடும்பத் தலைவியானவள் வருகின்ற விருந்தினர்களை, இனிய மலர்ச்சியான முகத்துடன் வரவேற்று, விருந்தளித்தால் அந்த வீட்டில் செல்வத்தின் வரவாகப் போற்றப்படும் மகாலட்சுமி தெய்வமே குடிகொள்ளும் என்கிறார் வள்ளுவர். ஒரு வீட்டில் இருக்கும் குடும்பத்தலைவி தன் இல்லத்திற்கு வரும், உறவினர்களை, விருந்தினர்களை முகம்மலர வரவேற்கவேண்டும். விருந்தோம்பல் என்னும் உயரிய பண்பைக் கொண்டிருந்தால் அனைவரும் பாராட்டும் விதமாகத் திகழ்வாள். தெய்வமும் அவளுடன் துணையிருப்பதாகக் கூறுகிறார் வள்ளுவர்.

“அறன்இயலான்இல்வாழ்வான்என்பான்பிறன்இயலாள்
பெண்மைநயவாதவன்” (147)

கற்புநெறி, ஒழுக்கம், பண்பு ஆகியன நெறிகள் அனைத்தும் பெண்களுக்கு மட்டுமே என்று கூறிய காலக்கட்டத்தில் ஆணுக்கும் சமமாகக் கற்புநெறி போற்றிடக் கற்றுத்தந்தவர் வள்ளுவர். அறநெறியுடன் இல்லத்தில் வாழ்பவன் என்றால் பிறருக்கு உரிமையான மனைவியை நோக்காதவனே ஆவான் என்கிறார். எனவே ஒருபெண் மட்டும் கணவனுக்கு அடிமையாக, எந்த தவறும் புரிந்தாலும் பொறுத்துக்கொள்பவளாகவும், அவனை மட்டுமே நினைக்கக்கூடியவளாக இருக்கவேண்டும்  என்பதில்லை. ஆணும் அவ்வாறே நடந்துகொள்ளவேண்டும் என்கிறார்.

“அலர்நாணஒல்வதோஅஞ்சல்ஓம்புஎன்றார்
பலர்நாணநீத்தக்கடை” (1149)

இன்பத்துப்பாலில், ஒரு தலைவி அக்காலக்கட்டத்தில் தலைவனை விரும்புவதை தைரியமாக உரைப்பதாக அமைந்த குறள். அவர்கள் இருவரும் காதல்கொண்டு, பழகிய சமயத்தில் தன்னைப் பிரியமாட்டேன் என்று வாக்குக் கொடுத்தவர், இன்று தன்னை விட்டுப் பிரிந்தார். ஆனால் அதற்காக, தலைவன் தன்னைப் பிரிந்ததால் ஊரார், உற்றார் பேசும் கேலிக்கு, ஏற்பட்ட தூற்றுக்கு தான் அஞ்சிடுவேனா என்று கேட்கிறாள். பெண் தனக்கு ஏற்பட்ட இன்னலைத் தைரியமாக உரைக்கும் குறள்.

“பசந்தாள்இவள்என்பதுஅல்லால்இவளைத்
துறந்தார்அவர்என்பார்இல்” (1188)

பெண் தன்னுடைய உணர்வுகளை வெளிக்காட்டும் விதமாக, யாருக்கும் அஞ்சாமல் பேசுவதாக வள்ளுவர் கூறுகிறார். தலைவனைப் பிரிந்ததால் இவள் பசலைநோய் கொண்டாள் என உரைக்கும் ஊர், விட்டுச்சென்றவனை பழிக்காமல் இருக்கிறதே என்று பெண்

வெளிப்படையாகக் கேட்கிறாள். ஒரு ஆண் மட்டும் தான் எதற்காகவும் பயப்படத் தேவையில்லை, எதை நினைத்தாலும் செய்யலாம் என்று இருக்கும்போது ,ஊர்ப் பழிக்கு அஞ்சாமல் நடக்கிறான். ஆனால் அவனும் அப்பழிக்கு உரியவன்தானே, அவனை மட்டும் ஏன் இந்த ஊர் ஒன்றும் சொல்லவில்லை, என்று ஊரை எதிர்த்துக் கேட்கிறாள் தலைவி.

இவ்வாறு ஆண்களால் கட்டமைக்கப்பட்ட சமுதாயத்தில், ஆண்களால் உருவாக்கப்பட்ட பெண் உரிமைத்திணிப்புகளில் பெண்விடுதலையும், சமஉரிமையும் கேள்விக்குறியாக இருந்த காலத்தில் இயற்றிய திருக்குறளில் பெண்ணடிமைத்தனம் இருப்பதாகக் கருதுவது தவறானது. மாறாக பெண்ணுரிமைக்கருத்துக்களை, முற்போக்கு எண்ணங்களை அவர் இயற்றியிருக்கும் குறள்களில் காண்பது நாம் வரவேற்கத்தக்கவையே. ஆதலினால் குறள்நெறி போற்றி, நற்குணங்கள் பெற்று,“தற்காத்துத் தற்கொண்டாற்பேணித்தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாள்பெண்” (56) என்று நற்குடிகளாகவாழ்வோம். பெண்மையைப்போற்றுவோம்.

**<u>தன் விவரம்</u>**

| | |
|---|---|
| பெயர் | : திருமதி.தாமரை சீனிவாச ராவ் |
| பிறந்த தேதி | : 17.11.1977 |
| கல்வி தகுதி | : எம்.ஏ (வரலாறு) |
| பணி | : நிர்வாக இயக்குநர்–சீனு ஞானம் ட்ராவெல்ஸ்,<br>பொருளாளர்–அங்கோர் தமிழ் சங்கம் |
| கணவர் பெயர் | : த.சீனிவாச ராவ் |
| தந்தை பெயர் | : பேராசிரியர்.தீரன் |
| முகவரி | : எண் 5,4 வது குறுக்குத் தெரு,ஸ்ரீ ராம் நகர்,பட்டானூர்,வானூர் தாலுக்கா–605111 |

குறிப்பு:

- சிறு வயதிலிருந்து தந்தையுடன் இணைந்து,அவருடைய வழிகாட்டுதலுடன் பல சமூக போராட்டங்கள் மற்றும் சமூகப் பணிகள் செயலாற்றி இருக்கிறேன்.
- மூன்று முறை கணவரோடு சுற்றுச் சூழல் காப்பு,புவி வெப்பமயமாதல்,மழை காடுகள் காப்பு குறித்த விழிப்புணர்வு ஏற்படுத்த தரைமார்க்கமாக உலகப் பயணம்
- கம்போடியா நாட்டில் கடந்த 15 வருடங்களாக,அரசுடன் இணைந்து வரலாறு மற்றும் கலாச்சார உறவு முறை வலுப்படுத்தல் முயற்ச்சியில் ஈடுபட்டுள்ளோம்.
- கம்போடியாவில் ,அங்கோர் தமிழ் சங்கம் அமைத்து,இரண்டு தமிழ் மாநாடு கள்,மூன்று பரத நாட்டிய மற்றும் இந்திய நடன விழா ஆகியவற்றை நடத்தி யுள்ளோம்.
- திருக்குறளை கம்போடியாவின் தாய் மொழியான கெமர் மொழியில் ,மொழி பெயர்த்திருக்கிறோம்.

# திருவள்ளுவர்போற்றும்பெண்மை

-புலவர் **தி.வே. விசயலட்சுமி**, எம்.ஏ., எம்.ஃபில்.,



திருவையாற்று அரசர் கல்லூரிப் பேராசிரியர் திருமகள்.அங்கே புலவர் பட்டமும் பின் எம்.ஏ.எம்.பில்.பட்டமும் பெற்று யுனைடட் இந்தியா காப்பீட்டுக்கழக அலுவலராகப் பணிபுரிந்தார். இவர் படைத்துள்ள பல நூல்கள் இவரது புலமைத்திறத்துக்குச் சான்று பகர்வன.தினமணி நடுப்பக்கக் கட்டுரை கடந்த பத்தாண்டுகளாக எழுதிப் புகழ் நிறுவிய எழுத்தாளராய்த் திகழ்கிறார்.

பெண் என்பதற்கே பெண்மை என்பதுதான் பொருள் என்கிறது வள்ளுவம். பெண்மை என்ற சொல்லிற்குக் கட்புலனாயதோர் அமைதித்தன்மை என்பர் தொல்காப்பியஉரையாசிரியர்.

பெண்கள் நாட்டின் கண்கள். பெண் என்பவள் இனம் என்றும் ஆழியைத் தாங்கி நிற்கின்ற நிலம் என்னும் நல்லாள். கடமையிலே கதிரவனாக, ஒளியிலே நிலவாக, உணர்விலே அன்பாக, காலத்திலே வசந்தமாக, தேவையிலே சிறந்ததாக, இனத்திலே முதலாவதாக இருக்கின்ற பெண்மை மென்மையிலே உவமையற்றது.

**பெண்மையின்சிறப்பு**

பெண்மை, தாய்மை, இறைமை என்று திரு.வி.க. பெண்ணின் பெருமையை மூன்று கூறுகளாகப் பிரித்தார். பெருமைமிகு பெண்மையாய், கற்புடைய காரிகையாய், பண்புடைய பாவையாய், கணவனைப் பேணும் நங்கையாய், அறிவுமிக்க ஆசிரியையாய், துன்பத்திற் சோர்வுறாத் துணைவியாய், ஆற்றலுடைய நிருவாகியாய், தன்னைத் தானே உயர்த்திக்கொள்பவளாக ஒளிர்கின்றனர் பெண்டிர். ஈட்டிய பொருளை அளவுடன் செலவு

செய்வதும், சேமிப்பதும் உரியமுறையில் பாதுகாப்பதும் ஆகிய மதிநுட்பம் ஒவ்வொரு மனைவியிடத்தும் இருக்கிறது. இதைத் திருவள்ளுவர்,

**“மனைத்தக்க மாண்புடையள் ஆகித் தற்கொண்டான்**

**வளத்தக்காள் வாழ்க்கைத்துணை”** (குறள் 51) என்கிறார்.

**வள்ளுவம்போற்றும்பெண்மை**

பெண்களைக் குறித்து வள்ளுவரின் சிந்தனைகள் யாவை? பெண்மையை அவர் எவ்வாறு சமுதாயத்தில் உயர்த்திப் பிடிக்கிறார்? சிந்திக்கவேண்டிய இக்கேள்விகட்கான விடைகளை இக்கட்டுரையிற் காண்போம்.

“தையலை உயர்வு செய்” என்றார் ஔவை மூதாட்டி. மொழி, நாடு, ஆறு போன்றவற்றைப் பெண்ணாகத் தாயாகப் பார்க்கும் பார்வையில் பெண்களை உயர்ந்த பொருள்களோடு ஒப்பிடுவதால் பெண்களின் பெருமையை உணரலாம். இந்த உயர்ந்த பார்வையில் திருவள்ளுவரும் தம் கருத்துக்களை முன்வைத்துள்ளதைப் பின்வரும் தொடரால் அறியலாம். “நிலம் என்னும் நல்லாள் கண்ணோட்டம் என்னும் கழிபெரும் காரிகை நாண் என்னும் நல்லாள்” பெண்ணே பெருமையுடைத்து, பெண்ணின் பெருந்தக்கது இல்‘ என வரும் தொடர்கள் திருவள்ளுவர் காலத்தில் பெண்கள் தொடர்பாக இருந்த மதிப்புணர்வையே காட்டுகின்றன. ஆணாதிக்கச் சமுதாயத்தில் தோன்றிய திருக்குறளின் குடும்பத்திற்குரிய மாட்சிமைகள், பொருந்திய மனைவி குடும்பத்திற்கு மங்கலம் என்று குறிப்பிடுவதால் பெண்களைத் திருவள்ளுவர் உயர்நிலையில் வைத்துள்ளதை அறிகிறோம்.

இல்லறமே பெண்ணுக்கு நல்லறம் அதன் சிறப்பு நல்ல குழந்தைகளைப் பெறுதல் என்கிறார் வள்ளுவர். பெண்களின் மாண்புகளை வாழ்க்கைத்துணைநலம்“ என்றஅதிகாரத்தில்திருவள்ளுவர்விளக்குகிறார். ஒரு குடும்பத்தின் மகிழ்ச்சியை வரையறுக்கும் பல்வேறு காரணங்களில் பொருளாதாரநிலைக்கும் இடம்உண்டு. பிறர் கையை எதிர்நோக்கியே உழைத்துப் பொருளீட்டிக் குடும்பத்தை நடத்திச் செல்லும் பெருமை ஆண், பெண் இருபாலாருக்கும் உண்டு. திருவள்ளுவர் மனைவியை ‘வளத்தக்காள்’ என்று குறிப்பிடுகின்றார். கணவனின் பொருள்வளம், உடல்வளம், மனவளம், புகழ்வளம் போன்ற அனைத்து வளங்களுக்கும் தக்கவளாக அமைபவளே மனைவி என்கிறார். குடும்பத்தை நேர்வழியில் செலுத்தும் மிகப் பெரும் உரிமையை ‘மனைத்தக்க மாண்புடையள் ஆகி (கு 51) என்று தொடங்கும் குறளில் கொடுத்துள்ளார். ஆணும், பெண்ணும் சரிநிகர் சமம் என்ற

கருத்தைத் தெய்வப்புலவர் மிகத் தெளிவாக எடுத்துரைத்து பெண்களுக்கு உரிமை உணர்வை விளக்குகிறார்.

**ஆடவர்க்குக்கற்புநெறி**

ஒரு கணவனுக்கும் மனைவிக்கும் இடையில் பாலமாக அமைந்திருக்கும் உயரிய அன்பினையும், காதலையும் போற்றிப் பேசுகின்ற திருவள்ளுவர் உடம்போடு உயிருக்கு தொடர்பு எப்படி ஏற்பட்டதோ, அதைப் போன்றதே ஒருபெண்ணிற்கும், ஆணுக்கும்உள்ளதொடர்புஎன்கிறார்

**“உடம்பொடு உயிரிடை என்னமற்றன்ன**

**மடந்தையொடுஎம்மிடைநட்பு”** (குறள் 1122).

ஒருவனும் ஒருத்தியுமாக வாழும் அன்புவாழ்வே இன்பவாழ்வாகும். வரம்பு கடந்து வரைவின்மகளிரைத் தேடிச் செல்பவன் தன் சிறப்புக்களையெல்லாம் ஒரு நொடியில் இழந்து உலகோர் பழிக்கும் நிலைக்கு உள்ளாவான். சமுதயத்திற்குக் கேடு விளைவிக்கும் இச்செயலைத் திருவள்ளுவர் பலவாறு ஆய்ந்துரைக்கின்றார்.

**“கற்புநிலைஎன்றுசொல்லவந்தார்**

**இருகட்சிக்கும்அஃதுபொதுவில்வைப்போம்“**

எனப் பாடி புதியவிதியினைப் புரட்சிகரமாய் உருவாக்கிய பாரதியின் கவனத்தைப் “பிறன்மனைநோக்காப்பேராண்மை” என்னும் திருவள்ளுவர் தொடர் கவர்ந்திருக்கிறது என்பதுதான் உண்மை

வரைவின்மகளிர் என்ற அதிகாரத்தைத் திருவள்ளுவர் பத்துக் குறட்பாக்களை விளக்கி, பரத்தமையைத் தூண்டிவிடக்கூடிய சமுதாய அமைப்பு, ஆண்களின் நடத்தை இவற்றைச் சாடி, சமுதாயத்தை நற்பண்புகள் உருவாக்குகிற ஓர் அமைப்பாக மாற்றவிரும்புகிறார்.

**அமைப்பிற்கானவிதிமுறைகள்**

1. ஒருவனுக்கு ஒருத்தி“ எனத் திருவள்ளுவர் சிறப்பிக்கும் வாழ்க்கை நெறியினை ஒவ்வொரு ஆண்மகனும் கடைப்பிடிக்கவேண்டும்.

2. கற்பு என்பது மனித ஒழுக்கத்தில் ஓர் அங்கம். சமுதாயவாழ்க்கை சீராக அமையத் தனிமனிதனின் ஒழுக்கம் துணையாகிறது ஆண்கற்பை இழந்தால் கண்டுகொள்வது இல்லை. பெண் அவ்வாறு கற்பை இழந்தால் பெருந்தவறு என்ற சமுதாயக்கண்ணோட்டத்தைச் சாடுகிறார்.

இவற்றைத் திருக்குறள்வழி அறியமுடிகிறதா? என்றாராயின் “நண்ணேன்பரத்தநின்மார்பு” என்று குறளின் இரண்டாம் அடியைப் பார்க்கவேண்டும். உண்மையில் பரத்தன் ஒருவன் இன்றி ஒருத்தி பரத்தமைக் குற்றத்திற்கு ஆளாகமுடியாது. பல ஆண்களிடம் பரந்து செல்லும் மனத்தை உடைய பெண்களை மட்டுமே பரத்தையர் என்று சங்ககால இலக்கியங்கள் குறிப்பிட்டுவந்த நிலையை மாற்றி, தலைவி தலைவனை ‘பரத்த“ என்று விளிப்பதாகத் திருவள்ளுவர் ஒருபுரட்சிக்கருத்தை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கூறிச் சென்றுள்ளார்.

**இன்றையநிலை**

குடும்பம் ஒற்றை மாட்டுவண்டியில் இருந்தகாலம் போய் இப்போது இரட்டை மாட்டுவண்டியாய் மாறியுள்ளது. குடும்பச்சுமையைஆண், பெண் இருவரும் பகிர்ந்துகொள்ளும்போது உண்மையாய் ஆணின் சுமை குறைகிறது. பெண் அலுவலகப் பணி, குடும்பப்பணி என்ற இரண்டு நிலைப்பாடுகளால் அல்லலுறும்போது, ஆடவர் பெண்ணுக்கு இணையாகத் தானும் குடும்பப் பணிகளில் பங்கேற்க வேண்டும். பெண்கல்வி, பெண்பணிவாய்ப்பு ஆகியவற்றை ஏற்க ஆண்மனம் பக்குவப்படாததால் பெண்ணுக்குச் சுதந்திரம் தருவதிலும் மனச்சோர்வே ஏற்படுகிறது. ஆண்கள் மாறவேண்டும். மனிதநாகரிகத்தின் உச்சமே குடும்பஅமைப்புத்தான். அதைக் காப்பாற்றும் நோக்கில் வள்ளுவர் தம் கருத்துக்களைச் சொல்லியிருத்தல் வியப்பு.

**ஆணுக்குப்பெருமை**

தன்னிலை தவறாமல் ஒருவன் தன்னைத்தானே காத்துக்கொண்டு வாழ்வானேயானால், தன் கணவனை அன்றிப் பிறரிடம் மனத்தாலும் உறவுகொள்ளாத ஒருதன்மையான கற்புடை மகளிரைப் போல் பெருமைப்பண்பு உளதாகும், இதை,

**“ஒருமைமகளிரே போலப் பெருமையும்**

**தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு”**

என்ற குறட்பாவில் விளக்கும் (குறள் 974)

**வள்ளுவர்வாக்குஎத்துணைஉண்மை!**

**சங்கஇலக்கியம் கூறும் மனைவியின் மாட்சிமை**

ஒரு பெண்ணின் சிறந்த பண்புகளால் ஒருதலைவன் அடையும் சிறப்பினை "பிசிராந்தையார்" வழி புறநானூற்றுப்பாடல் 91 நமக்குத் தெரிவிக்கிறது. யாண்டு பலவாயினும் இளமையான தோற்றத்துடன் இருப்பதற்குக் காரணமே மாட்சிமைப்பட இல்லறப்பண்புகள் நிறைந்ததன் மனைவியாலே என்கிறார்புலவர். இக்கருத்தைத்திருவள்ளுவர்

**"இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்**

**இல்லவள் மாணாக்கடை"** (கு 53)

என்ற குறள்வழிக் கூறும் பாங்குபெருமைக்குரியது.

**நிறைவு**

மகளிர் தினம் கொண்டாடப்படுகின்ற இக்காலத்திலே பெண்ணின் ஆளுமையை உலகம் எப்படிக் கண்டு திகழ்கிறது என்பதைத் திருவள்ளுவர் தம் கூர்த்தமதியில், பரந்த அறிவில் கூறிய குறட்பாக்களைஆய்ந்து 'அதன்வழிநடப்போம். கணவன், மனைவி ஒருவருக்கு ஒருவர் வாழ்க்கைத்துணை; யாரும் யாருக்கும் அடிமையில்லை. எல்லா உரிமைகளும் எல்லார்க்கும் பொது என்று பெண்ணின் விழிப்புணர்வுக்கு வழிகாட்டிய திருவள்ளுவப்பெருமானைப் பணிந்து இன்புறுவோம்.

# திருக்குறளில் பெண்ணியம்



**பேரா. முனைவர் க. திலகவதி,**
இயக்குநர், தமிழ்ப்பண்பாட்டு மையம்,
தமிழ் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 613 010.

**பெண்ணியம்**

பெண்ணியம் என்பது பெண் இனத்தின் இருத்தலைப் பேசுவது. இது உலகளாவியது. ஆணாதிக்கத்தால் அல்லலுறும் பெண்களின் வாழக்கைப் பிரச்சனைகளைக் கண்டறிந்து தீர்க்க முயல்வது. கல்வி, அரசியல், சமூகப் பொருளாதார உரிமைகள் அனைத்தும் பாலின வேறுபாடின்றி பெண்களுக்குக் கிடைக்கப் பெற வேண்டும். பெண்ணியம் என்றால் ஆண்களை எதிர்ப்பது என்ற கருத்து சமூகத்தில் நிலவி வருகிறது. காலங்காலமாக அடிமைப்பட்டு, வதைப்பட்டு வாழும் பெண்களை அடிமைத்தளையிலிருந்து மீட்டு அவர்களுக்குக் கல்வியின் மூலம் விழிப்புணர்வு ஊட்டி, சமூகத்தில் ஆண்களுக்கு இணையான மதிப்பினைப் பெற்றுத் தருவதே பெண்ணியத்தின் நோக்கமும் செயற்பாடும் ஆகும். குறிப்பாக பெண்களின் சமத்துவத்தையும் முன்னேற்றத்தையும் வலியுறுத்துவது இந்த இலக்கினை அடைய ஆண்கள் துணையாக இருக்கும்போது போற்றப்படுகின்றனர். சான்றாகத் தந்தை பெரியார், மகாத்மா காந்தியடிகள், திரு.வி.க. வேதநாயகம்பிள்ளை, மகாகவி பாரதியார், பாவேந்தர் பாரதிதாசன் போன்றோர் பெண்களின் முன்னேற்றத்திற்கு உறுதுணையாக விளங்கினர். பெண் முன்னேற்றத்திற்கு ஆண்கள் தடையாக இருக்கும்போதே மட்டுமே அவர்கள் எதிரிகளாகின்றனர். பெண் விடுதலைக்கான போராட்டத்தில் உரிமையை மீட்டெடுப்பதற்காக அவள் போராடுகிறாள். அந்தப் போராட்டத்தில் அவள் ஆணுக்கு எதிரியில்லை அவனுடைய மேலாதிக்கதிற்கும் அதிகாரத்திற்குந்தான் எதிரி. போராட்டத்தில்

அவனையும் இணைத்துக் கொள்ளவே விரும்புகிறாள். பெண் ஆணைப் போலவே சுதந்திரமானவள், அவனுக்கு நிகரானவள், அனைத்து நிலைகளிலும் சமத்துவமானவள். எந்த நிலையிலும் ஆற்றலில் அவள் குறைந்தவள் இல்லை. அன்பு, அருள், இரக்கம், மனத்திடம், வீரம், ஆளுமை விவேகம், உடையவள். சுதந்திரம் என்பதை யாரும் கொடுத்துப் பெறுவதில்லை. அது அவரவர் உரிமை. ஆணாயினும், பெண்ணாயினும் ஒவ்வொருவரும் உணர்ந்து அனுபவிப்பது. பெண்ணியம் பெண் விடுதலையை நோக்கிப் பயணித்தாலும் அது மானுடத்தின் முழுமைக்கான விடுதலை என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

திருவள்ளுவர் மூவகை மகளிரின் இயல்புகளைக் குறளில் பதிவு செய்துள்ளார். வாழ்க்கைத் துணை நலம் (6) இல்லறவியல் அதிகாரத்தில் இல்லறம் நடத்துகின்ற மனைவியின் சிறப்பையும், பெண்வழிச் சேறல் (பொருட்பால்-91) அதிகாரத்தில் தகுதியில்லாத மனைவியின் இயல்பையும் வரைவின் மகளிர் (92) அதிகாரத்தில் திருமணம் செய்யாமல் பொருள்பெற்று வாழும் பலருக்கும் பொதுவான பரத்தை மகளிர் செயல்களையும் உலகோர்க்கு எடுத்துக்காட்டி வாழ வேண்டிய நெறிமுறைகளை எடுத்துரைக்கின்றார், பரத்தமைப் புறக்கணிப்பும் மகளிர் உணர்வுகளை மதிக்கும் போக்கும் சுட்டுகிறார்.

அறத்துப்பாலில் இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணை நலம், மக்கட்பேறு என்னும் அதிகாரத்தொடர் வைப்புமுறை அன்பான குடும்ப வாழ்வியலை எடுத்துக்காட்டுகின்றது. வாழ்க்கை என்பது அகத்திணை. ஆண், பெண் என்னும் ஈருயிர்க் கூட்டு. குடும்பத்துள் இன்றியமையாதவர் ஆணா? பெண்ணா? என்ற போட்டி கூடாது, கிழவன். கிழத்தி என்றும், தலைவன், தலைவி என்றும், காதலன், காதலி என்றும் ஏற்றத்தாழ்விலாப் பெயர்களையே தமிழ்ப்புலவர்கள் சுட்டியுள்ளனர். இருவருள் யார் இறப்பினும் எஞ்சியோர் நிலை வாழ்க்கையாகாது. காதலி இழந்த தபுதார நிலையும், காதலன் இழந்த தாபத நிலை என்றும் தொல்காப்பியர் சுட்டுவர்,

“இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்போடு புணர்ந்த ஐந்திணை” (தொல். பொருள்.கள.1)

என்றும், ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப” (தொல். பொருள்.கள.2)
என்றும் தொல்காப்பியர் சுட்டுவர்.

வள்ளுவர்

“அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது” ……… (45)
“அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன் பழிப்பது இல்லாயின் நன்று” ……… (49)

எனக் காட்டுவது ஒப்பு நோக்கத்தக்கது.

இல்வாழ்க்கை என்பது கணவனும் மனைவியும் கூடி நடத்தும் குடும்ப வாழ்வியலாகும். இல்வாழ்வான் (இல்வாழ்க்கை நடத்துபவன்) என்பவன் பெற்றோர், மனைவி, மக்கள் ஆகிய மூவர்க்கும் நல்லநெறியில் நிலைபெற்ற துணையாவான். மேலும் இறந்த முன்னோர் வழிபடு தெய்வம், விருந்தினர், சுற்றத்தார், தான் என்ற ஐந்து இடத்தும் அறநெறி வாழுவாது போற்றி வாழ்தல் இன்பமாகும். இவ்வுலகில் இல்லறமாகிய வாழத்தக்க நெறியில் வாழ்பவன் நிலவுலகத்தின்னே யானாலும் வானுலகில் உள்ள தெய்வங்களுக்குச் சமமாக வணங்கப் பெறுவான். ஆகவே இத்தகைய வாழ்வு வாழ நற்குணம் நற்பண்புகள் பொருந்திய மனைவி அமையுமாயின் அவன் வாழ்க்கை சிறப்படையும். அதனாலே இல்வாழ்க்கை அதிகாரத்தினை அடுத்து வாழ்க்கைத் துணைநலம் அதிகாரம் அமைத்தார் வள்ளுவர், மனைவி என்பவள் வாழ்க்கைக்குத் துணையாக வருபவள் மட்டும் அல்லள். வாழ்க்கைக்கு நலம் செய்பவள், நலம் கூட்டுபவள் என்பதாலேயே 'நலம்' என்ற சொல்லைப் பெய்தார். ஆண்மகன் பிறன் மனைவியை விரும்பக்கூடாது என்பதை பேராண்மை என்றும் அவ்வாறு விரும்பினால் ஏற்படக் கூடிய இழிவுகளையும் பிறனில் விழையாமை (15) அதிகாரத்தில் கூறி எச்சரிக்கிறார். ஒழுக்கமுடைமைக்குப் பின் இதனைக் கூறுவதால் உணரலாம். "ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்" (131) என்பர்.

"எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல்" (144)
"எளிதென இல்லிறப்பான் எய்தும் எஞ்ஞான்றும்
விளியாது நிற்கும் பழி" (145)
"பகை பாவம் அச்சம் பழிஎன நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்"….(146)
"பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு" (147)

என 'ஒருவனுக்கு ஒருத்தியாக' வாழும் கோட்பாட்டினை கூறுகின்றார். மேலும் கற்புடைய பெண்களைப் போல ஆணும் ஒழுக்கத்துடன் வாழ்ந்தால் அவனுக்குப் பெருமை உண்டு என்பதை "ஒருமை மகளிரே போலப் பெருமையும் தன்னைத் தான் கொண்டு ஒழுகின் உண்டு" (974) எனக் குறிப்பர்.

இல்வாழ்க்கைக்குத் தகுதி உடைய மாட்சிமை மிக்க பண்புகளைப் பெற்றுத் தன் கணவனின் வருவாய்க்கேற்பச் செலவு செய்து இல்லறம் நடத்துபவளே சிறந்த வாழ்க்கைத் துணை ஆவாள். இல்வாழ்க்கைக்குரிய மாட்சிமை மிக்க பண்புகள் ஒருவன் மனைவியிடத்து இல்லையெனின் அவ்வாழ்க்கை வேறு எத்துணைச் சிறப்புடையதாயினும் அதனால் நன்மை இல்லை. இல்வாழ்க்கைக்கு உரிய மனைவி மாட்சிமை மிக்க நற்பண்புகளை உடையவள் எனின் ஒருவனுக்கு வாழ்க்கையில் இல்லை எனத் தக்கது யாதும் இல்லை. நிறைவுடைய

வாழ்க்கையாகும். அவள் அத்தகைய பண்புகளைப் பெறாவிடின் அவனுக்கு உள்ளது எனக் கூறத்தக்கது யாது? மனநிறைவு இல்லா வாழ்க்கையாகும். இதனை

“மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை”....(51)

“மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்”......(52)

“இல்ல தென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை”......(53)

எனப் போற்றுகிறார்.

பெண்ணிற் பெருந்தக்க பெருமையாவது. பெண்டிர் கற்பென்னும் திண்மை பெற்றிருக்க வேண்டும் (54) என்பர். தெய்வத்தைத் தொழுது போற்றாது தன் கணவனையே தொழுதுபோற்றி எழும் பண்புடையவள் ‘பெய்க’ என்று கூற மழை பெய்யும் (55) என அவளது கற்பின் திண்மையைக் காட்டுகின்றார். மேலும் கற்புநெறி நின்று தன்னைக் காத்துக் (உடல். உள்ளம்) கொள்வதோடு, தன் கணவனையும் பாதுகாத்துப் பேணி, தகை சான்ற குடிப்பெருமையும் காத்துக் கடமைகளில் தவறாது ஒழுகுபவளே (56) நன்மனைவியாவாள். மகளிரைச் சிறை போன்ற கட்டுப் பாட்டில் வைத்துக் காப்பது என்ன பயன் தரும் என வினவி, அவர்களுடைய கற்பினால் அமைந்த காவலே சிறந்தது (57) எனச் சுட்டுவர்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான் உறையும் தெய்வங்களுக்குச் சமமாக வைத்து வணங்கப் பெறுதல்போல, தன் கணவனை உளம் பொருந்திய வாழ்க்கைத் துணைவராகப் பெற்ற மகளிர் வானவர் வாழும் மேல் உலகிலும் சிறப்புப் பெறுவர் என்பதை

“பெற்றாற் பெறின் பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு” ......... (58)

எனக் காட்டுகின்றார்.

நற்குணம், நற்செய்கைகளால் புகழத்தக்க நல்ல மனைவியைப் பெற்றவன் தம்மைப் பழிப்பார்முன் (பகைவர்முன்) காளைப்போல் நிமிர்ந்து பெருமிதமாக நடப்பான். அவ்வாறு நன்மனைவியைப் பெறாதவன் பகைவர்முன் காளை போல் பெருமிதத்தோடு நடக்கும் நடை இல்லை என்பதை,

“புகழ் புரிந்து இல் இல்லோர்க்கு இல்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை”......(59)

எனக் காளையுடன் ஒப்பிட்டுக் காட்டுவர்.

# திருவள்ளுவரும் குடும்ப வன்முறையும்

-முனைவர் சந்திரிகா சுப்ரமண்யன்



வழக்குரைஞர் உச்ச மற்றும் உயர் நீதி மன்றம்
ஆத்திரேலியா

புதிய சிந்தனைகளைத் தூண்டி, புதுப்புதுக் கண்டு பிடிப்புகளுக்கு வழிவகுத்து , பல் நோக்கு ஆராய்ச்சிகள் நடத்த வழிவிட்டு, வித விதமான நோக்கில் அணுகப்பட்டு , எண்ணிலடங்கா மாநாடுகள், உலகளாவிய கருத்தரங்குகள், வெவ்வேறு துறை சார் ஆய்வரங்குகள் எனத் திருக்குறளைக் கருப்பொருளாய்க் கொண்டு இயங்கிட எத்துறைக்கும் வழி காட்டியாய் நின்று நிலைத்த பெருமையுடையது திருக்குறள் .
ஒரு வீட்டில் திருக்குறள் இருந்தால், கூடவே பாரதி, கண்ணனைச் சொன்னது போல, வள்ளுவம் , அன்பை ஊட்டும் தாயாக , அறிவுரையூட்டும் தந்தையாக, கல்வியூட்டும் ஆசிரியனாக , நண்பனாக இல்லறம் காக்கும் மனைவியாக, நமது பணிகளுக்கு, எல்லாம் துணை போகும் சேவகனாக, நண்பனாக நற்றுணையாகும் காதலனாக , இன்பம் ஊட்டும் காதலியாக , ஆளும் அரசனாக, ஆணையிடும் அமைச்சனாக, அறவழி காட்டும் அறவோனாக, புத்தி சொல்லும் அதிகாரியாக, நியாயம் உரைக்கும் நீதிமானாக, பொதுமை பேசும், புதுமை படைக்கும் , சூழலியல் சொல்லும் , சமுதாய வளர்ச்சியும் , சமூக நீதியும் உணர்த்தும், உளவியல், உணர்வியல், மருந்தியல், என்று வாழ்க்கைக்குரிய நல்லவற்றை எல்லாம் சொல்லித் தரும் ஒரு வாழ்க்கை வழிகாட்டியாக உடன் நிற்கும்.
அதே சமயம் எவையெல்லாம் தனி மனிதனுக்கும், சமுதாயத்துக்கும் , இந்த உலகத்துக்கும் , தீயன பயப்பனவோ , எவையெல்லாம் தீயவை என ஒதுக்க வேண்டியவையோ , கள்ளுண்ணாமை, பொய் கூறாமை, பிறன் மனை நோக்காமை ,

என்றெல்லாம் விலக்க வேண்டியவற்றைப் பட்டியலிடுகின்ற உலக வழிகாட்டி வள்ளுவம்.

மக்கள் வாழ்வியல் பற்றியும், அதன் தேவை தேவையின்மை பற்றியும், அவற்றின் நன்மை தீமை பற்றியும், முழுமையாகச் சிந்தித்து முடிவு கண்ட பேராற்றல் கொண்டவர் வள்ளுவர்.

''வையேறு திருக்குறள் என்றொருநூல் செய்து
உலகு-உவப்ப அளித்தா னாக!" என வள்ளுவரை, திருக்குறளை, நமக்கெல்லாம் முந்தி அள்ளிப் பருகிய பெரும் பேராசிரியர் மீனாட்சி சுந்தரனார் போற்றுகின்றார். வள்ளுவர் ஒரு பெரும் சமுதாயச் சிந்தனையாளர்; அரசியல் பேரறிஞர்; பொருளியல் வல்லுநர்; வாழ்வியல் அறிந்துணர்த்தும் அறவியல் மேதை; தனி மாந்தரின் உளவியலும், பொதுமாந்தரின் உளவியலும், குமுக உளவியலும் உணர்ந்த சிறந்த உளவியல் பேராசிரியர். இன்பத்துப் பால் என ஆண், பெண் காதலையும் காமத்தையும் வாழ்வின் அங்கம் என உணர்த்த வந்த வழிகாட்டி இல்லறமும் துறவறமும் வெவ்வேறாகவும் , இல்லறத்திலிருந்து துறவறம் பரிணமிப்பதை உணர்ந்த மெய்ஞ்ஞானி. இல்லறத்தில் அமைதி என்பதைத் தன்னுடைய குறள்களில் எடுத்துக்காட்டியவர்.

பால் என்று பொதுவில் சொன்னாலும் கூட ஒரு கணவனும் மனைவியும் அல்லது ஒரு காதலனும் காதலியும் எப்படி மன ஒற்றுமையுடன் வாழ்வது என்பதை எடுத்துரைத்த பெருமைக்குரியது திருக்குறள்.

அப்படி மன ஒற்றுமை இல்லாத காரணத்தினால்தான் இந்த நவீன யுகத்தில் மணமுறிவும் குடும்ப வன்முறைகளும் தலைவிரித்தாடுகின்றன. வள்ளுவர் தவிர்க்கச் சொன்னவற்றை தவிர்த்து இருந்தாலே குடும்ப வன்முறைகள் குறைந்து போயிருக்கும். அந்த வகையில் அமைதி நிலவ வேண்டும் என்றால் ஆதிக்கம், பேராசை,, வன்முறை, சமம் இல்லாத கருத்து முரண் கொண்ட வாழ்க்கை முறை , பொருளாதார ஏற்றத்தாழ்வு, பொறாமை இவையெல்லாம் நீக்கப்பட வேண்டும்.

குடும்பங்களில் இயங்கும் உறவுகள் அறிவு இல்லாமையால் தமக்குத் தாமே உருவாக்கிக் கொள்ளும் துன்பம் அவருடைய பகைவரால் கூட அவருக்கு செய்யமுடியாத அளவினதாகும். இதையே வள்ளுவர்

“அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்கும் செய்தல் அரிது “ (843 ) என்றார். அறிவில்லாதவர் தம்மைத்தாமே துன்புறுத்தும் துன்பம் அவருடைய பகைவர்க்கும் செய்யமுடியாத அளவினதாகும் என்றும் ,

“ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்
பேதையின் பேதையார் இல்.”(834) என நூல்களை ஓதியும், அவற்றின் பொருளை உணர்ந்தும், பிறர்க்கு எடுத்துச் சொல்லியும் தான் அவற்றின் நெறியில் அடங்கி ஒழுகாத பேதை போல் வேறு பேதையர் இல்லை.என்றும் அறிவு இல்லாமையால் குடும்பங்களில் துன்பம் நேர்வதன் அடிப்படைகள் குறித்து எடுத்துரைக்கின்றார்.

குடும்பத்தில் பிளவுகள் ஏற்படாமல் குடும்ப உறுப்பினர்கள் செயல்படுவதை வலியு றுத்துகிறது வள்ளுவம். . நேர்மையான பொருள் ஈட்டலையும் , அவை சார்ந்து மக்கள் சமூகம் பின்பற்ற வேண்டிய வாழ்வியல் ஒழுக்கத்தையும் மக்களுக்கு உணர்த்துவதே திருக்குறளின் அடிப்படையாகும்.

குடும்பத் தலைவர்கள் நடுவு நிலைமையுடன் நடக்கும் போது அந்த குடும்பத்தில் அமைதி நிலவும். பொறையுடைமை, அழுக்காறாமை, வெஃகாமை, ஒப்புரவறிதல், அருளுடைமை, கள்ளாமை, வாய்மை, வெகுளாமை, இன்னாசெய்யாமை, கொல்லாமை, அவாவறுத்தல், குற்றம் கடிதல், பெரியாரைத் துணைக்கோடல், தெரிந்து செயல்வகை போன்ற அதிகாரங்களில் வள்ளுவர் வன்முறைகள் இல்லாத வாழ்க்கைக்குத் தேவையான, குடும்ப அமைதிக்குத் தேவையான பல கருத்துக்களைத் தெளிவுறுத்துகின்றார்.

ஒரு குடும்பத்தில் எப்போது முரண்பாடுகள் அதிகரிக்கும் என்றால் குடும்ப உறுப்பினர்கள் இடையே இணக்கம் இல்லாமல் மனவேறுபாடு என்னும் பெரிய துன்பம் வளர்க்கும் நோய் ஏற்படும் போது முரண்பாடுகள் தலைவிரித்தாடும்.

இகல் என்ற அதிகாரத்தில் (851-860) பத்து குறள்களிலும் மன வேறுபாடு குறித்தும் , அமைதியாக வாழ்வதே சிறப்பு என்று சொல்வதுடன் , அறன் வலியுறுத்தல் , நடுவுநிலைமை ஆகிய அதிகாரங்களில் ஒரு குடும்பத்திற்கு தேவையான அமைதியான வாழ்க்கை முறையைப் பற்றியும் வள்ளுவர் பேசுகிறார்.

இவற்றையெல்லாம் இரு பாலாரும் பின்பற்ற வேண்டி இருந்தாலும் கூட ஒரு குடும்பத்தின் தலைவி தன் குடும்பம் அமைதியாக இருக்க வேண்டும் என்ற நோக்கத்தில் குடும்ப அமைதிக்குத் தேவையான பண்புகளை எப்படிப் பின்பற்ற வேண்டும் என்பதையும் பல குறள்களில் எடுத்துரைக்கின்றார்.

குறிப்பாக, இல்வாழ்க்கை. என்ற அதிகாரத்தில் ,

“இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை” என்று ‘பெற்றோர், வாழ்க்கைத் துணை, குழந்தைகள் என இயற்கையாக அமைந்திடும் மூவர்க்கும் துணையாக இருப்பது இல்லறம் நடத்துவோர் கடமையாகும் என வழிகாட்டுகின்றார்.

‘அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.’ எனவும் இல்வாழ்க்கை பண்புடையதாகவும் பயனுடையதாகவும் விளங்குவதற்கு அன்பான உள்ளமும் அதையொட்டிய நல்ல செயல்களும் தேவை எனச் சொல்வதுடன்,

‘இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை.” என நல்வாழ்வுக்கான முயற்சிகளை மேற்கொள்வோரில் தலையானவராகத் திகழ்பவர், இல்வாழ்வின் இலக்கணமுணர்ந்து அதற்கேற்ப வாழ்பவர்தான் என்கிறார்.

வாழ்க்கைத் துணைநலம் அதிகாரத்தில்,

‘மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை’ இல்வாழ்க்கைக்கு ஏற்ற நற்பண்பு உடையவளாகித் தன்கணவனுடைய பொருள் வளத்துக்குத் தக்க வாழ்க்கை நடத்துகிறவளே வாழ்க்கைத்துணை ஆவாள் எனப் பெண்ணிற்குத் தேவையான குணங்களைச் சொல்வதுடன்,

“மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்”. என இல்வாழ்க்கைக்கு தக்க நற்பண்பு மனைவியிடம் இல்லையானால், ஒருவனுடைய வாழ்க்கை வேறு எவ்வளவு சிறப்புடையதானாலும் பயன் இல்லை என்று சொல்வதன் மூலம் குடும்ப வன்முறைகளைத் தவிர்க்கவும் இனிய இல்லறம் அமையவும் வழி காட்டும் வள்ளுவம், குடும்பத்தினர்களுக்குத் துணையாவதைப் போல வேறெந்த தமிழ் நூலும் துணை ஆகாது; வழி காட்டாது.

# உலக உழைக்கும் மகளிர் நாள்



-வேண்மாள் கோவிந்தன்

மார்ச் எட்டாம் நாள் உலக உழைக்கும் மகளிர் நாள். இந்த ஆண்டுக்கான கருப்பொருள் பாலின சமத்துவத்துக்கான புதிய வழிமுறைகளும் தொழில் நுட்ப உதவிகளும் என்பதாகும். சங்க காலம் தொட்டுத் தமிழ்ப் பெண்கள் வீரம் மிக்கவர்களாகவும், கல்வி அறிவில் சிறந்தவர்களாகவும் தமிழ்ப் புலமை மிக்கவர்களாகவும் திகழ்ந்திருக்கிறார்கள். சங்க காலத்தில் முப்பதுக்கும் மேற்பட்ட பெண்பாற் புலவர்கள் இருந்திருக்கிறார்கள் என்று இலக்கிய வரலாறு கூறுகின்றது.

இந்த மகளிர் நாளில் திருக்குறளில் கூறப்பட்டுள்ள மகளிரின் மாண்புகள் பற்றி அறிந்து கொள்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும். தந்தை பெரியாருக்குப் பிடித்த ஒரே தமிழ் இலக்கியம் திருக்குறள் ஆகும்.

**“வினையே ஆடவர்க்கு உயிரே”** என்ற கருத்து கொண்டவர் தான் திருவள்ளுவர். அவர் வாழ்ந்த காலத்தை நோக்கும் போது பெண் என்பவள் கணவனுக்கு வாழ்க்கைத் துணையாக இருந்து இல்லறத்துக்குத் துணை புரிபவளாக இருக்க வேண்டும் என்ற கருத்து மேலோங்கி இருந்திருக்க வேண்டும்.

அதனால் தான் வாழ்க்கைத் துணை நலம் என்ற ஓர் அதிகாரத்தை அமைத்து பத்து குறட்பாக்களை எழுதி உள்ளார்.

**இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்**

**இல்லவள் மாணாக் கடை (குறள் எண் 53)**

இல்லாள் மாண்பு உடையவளானால் அக் குடும்பத்தில் இல்லாதது யாது? அவள் அவ்வாறு அமையாவிட்டால் அக்குடும்பத்தில் உள்ளது தான் யாதோ? இல்லாளின் மாண்பு அவ்வில்லத்திற்குத் தேவையான எல்லாவற்றையும் தரவல்லது. அவளது மாண்பின்மை அக் குடியிலுள்ள பிற சிறப்புகள் அனைத்தையும் தீய்க்கவல்லது. இது அப்பா புலவர் மா.நன்னன் அவர்கள் குறள் எண் 53க்கு எழுதியுள்ள விளக்கம். நம்முடைய தமிழ்க் குடும்பங்கள் பலவற்றில் குடும்பத் தலைவிகள் தாம் ஆளுமை மிக்கவராக எல்லா முடிவுகளையும் எடுப்பவராகவும், குடும்ப நிருவாகத்தைத் திறம்பட நடத்துபவராகவும் திகழ்கிறார்கள். இல்லத்தரசிகளாக இருப்பது என்பது தாழ்வான பொறுப்பு அல்ல.

அப்பா நன்னன் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் புலவர் வகுப்பு படிக்கும்போது பணம் தேவைப்பட்டால் தம் தாயிடம் தான் கேட்பாராம். அவரும் தாம் பால், மோர் விற்ற பணம் வைத்திருந்தால் கொடுப்பாராம். தம்மிடம் இல்லை என்றாலும் அக்கம் பக்க வீடுகளில் கேட்டு வாங்கித் தருவாராம். அவர் தாம் குடும்பத்தை மிகத் திறம்பட நிருவாகம் செய்வார் என்று அப்பா நன்னன் அவர்கள் கூறுவார்கள். அவரைப் போலவே எனக்குத் தாயார் பார்வதி நன்னன் அவர்களும் மிகச் சிறந்த ஆளுமை மிகுந்த பெண்மணி. அப்பா நன்னன் அவர்களின் வெற்றிக்கு முழு முதற் கரணியம் அம்மா பார்வதி அவர்கள் தாம். அப்பா நன்னன் தம்முடைய சம்பளம் முழுவதையும் அம்மாவிடம் கொடுத்துவிடுவார். தம்முடைய செலவுக்குக் கூட அம்மாவிடம் கேட்டுப் பெற்றுக் கொள்வார். அம்மா தான் திறம்படக் குடும்பத்தை நடத்துவார். கடைகளுக்குச் செல்லுதல், பொருள்கள் வாங்குதல், என்று அனைத்துப் பணிகளையும் அம்மா தான் செய்வார். இப்படி இல்லத்தரசிகள் மாண்புடையவர்களாகத் திகழ்கிறார்கள் என்பதைத் தான் திருவள்ளுவர் வாழ்க்கைத் துணை நலம் என்னும் அதிகாரத்தில் விளக்குகிறார். “வாழ்க்கைத் துணை” என்ற சொல்லைத் தான் நாம் இன்று “வாழ்விணையர்” என்று குறிப்பிடுகிறோம். கணவன், மனைவி இருவரும் இணையர்களாக, தோழர்களாக, வாழ வேண்டும் என்ற எண்ணத்தில் அவ்வாறு குறிப்பிடுகிறோம்.

**தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்எனப் பெய்யும் மழை. (குறள் எண். 55)**

என்னும் குறளுக்கு தெய்வத்தைத் தொழாமல் தன் கொழுநனையே அடியொற்றி வாழ்பவள், வேண்டுங்காலத்துப் பெய்யும் மழை போன்றவள் என்று புலவர் மா.நன்னன் அவர்கள் விளக்கம் தருகிறார்.

மேலும், **"மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி"** என்ற குறளில் மகன் என்றால் மகளையும் குறிக்கும் என்று கூறுவார்கள். அதைப் போலவே **"தெய்வம் தொழாஅள்"** என்ற குறளுக்கும் ஒரு பாலுக்குச் சொன்னது ஏனைய பாலுக்கும் பொருந்தும் என்னும் பொதுக் கோட்பாட்டுக்குக்கேற்ப இத்தகையவற்றை இருபாலருக்கும் கொள்ளல் வேண்டும் என்று புலவர் மா.நன்னன் அவர்கள் கூறுகிறார்கள்.

**பெண்ணின் பெருந்தக்க யாஉள கற்புஎன்னும்**
**திண்மை உண்டாகப் பெறின்      (குறள் எண் 54)**

இல்வாழ்வு நடத்தும் ஒரு பெண்ணிற்குக் கற்பு என்னும் மனஉறுதி இருந்தால், அந்தப் பெண்ணைவிட பெருமையுடையவை இப்வுலகில் வேறு என்ன இருக்கின்றன? ஒன்று மில்லை. கற்பு என்னும் திண்மை என்றால் இல்லறத்தில் காதலன்பு காரணமாகக் கொள்ளப்படும் மனஉறுதி, அந்த மனவுறுதி ஆண், பெண் இரு சாராரிடமும் எதிர்பார்க்கப்படும் நற்பண்பாகும் என்பது நாவலர் நெடுஞ்செழியன் அவர்களுடைய உரையாகும். எனவே கற்பு என்பது இருபாலருக்கும் பொதுவானது என்றே நாம் கொள்ள வேண்டும்.எனவே, திருவள்ளுவர் உணர்த்தும் பெண்மையின் மாண்புகளை இன்று நாம் ஓரளவு அறிந்து கொண்டோம். மேலும் இது குறித்த ஆய்வுகள் நடத்தப்பட வேண்டும்.

வேண்மாள் நன்னன்;புலவர் மா நன்னன் அவரகளுக்கு மகள்;35 ஆண்டுகள் வங்கிப்பணி ஆற்றி ஓய்வு பெற்ற பிறகு அப்பா நன்னன் அவர்களுக்கு நூல்கள் வெளியிடும் பணிகளில் துணையாக இருந்தார்.அப்பா மறைந்த பிறகு நன்னன் குடி அறக்கட்டளை வழியாக அப்பா நூல்களை வெளியிடுதல். பள்ளிப்பிள்ளைகளுக்குத் தமிழைத் தமிழாக்குவோம் தேர்வுகள் நடத்தி பரிசுகள் வழங்கியும் ஆண்டு தோறும் சிறுகதைப் போட்டி நடத்தி பரிசுகள் வழங்கியும் மொழி இலக்கியவளர்ச்சிக்குத் தம்மால் இயன்றபணியாற்றிவருகிறார். அய்ந்து உயர்திணை திருமண வாழ்விணையருக்குப் போற்றியும் பரிசுகளும் வழங்கிச் சமூகநீதி பற்றிய விழிப்புணர்வு ஏற்படுத்திவருகிறார்.நன்னன் குடி என்ற வலையொளி வாயிலாக காணொளிகள் வழங்கிவருகிறார். இலக்கிய பகுத்தறிவு கூட்டங்களில் கலந்து கொண்டு தந்தைவழியில் தமிழ் முழக்கமும் கொள்கைவிளக்கமும் வழங்கிவருகிறார்.
பகுத்தறிவாளர் கழகத்தின் மாநில துணைத்தலைவர்.
தமிழ்நாடு மூதறிஞர் குழுவின் துணைத் தலைவர்.
தமிழ்நாடு கலந்துரையாடல் குழுவின் செயற்குழு உறுப்பினர்.

# பெண்ணியம் பேசுகிறேன்!



**செயா மாறன், அட்லாண்டா,**

**சார்சியா,அமெரிக்கா.**

உங்களுக்கு இல்லாத சலுகைகளா? உங்களுக்கு இல்லாத உரிமைகளா?இன்னமும் ஏன் இந்தப் பெண்ணியப் பேச்சு?என்று சமுதாயம் எம்மைப் பார்த்துக் கேட்கிறது. பெண்ணியவாதிகள் இவர் தீவிரவாதி என்பது போன்ற முத்திரை குத்தப்படுகிறார்கள். இதற்குப் பயந்து,அங்கங்கே தன் பெண்ணியச் சிந்தனையை வெளிப்படுத்த விரும்பும் சாதாரணப் பெண்கள், நான் பெண்ணியம் பேசவில்லை என்ற அடிக்கோடிட்ட வாக்கியத்தோடு தான் தன் கருத்தைப் பதிகிறார்கள். இந்தச் சூழ்நிலையில் தான் நான் பெண்ணியம் பேசுகிறேன். நம் தந்தை பெரியார் பேசிய பெண்ணியம் இன்னும் பெண்களால் கூட முழுமையாகப் புரிந்து கொள்ளப்படவில்லை என்ற ஆதங்கத்தில் பேசுகிறேன். நமக்குக் கல்வி தரப்படுகிறது,நமக்கு உரிமைகள் தரப்படுகின்றன. இப்படி எல்லாம் தரப்பட்டுக் கொண்டிருக்கும் வரை நாம் முழுமையான பெண்ணாயிருக்க முடியாது. என்றைக்கு நாமாக எடுத்துக் கொள்கிறோமோ அன்று தான் முழுமையான பெண்ணாக முடியும். அது வரை பெண்ணியம் பேசித்தான் ஆக வேண்டும்.

பெண் கல்வி கற்றால் அவள் சிந்திக்கத் தொடங்கிவிடுவாள். விடுதலை பெற்றுவிடுவாள் என்று முழுமையாக நம்பினார் நம் தந்தை பெரியார். கல்வி கற்றுவிட்டோம். விடுதலை பெற்றுவிட்டோமா?நம் அம்மாக்களுக்கு ஆசிரியராவதற்கான கல்வியே பெரும்பாலும் தரப்பட்டது. ஏன்? அந்த வேலை தான்

பாதுகாப்பான,குடும்பத்தையும் சமாளிப்பதற்கான வேலை. ‘என்ன வேண்டுமானாலும் படி. ஆனால்,ஐந்துமணிக்கு வீட்டுக்கு வருவது போன்ற வேலையைத் தேர்ந்தெடு!’ என்ற அறிவுரையோடு தான் நமக்கும் கல்வி தரப்பட்டது. மருத்துவரானால் கூட,பல் மருத்துவத் துறை, கண்,மூக்கு செவித் துறை போன்ற துறைகளில் அவசர சிகிச்சை போன்ற சிக்கல்கள் இல்லை என்பதால் அந்தத் துறைகளை பெண்கள் எடுப்பது தான் சிறந்தது என்ற அறிவுரையோடு தான் இன்றைய பெண்களுக்குக் கூட கல்வி தரப்படுகிறது.அதனால் தான் இன்னமும் பொறியியல், ஆய்வு போன்ற துறைகளில் பெண்கள் குறைவாக இருக்கிறார்கள். 2019ஆம் ஆண்டின் அமெரிக்க மக்கள் தொகைக் கணக்கெடுப்பின் படி பொறியியல் துறையில் பெண்களின் பங்கு பதின்மூன்று விழுக்காடு தான்.

இந்த நிலை மாற வேண்டும். நாங்கள் விரும்பியதைப் படிக்கும் போது,விரும்பிய துறையை/வேலையைத் தேர்ந்தெடுக்கும் போது அதற்கேற்றாற் போல் வாழ்விணையரைத் தேர்ந்தெடுக்க/குடும்பத்தை அமைத்துக் கொள்ள /தனித்து வாழ எங்களுக்குத் தெரியும்! குடும்ப நிர்வாகத்திற்கு/பிள்ளை வளர்ப்பிற்கு ஏற்றாற் போல் வேலையை மாற்றிக் கொள்ள, வேண்டுமானால் வேலையை விட, எங்களுக்குத் தெரியும்! பெண்ணென்றால் சமைக்க வேண்டும், கட்டாயம் வாழ்விணையரோடு வாழ வேண்டும், குழந்தை பெற வேண்டும்,நல்ல மனைவியாக,நல்ல அம்மாவாக இருக்க வேண்டும் அதற்கேற்றாற் போல் உங்களுடைய விடுதலையை நீங்கள் பயன்படுத்த வேண்டும் என்று எங்களைக் கட்டாயப்படுத்துவது எப்படிஎங்களுக்கான விடுதலையாகும்? பெண் விடுதலை ஆண் விடுதலை போல எல்லையற்றதாக ஏன் இல்லை? எங்களுக்கு விடுதலை என்று சொல்லிவிட்டு,எங்களுக்கான முடிவுகளை நீங்கள் எடுத்துவிட்டு,எங்களைக் கொண்டு வந்து உங்கள் முடிவுகளுக்குள் செருகுவது எப்படி எங்கள் விடுதலையாகும்?நீ இந்தக் கட்டுப்பாடுகளுக்குள் தான் சிந்திக்க வேண்டும் என்று சொல்வது,நீ சிந்திக்கவே கூடாது என்று சொன்னதை விடக் கொடுமையானது இல்லையா?இதுவா நம் தந்தை பெரியார் சொன்ன பெண்விடுதலை?

இந்த நூதனப் பெண் விடுதலையைத் தான் பூரணப் பெண் விடுதலை என்று இன்றைய பெண்கள் நம்புகிறார்கள். இதனால் தான் பெரிய பதவியில் இருக்கும் பெண்கள் கூட நான் நல்ல அம்மாவாக இல்லை என்று வருந்துகிறார்கள். என் குடும்பத்திற்காக என் வேலையை விட்டேன். பிள்ளையை நல்ல முறையில்

வளர்த்தேன், என் குடும்பமே என் அடையாளம் என்று பெருமை கொள்கிறார்கள். இவையெல்லாம் சுய சிந்தனையாக,அன்பின் வெளிப்பாடாக இருந்தால் நல்லது. ஆனால்,பெரும்பாலும் இவையெல்லாம் தன் சுயத்தை மறைத்து,சமுதாயத்திற்குப் பயந்து சொல்லப்படும் சொற்களாகவே உள்ளன.

இன்னொரு புறம், வித விதமாக உடைகளையும்,தங்க, வைர நகைகளையும் வாங்கிக் கொண்டு, ஆடம்பரமாகச் செலவு செய்து கொண்டு நான் விரும்பியதை வாங்கிக் கொள்ளவே நான் சம்பாதிக்கிறேன் என்று சுயநலமாகச் சிந்திக்கிறார்கள். பொருளாதாரத் தன்னிறைவு பெறுவது தான் நம்முடைய முதல் தேவை. மறுக்கவில்லை. ஆனால், எதை வைத்து நம்மை அடிமையாக்கினார்களோ அதையே அதிக அளவில் பெற்றுக் கொள்வதற்காக நான் சம்பாதிக்கிறேன் என்று சொல்வது, நீங்கள் என்ன என்னை அடிமையாக்குவது?நானே அடிமையாகிறேன் என்று சொல்வது போல இல்லையா?

பெண் விடுதலையை அவர்கள் தந்து கொண்டிருக்கும் வரை இது தான் நடக்கும். என்றைக்கு நம் விடுதலையைப் பற்றி நாமாக முழுமையாகச் சிந்திக்கிறோமோ அன்றுதான் நம் விடுதலை நம்மை உயர்த்தும், நாம் நம் சமுதாயத்தை உயர்த்துவோம். நாம் உயர்வதின் முக்கிய நோக்கம் அது தானே!பெண்ணியம் பேசுவோம்! முழுப் பெண்ணாயிருப்போம்!

பெயர்: ஜெயா மாறன்-சொந்த ஊர் : மதுரை, தற்போது அமெரிக்காவில் அட்லாண்டா மாநகரில் வசிக்கிறேன். ஜார்ஜியா டெக் ஆராய்ச்சி நிறவனத்தில் நிதி ஆய்வாளராகப் பணி புரிகிறேன்.-தமிழாசிரியராக/மேடைப் பேச்சாளராக/எழுத்தாளராக/நாடகக் கலைஞராக என பல முயற்சிகளைச் செய்து வருகிறேன்.தமிழறிஞர்கள் பலர் தலைமையில் மேடைகளிலும், கல்யாணமாலை மேடைகளிலும் தமிழகக் கல்லூரிகளிலும் பேசிய அனுபவமுண்டு. JeyaMaran என்னும் YouTube தளத்தில் தமிழ் இலக்கியக் காணொளிகளை வெளியிடுகிறேன். சிறந்த நடிகைக்கான ‘தமிழன்பன் 80’ விருதையும், ஹூஸ்டன் ‘பாரதி கலை மன்றம்’ அமெரிக்க அளவிலான பேச்சுப் போட்டியில ‘ஞானபாரதி 2020’ விருதையும் பெற்றிருக்கிறேன்.

## உலக உழைக்கும் மகளிர் நாள் உருவானது எப்படி?

1910 -ம் ஆண்டு டென்மார்க்கில், கிளாரா ஜெட்கின் தலைமையில் சோசலிச்டு பெண்கள் மாநாடு நடைபெற்றது. இதில், கருவுற்ற பெண்கள், தாய்மார்கள், குழந்தைகள் பாதுகாப்பு தொடர்பான தீர்மானங்களோடு, வரலாற்றுப் புகழ் மிக்க மகளிர் நாள் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தீர்மானத்தின் ஒரு பகுதி

"அனைத்து தேசிய இனங்களையும் சேர்ந்த சோசலிச்டு பெண்கள், ஒரு தனிச் சிறப்புள்ள தினமாக மகளிர் தினத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். பெண்கள் சிக்கல் முழுமையும் வாக்குரிமைக் கோரிக்கையை இணைத்து, விவாதிக்க வேண்டும். இது தொடர்பான மாநாடு, சர்வதேசத் தன்மையுடன், கவனமாகத் தயாரிக்கப்பட வேண்டும்."

மகளிர் நாளைக் கடைப்பிடிக்க இதுதான் என்று எந்த தேதியும் குறிப்பிடப்படவில்லை. எனினும் இதுவே மகளிர் நாளுக்கான மூலக்காரணம்.

1910ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட இந்தத் தீர்மானம் தான் 'உலக மகளிர் நாளின்' உண்மையான மூலகாரணம் (Real origin) ஆகும்.

சோசலிச்டு பெண்கள் இயக்கம்

1886 - ம் ஆண்டு மே 1 -ம் தேதி எட்டு மணி, வேலை நேரத்தைக் கோரி அமெரிக்காவில் வேலை நிறுத்தம் தொடங்கியது. குறிப்பாக சிகாகோ நகரில் போராட்டம் மையம்கொண்டது. 4-ஆம் தேதி போலீஸாரின் துப்பாக்கிக்குப் பல தொழிலாளர்கள் பலியானார்கள். பலர் தூக்கிலிடப்பட்டனர். இவற்றிற்கான நீதியை வேண்டி, எங்கெல்ஸின் உதவியோடு சோசலிச்டு அகிலம் உருவானது. இதன் முதல் மாநாடு பிரான்சின் பாரிசு நகரில் 1889ல் நடந்தது. இந்த மாநாட்டில் பிரான்சு, செருமனி, அமெரிக்கா, பிரிட்டன், உருசியா உள்ளிட்ட நாடுகளிலிருந்து பலரும் கலந்துகொண்டனர். இதில், பெண் மார்க்சிச்டான கிளாரா ஜெட்கினும் கலந்துகொண்டார். அங்கு, வேலை நேரம், ஆண் பெண் சமத்துவம் உள்ளிட்ட தீர்மானங்கள் இயற்றப்பட்டன. அதை, உலகமெங்கும் பரப்பும் பணியில்

ஈடுபட்டவர்களில், கிளாரா ஜெட்கினும் ஒருவர். இதன் வளர்ச்சிப்போக்கில்தான் சோசலிச்டு பெண்கள் இயக்கம் உதயமானது.

1907-ல் லண்டனில் நடந்த சோசலிச்டு பெண்கள் மாநாட்டில் பெண்களுக்கு வாக்குரிமை உள்பட பல தீர்மானங்கள் நிறைவேறின. கிளாரா ஜெட்கினை ஆசிரியராகக்கொண்டு நடத்திவந்த 'தி க்ளைசைட்' (சமத்துவம்) இதழ், அமைப்பின் இதழாக அங்கீகரிக்கப்பட்டது.

நகரம் மற்றும் தேசிய அளவில் முதல் மகளிர் நாள்!

அமெரிக்காவின் சிகாகோ, நியூயார்க் நகரங்களில் 1908-ம் ஆண்டில் ,பெண்களுக்கான உணர்ச்சிகரமான கூட்டங்களை சோசலிச்டு கட்சியின் பெண்கள் பிரிவு நடத்தின. இதுவே, நகர அளவில் கொண்டாடப்பட்ட முதல் மகளிர் நாள்.

1909, பிப்ரவரி 28 ஞாயிறு அன்று அமெரிக்காவில் பல இடங்களில் பெண்களின் வாக்குரிமைக்கான ஆர்ப்பாட்டம், மிகச் சிறப்பாக நடந்தது. இவற்றில், பெண்களும் ஆண்களும் திரளாகக் கலந்துகொண்டார்கள். இதுபற்றிச் செய்தி வெளியிட்ட சோசலிச்டு இதழ்கள், 'மகளிர் நாள்' என்றே குறிப்பிட்டன. இதுவே, தேசிய அளவில் கடைப்பிடிக்கப்பட்ட முதல் மகளிர் நாள்.

உலக அளவில் முதல் மகளிர் நாள்

டென்மார் நாட்டு மாநாட்டின் தீர்மானத்தின் செயல்வடிவமாக 1911 மார்ச் 19 ஞாயிற்றுக் கிழமையில் ஆச்திரியா, செருமனி, சுவிட்சர்லாந்து, டென்மார்க் உள்ளிட்ட நாடுகளில் கொண்டாடப்பட்டது.

பிரசியாவில் (முந்தைய ஜெர்மனி) 1848ம் ஆண்டில் மக்கள் புரட்சிக்குப் பணிந்த அரசர், பெண்களுக்கும் வாக்குரிமை உள்ளிட்ட பல வாக்குறுதிகளை அளித்த தேதி அது. அந்த வாக்குறுதியை அவர் நிறைவேற்றவில்லை. எனினும் அந்த எழுச்சியை நினைவுகூறும் வகையிலேயே மார்ச் 19 ந் தேதி தேர்வு செய்யப்பட்டது.

உருசியப் பெண் புரட்சியாளரும், உலக சோசலிச்டு பெண்கள் அமைப்பின் நிறுவனர்களில் ஒருவருமான கொலந்தாய் இது பற்றி உணர்ச்சிகரமாக விவரிக்கிறார்:

“மகளிர் நாள் அல்லது உழைக்கும் மகளிர் நாள் என்பது தொழிலாளி வருக்கப் பெண்களின் உலக ஒற்றுமைக்கான நாள். தங்களது வலிமையையும் அமைப்பையும் ஆய்ந்து பார்க்கும் நாள். செருமனியிலும், ஆச்திரிரியாவிலும் உணர்ச்சி வேகத்தால் உடல் சிலிர்த்துக் கொந்தளிக்கும் பெண்கள் கடல் போலக் காணப்பட்டனர். நகரங்கள், கிராமங்கள், எங்கு பார்த்தாலும் கூட்டங்கள். பல இடங்களில் சாலைகளில் பெண்கள் திரண்டு ஆர்ப்பாட்டம் நடத்தினார்கள். 30 ஆயிரம் பேர் திரண்டு ஆர்ப்பாட்டம்

நடத்தினர். அவர்களிடமிருந்து பதாகைகளை அகற்றப் போலீசார் முயன்றார்கள். வலிமையான தள்ளுமுள்ளு ஏற்பட்டது.இரத்தக் களரி ஏற்படும் சூழ்நிலை உருவானது. சோசலிச்டு எம்.பி.க்களின் தலையீட்டால் தவிர்க்கப்பட்டது."

என்று விவரிக்கிறார் கொலந்தாய். இவ்வாறு முதல் முறையாக நடத்தப்பட்ட உலக மகளிர் நாள் இயக்கம் வெற்றிகரமாக நடந்தேறியது. அடுத்து 1912, மே 12, ஞாயிறு அன்று செருமனி, சுவீடன் உள்ளிட்ட பல நாடுகளில் உலக மகளிர் நாள் சிறப்பாகக் கடைப்பிடிக்கப்பட்டது.

ஏன் மார்ச் 8?

டென்மார்க் தீர்மானத்தில் மகளிர் நாள் கொண்டாடுவது என இருந்தாலும் நாள் குறிப்பிடப் படவில்லை. அதனால் உலகின் பல நாடுகளில் மகளிர் நாள் கொண்டாடப்பட்டாலும் இதுதான் அந்த நாள் என வரையறுக்க வில்லை. ஒவ்வொரு நாடுகளில், அந்த நாட்டுக்கு ஏற்ற நாளில் மகளிர் நாளைக் கடைப்பிடித்துவந்தனர்.

அதுபோல உருசியாவில் 1914 ஆம் ஆண்டு மார்ச் 8-ம் நாள் நடத்தத் திட்டமிட்டனர். அதற்கு முன் சார் அரசு, நிகழ்ச்சி ஏற்பாட்டுக் குழு பெண்களில் 30 பேரைக் கைது செய்தது. அதை மீறியும் கூட்டம் நடந்தது.

முதல் உலகப் போரினால் உருசியாவில் மக்கள் வேலையின்மை, பசியால் திண்டாடினர். 1இலட்சம் பேர் கொல்லப்பட்டனர். 20இலட்சம் பேர் கைதும், 10 இலட்சம் பேர் காணாமலும் ஆக்கப்பட்டனர். அதனால், அவர்களின் தாய்மார்கள், மனைவி, மகள் உள்ளிட்டோரை நோக்கி, "உங்கள் கணவர்கள் எங்கே? , உங்கள் மகன்கள் எங்கே?" எனும் முழக்கத்தை முன் வைத்தது சுவிட்சர்லாந்தில் நடந்த உலக சோசலிச்டு பெண்கள் மாநாடு.

**அந்தக் குரலை ஒங்கி ஒலிக்க அவர்கள் தேர்ந்தெடுத்த நாள்தான் மார்ச் 8 (1917-ஆம் ஆண்டு)**

அன்றைய நாள் மிகப்பெரிய வேலை நிறுத்தப் போராட்டமாக மகளிர் நாள் பேரணி நடந்தது. பெண்ணுரிமை என்பது கல்வி, வேலை வாய்ப்பு, மறுமணம், சொத்துரிமை போன்ற சீர்திருத்த அடிப்படையில் மட்டுமின்றி, உழைப்புச் சுரண்டல் மற்றும் பாலியல் சுரண்டலுக்கு உட்பட்ட பெண்களுக்காகவும் அது ஓங்கி ஒலிக்க வேண்டும். இதனைத் தந்தை பெரியார் தமது பெண்ணியச் சிந்தனையில் பல்வேறு நிலைகளில் எடுத்துரைத்து, பெண் விடுதலைக்கு அச்சாரம் இட்டுள்ளார். பெரியாரின் சீர்திருத்தம் பெண்ணியப் புரட்சியின் தொடக்கம் என்றால், சோசலிசப் பெண்ணியச் சிந்தனை மேலோங்குகின்ற, சமூக அமைப்பையே மாற்றி அமைக்கக்கூடிய, சமதரும எழுச்சியே முழுமையான பெண்விடுதலைக்கு வழியமைக்கும் என்பதே உண்மை.




-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-

*மின்னிதழ்:56 மாசி-24--தி.பி.2054 மார்ச்சு-16- பொ.ஆ.2023*

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்






சோழவந்தான் அரசஞ்சண்முகனார்

( 15/9/1868—11/1/1915)



வள்ளுவர் வழியில் (வாட்சு-அப்) புலனப் பயன்பாட்டு நெறிகள் (WhatsApp Manners)




தொலைபேசி கண்டுபிடிக்கப்பட்டு அதன் பயன்பாடு மலிந்தபின்னர் தொலைபேசிப் பயன்பாட்டு நெறிகள் வகுக்கப்பட்டு அனைவர்க்கும் அறிவுறுத்தப்பட்டமை பழையகதை. அதுபோன்றே புலனப்பயன்பாடு இன்று பெருவழக்கான பின்னர் புலனப்பயன்பாட்டு நெறிகள் வகுக்கப்பட்டுப் பல வலைத்தளங்களில் உலவிவருவதைக் காணலாம். வள்ளுவர் வகுத்த வாழ்வியல்நெறிகளைப் போற்றுவார்க்கு இவற்றைப் புதிதாகக் கூறத் தேவையில்லை என்பதைக் காட்டுவதே இந்தப் பதிவின் நோக்கம் ஆகும்.

**1) பயனிலகூறேல்.**

நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கும் உரை.
(குறள்-193-அதிகாரம் 20-பயனிலசொல்லாமை)

எவ்விதக் கட்டணமுமின்றி உலகம் முழுமையும் நம் கருத்தை, உரையை, ஒலியை, காணொளிப்பதிவை உலகெங்கும் உலவவிடுதற்கு வழியமைத்த ஒப்பற்ற சாதனம் புலனம் ஆகும். சடங்குமுறை வாழ்த்துகளாகிய காலைவணக்கம், மாலைவணக்கம் ஆகியவற்றைப் பரிமாற இதனைப் பயன்படுத்தாதீர்.

**2) குழுவுடன்கூடிவாழ்க**

எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்
மாணாசெய் யாமை தலை
(குறள் 317: அதிகாரம்-32.இன்னாசெய்யாமை)

நீங்கள் பங்குகொள்ளும் புலனக்குழுவின் நோக்கத்திற்கு மாறான திரைப்படத் துணுக்குகள், பாடல்கள் பதிவுசெய்வது சில வேளைகளில் நட்புறவை முறித்துவிடலாம்.

உங்கள் வீட்டு வழிபாட்டறையில் இடம்பெறும் கடவுள் படங்களை யாரும் கேட்காமல் புலனத்தில் பதிவிடாதீர். சாதி, சமயச்சார்பின்றி அனைவரும் ஒன்றுகூட வழிவகுக்கும் புலனத்தில் அவ்வகை வேறுபாடுகளைப் பரப்பாதீர்கள். அப்படித் தேவை எனக் கருதினால் அதற்கென நீங்களே தனித்த புலனக்குழுவோ இணையக்குழுவோ தொடங்கி நடத்துங்கள். வேறொருவர் நடத்தும் புலனக்குழுவில் இணைந்து உங்கள் சமய, அரசியல் கருத்துகளை அள்ளியிறைக்காதீர்கள். சுருங்கச் சொன்னால் நீங்கள் அங்கம் வகிக்கும் புலனக்குழுவின் நோக்கம் அறிந்து அதற்கிணங்கக் கருத்தாடல் நிகழ்த்தக் கற்றுக் கொள்ளுங்கள். சுருங்கச் சொன்னால் குழுவுடன் கூடி வாழ்க.

**3)காலத்தைஉயிரெனக்கருதுக**

**நாளென ஒன்றுபோற் காட்டி உயிரீரும்**

**வாள துணர்வார்ப் பெறின்.( குறள் 334-அதிகாரம்34-நிலையாமை)**

பயனற்ற அரட்டைகளுக்குப் புலனத்தைப் பயன்படுத்தாதீர். தேவையான பல ஆவணங்களை உடனுக்குடன் பரிமாறுதற்குப் பயன்படுவது புலனம் மட்டுமே. ‘அயோத்தி முறைமன்றத் தீர்ப்பு’ வெளிவந்தவுடனே 1045 பக்கங்கள் கொண்ட தீர்ப்புரை ஒரே நொடியில் புலனவழியே பெறமுடிந்தது. இதனைத் தொலைநகலி(FAX) மூலம் பெற்றால் ஆயிரக்கணக்கில் பொருள்செலவும் ஒவ்வொரு பக்கமாக அச்சிட 1045 நிமிடமும் தேவைப்பட்டிருக்கும். ஆனால் எவ்விதச் செலவுமின்றி பிடிஎஃப் கோப்பாக உடனே பெற்றது புலனத்தின் அருட்கொடையே. இதுபோன்றே மருத்துவ அறிக்கைகளும் உடனுக்குடன் பெறப்பட்டு உயிர்கள் காப்பாற்றப்படுகின்றன. இத்தகு சிறப்புவாய்ந்த **அறிவியலின் அருட்கொடையை வீணான வார்த்தையாடலுக்குக் கருவியாக்க வேண்டாம்.**

நம்நேரத்தையும் அடுத்தவர் நேரத்தையும் உயிரெனப் போற்றி இன்றியமையாச் செய்திகளைப் பரிமாறவும் எதிர்வரும் நிகழ்ச்சிகளுக்கு முன்னறிவிப்புச் செய்தற்குமே புலனத்தைப் பயன்படுத்துங்கள்.

**4)இடமறிந்துஎழுதுக**

**எள்ளாத எண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு**
**கொள்ளாத கொள்ளா துலகு.**

**( குறள் 470 –அதிகாரம்47-தெரிந்துசெயல்வகை))**

உங்கள் கட்சிப்பற்றையோ சமயப்பற்றையோ விளம்பரப்படுத்துதற்கு நண்பர்களின் புலனக்குழுக்களை ஊடகமாகக் கொள்ளாதீர்கள். அவற்றுக்கென நிறைய வலைத்தளங்கள் உள்ளன அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளலாமே?

**5) இனியவைபோற்றுக.**

உரையாடலில் கடுஞ்சொல் வேண்டாம். மென்மையாகக் கூறுக.ஊடகவெளியில் நமது தொன்மரபுப் பண்பாட்டுச் சிறப்பைத் தொடரும் வகையில் இனிய சொல்லாடல் போற்றுவது நம் கடமை.

'பொய்' என்பதைத்தவிர்த்து 'உண்மைக்குப்புறம்பானது' எனவும்

'முட்டாள்தனம்' என்பதனை 'அறிவுக்குப் பொருத்தமாகத் தெரியவில்லை' எனவும்

'நான் சரியாகத்தான் சொல்கிறேன்' என்றுகூறாமல் 'என் புத்திக்குப்பட்டதைக் கூறுகிறேன்' எனவும்

தமது விடுதலை இதழின் தலையங்கங்களில் தந்தை பெரியார் போற்றிய பண்பாட்டையே பொதுவெளியில் நமது கருத்தாடலில் போற்றிப் பண்பாடு காப்போம்.

# பெரும்புலவர் அரசஞ்சண்முகனாரின் ‘வள்ளுவர் நேரிசை’

பெரும்புலவர் அரசஞ்சண்முகனார் சோழவந்தானில் 1868ஆம் ஆண்டு செப்டம்பர் 15ஆம் தேதி பிறந்தார். அவ்வூர்த் திண்ணைப் பள்ளியில் கல்வி கற்றார். எழுத்திலக்கணம், நிகண்டு, அந்தாதி ஆகியன கற்றுத்தேர்ந்தார். பின்னர், அவ்வூரிலுள்ள பேட்டை, கிண்ணிமங்கல மடம் என்ற இடத்திலிருந்த சிவப்பிரகாச சுவாமிகளிடம் சங்க நூல்கள், இலக்கண, இலக்கியங்கள், தருக்கம், சோதிடம் ஆகியன கற்றுப் புலமை பெற்றார்.

**இவர் எழுதிய நூல்கள்:**

சிதம்பர விநாயகர் மாலை
மாலை மாற்று மாலை
ஏகபாத நூற்றந்தாதி
இன்னிசை இருநூறு
மதுரை மீனாட்சியம்மை சந்தத் திருவடிமாலை
திருவடிப்பத்து
நவமணிக்காரிகை நிகண்டு
வள்ளுவர் நேரிசை
இசை நுணுக்கச் சிற்றுரை
தொல்காப்பியப் பாயிர விருத்தி
திருக்குறளாராய்ச்சி
திருக்குறட்சண்முகவிருத்தி
எனப் பலவாகும்.

சண்முகனார் மதுரை சேதுபதி உயர்பள்ளியில் தமிழாசிரியராகப் பன்னிரண்டு ஆண்டுகள் பணிபுரிந்தார். பள்ளித் தலைமையாசிரியர் 1902 ஆம் ஆண்டில் ஒருநாள் மாணவர்க்குரிய பாட அட்டவணையில் தமிழ்ப்பாட நேரத்தைக் குறைத்திருந்தார்.

அங்கு தலைமைத் தமிழாசிரியராகப் பணியிலிருந்த சண்முகனார் ‘தமிழுக்கு உரிய பாட நேரத்தை ஒதுக்கித்தர வேண்டும்’ என்று கேட்டார். ‘’தமிழ்தானே! அதனால் பயன் என்ன?" என்று தலைமையாசிரியர் மறுத்துவிட்டார். எனவே, அன்றே வேலையில் இருந்து விலகிக் கொள்வதாக எழுதிக் கொடுத்துவிட்டு, பள்ளியை விட்டு வெளியேறினார்.

இவரது எளிய தோற்றம் நாட்டுப்புறங்களில் வேலை செய்யும் உழவனை நினைவுபடுத்தும். உடம்பை மறைக்க நான்குமுழம் வேட்டி; மேலே ஒரு துண்டு; தலையிலே சிறு குடுமி; வெற்றிலைக் காவி படிந்த மீசை; அடிக்கடி நோயினால் மெலிந்து காணப்படும் உடம்பு;சிவநெறிச் சார்பை என்றும் நினைவுபடுத்தும் நீறு.

உருவு கன்டு எள்ளாமை வேண்டும் என்பதுணராது இவர் ‘ஏகபாத அந்தாதி’ என்று முப்பது வெண்பாக்கள் எழுதி, மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றச் சென்றபோது,இவரைப்

பார்த்த அறிஞர்கள் இவர்தாம் இப்பாக்களை இயற்றினாரா என்ற ஐயம் கொண்டு அவர்தம் பாக்களுக்குப்  பொருள் சொல்லுமாறு வேண்டினார்களாம்.

சண்முகனாரும் ஊரிலிருந்து மதுரைக்குச் சென்று ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பாடலுக்குப் பொருள் சொன்னாராம். இன்னும் ஐயம் விலகாத தமிழ்ச் சங்கச் சான்றோர்கள், முப்பது பாக்களை நூறு பாக்களாக்கும்படி பணித்தார்களாம். மீண்டும் நாளும் ஒரு பாடலாக இயற்றி நூறு பாடல்களைப் பாடி, பொருள் விளக்கமும் அளித்து 'ஏகபாத நூற்றந்தாதி' ஆக்கினாராம்.

மதுரைத் தமிழ்ச்சங்கம், 14.09.1901 இல் தொடங்கப்பட்டது. அதன் பயனாய் உருவாகிய சேதுபதி செந்தமிழ்க் கலாசாலையில் 1902 முதல் 1906 வரை அரசஞ் சண்முகனார் ஆசிரியர் பணியில் நான்கு ஆண்டுகள் பணி புரிந்தார்.

மதுரைத் தமிழ்ச்சங்கம் தொடங்கிய காலம் முதல் இறுதிக்காலம் வரை உ.வே.சா, மறைமலையடிகள், மு.இராகவையங்கார், பண்டிதமணி கதிரேசன் செட்டியார், இரா.இராகவையங்கார், மு.ரா. அருணாசலக் கவிராயர் ஆகிய பலரிடம் நட்புக் கொண்டிருந்தார்.

ஆராய்ச்சியாலும், தொண்டினாலும் தமிழ் அறிஞர்களின் மனதில் என்றும் வாழ்ந்து வரும் சண்முகனார் அவரது 47 ஆம் வயதில் 11.01.1915 ல் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

இவர் இயற்றிய 'வள்ளுவர் நேரிசை' ஒவ்வொரு வெண்பாவிலும் இரு அடிகள் வள்ளுவர் குறளைத் தாங்கியும் இரு அடிகளில் தொடர்புடைய ஒரு புராணக் கதையைத் தாங்கியும் அமைந்துள்ளன.

> "சோமேசர் வெண்பா, இரங்கேச வெண்பா, சிவசிவவெண்பா, வடமலை வெண்பா, தினகர வெண்பா ஆகியன சிலர் பாடியுள்ளது போல , எனது நல்லாசிரியர் அரசஞ்சண்முகனார் அவர்களும் , இவ் நேரிசை இயற்றியருளி யுள்ளார் . ஆயினும் , இதற்கும் , அவற்றிற்கும் ஒரு பெரிய வித்தியாசம் உண்டு ; திருக்குறளினின்றும் அதிகாரத்திற்கொரு குறள் வீதம் கொண்டு , அக்குறள் நீதிக்கியைந்த விஷயம் வாய்ந் தவை அவை . இவற்றுள் இரண்டொரு நூல்களே 1330 குறட்களுக்கும் உதாரணம் கொண்டு விளங்குவன : சில 1008 , அல்லது 1000 குறட்களுக்கே உதாரணம் கொண்டவை .
>
> இங்ஙனம் கதை அமைத்துக் காட்டுவதில் . அவற்றை இயற்றியோர் சிலருற்ற பிரயாசை மிகுதியை , ஏற்ற கதைகள் அகப்படாமல் வேறு விஷயங்களால் பல விடங்களில் குறள் நீதி விளக்கப்பட்டிருப்பது கொண்டு நன்கறியலாகும்.வள்ளுவர் நேரிசையோ , அதிகாரத்திற்கொரு குறள் வீதம் சேர்த்துச் செய்யப்பட்டதன்று . பின் னிரண் டடியில் வரிசைக் கிரமமாக ஒவ்வொரு திருக்குறளையும் , முன்னிரண்டடியில் , அக்குறள் நீதிக் கியைந்த ஒரு சரித்திரம் அல்லது விஷயத்தையும் , இரண்டாம் அடியின் மூன்றாம் ஈறாக " வள்ளுவரே! ' என நாயனாரது பெயர் முன்னிலையையும் அமைத்துப்

பாடப்பட்டதாகும் . ஆயினும் , அந்தோ ! பிள்ளையவர்களுற்ற நோய் , குடும்பவிவகாரம், அசிரத்தை முதலியன அவர் அந்திமக் காலத்தில் இயற்றி முடிக்கத் துணிந்த நற்காரியம் நிறைவேறாது செய்து விட்டனவே ! இது , வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு முன்செய்த தீவினைப்பயனே போலும் ! “

என்று இந் நூலைப் பதிப்பித்த ம.கோபாலகிருட்டிணர தமது பதிப்புரையில் கூறியமை இங்குக் குறிப்பிடத்தக்கது. உடல்நலிவின்றி நெடிது வாழ்ந்திருந்தால் 133 அதிகாரங்களுக்குமாக 1330 வெண்பாக்களை வழங்கியிருப்பார்.எனினும் இவற்றால் குறளுக்கு எத்தகைய புகழோ புதிய விளக்கமோ பெற இயலவில்லை.

பொருந்தாப் பொய்யுரையாகிய புராண விளக்கங்களை மேற்கோள் காட்டுவதைத் தவிர்த்துச் சங்கப் புலவர் காட்டிய பண்டைத் தமிழர் வரலாற்றினின்று சான்றுகள் காட்டிக் குறளுக்கு விளக்கவெண்பாக்களை இயற்றியிருந்தால் தமிழுக்கு இரட்டிப்பு ஊதியம் வாய்த்திருக்குமே! புராணப் பொய்யுரைகளையே பெரும்புலவர் அரசஞ்சண்முகனார் குறள்விளக்கமாக அளித்தார் என்பதற்குச் சான்றாக ஒரு வெண்பாவைப் பார்ப்போம்.

ஒன்னார்த் தெறற்கும் உவந்தாரை ஆக்கற்கும்
மன்னுமிரு சான்றுரைப்பீர் வள்ளுவரே - தன்னுளே
ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி .

( ரு )

. ( அ - ம் முதலியன ) : - ஒன்னார் - பகைவரை, தெறற்கும்- அழித்தற்கும் ; உவந்தாரை - அபிமானித்தவரை, மன்னும் இரு சான்று - தக்க இரண்டு உதாரணங்கள் , ஐந்து அவித்தான் - பஞ்சேந்திரியங்களையும் அடக்கியாளும் திறனுடையவன் : கௌதமன் ; ஆற்றல் - வலிமைக்கு , சாலும் போதும் , கரி- சாட்சி .

இந்திரன் கரியானமை : - இந்திரன் கௌதமமுனிவரது மனைவி அகலிகையை இச்சித்து அவளை வஞ்சகமாகச் சேர்ந்தான் . கௌதமர் இவ்விஷயத்தை ஞான திருஷ்டியால் அறிந்து , உடல் முழுவதும் பெண்குறியடையுமாறு அவனைச் சபித்தனர் . பிறகு அவனது பரிதாப நிலைக்கும் வேண்டுகோளுக்கும் இணங்கியும் , அவன் செய்த பெருந்தவறு அவனுக்கு என் றென்றைக்கும் ஞாபகத்தில் இருக்குமாறும் ,“ என் கண்ணுக்கு மட்டும் அவை பெண்குறிகளாகவும் , பிறர்கண்களுக்கு அழகிய கண்களாகவும் விளங்குக ” என்று அநுக்ரகித்தனர் . இவ்வாறு சாபாநுக்கிரகம் பெற்ற இந்திரன் ஆயிரங்கண்ணன் எனப் பேருற்றான் .

புலனொழுக்கத்திற் சிறந்து உலகுயிர் நலம் பெறும் நலப்பணிகள் மிகுதியும் ஆற்றி ஐம்புலனும் நன்னெறியில் செலுத்துவோனே  இந்திர பதவி பெற முடியும் என்பது திராவிடக் கருத்துரு;இதனை இழிவுபடுத்தும் வண்ணம் இந்திரனைப் பெண்பித்தனாக இழிவுபடுத்தியது ஆரியப் புராணப் பொய்யர் தம் படைப்பாக்கம்.
ஆபுத்திரன் தனது நல்லறப் பணியால் இந்திர பதவிக்குத் தகுதி பெற்றுவிட்டான் என்பதறிந்து அவனது அமுதசுரபிக்கு வேலையே இல்லாமல் செய்திடத் தன் தோழன் வருணனை வேண்டி, திங்கள் மும்மாரி பொழியச் செய்து, சோழவளநாடு சோற்றால் மடையடைக்கும் உணவுவளம் பெறச் செய்தான் இந்திரன் என்பது மணிமேகலை கூறும் கதை.இவ்வாறிருப்பவும் இந்திரனை மாற்றான் மனைவியிடம் பாலியல் வன்புணர்வு கொண்டதாக இழித்துக் கூறவும் அதனை ஒரு தமிழ்ப்புலவர் திருக்குறளுக்குச் சான்று காட்ட முற்பட்டதும் எண்ணுந்தொறும் வருந்தச் செய்கிறது.

எடுத்துக்காட்டாக மேலும் இரு நேரிசை வெண்பாக்களைக் காணலாம்.

ஆறாப் பிழையுமெண்ணா தாயிரங்கண் ஈந்தானோ ?
மாறானோ யார்பெரியர் ? வள்ளுவரே ! -- கூறிற்
செயற்கரிய செய்வார் பெரியர் ; சிறியர்
செயற்கரிய செய்கலா தார் .
( அ - ம் முதலியன ) : - ஆற - பொறுத்தற்கரிய , ஈந்தான் - அளித்த
கௌதம ரிஷி , மால் இந்திரன் , செய்கலாதார் - செய்யமுடியாதவர். மாலுக்கு ஆயிரங்கண் ஈந்தவரலாற்றை முந்திய செய்யுட்கதை கொண்டு அறிக .

யானே உலகமெலாம் ஆயினேன் என்று கண்ணன்
வானறியச் சொற்றதென்கொல் ? வள்ளுவரே! -- காணிற்
சுவைஒளி ஊ( று )ஓசை நாற்றம்என் றைந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு .
( க--ம் முதலியன) :- கண்ணன் கிருஷ்ணன், -- வரன் தேவர் , ஊறு -ஸ்பரிசம் , ஐந்தின் வகை- ஐத்தின் கூறுபாட்டையும் , தெரிவான் கட்டே ஆராய்வானது அறிவைப் பற்றினதே .
தான் பஞ்சபூத வடிவோடுகூடியவன் என்று ஸ்ரீகிருஷ்ணன் அருச்சுனனுக்குச் கீதோபதேசம் செய்தகாலத்தில் கூறியது அறிக .
புலமை ஞாயிறாய்ப் புகழ்மிளிர்ந்த புலவர்கள் புராணச் சாணியைத் தலையிலேந்தித் திருக்குறளுக்கும் எடுத்துக்காட்டாக உரைக்கமுற்பட்டது காலத்தின் கோலம்.
பெரியார் தமிழுக்கு என்ன செய்தார் எனக் கேட்கும் அறியாப்பிள்ளைகள் இந்தப் புராண இருளிலிருந்து புலமை ஞாயிறுகளை மீட்ட  பெரியாரின் தன்மதிப்பு இயக்கப் பெரும்பணி ஒரு மறுமலர்ச்சியை  விளைந்தது என்று உணரவேண்டும்.

# வள்ளுவர் பார்வையில் நாடு

-திருக்குறளார் முனைவர் இர. பிரபாகரன்



இன்றுள்ள நாடுகளுள், சில நாடுகளில் நிலவளமும், நீர்வளமும், மனிதவளமும், செல்வமும், படைவலிமையும் மற்றும் பல சிறப்பான தகுதிகளும் இருந்தாலும், அவற்றில் பல குறைகள் இல்லாமல் இல்லை. ஒரு நாட்டில், எந்தக் குறைகள் இருக்கக்கூடாது என்றும், எந்தச் சிறப்பான தகுதிகள் இருக்கவேண்டும் என்றும் "நாடு" என்ற அதிகாரத்தில் வள்ளுவர் விரிவாகக் கூறுகிறார். நாட்டைப் பற்றி வள்ளுவர் கூறும் கருத்துக்களை இவ்வுலகில் உள்ள சில நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்ப்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

நாட்டைப் பற்றி வள்ளுவரின் கருத்து

தட்டுப்பாடில்லாத நல்ல விளைச்சலையும், தகுதியுடைய குடிமக்களையும், சோர்வில்லாத செல்வந்தர்களையும் ஒருசேரக் கொண்டிருப்பதுதான் நாடு. (குறள் -731).

**தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்**
**செல்வரும் சேர்வது நாடு.** (குறள் – 731)

"தள்ளா விளையுள்" என்பதற்குத் "தப்பாது விளையும் நிலங்கள்" அல்லது "தவறாத விளைச்சல்" என்று பொருள் கொள்ளலாம். ஆண்டுதோறும் விளைச்சல் தவறாமல் இருக்க வேண்டுமென்றால், நாட்டில் நிலவளமும், நீர்வளமும், அயராது உழைக்கும் உழவர்களும், இருக்க வேண்டும். அத்தோடு, இயற்கைச் சீற்றத்தால் வரும் வெள்ளம், வறட்சி போன்றவை இல்லாமல் இருக்க வேண்டும். வள்ளுவர் காலத்தில் "விளையுள்" என்ற சொல் வேளாண்பொருட்களை மட்டுமே குறித்தது. இன்றைய சூழ்நிலையில், "விளையுள்" என்பதற்கு ஒரு நாட்டில் உற்பத்தி செய்யப்படும் பொருள்கள் அனைத்தையும் குறிப்பதாகக் கொள்வது சிறந்ததாகத் தோன்றுகிறது. பலவகையான பொருள்களையும் உற்பத்தி செய்தால், பலருக்கும் வேலை வாய்ப்புக்கள் அதிகமாகும். ஒரு நாட்டில் பலரும் பணிபுரிந்தால், அவர்களுடைய வருமானம் அதிகரிக்கும். நாட்டு மக்களின் வருமானம் அதிகரித்தால் அரசாங்கத்திற்கு

வருவாய் அதிகரிக்கும். அரசாங்கத்திற்கு வருவாய் அதிகரித்தால், நாட்டு மக்களின் நல்வாழ்விற்கும், வசதிகளுக்கும் அந்த வருவாயை அரசாங்கம் பயன்படுத்தலாம். பல பொருள்களை உற்பத்தி செய்து மற்ற நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்து அமெரிக்கா சீனா, ஜப்பான், தென் கொரியா ஆகிய நாடுகள் தங்கள் மொத்த உள்நாட்டு உற்பத்தியை (மொத்த உள்நாட்டு உற்பத்தி - Gross Domestic Product) பெருமளவில் பெருக்கிக்கொண்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

எத்தகைய தகுதியுடையவர்கள் ஒரு நாட்டில் இருக்க வேண்டும் என்று வள்ளுவர் குறிப்பிடவில்லை. ”தக்கார் தகவிலர் என்பது அவரவர் எச்சத்தால் காணப்படும் (குறள் – 114).” என்று ”நடுவுநிலைமை” என்ற அதிகாரத்தில் குறிப்பிடும்பொழுது, தக்கார் என்ற சொல் நடுவுநிலைமை உடையவர்கள் என்பதைக் குறிக்கிறது. ஆனால், பொதுவாக, “தக்கார்” என்பது தகுதி உடையவர் என்பதைக் குறிக்கிறது. இன்றைய சூழ்நிலையில், ஒரு நாட்டில், கல்வி, அறிவியல், பொறியியல், தொழில் நுட்பம், மேலாண்மை, தலைமைப் பண்பு, கலை போன்ற பல தகுதிகளையுடைய பலரும் இருப்பதுதான் நாட்டிற்குச் சிறப்பு.

தாழ்விலாச் செல்வர் என்பது குறையாது கொடுக்கும் வள்ளல்களைக் குறிப்பிதாகச் சில உரையாசிரியர்கள் கூறுவர். ஒரு நாட்டில் வள்ளல்கள் இருப்பதால் மட்டும், அந்த நாட்டை வளமான நாடாகக் கருத முடியாது. ”ஒரு மனிதனுக்கு ஒரு மீன் கொடுப்பதால் அவனுக்கு ஒரு நாளைக்கு உணவளிக்க முடியும். ஆனால், அவனுக்கு மீன் பிடிக்கக் கற்றுக் கொடுப்பதால், அவனுக்கு வாழ்நாள் முழுவதும் உணவளிக்க முடியும்.” என்பது பழமொழி. இந்தப் பழமொழிக்கேற்ப, செல்வந்தர்கள் தங்கள் செல்வத்தை முதலீடு செய்து, பொருள்களை உற்பத்தி செய்வதாலும், அவற்றை விநியோகம் செய்வதாலும், விற்பனை செய்வதாலும் பலருக்கு வேலை வாய்ப்புக்களை உருவாக்கி, நாட்டின் பொருள்வளத்தைப் பெருக்க முடியும். இந்தக் கருத்தை மனத்தில் கொண்டு, மூதறிஞர்கள் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் அவர்களும், வ. சுப. மாணிக்கம் அவர்களும் “தாழ்விலாச் செல்வர்” என்பது வணிகர்களைக் குறிப்பதாகப் பொருள் கொள்கின்றனர். “தாழ்விலாச் செல்வர்” என்பதற்கு வணிகர் என்று பொருள் கூறுவதைவிடத் தொழில் முனைவோர் என்று பொருள்கொள்வது பொருத்தமானதாகத் தோன்றுகிறது. ஆகவே, தொழில் முனைவோர் தங்கள் செல்வத்தை முதலீடாக வைத்து, தகுதியுடையவர்களைப் பணிகளில் அமர்த்தி, வேளாண்பொருள்கள் மட்டுமல்லாமல், மற்ற பொருள்களையும் உற்பத்தி செய்கின்ற நாடுதான் சிறந்த நாடு என்று இக்குறளுக்கு, இக்காலத்திற்கேற்ப பொருள்கொள்வது சிறந்ததாகத் தோன்றுகிறது.

மிகுந்த பொருள்வளம் உடையதாகவும், பிறநாட்டினரால் விரும்பத்தக்கதாகவும், கேடு இல்லாததாகவும், மிகுந்த விளைச்சல் உடையதாகவும் இருப்பதே சிறந்த நாடாகும் (குறள் – 732).

**பெரும்பொருளால் பெட்டக்க தாகி அருங்கேட்டால்**
**ஆற்ற விளைவது நாடு.** (குறள் – 732)

"பெரும்பொருள்" என்பது ஒருநாட்டின் செல்வம், நிலவளம், நீர்வளம், இயற்கைப் பொருள்வளம், உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் மிகுதி ஆகிய அனைத்தையும் குறிக்கும். "பெட்டக்கது" என்பது விரும்பத் தக்கது என்பதைக் குறிக்கிறது. ஒரு நாடு பெரும்பொருள் உடையதாக இருந்தால், அது பிறநாட்டவர்களால் விரும்பப்படுவது இயற்கை. அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளில், பொருள்வளமும் வேலைவாய்ப்புக்களும் மிகுதியாக இருப்பதால் மற்ற நாடுகளில் இருப்பவர்கள் அங்கே சென்று வாழ விரும்புகிறார்கள்.எதிர்பாராத சுமைகள் ஒரே சமயத்தில் வந்தாலும் அவற்றைத் தாங்கிக்கொண்டு, அரசுக்குச் செலுத்த வேண்டிய வரிகள் அனைத்தையும் உடம்பட்டுக் கொடுக்கும் மக்களையுடையதே நாடாகும் (குறள் – 733).

**பொறையொருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்கு**
**இறையொருங்கு நேர்வது நாடு.** (குறள் – 733)

ஒரு நாட்டில், பொருளாதாரச் சரிவு, பஞ்சம், கொடுங்கோல் ஆட்சி, கலவரங்கள் போன்றவை அதிகமாக இருந்தால், அங்குள்ள மக்கள் செல்வமும் வேலைவாய்ப்புக்களும் உள்ள வளமான நாடுகளுக்குக் குடியேற விரும்புவது இயற்கை. அவ்வாறு குடியேறுபவர்களுக்கு மருத்துவ வசதி, அவர்களின் குழந்தைகளுக்குக் கல்வி ஆகியவற்றுக்குக்காக, வளமான நாட்டு மக்கள் அதிக வரிச்சுமையைத் தாங்க நேரிடும். பிறநாட்டு மக்களின் வருகையால் வரிச்சுமை அதிகமானாலும், அதைத் தாங்கிக்கொண்டு தங்கள் வரிகளை முறையாகச் செலுத்தும் மக்கள் உள்ள நாடு சிறந்த நாடு. இவ்வாறு வரிச்சுமையைத் தாங்கிக்கொண்டு அரசுக்கு தாங்கள் செலுத்த வேண்டிய வரியை அமெரிக்க மக்கள் தவறாது செலுத்துவது குறிப்பிடத்தக்கது. மிகுந்த பசி, தீராத நோய், அழிவை ஏற்படுத்தக்கூடிய பகை ஆகிய மூன்றும் இல்லாமல் இயங்குவதே நல்ல நாடு (குறள் – 734) என்கிறார் வள்ளுவர்.

**உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்**
**சேரா தியல்வது நாடு.** (குறள் – 734)

. பசியால் வாடும் மக்கள் இந்தியாவில் மட்டும் இல்லை. வளமான நாடாகக் கருதப்படும் அமெரிக்காவிலும் உள்ளனர். அமெரிக்காவில் ஏறத்தாழ நான்குகோடி மக்கள் பசியால் வாடுகிறார்கள் என்று மற்றொரு கருத்துக் கணிப்புக் கூறுகிறது. இவ்வுலகில் வாழும் எழுநூறு கோடி மக்களுக்கும் தேவையான உணவுப் பொருட்களை உற்பத்தி செய்வதற்கேற்ற வளமும் ஆற்றலும் உள்ள பல நாடுகளின் அரசுகள் தங்கள் மக்களின் பசிப்பிணியைப் போக்குவதில் அக்கறை காட்டாததுதான் இந்த அவலநிலைக்கு முதன்மையான காரணம் என்று கருதப்படுகிறது.

உலகில் உள்ள எல்லா நாடுகளிலும், பிணியுள்ள மக்கள் இருக்கிறார்கள். பிணிகள் பலவிதம். சில பிணிகளை எளிதில் குணப்படுத்த முடியும். சில

பிணிகள் மக்களின் மரபணுக்களால் வருபவை. இவற்றைக் குணப்படுத்துவது கடினம். சில நோய்கள் நுண்கிருமிகளால் தோன்றி ஒருவரிடமிருந்து மற்றவர்களுக்குப் பரவுகின்றன. உதாரணமாக, கொரோனா (corona/COVID -19) என்ற நுண்கிருமியால் (நுண்கிருமி -Virus) பரவும் நோய் உலகம் முழுதும் பரவி, கடந்த எட்டு மாதங்களில் (மார்ச் 2010 முதல் அக்டோபர் 2020 வரை) ஏறத்தாழ 3.6 கோடி மக்களைப் பாதித்து பத்து இலட்சம் பேர்களைக் கொன்றிருக்கிறது. இந்த நிலை இன்னும் தொடரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஆனால், ஊட்டச்சத்துக் குறைபாடு, சுத்தமான தண்ணீர் குறைபாடு, மருத்துவ வசதியின்மை, சுகாதாரமான சுற்றுச் சூழல் இல்லாமை போன்ற காரணங்களால் பல நோய்கள் தோன்றுகின்றன. அரசு செவ்வனே செயல்பட்டால் – மக்களின் உடல் மற்றும் மனநலத்தில் அரசுகள் அக்கறை காட்டினால் - இது போன்ற நோய்களைக் குறைக்கவும், தடுக்கவும் முடியும்.

மிகுந்த பசி, தீராத பிணிகள் ஆகிய இரண்டும் இல்லாமல் இருப்பதோடு மட்டுமல்லாமல், மக்களை அழிக்கின்ற பகையும் ஒரு நாட்டில் இருக்கக்கூடாது என்பது வள்ளுவரின் கருத்து. விடுதலை பெற்றபிறகு, இந்தியா பாகிஸ்தானோடும் சீனாவோடும் சிறுசிறு சண்டைகளில் ஈடுபட்டாலும், பெரிய போர்கள் எதிலும் இந்தியா ஈடுபடவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஆனால், அமெரிக்கா தேவையற்ற பலபோர்களில் தலையிட்டு ஆயிரக்கணக்கான வீரர்களையும் கோடிக்கணக்கான டாலர்களையும் இழந்துள்ளது என்பது வரலாறு. அமெரிக்கா மட்டுமல்லாமல், சிரியா, ஆஃப்கானிஸ்தான், ஈராக், இஸ்ரேல், பாலஸ்தீன் மற்றும் பல நாடுகளில் சண்டைகள் நடைபெற்றுக்கொண்டிருக்கின்றன. சுவிட்சர்லாந்து நாடு மட்டுமே நீண்டகாலமாக போர்கள் இல்லாமல் அமைதியாக இருந்துவருவதாகவும், சுவீடன் (Sweden), நியூசிலாந்து (New Zealand), கோச்ட ரிகா (Costa Rica), வனுவடு (Vanuatu) மற்றும் இலிக்கின்சுடைன் (Leicheistein) ஆகிய நாடுகள் மிகமிகக் குறைவாகப் போர்களிலோ அல்லது சச்சரவுகளிலோ பங்குகொண்டதாகக் கூறப்படுகிறது.

தம்முள்ளே கருத்து வேறுபாடுகளைக்கொண்ட பல குழுக்களும், உடனிருந்தே கேடு செய்யும் உட்பகையும், அரசனை அலைத்துத் துன்புறுத்தும் கொலையைத் தொழிலாகக்கொண்ட வன்முறைக் கூட்டங்களும் இல்லாததே சிறந்த நாடாகும் (குறள் – 735).

**பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்**
**கொல்குறும்பும் இல்லது நாடு.** (குறள் – 735)

ஒரு நாட்டில் குடியாட்சி நடைபெற்றால் அங்கு அரசியல் கட்சிகள் இருப்பது இயற்கை. அரசியல் கட்சிகள் இருந்தால் கருத்து வேறுபாடுகள் இருக்கும். ஆளும் கட்சியை வீழ்த்தித் தம்

கட்சி ஆட்சிக்கு வரவேண்டும் என்று எதிர்க்கட்சிகளின் தலைவர்களும் உறுப்பினர்களும் விரும்புவார்கள். சில நாடுகளில், சிலர் வன்முறையில் ஈடுபட்டு, மக்களைத் துன்புறுத்துவதும் நடைபெறுகிறது. சிரியா, ஆஃப்கானிசுதான், ஈராக், சொமாலியா, இலிபியா போன்ற நாடுகளில் வன்முறைக் கூட்டத்தினர் மக்களுக்கும் அரசுக்கும் பெருந்தீங்கு இழைக்கின்றார்கள். ஆகவே, பல்குழுவும், பாழ்செய்யும் உட்பகையும் ஆட்சி செய்பவர்களை அலைத்துத் துன்புறுத்தும் கூட்டத்தினரும் இல்லாத நாடுதான் சிறந்தது என்பது தெளிவு.

பகைவரால் கெடுக்கப்படாமல், இயற்கைச் சீற்றத்தால் கெட்டுவிட்ட காலத்திலும் வளம் குன்றாததாக, உள்ள நாடே நாடுகள் எல்லாவற்றிலும் தலையானது என்று கூறுவர் (குறள் – 736).

**கேடறியாக் கெட்ட இடத்தும் வளங்குன்றா**
**நாடென்ப நாட்டின் தலை.** (குறள் – 736)

இரண்டாம் உலகப் போரில் அமெரிக்கா வீசிய அணுகுண்டுகளால் ஜப்பான் பெருங்கேடடைந்தது. ஆனால், அந்தக் கேடுகளிலிருந்து ஜப்பான் விரைவில் மீண்டது. ஜப்பானில் ஆண்டுதோறும் ஏறத்தாழ 1,500 முறை நிலநடுக்கங்கள் ஏற்படுவதாகவும், நாள்தோறும் சிறுசிறு நில அதிர்வுகள் ஏற்படுவதாகவும் கூறப்படுகிறது. 2011 – ஆம் ஆண்டு தொகோகு (Tohoku) என்ற இடத்தில் தோன்றிய நிலநடுக்கதால் ஏற்பட்ட சுனாமியால் புகுசிமாவில் உள்ள அணு உலையில் (Fukushima Daiichi Nuclear Plant) விபத்து எற்பட்டது. இவ்வாறு நில நடுக்கங்களும் பேரழிவுகளும் ஏற்பட்டாலும் ஜப்பானில் வளம் குன்றவில்லை; ஏற்றுமதிகள் குறையவில்லை; பொருளாதாரம் சீரழியவில்லை; கொலை, கொள்ளை, திருட்டு போன்ற குற்றங்கள் நடைபெறவில்லை. இந்தக் குறளுக்குச் சிறந்த எடுத்துகாட்டாக ஜப்பான் விளங்குகிறது

ஊற்று நீரும், மழை நீரும், செழிப்பு மிகுந்த மலைகளும், அவற்றிலிருந்து வரும் ஆற்று நீரும், வலிய அரணும் ஒரு நாட்டிற்குச் சிறந்த உறுப்புக்களாகும் (குறள் – 737).

**இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்**
**வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு.** (குறள் – 737)

பிரேசில், உருசியா, அமெரிக்கா, கனடா மற்றும் சீனா ஆகிய நாடுகள் ஊற்று நீரும், மழை நீரும் ஆற்று நீரும் மிகுந்து விளங்கும் நாடுகளாகக் கருதப்படுகின்றன. வள்ளுவர் காலத்தில், ஒரு நாட்டிற்கு அரண் என்பது அந்த நாட்டுக்குள் பகைவர் எளிதாக நுழைவதற்குத் தடையாக இருக்க வேண்டும் என்று கருதப்பட்டது. இக்காலத்தில், ஒரு நாட்டைத் தாக்குவதற்கு, அந்த நாட்டின் பகைவர்கள் விமானங்களைப் பயன்படுத்துவதால், எத்தகைய வலிய அரணும் ஒரு அரிய பாதுகாப்பாக இருக்க முடியாது. ஆனால், ஒரு நாட்டுக்குள் வேறு நாடுகளிலிருந்து மக்கள் நுழையாமல் இருப்பதற்கு வலிய அரண்கள் சிறந்த பாதுகாப்பாகும். அமெரிக்காவின் தெற்குப் பகுதியில் மலை, கடல் போன்ற வலிய அரண்கள் இல்லாததால் மெக்சிகோவிலிருந்தும், தென்னமெரிக்காவிலிருந்தும் வேலைவாய்ப்புக்களைத் தேடி

அமெரிக்காவிற்குள் நாள் தோறும் நூற்றுக்கணக்கான மக்கள் சட்டத்திற்குப் புறம்பாக நுழைந்துகொண்டிருக்கிறார்கள். இவ்வாறு பிறநாட்டவர் ஊடுருவுவதைத் தடுப்பதற்காக இப்பொழுது அமெரிக்காவின் தெற்குப் பகுதியில் வலிய, நீண்ட, உயரமான சுவர்கள் எழுப்பப்படுகின்றன.

பிணியின்மை, பொருள்வளம், நல்ல விளைச்சல், இன்பமான வாழ்வு, நல்ல பாதுகாப்பு ஆகிய ஐந்தும் ஒரு நாட்டிற்கு அழகு என்று சொல்வார்கள் (குறள் – 738).

**பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்**
**அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.** (குறள் – 738)

ஒரு நாட்டில், மனிதர்கள் அனைவரும் எப்பொழுதும் பிணியில்லாமல் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது. ஆனால், நாட்டில் சுகாதாரமான சுற்றுச் சூழலும், தூய்மையான குடிநீரும், ஊட்டச்சத்துள்ள உணவும், மருத்துவ வசதிகளும் இருந்தால் அந்த நாட்டு மக்கள் பிணியில்லாமல் இருக்க வாய்ப்பு அதிகம். ஒரு நாட்டினுடைய செல்வம் அரசாங்கத்தில் மட்டுமோ அல்லது ஒரு சிலரிடத்தில் மட்டுமோ இல்லாமல் பொதுவாக மக்கள் அனைவரிடத்திலும் அவரவர்களுக்குத் தேவையான செல்வம் இருந்தால் அந்த நாட்டில் வறுமை இருக்காது. பிணியின்மை, செல்வம், விளைவு, இன்பம், பாதுகாப்பு இவை ஐந்தும் ஒரு நாட்டில் கண்டிப்பாக இருக்க வேண்டும் என்று வள்ளுவர் கூறவில்லை. இவை ஐந்தும் இருந்தால் அவை நாட்டிற்கு அழகு என்றுதான் கூறுகிறார்.

பிறநாட்டுப் பொருள்களின் தேவையின்றித் தமக்கு வேண்டிய பொருள்வளமெல்லாம் தம்மிடத்தே கொண்ட நாடுதான் நாடென்று சிறப்பித்துக் கூறப்படும். அவ்வாறன்றி, பிறநாட்டுப் பொருள்களை நாடிப் பெற்று, அதனால் வளம் பெறும் நாடு நாடாகாது (குறள் – 739).

**நாடென்ப நாடா வளத்தன நாடல்ல**
**நாட வளந்தரு நாடு.** (குறள் – 739)

மேற்கூறிய எல்லா நலங்களும் அமைந்திருந்தாலும், நல்லாட்சி இல்லாவிடின் அவை அனைத்தும் இருந்தும் பயனில்லை (குறள் – 740).

ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு. (குறள் – 740)

முடிவுரை

வள்ளுவர் பார்வையில், ஒரு நாடு சிறப்பான நாடாகக் கருத்தப்பட வேண்டுமென்றால், அந்த **நாட்டில் இருக்க வேண்டியவை**: குறையாத விளையுள், தகுதியுடைய மக்கள், சோர்வில்லாத செல்வந்தர்கள், மிகுந்த பொருள், வரிச்சுமை வந்தாலும் அவற்றைத் தாங்கிகொண்டு வரி செலுத்தும் மக்கள், இயற்கைச் சீற்றத்தால் கேடு விளைந்தாலும் வளம் குன்றாமல் இருக்கும் தன்மை, நீர்வளம் (ஊற்றுநீர், மழைநீர், ஆற்றுநீர்) மிகுந்திருப்பது, மக்களுக்குப் பாதுகாப்பு, மக்களின் இன்பமான வாழ்க்கை, எல்லா வளமும் தன்னிடத்தே கொண்டிருப்பது, நல்லாட்சி புரியும் தலைவர்கள்.

*வள்ளுவர் பார்வையில் சிறப்பான நாட்டில் இருக்கக் கூடாதவை:* பசி, பிணி பகை, மாறுபட்ட கருத்துடைய பல குழுக்கள், உட்பகை, வன்முறையில் ஈடுபடும் கூட்டங்கள்.

பல நாடுகளில் இன்றுள்ள அரசியல், பொருளாதார, சமுதாயச் சூழ்நிலைகளை வள்ளுவரின் கருத்துக்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால், எந்த நாட்டையும் மிகச் சிறந்த நாடாகக் கருத முடியாது. எல்லா நாடுகளிலும் சில சிறப்புக்களும், சில குறைகளும் உள்ளன.

# குறள்நெறி

-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-

*மின்னிதழ்:57 பங்குனி-18--தி.பி.2054 ஏப்பிரல்-1- பொ.ஆ.2023*



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



பொறுப்பாசிரியர்: மறைமலை இலக்குவனார்

# பாரதிதாசனாரின் பகுத்தறிவுப்  பார்வையில் திருக்குறள் .




பேராசிரியர் பெஞ்சமின்

இலெபோ,

பிரான்சு.

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞர்கள் இருவர்: ஒருவர் பாரதியார்; மற்றவர் பாரதிதாசனார்.முன்னவர் பராசக்தியை வழிபட்டவர்; பின்னவர் எங்கெங்குக்  காணினும் சக்தியடா என்று பகுத்தறிவுப் பாப்புனைந்தவர்!இருவருமே  திருக்குறள் மீது பேரன்பு பூண்டவர்கள். பாரதியாரோ திருக்குறளுக்கு உரை எழுதியவரும் இல்லை; எழுத எண்ணியவரும் இல்லை. பாரதிதாசனாரோ எண்பத்தைந்து குறட்பாக்களுக்கு மட்டுமே புத்துரை  கண்டவர்.
பிற குறட்பாக்களுக்கு எழுத எண்ணி இருக்கலாம்; ஏனோ அது ஈடேறாமல் போய்விட்டது.

எந்தப் பொருளையும் கண் எப்படிப் பார்க்கிறது? அப்பொருளின் மீது படும் ஒளி எதிரொளிக்கிறது; அது விழிகளில் நுழைந்து விழித்  திரையில் படும் போது அப்பொருள் புலப்படுகிறது. அறிவியல் கூறும் உண்மை இது.அது போலத் திருக்குறள் மீது பகுத்தறிவு ஒளியைப் பாய்ச்சுகிறார் பாரதிதாசனார்.பகுத்தறிவு ஒளியில் வைரங்களாக மின்னுகின்றன குறட்பாக்கள்!

குறட்பாக்கள்: தமிழ்த் தேனில் ஊறிய பலாச் சுளைகள்; தமிழ்த் தென்றலில் தலை அசைத்து ஆடும் சின்னஞ் சிறிய பூக்கள்;வாழ்வுக்கு வழி காட்டும் விண்மீன்கள்!இவற்றைப் பாரதிதாசனார் பார்த்த பார்வையில் பார்ப்போம்.

"நதியொடும் பிறைஅணிந்திடு பரம்பொருளெனுஞ்
சிவனை வந்தனை புரிந்தாலே-உயர்" என்று சிவன் புகழ் பாடி
" தும்பிமுகா காப்பாற்று சொல்வண்ணம் எல்லாம் உன்
தம்பிகுகன் ஷண்முகன் மேல் தான்." என்று
மயிலம் முருகன் மேல் துதி பாடிப் பக்தி வெள்ளத்தில் ஆழ்நதிருந்த
கனகசுப்புரத்தினம் பகுத்தறிவுப் பாதையில் நடைபோட்டது எப்படி?
வெண்தாடி வேந்தரின் சீர்திருத்தக் கொள்கைகளில் மனத்தைப் பறிகொடுத்தார்.
அவரையே தம் வழிகாட்டியாக ஏற்றார்.
வறட்டுப் பழம்போக்கை மாற்றிப் புரட்சிப்பாதையைக் காட்டிய ஈரோட்டுப் பெரியார்
ஈவேராவின் பகுத்தறிவுப் பாசறையில் அடியெடுத்து வைத்தார் கனகரத்தினம் என்ற
பாரதிதாசனார்.
குருதியிலே கொண்ட இறைப்பற்று மறைந்தது; இதயத்தில்
இறைமறுப்புக் கொள்கை நிறைந்தது: இறுதிவரை நிலைத்தது.
ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம். பாவேந்தார் உரைகளில் இருந்து இரு
குறட்பாக்களைப் பார்ப்போம். அவற்றின் வழியே அவர் கண்ட, கூறிய உரைத் திறங்களை
உணர்வோம். அதற்கும் முன்னதாக அவர் உரையின் பொதுப் பண்புகளைச் சுருக்கமாக
அறிவோம்!
தாம் நடத்தி வந்த குயில் தாளிகையில் பாரதிதாசனார் அவ்வப்போது தம் உரையைப்
பதிந்துள்ளார். உதிரிப் பூக்களாக விளங்கிய
இவற்றைத் தொகுத்து 'வள்ளுவர் உள்ளம் ' என்ற தலைப்பில் வெளியிட்டவர் முனைவர் சு சு
இளங்கோ எம்.ஏ, பி.எச்.டி, டி.லிட். ஆவர். இந்நூல் இணையதளத்தில் கிடைக்கிறது.
விரும்புவோர் தேடிக் கண்டு கொள்க! இந்நூலுக்கு அந்நாள் நிதி அமைச்சர் நாவலர்
நெடுஞ்செழியன் மிக அருமையான அணிந்துரை அளித்திருக்கிறார். இவற்றின்
அடிப்படையில்தான் யான் இச்சிறு கட்டுரையைப் படைத்திருக்கிறேன். அவர்கள்
இருவருக்கும் என் நன்றி.
பாவேந்தரின் உரை திட்டவட்டமாகவும் தெளிவாகவும் திட்பமாகவும் பொருள் உரைக்கிறது ;
ஐய வினா, அறி வினா, அறியா வினா என மூவகை வினாக்களுக்கும் அழுத்தமாகவும்
திருத்தமாகவும் விடை அளித்திருக்கிறார். இலக்கிய மேற்கோள்கள், இலக்கணக் குறிப்புகள்
முதலியன இடம் பெற்றிருக்கின்றன. அருஞ்சொற்களுக்குச் சிறப்பான பொருள் விளக்கம் கூறி
இருக்கிறார்.
ஒரு மொழியின் முதல் எழுத்தில் (அ) தொடங்கி அம்மொழியின் இறுதி எழுத்தில்(ன் ) முடியும்
நூல் உலகில் திருக்குறள் மட்டுமே! இத்தகு சிறப்பு (தமிழ் உட்பட) வேறெந்த மொழிக்கும்
இல்லை!இத்தகு தனிச் சிறப்புப் பெற்ற திருக்குறளின் முதற் குறளுக்குப் பாவேந்தர் புத்துரை
எழுதுகிறார்; அது புதுமை உரை கூட!

திருக்குறளுக்கு உரை எழுதிய (என் பேராசிரியர் முனைவர் மு.வ, பாவாணர் உட்படப்) பலரும் பரிமேலழகர் கருத்தை ஒட்டியே உரை கூறி உள்ளனர்; அவர்களில் இருந்து மாறுபடுகிறார் பாவேந்தர்.

திருக்குறளின் முதல் அதிகாரம் மரபுப்படி கடவுள் வாழ்த்து என்று அழைக்கப்படுகிறது. இதன் மரபை மாற்றுகிறார் பாவேந்தர் ; ' உலகின் தோற்றம் ' என்று புதுப் பெயர் சூட்டுகிறார்! அவர் தரும் விளக்கம்:

"கடவுள் - கடந்தது ; அறிவுக்கு எட்டாதது.எட்டாத ஒன்றுக்குப் பெயர் எப்படி எட்டி இருக்கும் ; இவற்றைக் கருதி அன்றோ வள்ளுவர் தம் நூலில் கடவுள் என்ற பெயரையே எடுத்தாளாதுவிட்டார். இதுதான் வள்ளுவர் உள்ளம்; கடவுள் வாழ்த்து இடையில் ஏற்பட்ட வேலை!".

"கடவுள் இல்லை" என்ற பெரியாரின் கருத்தோடு ஒத்துப்போகும் பாவேந்தர், கடவுள் என்ற சொல் மக்கள் அறிவு பெறாத காலத்தில் ஏற்பட்டதாக இருக்கலாம் எனத் தன் கருத்தைப் பதிவு செய்கிறார்.

இங்கே தொடங்குகிறது பாவேந்தரின் பகுத்தறிவுப் பார்வை.முதற் குறளுக்கு அவர் தம் உரையைக் காண்போம்:

'அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே உலகு'.இதனை அவர்,
'அகரம் முதல எழுத்து எல்லாம் ஆதி
உலகு பகவன் முதற்று ஏ ' எனப் பிரித்து மாற்றி அமைக்கிறார்.

அகரத்தை முதலாக உள்ள எழுத்துக்கள் எல்லாம் அவ்வெழுத்துக்களால் ஆகிய சொற்கள் எல்லாம், அச்ச்சொற்களால் பெறப்படும் பொருள்கள் எல்லாம் (ஆதி ஆகிய) முதன்மையில் இருந்து தோன்றியவை; மக்கள் பகவனை முதல்வனாகக் கொள்ளத்தக்கனர்.

இந்தக் கருத்தை உள்ளடக்கி "உலகும் உயிர்களும் மற்றுமுள்ளவைகளும் ஆதி என்பதினின்று தோன்றியவை" என்ற கருத்தைப் பதிவிடுகிறார்

இதில் இடம் பெறும் ஆதி என்ற சொல் ஆய்வில் இறங்கும் அவர் "அது தூய தமிழ்ச் சொல்லே ; அது ஆதல் எனப் பொருள் படும் தொழிற்பெயர் " என்கிறார். (ஆதி வட சொல் என்பார் பாவாணர்).

ஆ - முதல் நிலை; தி - இறுதி நிலை (செய்தி, உறுதி... போல).ஆதி - முதன்மை- ஒரு பொருட் சொற்கள்.

இந்தச் சொல்லுக்கு"எல்லாப் பொருளும் தோன்றுதற்கு இடம் ஆவது" என்பது அவர் கருத்து. இதனை

"எல்லாப் பொருளும் தோன்றுதற் கிடமெனச் சொல்லுதல் மூலப் பகுதி " என்ற மணிமேகலைப் பகுதி (சமய 203-206) யை மேற்கோள் காட்டி நிறுவுகிறார்.

இதைப் போலவே பகவன் என்றசொல்லும் தமிழ்ச் சொல்லே என்று கூறுகிறார்: பகவன் வடசொல் அன்று; பகல் எனப் பொருள் படும் பகவு , ஆண்பால் இறுதி நிலை பெற்றது . "பகல்-அறிவு; ஆகு பெயர், உணர்வு எனலும் அது.பகவு என்பது உணர்வு என்றே கொள்க "என்று உரைக்கிறார். இதற்கு ஆதாரமாக , "ஒன்றாய் எங்கும் பரந்து நித்தியமாய் நின்றுள உணர்வாய் நிகழ் தரும் புருடன் " (மணி .சமய 231-232) வரிகளை எடுத்துக்காட்டுகிறார். "பகவன் என்பதற்கு மெய்யுணர்வு, அதாவது அறிவு என்று பொருள் கூறி எனக் கூறிக் கடவுள் என ஒருவர் இல்லை என்று ஆக்க எண்ணுகின்றீரா?''

இவ்வாறு ஆத்திகன் வினா விடுக்கிறான்.

"ஆமாம்! அறிவான தெய்வமே "என்று தாயுமானவரும் "அறிவை அறிவது பொருளென அருளிய குருநாதா" என அருணகிரியாரும் "ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமில்லை மெய்யுணர்வில்லாதவர்க்கு என்று இந்நூலாசிரியரும் (திருவள்ளுவர்)கூறுகிறார்கள் என்று விடை அளிக்கிறார் பாவேந்தர். இவ்வண்ணமே ஏனைய ஒன்பது

குறள்களுக்கு ம் உரை வகுக்கிறார் அவர். அவற்றை 'வள்ளுவர் உள்ளத்தில்' படித்தறிக! பாவேந்தரின் இக்கக்கருத்துகள் பொருத்தமா இல்லை வேண்டுவது திருத்தமா என்பதை தமிழாய்ந்த பெருமக்கள் முடிவு செய்துகொள்வர்களாக ! இவ்வாராய்ச்சி இக்கட்டுரையின் வரம்புக்கு அப்பாற்பட்டது.

இவ்வண்ணம் பல குறட்பாக்களுக்குப் புத்துரை கூறும் பாரதிதாசனின் பகுத்தறிவுக் குரல் வேறொரு குறளிலும் ஓங்கி ஒலிக்கிறது.

அக்குறள் : "தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள் பெய்யெனப் பெய்யு மழை"

"வானம் பொய்யாது வளம் பிழைப்பறியாது

நீணில வேந்தர் கொற்றம் சிதையாது

பத்தினிப் பெண்டிர் இருந்த நாடு "(சிலம் 15:145-147) என்று இளங்கோவடிகளும்

"மழை தரும் இவள்" என மணிமேகலையும்

"அற்பில் நின்றன அறங்கள் : அன்னவர் கற்பில் நின்றன. கால மாரியே. (கம்ப இராமா. நாட்டுப்படலம் 59) எனக் கம்பனும் குறிப்பிடுகிறார்கள்.இவற்றின் அடிப்படையில் இக்குறளுக்கு உரை கண்டவர் பலர்.அவர்கள் கண்ணுக்குப் புலப்படாத கருத்து பாவேந்தரின் பகுத்தறிவுக் கண்ணுக்குப் புலப்படுகிறது .அதுதான் பாரதிதாசனாரின் நுண்மாண் நுழை புலம்!

இக்குறளுக்குப் பாரதிதாசனாரின் புத்துரை- புதுமை உரை கூட: "பெய் எனப் பெய்யும் மழை என்றது அளவறிந்து பெய்வதோர் பயன் மழையை .ஞாலம் விரும்பிய வண்ணம் பெய்யும் மழையைப் போல் காதலன் விரும்பிய போது அவன் பெறுமளவு இன்பம் அளிப்பவள் ..."என்னே புதுப் பொருள்!

இக்கருத்தை இளங்கோவடிகளும் "கலவியும் புலவியும் காதலர்க் களித்தாங்கு" இருந்தாள் மாதவி என்பார். காதல் இன்பத்துக்கு இங்கு மழையை உவமை ஆக்கும் திருவள்ளுவர்,

"வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு

வீழ்வார் அளிக்கும் அளி " என்று உரைப்பார். இவரின் இந்த உரையைப் பெரிதும் பாராட்டுகிறார் பாவாணர் (திருக்குறள் தமிழ் மரபுரை.)

பகுத்தறிவுக் கண்ணாடி அணிந்து திருக்குறளைப் பார்த்துப் புதுப் பொருள் தந்த பாவேந்தர் உரை முழுமையும் இங்கே குறிப்பிட இயலாமைக்கு மிக வருந்துகிறேன்.காலமும் இடமும் வாய்ப்பின் இவ்வாராய்ச்சி உரை தொடரும்.

திருவாளர் செவாலியே தியாகு இலெபோ – திருவாட்டி அன்னம்மாள் இலெபோ இணையர் திருமகனாக ஐப்பசி 18, 1978 / 03.11.1947 அன்று பிறந்தார். இவர் மனைவி இலெபோ உலூசியா, இவரைப்போலவே தமிழார்வமும் தமிழ்த்தொண்டுச் செயற்பாடுகளும் மிக்கவர். பாரதியார் 1908 இல் புதுவைக்கு வந்தபோது அவரைக் கைது செய்து சென்னைக்கு அனுப்பும்படி ஆங்கிலேய அரசு புதுவையில் இருந்த பிரஞ்சு ஆளுநருக்கு அழுத்தம் கொடுத்தது. அவ்வாறு அனுப்பாமல் இருக்க வேண்டுமானால் ஆவணச் சான்றுரைஞர்(notary public) ஐவரின் நன்னடத்தைப் பொறுப்பு ஒப்பம் தேவைப்பட்டது. அவ்வாறு கையொப்பமிட்ட ஐவருள் ஒருவர் இவரின் தந்தை வழித் தாத்தா இலெபோ(LE BEAU) ஆவார். சென்னை இலயோலா கல்லூரியில் இயற்பியல் துறையில் இளம் அறிவியல்(B.Sc – Physics) பட்டம் பெற்றவர். தமிழ்(சென்னை பச்சையப்பன் கல்லூரி), ஆங்கிலம்(திருப்பதி வேங்கடேசுவரா பல்கலைக்கழகம்), பிரெஞ்சு(பிரெஞ்ச கல்வியியல் கழகம்/Académie Fraçaise, புதுதில்லி) என மும்மொழிகளிலும் முதுகலைப்பட்டங்கள் பெற்றார்.மும்மொழிப் புலமை மிக்க இவர் மின்னியல் (Diploma in Electronics, பிரித்தானியப் பொறியியல் தொழில் நுட்பப்பயிலகம்/British Institute of Engineering and Technology,மும்பை) மொழியியல் (Diploma în Linguistics, கேரளா பல்கலைக்கழகம்) பட்டயங்கள் பெற்றவர். கணிணி இயலிலும் எழுநிலைச்சான்றிதழ் பெற்று வல்லமை மிக்கவர்.புதுச்சேரி தாகூர்க் கலைக் கல்லூரியில் தமிழ்த் துணைப் பேராசிரியராகத் தம் பணியைத் தொடங்கினார் பேரா.பெஞ்சமின் இலெபோ. பின்னர் 14 ஆண்டுகள், கிழக்கு ஆப்பிரிக்க நாட்டில் (சீபூத்தீ / Djibouti)) இந்தோசுயெசு வங்கி என்ற பிரஞ்சு வங்கியில் முது நிலை அதிகாரியாகப் பணியாற்றினார். அதன்பின் 1990 முதல் பிரான்சு கிறித்தியான் இலக்ரூவா (Christian Lacroix ) என்ற பன்னாட்டு நிறுவனத்தின் செயல் அலுவலராகப் பணியாற்றி 2010 இல் பணி நிறைவு பெற்றார். புகுமுக மாணாக்கராக இருந்த பொழுது(1965) கல்லூரி மாணவர்க்கான ‘ஆக்க வேலையில் அணுசக்தி’ என்னும் தலைப்பிலான கலைக்கதிர் அறிவியல் கட்டுரைப் போட்டியில் முதல் பரிசு பெற்றார்.அறிவியல் இளங்கலைப் படிப்பின் போது அனைத்துக் கல்லூரிப் பேச்சுப் போட்டியில் பேரறிஞர் அண்ணா அவர்களின் திருக்கரங்களால் சுழற்கோப்பை பெற்றார். 1969-இல் கிண்டி பொறியியற் கல்லூரி நடத்திய கலைச்சொல்லாக்கப் போட்டியில் மூன்றாம் பரிசு பெற்றுள்ளார். மூன்றாம் பரிசாக இருந்தாலும் கலைக்கல்லூரி நிலையில் முதலிடமாக இஃது அமைந்தது.1992-இல் நடைபெற்ற பாவேந்தர் பாரதிதாசனின் நூற்றாண்டு விழாவை முன்னிட்டு உலகளாவிய கட்டுரைப் போட்டி நடைபெற்றது. ‘கவிஞனின் காதலி’ என்னும் தலைப்பில் கட்டுரை அளித்து, நாவலர் நெடுஞ்செழியன் அவர்களின் திருக்கரங்களில் இருந்து முதல் பரிசு பெற்றார்.

# திருக்குறளின் கருத்துக்களோடு ஒத்திருக்கும் ஒரே இந்திய மதம் ஜைநசமயமே

சிரீமான் அ. சக்கிரவர்த்தி நயினார், எம். ஏ., ஐ.இ.எஸ்.,

இராஜமகேந்திரம் அரசாங்கக் கல்லூரித் தலைமை ஆசிரியர் அவர்கள்

**"திருக்குறள் ஆராய்ச்சியும் ஜைந சமய சித்தாந்த விளக்கமும்"** என்னும் நூலுக்கு வழங்கிய ஆங்கில முன்னுரையின் மொழிபெயர்ப்பு



இந்தப் புத்தகம், பிரசித்தி வாய்ந்த திருக்குறளின் ஆசிரியர், ஜைந சமயத் தினரென்று நிரூபிக்க எழுதப்பட்டுள்ளது. பல மதத்தினரும் குறளாசிரியரைத் தம்மவரென்று கூறுகின்றபடியால் அவருடைய மதம் இன்னதென்று காண அவருடைய நூலின் உட்சான்றுகளே நமக்கு ஆதாரம். உட்சான்று சந்தேக மற்றதாயும் நிச்சயமானதாயு மிருக்கின்றது. திருக்குறள் அஹிம்சா தருமத்தை அடிப்படையாகக் கொண்ட ஓர் ஒப்பற்ற நீதி நூலாகும்.

'ஹிந்துமதத்தின் ஒவ்வொரு பிரிவும் அந்தப்பெரிய கவியைத் தன்னுடைய தாகச்சொல்லி அவருடைய செய்யுட்களுக்குத் தன்மதக் கோட்பாடுகளுக்கொப்ப உரை காண முயல்கின்றது. முக்கியமாக ஜைநர் அவரைத் தம்மவராகக் கருது கின்றனர்; அவர்களுடைய பரிபாஷைகளுள் சிலவற்றை அவர் நிச்சயமாகவே உபயோகித்துள்ளார். அம் மதத்தின் கொள்கைகளை அவர் நன்கு உணர்ந்திருந்த தாகத் தெரிகின்றது."

''ஆனால் திருவள்ளுவர்  ஜைநர் என்னும் கொள்கைக்கு விரோதமாக ஒரு குறள் இருக்கின்றது. மூன்றாவது அதிகாரம் ஐந்தாவது குறளில் இந்திரனைப் பற்றிய ஒருகதை குறிப்பிடப்பட்டுள்ளது. துறவிகள், தேவர்களுக்குமேல் சக்தி வாய்ந்தவர்கள் என்பதை அது ருசுப்படுத்துவதாகக் கருதப்படுகின்றது. கௌதமர் என்னும் ஒரு துறவி

இருந்தார். தம்முடைய மனைவியாகிய அகலிகையை இந்திரன் ஏமாற்றினான். அதற்காக அவர் அவனைச் சபித்தார். ஜைந சமயத்தின்படி துறவிக்கு மனைவியிருக்க முடியாது; அவர் கோபமடையவும் முடியாது. பிறருக்கு தண்டனை விதிக்கவும் முடியாது. ஒரு ஜைநர் இந்தக் கதையை நம்பமாட்டார்; குறளாசிரியர் செய்ததுபோல, இதை உபயோகப்படுத்தவும் மாட் டார்." இவ்வாறு டாக்டர் போப் கூறியுள்ளார்.ஜைந சமயத்தைப்பற்றியும் ஜைநக் கொள்கைகளைப்பற்றியும் அவருக்கு ஒன்றும் தெரியாது போலும்." ஜிநேந்திரன் " என்னும் பதத்திற்குக் "கோபத்திற்கதிபதி" என்று அவர் பொருள் கூறுகின்றார். அவர் ஜைநசமயத்தை அறிந்தவரல்லவென்பதை இதுவே வெளிப் படுத்துகின்றது. "ஜிநன் " " சினன் " ஆகியவற்றிற்குள்ள வித்தியாசத்தை உணராத ஒருவர், ஜிநன் என்னும் பெயர் சினம் (கோபம்) என்னும் தமிழ்ச் சொல்லினின்றும் பிறந்ததாகக் கருதும் ஒருவர், ஜிநேந்திரன், ஹீப்ரூ ஜனங் களின் கோபக் கடவுளாகிய ஜிகோவாவைப் போன்றவரென்று நினைக்கும் ஒரு வர்,அஹிம்சையை போதிக்கும் தமிழ் ஆகமமாகிய குறளின் ஆசிரியரைப்பற்றி அபிப்பிராயம் சொல்லச் சிறிதும் யோக்கியதை யுடையவரல்லர். இந்திரன் அகலிகையோடு செய்த தீச் செய்கையையாவது, அதற்காக கௌதமர் இட்ட சாபத்தையாவது குறளின் பேராசிரியர் குறிப்பிடவில்லை என்று எடுத்துக் காட்ட வேண்டியதவசியமில்லை. இந்தக் கதை உரையாசிரியரான பரிமேலழகருடைய ஆழ்ந்ததும் நேர்மையில்லாததுமான யுக்தியிலுதித்தது, அவர் குறளாசி ரியர் நினையாத அநேக கருத்துக்களைப் பலவிடங்களில் மூலபாடத்தோடு பொருத்த முயல்கிறார். இப்புத்தகத்தின் ஆசிரியர் சாதுரியமாகக் காட்டியுள்ளபடி அந்தக் குறள், வேதங்களில் புகழப்படும் தெய்வங்களுக்கு முதன்மையானவனால் வணங்கப்படும் பரமவீதராகனுக்கு இந்திரன் செய்யும் தொண்டைக் குறிக்கின் றது. ஆகையால் மிகவும் தப்பாகப் பொருள் கொள்ளப்படும் இந்தக் குறளில் ஜைந தருமத்திற்கு விரோதமானது ஒன்றுமில்லை.

இன்னும் சமீபகாலத்தில் அண்ணாமலை சர்வ கலாசாலையின் சார்பில்சில கட்டுரைகள் செய்யப்பட்டன. அவற்றுள், குறளாசிரியர் தம்முடைய கருத்துக் களை வைதிக ஹிந்து மதத்திலிருந்து பெற்றாரென்றும், அவருடைய நூல் சமஸ்கிருதத்திலுள்ள போதாயனருடைய தர்ம சாஸ்திரம், கௌடில்யருடைய அர்த்த

சாஸ்திரம், வத்ஸாயனருடைய காம சாஸ்திரம் ஆகியவற்றின் மொழி பெயர்ப்பென்றும் கூறப்பட்டன. இந்தக் கொள்கை எவ்வளவு பொருத்தமற்ற தென்பது வைதிக தருமத்தைப்பற்றி சிறிது தெரித்தவருக்கும் நன்குவிளங்கும்.

போதாயனருடைய தர்ம சாஸ்திரம் வைதிகமதத்தின் வர்ணாஸ்ரம தருமத்தை முற்றும் அடிப்படையாக உடையது. அது அஹிம்சா தருமத்திற்கு நேர் எதிரானது. மனு,கௌதமர் ஆகியவர்கள் கூறியிருக்கும் நான்கு வர்ணத்தா ருடைய தொழில்களையும் போதாயனர் கூறுகின்றார். உதாரணமாக மதுபர்க்கம் அல்லது அதிதிகளுக்கு விருந்தளித்தல் என்ற அதிகாரத்தில் பிராமணபோஜனத் திற்குத் தகுதியான மிருகங்கள் இன்னின்னவென்று கூறப்பட்டுள்ளன. அவற்றுள் பசுக்களும், செம்மறியாடுகளும், மான்களும், காட்டுப்பன்றிகளும், காண் டாமிருகங்களும் அடங்கியுள்ளன. இது தற்காலத்தில் மாமிசம் உண்கின்ற பிரா மணரல்லாதாரையும் நடுங்கும்படிச் செய்யும். இந்த தருமசாஸ்திரம் திருக்குற ளில் கூறப்பட்டுள்ள கருத்துக்களுக்கு உற்பத்தி ஸ்தானமாகக் கருதப்படுகின் றது ! அங்கே (தரும சாஸ்திரத்தில்) வேதானுசாரப்படி ஜீவஹிம்சை செய் வதே முக்கியமான கொள்கை; இங்கே (திருக்குறளில்) அதை முழுதும் கண்டித்துக் கொல்லாமையே சிறந்த தருமமென்று புகழ்வதாகும். " அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை நன்று " என்றார். அங்கே பித்ருக்களுக்கும், அதிதிகளுக்கும், தேவதைகளுக்கும் மாட்டிறைச்சி, பன்றியிறைச்சி, மான் இறைச்சி, காண்டா மிருகத்தின் மாமிசம் ஆகியவற்றைச் சிறந்த ஆகாரமாகக்கொடுக்கும்படி சொல்லப்பட்டுள்ளது. இங்கே (திருக்குறளில்) புலால் உண்பது மிகவும் இழிவாகக் கூறப்பட்டுள்ளது. புலால் ஒரு பிராணியின் புண்ணுக்குச் சமானமாகக் கூறப்பட்டுள்ளது. இவ்வாறிருக்கத் திருக்குறளின் கருத்துக்கள் போதாயனருடைய தரும சாஸ்திரத்திலிருந்து பெறப்பட்டனவாம் ! இது என்ன ஆச்சரியம்!

இன்னும் திருக்குறளில் உழவுத் தொழிலைச் சிறப்பித்துக் கூறியிருப்பதை நோக்குக. வைதிக தருமப்படி நிலத்தை உழுது பயிர் செய்தல் கடை வருணத் தாருடைய தொழில். தன்னுடைய ஜாதிக்குரிய தொழிலைச் செய்ய முடியாமல் இழிந்த நிலைமையை அடைந்தாலொழிய ஒரு பிராம்மணனாவது க்ஷத்திரியனா வது பயிர்த்தொழிலைச்

செய்ய நினைக்கமுடியாது. குறளாசிரியர் நிலத்தை உழுபவனுக்கு முதன்மை கொடுத்திருக்கிறார். அவனே ஜனசமூகத்தில் முன் நிற் கின்றான். மற்றெல்லோரும் அவன் பின்னே செல்கின்றவர்கள். நாம் இங்கே அதிகம் எழுதவேண்டியதில்லை.

குறளாசிரியரைத் தம்மவரென்று சிறிது நியாயத்தோடு கூறக் கூடியவர் பௌத்த சமயத்தினர் ஒருவரே. ஆனால் வாய்ப்பேச்சோடு நிற்கும் பௌத்த சம யத்தினுடைய அஹிம்சாதர்மக் கொள்கையைத் திருக்குறள் கண்டிக்கின்றது. பௌத்தன் தன் கையால் எந்த ஜீவனையும் கொல்லுவதில்லை. அவனுடைய அஹிம்ஸாதர்ம அனுஷ்டானம் அதோடு நின்றுவிடும். ஆனால் அவன் தன்னுடைய கொள்கைக்கு விரோதமின்றி மாமிசத்தைக்கடையிலிருந்து வாங்கிக்கொள்ளலாம். ஆனால் குறளாசிரியர், பொறுப்பைச் சரியானயிடத்தில் நிறுத்துகின்றார். புலால் உண்கின்றவர்களுடைய சௌகரியத்திற்காகக் கடைக்காரன் புலாலை விற்கின்றான். தேவைக்கு ஏற்றபடி உற்பத்தி செய்ய வேண்டியதாயிருக்கிறது. புலால் அதிகம் தேவையானால் அதிகமாக ஜீவன்களைக் கொலைசெய்ய வேண்டியது அவசியமாகின்றது. தேவை மட்டானால் கொலை மட்டாகும். தேவைக்குத் தகுந்த மாதிரியே வியாபாரமும் நடக்கும்.



திருக்குறளாசான் எனச் சமணர்களால் நம்பப்படும் குந்தகுந்தர்

இனிமேல் ஒன்றும் சொல்ல வேண்டியதவசியமில்லை. திருக்குறள் அஹிம்சா தருமத்தை எல்லா அம்சங்களிலும் போதிக்கின்ற ஒரு பெரிய ஆகமம் என்று சொன்னால் போதுமானது. கொள்கையிலும் அனுஷ்டானத்திலும் **திருக்குறளின் கருத்துக்களோடு ஒத்திருக்கும் ஒரே இந்திய மதம் ஜைநசமயமே**. இவ்விஷயம் இந்தப் புத்தகத்தில் சாதுரியமாக நிரூபிக்கப்பட்டுள்ளது. இந்தப் புத்தகத்திற்கு முன்னுரை எழுதும் பாக்கியம் பெற்றதற்கு நான் பெரிதும் மகிழ்வெய்துகிறேன்.

நூல் வெளியான ஆண்டு:1932 [நூலின் நடையோ சொல்லாட்சியோ நம்மால் மாற்றப்பெறவில்லை.]

## திருவள்ளுவர் எந்த மதத்தையும் சேர்ந்தவரல்லர்-தந்தை பெரியார்

திருக்குறளில் தாங்கள் மிகவும் விரும்பும் குறள்களைப் பற்றித் தெரிந்து கொள்ள விழைகிறோம் அய்யா?



குடிசெய்வார்க்கு இல்லை பருவம், மடிசெய்து
மானம் கருதக் கெடும்.

என்று கூறுகிறார், வள்ளுவர். அதாவது ஒரு மனிதன் தன் இனத்தவருக்கு ஏதாவது நன்மை செய்ய வேண்டும் என்று நினைத்தானானால், அதாவது, பொது நலத்துக்குப் பாடுபட வேண்டும் என்று முன்வந்தால், அவன் அந்தக் காரியத்துக்கு ஏற்ற நல்ல காலம் வரட்டும் என்று எண்ணிக் காத்திருக்கக் கூடாது. இரண்டாவதாக, நாம் இந்தக் காரியத்தில் இறங்குகிறோம். இதனால் இன்னின்ன கஷ்டங்கள் வருமே, நமக்குப் பல விதத்திலும் அவமானம் ஏற்படுமே. மானம் போய் விடுமே என்று கவலைப்படக் கூடாது. அந்தப்படியாக வெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தால் பொது வாழ்வில் நாம் செய்யப்புகும் காரியமே கெட்டுவிடும் என்று மிகப் புரட்சிகரமாகக் கூறுகிறார். ஏன் புரட்சிகரமாகச் சொல்லுகிறார் என்று கூறுகிறேன் என்றால் மற்றொரு இடத்தில் காலம் பார்த்துச் செய்தால் ஞாலமும் கைகூடும் என்று கூறுகிறார். இன்னொரு இடத்திலே, மயிர் நீப்பின் உயிர் வாழாக் கவரிமான் போன்று மானம் நீங்குமானால் மனிதன் இறந்து விட வேண்டும் என்று கூறுகிறார்.

மானமிழந்தால் மரணத்தைத் தழுவ வேண்டும் என்று வள்ளுவர் கூறுவது ஏன் என்றால் மனிதனுடைய தனி வாழ்வில் அவனது சொந்த வாழ்வில் அவனுக்கு அவமானம் நேரிடில் உயிர்விட வேண்டும். உயிரைவிட மானத்தைப் பெரியதென்று மதிக்க வேண்டும் என்பதற்காகச் சொல்லுகிறார். இந்தக் குறள் பொது வாழ்வு பற்றியதாகும். பொது வாழ்வில் எந்த மக்களின் நல்வாழ்விற்காக முன்னேற்றத்திற்காகப் பாடுபடுகிறானோ, அந்த மக்களாலேயே வெறுக்கப் படலாம். பல தொல்லைகளுக்கு

ஆளாக நேரலாம். ஆனால், நாம் படுகின்ற பாடுகள் - ஆளாகின்ற அல்லல்கள் நன்மைக்காகத்தான் என்று கருதி வேலை செய்தால்தான், அவன் எண்ணிய காரியம் ஈடேறுமே யொழிய, மானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தால் காரியம் கைகூடி வராது என்று கூறுகிறார்.

அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர்செகுத்து உண்ணாமை நன்று.

அதாவது, கடவுள் பெயர் கூறி உயிர்க்கொலை புரியும் கொடுஞ் செயலைக் கண்டிக்கிறார். நாட்டிலே நாலு வருணத்தை நிலை நிறுத்துவதாகவும், ஆரியர்கள் உயிர் வாழ்வுக்கு ஆதாரமாகவும் இருந்து வரும் வேதங்களையும் அதாவது, வேதத்தைப் படிக்காவிட்டாலும் குற்றமில்லை ஒழுக்கமாக நடக்க வேண்டும் என்று வள்ளுவர் வேதியத் தன்மையைக் கண்டிக்கிறார்.

இந்தப்படியாக மதம், கடவுள், வேதம், வேதியர் ஆகிய அத்தனையும் ஆரியத்தின் உயர்வுக்கும் நம்மவர் இழி நிலைக்கும் காரணமாய் நின்று நிலவ, அவைகளை வள்ளுவர் வெகு தீவிரமாகக் கண்டிக்கிறார். இந்தப் படியாக வள்ளுவர் ஆரியக் கருத்துக்களை எதிர்த்து விட்டுக் கண்டித்து விட்டுத்தனக்கு என்று யாதொரு புதுமத உபதேசமும் அவர் புரியவில்லை. உன் அறிவைக் கொண்டு சிந்தித்து, ஆராய்ந்து, உண்மை கண்டு, உலகம் ஒப்ப நடந்துகொள் என்கிறார். யார் ஒருவர் உன் அறிவின்படி, உலகம் ஒப்ப நட என்கிறாரோ அவர் எந்த மதத்தையும் சேர்ந்தவராகார்.



மேற்கோள் நன்றி:
''பெரியாரைக் கேளுங்கள்'' –பேராசிரியர் புலவர் மா.நன்னன் அவர்கள் தொகுத்து வெளியிட்டது.
-ஏகம் பதிப்பகம்,
3,பிள்ளையார் கோயில் இரண்டாம் சந்து,
திருவல்லிக்கேணி,சென்னை-5
தொலைபேசி; 2852 9194



# குறள்நெறி

-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-

*மின்னிதழ்:58 சித்திரை-3--தி.பி.2054 ஏப்பிரல்-16-பொ.ஆ.2023*



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்












**தைத் திங்கள் முதல் நாளே தமிழ்ப் புத்தாண்டு**



முரசொலி

உண்மைத் தமிழர் உணர்ந்தே தீர்வர்!

பொறுப்பாசிரியர்: மறைமலை இலக்குவனார்

# தைத் திங்கள் முதல் நாளே தமிழ்ப் புத்தாண்டு

## தமிழ்ப் புத்தாண்டு பற்றிய கலைஞர் கடிதம், முரசொலி 22-ஏப்ரல்-2012

உடன்பிறப்பே,

பேரவையில் நியாயமான பிரச்சினைகளை எழுப்புவதற்கும், அவதூறுகளையும், ஆதார மற்ற குற்றச்சாட்டுகளையும் சொல்லும்போது உரிய பதில் அளிப்பதற்கும் பேரவைத் தலைவரோ, ஆளுங்கட்சியோ வாய்ப்பு அளிக்காத நிலையில், ஏற்கனவே திட்ட மிட்டபடி, அ.தி.மு.க.வின் தோழமைக் கட்சியைச் சேர்ந்த ஒருவரைப் பேசுமாறு பேரவைத் தலைவரே 19-4-2012 அன்று அழைக்கிறார். உடனே அவர் எழுந்து, அரசைப் புகழோ புகழ் என்று புகழ்ந்து பேச, அதைத் தொடர்ந்து முதலமைச்சர் ஜெயலலிதா எழுந்து, ஒரு நீண்ட அறிக்கையினைப் படித்ததோடு, அதனைச் செய்தியாளர் களுக்கும் அளித்துள்ளார்கள். அந்த நீண்ட அறிக்கை முழுவதும் தைத் திங்கள் முதல் நாளே தமிழ்ப் புத்தாண்டு என்பதற்கு நான் அடுக்கடுக்கான ஆதாரங்களோடு எழுதிய தற்கும், ஜெயலலிதா தெரி வித்த பதில்கள் எல்லாம் எவ்வளவு தவறானவை என்பதை நிரூபித்து எழுதியதற்கும் விளக்கம் என்ற பெயரால் எழுதிப் படித்த “சமாளிப்புகள்” தானே தவிர அடிப்படையில் அவற்றில் எதுவும் உண்மை இல்லை.

அரசு விழாவில் ஜெயலலிதா பேசும்போது, தமிழ் மொழியை உலகம் முழுவதும் பரப்பு வதற்காக அ.தி.மு.க. ஆட்சிக் காலத்தில் இரண்டு உலகத் தமிழ் மாநாடுகளை நடத்தி னோம் என்று சொன்னதால், தி.மு. கழக ஆட்சிக் காலத்திலும் இரண்டு உலகத் தமிழ் மாநாடுகளை நடத்தினோமே, அதுமட்டும் தமிழ் மொழியை உலகம் முழுவதும் பரப்புவதற் காக அல்லவா? என்று கேட்டிருந்தேன். அதற்கு நேரடியாகப் பதில் சொல்லத் தெரியாத ஜெயலலிதா, கோவையில் நடைபெற்ற மாநாடு கருணாநிதியின் சுய விளம்பரத்திற்காக நடத்தப்பட்ட “தன்னல தம்பட்ட மாநாடு” என்றும் பேரவையிலே கூறியிருக்கிறார்.

பொதுவாக பேரவையில் 110வது விதியின் கீழ் அறிக்கை படிக்கும்போதும், யாரோ ஒரு உறுப்பினர் ஒரு ஐயத்தை எழுப்பி அதற்குப் பதில் அளிக்கின்ற போதும் குற்றச்சாட்டுகள் இருக்கக் கூடாது என்பது மரபு. மரபுக்கும், அ.தி.மு.க. அரசுக்கும் என்ன சம்மந்தம் என்று கேட்கிறீர்களா? அவர்களுக்கு மரபாவது, மண்ணாங்கட்டியாவது? இருந்தாலும் முதல் அமைச்சர், பேரவையிலேயே படித்திருக்கிறாரே; நான் விளக்கம் தராமல் இருக்கலாமா? அம்மையார் ஜெயலலிதா நடத்திய தஞ்சை உலகத் தமிழ் மாநாட்டிலே பாடிய வாழ்த்துப் பாடலிலேயே ஜெயலலிதா பெயரை பல இடங்களிலே பாராட்டிக் குறிப்பிட்டே பாடப் பட்டது. ஆனால் கழக அரசு நடத்திய கோவை மாநாட்டில் தமிழ்த்தாய் வாழ்த்துப் பா என்னால் எழுதப்பட்டதே தவிர, அந்தப் பாடலில் என்னைப் பற்றிய பாராட்டு எதுவுமே கிடையாது. தஞ்சையில் அம்மையார் ஜெயலலிதா நடத்திய மாநாட்டிற்காக வருகை தந்த இலங்கைத் தமிழ் அறிஞர் கா. சிவத்தம்பி உட்பட பலர் மாநாட்டில் கலந்துகொள்ள அனுமதிக்கப்படவே இல்லை. இன்னும் சொல்லப்போனால் வெளிநாட்டுத் தமிழறிஞர்கள் எல்லாம் விரட்டப்பட்டார்கள் என்று ஏடுகளிலேயே அப்போது செய்தி வந்தது. ஆனால் கோவையில் கழக அரசு நடத்திய மாநாட்டிற்கு ஜார்ஜ் ஹார்ட், அஸ்கோ பர்போலா, வாசெக், கா. சிவத்தம்பி, உல்ரிக் நிக்லாத், கிரிகோரி ஜேம்ஸ், அலெக்சாண்டர் துதியான்கி, ஆண்ட்ரீஸ் கத்தோலியஸ், சீன நாட்டைச் சேர்ந்த கலையரசி, தாமஸ் லேஇல்லை. இன்னும் சொல்லப்போனால் வெளிநாட்டுத் தமிழறிஞர்கள் எல்லாம் விரட்டப்பட்டார்கள் என்று

ஏடுகளிலேயே அப்போது செய்தி வந்தது. ஆனால் கோவையில் கழக அரசு நடத்திய மாநாட்டிற்கு ஜார்ஜ் ஹார்ட், அஸ்கோ பர்போலா, வாசெக், கா. சிவத்தம்பி, உல்ரிக் நிக்லாத், கிரிகோரி ஜேம்ஸ், அலெக்சாண்டர் துதியான்கி, ஆண்ட்ரீஸ் கத்தோலி யஸ், சீன நாட்டைச் சேர்ந்த கலையரசி, தாமஸ் லேமன் ஆகிய வெளி நாட்டு அறிஞர்கள் எல்லாம் வருகை தந்து பாராட்டினார்கள். முன்வரிசையிலே அமர்ந்திருந்தார் கள். ஆனால் ஜெயலலிதா, முன் வரிசையிலே என் குடும்பத்தினரும், தி.மு.க.வைச் சேர்ந்த "தலை சிறந்த தமிழறிஞர்களும்" அமர்ந்திருந்ததாக கிண்டல் செய்துள்ளார். என்னுடைய குடும்பத்தினர் முன் வரிசையிலே அமர்வதே பழித்துப் பேசப்படக்கூடிய பாவகரமான ஒன்றா? தி.மு.க.வில் தமிழறிஞர்களே கிடையாதா? அ.தி.மு.க.விலே தான் தலை சிறந்த தமிழறிஞர்கள் எல்லாம் இருக்கிறார் களா? என்னுடைய குடும்பத்தினர் முன் வரிசை யிலே அமரலாமா என்று கேட்கின்ற ஜெயலலிதா சட்டப்பேரவையிலே நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்றுக்கு தன் உடன்பிறவாச் சகோதரியை அழைத்து வந்து மரபுக்கு மாறாக துணை சபாநாயகர் அமர வேண்டிய இடத்திலே உட்கார வைத்தாரே, அது எந்த வகை யிலே சரியானது? ஜெயலலிதாவே பேரவைத் தலைவரின் ஆசனத்தில் அமர்ந்து கொண்டாரே; அது எவ்வகை மரபு என்பதை ஜெயலலிதாதான் விளக்க வேண்டும்.

சென்னை பல்கலைக் கழக நூற்றாண்டு விழா மண்டபத்தில் பேசிய ஜெயலலிதா பௌர் ணமி எந்த நட்சத்திரத்தில் வருகிறதோ, அந்த நட்சத்திரத்தின் பெயர்தான் மாதத்தின் பெயராக அமைந்துள்ளது என்று கூறியதையொட்டி, சித்திரை, கார்த்திகை மாதங்களைத் தவிர மற்ற மாதங்கள் எல்லாம் நட்சத்திரங்களின் பெயர்களில் இல்லையே என்று நான் கேட்டிருந்தேன். அதற்கு பேரவையில் பதிலளித்த முதலமைச்சர் ஜெயலலிதா, அந்தப் பெயர்கள் எல்லாம் திரிந்து மாதங்களாகி விட்டன என்று வழக்கம்போல சமாளிக்கப் பார்த்திருக்கிறார். உதாரணமாக விசாகம் என்பது வைகாசியாகவும் - அனுஷம் என்பது ஆனியாகவும் - பூராடம் என்பது ஆடியாகவும் - திருவோணம் என்பது ஆவணியாகவும் - மிருகசீர்ஷம் என்பது மார்கழியாகவும் - பூசம் என்பது தையாகவும் - மகம் என்பது மாசி மாதமாகவும் - உத்திரம் என்பது பங்குனியாகவும் வார்த்தைகள் திரிந்து விட்டதாகச் சொல்லி யிருக்கிறார்.

தமிழறிஞர்கள் இந்த மேதா விலாச விளக்கத்தை ஏற்க முடிந்தால் சரி! சென்னப்பட்டி னம் சென்னை என்று மருவியதைப் போலத்தான் இந்தச் சொற்கள் எல்லாம் மாறிவிட்டன என்கிறார். நன்றாகவே காதில் பூ சுற்ற முயன்றிருக்கிறார்! நான் மேலும் கேட்கிறேன்; நட்சத்திரங்களின் பெயர்கள் எல்லாம் திரிந்துதான் மாதங்களின் பெயர்களாக உள்ளன என்று கூறும் ஜெயலலிதா அவர்களே, இந்தப் பெயர்கள் எல்லாம் திரிந்தன என்றால், நட்சத்திரங்களின் பெயர்களை மட்டும் ஏன் பழைய பெயரிலேயே உச்சரிக்கிறார்கள்? நட்சத்திரங்களின் பெயர்களும் அல்லவா திரிந்து வழங்கப்பட்டிருக்க வேண்டும்?

தொல்காப்பியர் "திங்கள் முன்வரின் இக்கே சாரியை" - இகர ஈற்று மாதப் பெயர்கள் (ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, மார்கழி, மாசி, பங்குனி) - "இக்கு" சாரியை பெறும் என்றும் "திங்களும் நாளும் முந்து கிளந்தன்ன" ஐகார ஈற்று மாதப் பெயர்கள் (சித்திரை, கார்த்திகை, தை) முன் சொன்னவாறு இக்கு சாரியை பெறும் என்றும் கூறியுள்ளாரே, அப்படியென் றால் இந்தப் பெயர்கள் எல்லாம் தொல்காப்பியர் காலத்திலேயே திரிந்து விட்டன என்று ஜெயலலிதா சொல்கிறாரா? அதுபோலவே சங்க இலக்கியங்களில் எல்லாம் மாதப் பெயர்கள் இடம் பெற்றுள்ளனவே, அப்படியென்றால் சங்க இலக்கியங்களுக்கு முன்பாகவே ஜெயலலிதா சொல்வதைப்போல நட்சத்திரங்களின் பெயர்கள் எல்லாம் இத்தகைய மாதப் பெயர்களாக திரிந்து விட்டனவா?

ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டு மலரிலே சிறுவை நச்சினார்க்கினியன் எழுதிய ஒரு கட்டுரையை அம்மையார் ஜெயலலிதா மேற்கோள் காட்டிப் பேசியிருந்த காரணத்தால், அதே கட்டுரையின் முதல் பகுதியில், அதே சிறுவை நச்சினார்க்கினியன் தை மாதம் பற்றி எழுதியதை அப்படியே வரி பிறழாமல் குறிப்பாக "நாம் தைத் திங்களையே ஆண்டின் முதல் திங்களாய்க் கணக்கெடுத்துச் செயற்படுத்து வோம்" என்று அவர் எழுதியிருக்கிறார் என்று நான் பதிலாகத் தந்திருந்தேன். தற்போது அம்மையார் முன் பக்கத்தில் சிறுவை நச்சினார்க்கினியன் என்று தெரிவித்துள்ள கருத்தைப் பற்றி தான் எதுவும் சொல்லவில்லை என்று அப்படியே புறமுதுகிட்டுள்ளார். நச்சினார்க்கினியன் பற்றி நூற்றாண்டு விழா மண்டபத்திலே முதலமைச்சர் ஜெயலலிதா குறிப்பிட்டாரா இல்லையா? அதே நச்சினார்க் கினியன் தைத் திங்களையே ஆண்டின் முதல் திங்களாகச் செயல்படுத்தலாம் என்று சொல்லியிருக்கிறாரா இல்லையா? அதைத் தான் தி.மு. கழக அரசு, தமிழறிஞர்கள் சொன்னதையெல்லாம் ஒப்புக்கொண்டு சட்டத்தைக் கொண்டு வருகிறோம் என்று கூறியதே தவிர தானாக இட்டுக்கட்டி எதையும் செய்துவிடவில்லை.

"வாழ்வியற் களஞ்சியம்" என்ற நூலில் "தை பிறந்தால் வழி பிறக்கும்" என்றுதான் குறிப் பிடப்பட்டிருக்கிறதே தவிர, "தை பிறந்தால் புத்தாண்டு பிறக்கும்" என்று குறிப்பிடப்பட வில்லை என்று சொல்லியிருக்கிறார் ஜெயலலிதா! என்ன செய்வது? ஜெயலலிதா போன்றவர்கள் எல்லாம் முதலமைச்சராக வருவார்கள், அவர்களுக்கு இப்படியெல்லாம் சந்தேகம் வரும் என்பது அந்த நூலாசிரியருக்குத் தெரியவில்லை போலும்! ஆனால் நான் இந்தப் பதிலை எழுதும்போது கொட்டை எழுத்துக்களில், தமிழ் ஆண்டின் தொடக்கமே தை முதல் நாள் என்றும், அதுவே விழாவாகச் சிறப்பித்துச் செய்யப்படு கின்றது என்றும் அந்த நூலிலே உள்ளது என்பதை எழுதிக் காட்டியிருக்கிறேன். இந்தப் பொருள் புரியாமல் தை பிறந்தால் வழி பிறக்கும் என்றுதான் அதிலே உள்ளது என்று ஜெயலலிதா பேரவையில் உண்மைக்குப் புறம்பாகச் சொல்லியிருக்கிறார்.

அடுத்து ஜெயலலிதா "செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி" என்ற நூலினை மேற் கோள் காட்டி, அந்த நூலில் தமிழாண்டின் தொடக்க மாதம் தை என்று குறிப்பிட்டிருப்ப தாகக் கூறியிருக்கிறார் திரு. கருணாநிதி, அந்த நூலில் 113வது பக்கத்தில் "இச்செய்தி தமிழ் ஆண்டு எனும் நூலிலிருந்து தொகுக்கப்பட்டது" என்றிருப்பதை தனக்கு வசதியாக திரு. கருணாநிதி மறைத்துவிட்டார்" என்று பேரவையிலே படித்துக் காட்டியிருக்கிறார். தமிழக அரசினால் - தமிழக அரசின் செலவில் - முதலமைச்சர் ஜெயலலிதாவின் அணிந் துரையுடன் வெளியிடப்பட்ட "செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி" யிலேயே தை என்பதற்குப் பொருளாக "தமிழாண்டின் தொடக்க மாதம், திருவள்ளுவராண்டின் தொடக்க மாதம்" என்றெல்லாம் இருப்பதை நான் சுட்டிக்காட்டியிருந்தேன். அந்தச் செய்தி தமிழ் ஆண்டு எனும் நூலிலிருந்து தொகுக்கப்பட்டது என்பதை நான் மறைத்துவிட்டேன் என்கிறார் ஜெயலலிதா. சொற்பிறப்பியல் பேரகர முதலியில் பொரு வெளியிடப்பட்ட "செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி" யிலேயே தை என்பதற்குப் பொருளாக "தமிழாண்டின் தொடக்க மாதம், திருவள்ளுவ ராண்டின் தொடக்க மாதம்" என்றெல்லாம் இருப்பதை நான் சுட்டிக்காட்டியிருந்தேன். அந்தச் செய்தி தமிழ் ஆண்டு எனும் நூலிலிருந்து தொகுக்கப்பட்டது என்பதை நான் மறைத்துவிட்டேன் என்கிறார் ஜெயலலிதா. சொற்பிறப்பியல் பேரகர முதலியில் பொருள் கூறும்போது, அதை எந்தப் புத்தகத்திலிருந்து எடுத்தாண்டு இருக்கிறோம் என்பதை விளக்கியிருக்கிறார்கள். அதிலே என்ன தவறு? இன்னும் சொல்லப்போனால், அம்மையார் அரை வாக்கியத்தைத்தான் எழுதியுள்ளார். முழு வாக்கியத்தையும் நான் கூறுகிறேன். அதாவது "திருக்குறள் மணி புலவர் இறைக்குருவனார் இயற்றிய திருவள்ளுவர் ஆண்டு அல்லது தமிழ் ஆண்டு எனும்

நூலிலிருந்து இச்செய்தி தொகுக்கப் பட்டது” என்று உள்ளது. ஆக நான் கூறியதற்கு மற்றும் ஓர் ஆதாரமாக புலவர் இறைக் குருவனார் அவர்களும் தை மாதம் தமிழாண்டின் தொடக்க மாதம் என்பதை ஏற்றுக் கொண்டிருக்கிறார் என்பதைத்தானே அம்மையார் ஜெயலலிதா ஒப்புக் கொண்டிருக்கிறார். இறைக்குருவனார் போன்ற புலவர் பெருமக்கள் எல்லாம் தெரிவித்த யோசனையை ஏற்றுத்தான் இந்தச் சட்டத்தை நான் பிறப்பித்தேன் என்பது உறுதியாகிறதா; அல்லவா? இறைக்குருவனார் கருத்தை யேற்றுத்தானே அந்த நூலில் அந்தப் பொருளை இடம் பெறச் செய்திருக்கிறார்கள். அந்த நூலை முழுவதும் படித்து விட்டுத்தானே முதலமைச்சர் ஜெயலலிதா அம்மையார் அந்நூலுக்கு அணிந்துரை கொடுத்தார்? இப்போது அவரே அந்தக் கருத்தை மாற்றிக் கொள்ளலாமா? தமிழ்நாட்டில் இருக்கின்ற தமிழ் அறிஞர்களே, புலவர்களே, சான்றோர்களே அம்மையார் வைத்த வாதம் சரியா? நான் தருகின்ற விளக்கம் சரியா? என்பதை சமன் செய்து சீர்தூக்கும் கோல் போல் இருந்து நீங்களே பதில் கூறுங்கள்.

அடுத்து முதலமைச்சர் ஜெயலலிதா மிகத் தெளிவாக ஒரு ஐயத்தைக் கேட்டிருக்கிறார். 1963ஆம் ஆண்டு நான் சட்டப்பேரவையில் உரையாற்றியதைக் குறிப்பிட்டு, அப்போதே திருவள்ளுவர் தை மாதத்தில்தான் பிறந்தார் என்று கூறி ஏன் விடுமுறை நாளாக அந்த நாளை அறிவிக்குமாறு கேட்கவில்லை என்று கேட்டுள்ளார். தமிழறிஞர்களும், புலவர்களும் என்னிடம் 1963ஆம் ஆண்டுக்கு முன்பே இந்தக் கோரிக்கையைச் சொல்லியிருப்பார்களானால் நான் அப்போதே அதைக் கூறியிருக்க முடியும். அவர்களிடம் இதைக் கேட்டால், 1969ஆம் ஆண்டுக்குப் பிறகு அண்ணா மறைந்து நீ முதலமைச்சராக ஆவாய் என்று எங்களுக்கு எப்படித் தெரியும் என்பார்கள்? இந்தக் கேள்விக்குத்தான் நான் மயிலை கூட்டத்திலேயே தெளிவாக; “சூரியன் கிழக்கே உதிக்கிறது, மேற்கே மறைகிறது என்று முன்பு சொன்னார்கள். பிறகுதான் விஞ்ஞானிகள் அது தவறான கூற்று, சூரியன் ஒரே இடத்தில் தான் இருக்கிறது; பூமிதான் தன்னைத் தானே சுற்றிக் கொண்டு, சூரியனையும் சுற்றுகிறது என்று கூறியபிறகு அதை ஏற்றுக் கொண்டோம். அதைப்போலவே பூமி தட்டையாக உள்ளது என்று சொல்லப்பட்டது. பிறகு விஞ்ஞானிகள் கண்டு பிடித்துச் சொன்ன பிறகு, பூமி உருண்டை என்பதை ஏற்றுக் கொண்டோம். ஏன் இதை முன்பே சொல்ல வில்லை என்றா கேட்க முடியும்?” என்று குறிப்பிட்டேன்.

அதுமாத்திரமல்ல; இதிலே எந்த ஆண்டு முடிவெடுக்கப்பட்டது என்பது பிரச்சினையல்ல. “தினமணி” நாளிதழில் கட்டுரை ஒன்றை எழுதியிருந்த திரு. சாமி தியாகராசன் எனக்குக் கூட கடிதம் ஒன்றை, 1921ஆம் ஆண்டில் மறைமலை அடிகள் தலைமையில் பச்சையப்பன் கல்லூரியில் பேசி முடிவெடுத்தார்கள் என்பதற்கு ஆதாரம் இல்லையே என்று எழுதியிருந்தார். எப்போது முடிவெடுத்தார்கள் என்பதைவிட என்ன முடிவெடுத்தார்கள் என்பதுதான் முக்கியம்.

முடிவெடுத்தவர்கள் யார் என்பதுதான் முக்கியம். அந்த அடிப்படையில்தான் கழக ஆட்சியில் முடிவெடுக் கப்பட்டது. இதிலே உள்ள முக்கிய குறையே; தமிழர்களுக்கு என்று முறையான வரலாறு இல்லை என்பதுதான். இந்தக் குறை என்னால் மாத்திரமல்ல; நம்முடைய தமிழறிஞர்கள் பலராலும், வரலாற்றுப் பேராசிரியர்களாலும் உணரப்பட்டது.

பொறியாளர் வே. வரதராசன் அவர்கள் எழுதிய “தமிழர் நாகரீகம்” என்ற நூலில் “1921ஆம் ஆண்டு சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்க் கடல் மறைமலை அடிகளார் தலைமையில் தமிழ் அறிஞர்களும், சான்றோர் களும், புலவர்களும் ஒன்று கூடி ஆராய்ந்து திருவள்ளுவர் பெயரில் தொடர் ஆண்டு பின்பற்றுவதென முடிவெடுத்தனர். திருவள்ளு வர் காலம் கி.மு. 31 என்றும் அதையே

திருவள்ளுவர் ஆண்டு தொடக்கம், தைத் திங்கள் முதல் நாள் (பொங்கல் திருநாளில்) எனவும் முடிவெடுத்தனர்” என்றுள்ளது.

1937ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் சென்னையில் நடைபெற்ற இந்தி எதிர்ப்பு மாநாட்டில் - தந்தை பெரியார், உமாமகேசு வரனார், பேராசிரியர் கா. சுப்பிரமணியன், தெ.பொ. மீனாட்சிசுந்தரனார், தமிழ்த் தென்றல் திரு.வி.க., மறைமலை அடிகளார், பி.டி. ராஜன், ஆற்காடு ராமசாமி முதலியார், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், பட்டுக்கோட்டை அழகிரி போன்றோர் கலந்து கொண்ட அவையில் - தை முதல் நாள் தமிழ்ப் புத்தாண்டு தொடக்கம் என்று நாவலர் சோமசுந்தர பாரதியார் தனது தலைமையுரையில் வலியுறுத்தியிருக்கிறார்.

9-5-1971இல் முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்கள் தலைமையில் திருச்சியில் நடைபெற்ற தமிழகப் புலவர் குழுவின் முப்பதாம் கூட்டத்தில் தை முதல் நாள் தமிழ்ப் புத்தாண்டு பொங்கல் விழா என முடிவு செய்யப்பட்டது.

மேலும் கடந்த இரண்டு நாட்களாக நமது “விடுதலை” நாளிதழில் அமெரிக்காவில் நாசா விண் மையத்தில் பணியாற்றும் பிரபல விஞ்ஞானி முனைவர் நா. கணேசன் அவர்கள் எழுதிய நீண்ட கட்டுரையில் இந்தப் பொருள் பற்றி விரிவான விளக்கங்களையும், எந்தெந்தப் புலவர்கள், தமிழறிஞர்கள் கடந்த காலத்தில் தை முதல் நாள்தான் தமிழ்ப் புத்தாண்டு என்று தெரிவித்தார்கள் என்றும் எழுதப்பட்டுள்ளது.

இந்தப் புலவர் பெருமக்கள் எல்லாம் தெரிவித்த யோசனைகளின் அடிப்படையிலே தான் - எந்த ஆண்டு அந்த யோசனை தெரிவிக்கப்பட்டது என்பதைப் பற்றியெல்லாம் கவலைப்படாமல், தை முதல் நாள் தமிழ்ப் புத்தாண்டு என்ற உண்மை அனைத்துத் தரப்பினராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது என்பதால் 2008இல் நான் இவற்றையெல்லாம் அறிந்து ஆய்ந்த பிறகு முடிவெடுத்து அறிவித்தேன் என்பதைப் புரிந்துகொள்ள முடியும். ஆனால் முதலமைச்சர் ஜெயலலிதா பேரவையில் விடுத்துள்ள அறிக்கையில் நான் முறையாக எதையும் ஆய்வு செய்யாமல், தன்னிச்சையாக, தான்தோன்றித்தனமாக சட்டத்தை இயற்றினேன் என்று கூறியிருக் கிறார். தைத் திங்கள் முதல் நாள் தமிழ்ப் புத்தாண்டு என்பதை தற்போது சித்திரைத் திங்கள் என்று அம்மையார் மாற்றியிருப்பது தான் எதையும் ஆய்வு செய்யாமல் காழ்ப்புணர்வோடு செய்யப்பட்ட செயல். அவர்தான் தன்னிச்சையாக, தான்தோன்றித் தனமாக தமிழினத்தைத் திசை திருப்பும் வகையில் நடந்து கொண்டுள்ளார் என்பதைத் தமிழக வரலாறு ஒருநாள் நிச்சயமாக மெய்ப்பிக்கும்! தமிழர்களின் சரியான அடையாளத்தை அழித்திட முற்படுவது அக்என்பதை தற்போது சித்திரைத் திங்கள் என்று அம்மையார் மாற்றியிருப்பது தான் எதையும் ஆய்வு செய்யாமல் காழ்ப்புணர்வோடு செய்யப்பட்ட செயல். அவர்தான் தன்னிச்சையாக, தான்தோன்றித் தனமாக தமிழினத்தைத் திசை திருப்பும் வகையில் நடந்து கொண்டுள்ளார் என்பதைத் தமிழக வரலாறு ஒருநாள் நிச்சயமாக மெய்ப்பிக்கும்! தமிழர்களின் சரியான அடையாளத்தை அழித்திட முற்படுவது அக்கிரமம்! அதற்குப் பொய்யான நியாயம் கற்பித்திட முயலுவதும் புல்லர்கள் சிலர் புயம் தட்டிப் புறப்படுவதும் அராஜகம் என்பதை உண்மைத் தமிழர் விரைவில் உணர்ந்தே தீர்வர்!

அன்புள்ள,

மு.க.

# மெய்ப்பொருள் காண்பது அறிவு

## இப்படியும் சொன்னார்கள்

### “திருக்குறளில் கூறப்பட்டிருப்பது வேதங்கள் மற்றும் தர்ம சாஸ்திரங்களின் கருத்துக்கள் தான்”

திருக்குறளை இயற்றிய திருவள்ளுவர் தன்னுடைய குறட்பாக்களில் ஒவ்வோர் அதிகாரத்திலும், தான் எடுத்துக்கொண்டுள்ள கருத்துப்பொருட்களை விளக்கும்போது, உபதேசங்களாகச் சொல்லிக் கடைசியில் தன் கருத்தை ஆணையாக இடுவார். சம்ஸ்க்ருதத்தில் “உபதேஷா” மற்றும் “ஆதேஷா” என்று கூறுவர். அதாவது குருவானவர், தன் சீடர்களுக்கு நல்லமுறையில் உபதேசங்களைக் கூறிவிட்டுக் அவர்கள் கேட்காத நிலையில் கண்டிக்கும் விதமாக உத்தரவிடுவதைப் போல, திருவள்ளுவர் நமக்குப் பல கருத்துகளைத் தன் குறட்பாக்கள் மூலம் விளக்கியுள்ளார்” என்று கவிமாமணியும் விவேகானந்தா கல்லூரியின் முன்னாள் முதல்வருமான பேராசிரியர் வ.வெ.சுப்பிரமணியம் கூறினார்.

வரலாற்று ஆசிரியரும், தொல்லியல் ஆய்வாளரும், இலக்கிய எழுத்தாளருமான முன்னாள் தமிழகத் தொல்லியல் துறையின் இயக்குனர் டாக்டர் நாகஸ்வாமி அவர்கள் எழுதியுள்ள “THIRUKKURAL – An Abridgment of Sastras” என்கிற நூலைப் பற்றிய கருத்தரங்கு சென்ற 08-01-2018 திங்கட்கிழமை அன்று, மயிலை பாரடிய வித்யா பவன் சிற்றரங்கில் நடந்தது. அந்தக் கருத்தரங்கில் மேற்கண்டவாறு தலைமை உரையாற்றிப் பேசினார் பேராசிரியர் வ.வெ.சு.

அவர் மேலும் பேசுகையில், “திருக்குறளில் கூறப்பட்டிருப்பது வேதங்கள் மற்றும் தர்ம சாஸ்திரங்களின் கருத்துக்கள் தான் என்பதைச் சொல்லத் தைரியம் வேண்டும்; அதை நூலாகவும் கொண்டுவரக் கூடுதல் தைரியம் வேண்டும். அது டாக்டர் நாகஸ்வாமியிடம் இருக்கின்றது. அறத்துப்பால் குறட்பாக்களில் சொல்லப்பட்டுள்ள கருத்துக்களை, பிரம்மச்சாரி விரதம், கிரஹஸ்த விரதம், சன்யாஸம் என்று மூன்று வகையாகப் பிரித்திருப்பது அருமையான வகைப்படுத்தல். மேலும், ‘அகர முதல எழுத்தெல்லாம்…’ என்று ஆரம்பிக்கும் கடவுள் வாழ்த்து அதிகாரத்தை “அக்ஷராப்யாசம்” என்று வகைப்படுத்தியிருப்பது அற்புதம். பிரம்மச்சரிய விரதம் அக்ஷராப்யாஸத்தில் தான் ஆரம்பிக்கிறது.”

“அதைப் போலவே அடுத்ததாக “வான்சிறப்பு” அதிகாரர்த்தை “பிக்ஷாவந்தனம்” என்று விளக்கியிருப்பது நம்மை ஆச்சரியத்தில் ஆழ்த்துகிறது. இவ்விடத்தில் தைத்ரிய உபனிஷத் சொல்வதைச் சுட்டிக் காட்டி அதையே வள்ளுவரும் கூறுவதை உறுதி செய்கிறார் நாகஸ்வாமி. அதாவது பிரம்மச்சரிய விரதத்தில் கல்வி கற்க ஆரம்பித்தவுடன், உணவின் முக்கியத்துவமும் மாணவனுக்குக் கற்றுவிக்கப்படுகிறது. அவன் குருகுல வாழ்வில் ஆசிரியருடன் இருந்தாலும், தன்னுடைய உணவுக்காகப் பிசைஷக்குத்தான் போக வேண்டும். ஆகவே அன்னம் என்றால் என்ன, அது எவ்வாறு உண்டாகின்றது, போன்றவற்றை அவன் தன் அனுபவித்திலேயே

உணர்ந்துகொள்கிறான். அன்னம் உருவாக நீர் காரணமாகின்றது. நீரை மழை தருகின்றது. பிரம்மச்சரிய விரதத்தில் கல்வியுடன் கூடவே நீர், அன்னம் ஆகியவற்றின் முக்கியத்துவத்தையும் அவன் அறிந்துகொள்ள வேண்டும் என்பதால், அக்ஷராப்யாசத்துக்கு அடுத்ததாக பிக்ஷாவந்தனம் கூறப்படுகிறது. அதையே வள்ளுவரும் கடவுள் வாழ்த்துக்கு அடுத்தபடியாக வான்சிறப்பு என்று வைத்தார்."

"அதைப்போலவே தான் அடுத்த அதிகாரமான நீத்தார் பெருமையும். இங்கே உலகத்தைத் துறந்தவர்கள் என்பதைவிட, ஒழுக்கத்தின்பாற் தங்களை ஈந்தவர் என்கிற வகையில் 'ஒழுக்கத்து நீத்தார்' என்று கொள்வதே சரி. ஆகவே, நீத்தார் பெருமை என்கிற அதிகாரத்தை ஆசாரமாகக் கொண்டு, பிரம்மச்சரிய விரதம் மேற்கொள்பவர்கள் தங்களை ஒழுக்கத்தின்பாற் அளித்திட வேண்டும் என்று உறுதி செய்கிறார்."

இவ்வாறாக, வேதங்களிலும் தர்ம சாஸ்திரங்களிலும் கூறப்பட்ட கருத்துப் பொருட்களின் சாரங்களைப் பிழிந்து திருக்குறளில் திருவள்ளுவர் கொடுத்துள்ளதை நன்றாக ஆய்வு செய்து, திறம்பட எழுதியுள்ளார் டாக்டர் நாகஸ்வாமி. இந்நூலைப் படித்து, இதன் கருத்துக்களை தமிழ் கூறும் நல்லுலகிற்கு எடுத்துச் செல்வது நம் கடமையாகும்" என்று கூறித் தன் தலைமை உரையை நிறைவு செய்தார் பேராசிரியர் வ.வெ.சு.

டாக்டர் இரா.நாகசாமி

முன்னதாக அறிமுக உரை வழங்கிய டாக்டர் நாகஸ்வாமி, பின்வருமாறு பேசினார்.

"நமது வேத கலாச்சாரத்தின் சாரத்தைத் தருகின்ற நூலாக ஒரு புரட்சிகரமான பார்வையுடன் திருக்குறளை அணுகி எழுதப்பட்டுள்ள நூல் இது. நமது தர்ம சாஸ்த்திரம், அர்த்த சாஸ்த்திரம், நாட்டிய சாஸ்த்திரம், காம சாஸ்த்திரம் ஆகியவற்றின் கருத்துப் பொருட்கள் திருக்குறள் எங்கும் நெடுக உள்ளன. நமது ஹிந்து தர்மத்தின் அடிப்படைகளான நான்கு புருஷார்த்தங்களாகிய தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் ஆகியவற்றில் முதல் மூன்றான தர்மம், அர்த்தம், காமம் ஆகியவற்றை "த்ரிவர்கம்" என்கிற ஒற்றைக் கோட்பாடாகக்கருதி முறையே அறம், பொருள் ம்ற்றும் காமம் என்று வகைப்படுத்தப்பட்டுள்ளது"

"வள்ளுவரின் குறள் நமது வர்ணாஸ்ரமத் தர்மத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது. பிராம்மண, க்ஷத்ரிய, வைஸ்ய மற்றும் சூத்திர வர்ணத்தவரின் வாழ்க்கை முறை, மற்றும் ஒழுக்கம் ஆகியவற்றைப் பற்றிப் பல குறட்பாக்களில் பேசும் திருவள்ளுவர், நான்கு ஆஸ்ரம தர்மங்களான பிரம்மச்சர்யம், கிரஹஸ்தம், வானப்ரஸ்தம், சன்யாஸம் ஆகியவற்றைப் பற்றியும் முதல் தொகுதியான அறத்துப்பாலில் பேசுகிறார். தேவர்கள், ரிஷிகள் மற்றும் பித்ருக்களுக்குச் செய்யும் தர்ப்பணம் பற்றியும், பஞ்ச மஹா யக்யங்கள் என்று சொல்லப்படுகின்ற ஐந்து வகையான யாகங்கள் பற்றியும் பேசுகிறார்."

"தர்ம சாஸ்த்திரங்களைக் கருத்துப் பொருளாக மட்டுமல்லாமல் தொடர்ச்சியாக வரிசைப்படுத்தியும் எழுதியுள்ளார் திருவள்ளுவர். பொருட்பாலில் அந்தணர் நூலாகிய

வேதங்களைப் பற்றியும் தர்ம சாஸ்த்திரங்களைப் பற்றியும் குறிப்பிட்டு, மன்னர்கள் அவற்றைப் பின்பற்றுவதே கடமை என்று சொல்லும் விதத்தில்,

‘அந்தணர் நூலுக்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்’

என்றும்,

‘ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூற்மறப்பர்
காவலன் காவான் எனின்’

என்றும் திருவள்ளுவர் தெளிவாக அறுதொழில் புரியும் அறவோரான அந்தணர்களின் நூல்களான வேதங்கள் மற்றும் தர்ம சாஸ்த்திரங்கள் சொல்படி செங்கோல் செலுத்துவதே மன்னரின் கடமை என்று நிலைநிறுத்துகிறார். இதையே தான் புறநானூறு (35) ‘அறம் புரிந்தன்ன செங்கோல் நாட்டத்து முறை’ என்று கூறுகிறது.”

“மன்னரைப் பற்றிக் கூறும் இடத்திலெல்லாம் தர்ம சாஸ்த்திரங்களைக் குறிப்பிடும் திருவள்ளுவர், கருணை, தயை, உறுதி, அறம் என்று மனு நீதியின் ராஜ தர்மத்தில் கூறப்பட்டுள்ள அனைத்து நற்பண்புகளின் மொத்த உருவமாக மன்னனைக் காட்சிப்படுத்துகிறார். ‘அமைச்சர்’ பற்றி அவர் விவரிப்பது நமக்கு சேர, சோழ, பாண்டிய, பல்லவ, நாயக்க மன்னர்களின் செப்புப் பட்டயங்களில் குறிப்பிடப்பட்டுள்ள பல அமைச்சர்களை நினைவூட்டுகிறது.”

“காமத்துப்பால் தொகுதியில் திருவள்ளுவர் களவு மற்றும் கற்பு என்று இருவகையாகப் பிரித்துக்கொண்டு, நாட்டிய சஸ்த்திரம் மற்றும் வாத்ஸ்யாயனரின் காம சூத்திரம் ஆகியவற்றிலிருந்து குறிப்புகளை எடுத்தாள்கிறார். தமிழ் தாத்தா உ.வே.சாமிநாத ஐயர், த.பொ.மீனாட்சிசுந்தரம், டாக்டர்.மு.வரதராசனார், ஆகியோர் காமத்துப் பால் தொகுதியை ‘நாடக வழக்கு’ என்றே குறிப்பிடுகின்றனர்.”

“பிராகிருத மொழியில் தம்மபதா என்று ஒரு நூல் உள்ளது. இது புத்தரின் உபதேசங்களை உள்ளடக்கியது, பௌத்த தர்மத்தைப் பின்பற்றுபவர்களின் வாழ்க்கை முறையைப் பற்றிப் பேசும் நூல். இதையும் இந்நூலில் காட்டியுள்ளேன். மேலும் புத்தர் பிராம்மணர்களுக்கு உயர்ந்த நிலையைக் கொடுத்து உபதேசித்துள்ள ‘பாம்மண வக்கோ’ (பிராம்மண வர்கம்) பற்றியும் ஒரு அத்தியாயத்தைச் சேர்த்துள்ளேன். ஆனால், இந்திய சுதந்திரத்திற்குப் பிறகு, நாட்டில், குறிப்பாக தமிழகத்தில் பிராம்மணர்கள் பல்வேறு தாக்குதல்களுக்கு உள்ளாகி வருகிறார்கள். இந்தப் பிராம்மண துவேஷத்தின் அர்த்தமற்ற தன்மையை தம்மபதா பற்றிய அத்தியாயத்தைப் படிக்கையில் புரிந்து கொள்ளலாம். ஜி.யு.போப், லஸாரஸ், போன்றவர்களின் மொழியாகத்தையும் ஆங்காங்கே குறிப்பிட்டு, அவை எவ்வளவு பற்றாக்குறையுடன் இருக்கின்றன என்பதைப் பரிமேலழகரின் உரையுடன் ஒப்பிட்டுக் காட்டியுள்ளேன்.”

“இறுதியாக, வேத, உபநிடத, தர்ம சாஸ்த்திரங்களின் சாரங்களைத் தமிழில் குறட்பாக்களாகத் தொகுத்து வழங்கும் திருவள்ளுவர், மனு, யாக்யவல்கியர், கௌதமர், ஆபஸ்தம்பர்,

போதாயனர், பராசரர், வசிஷ்டர் போன்ற மஹரிஷிகள் வரிசையில் வைக்கப்பட வேண்டியவர் ஆவார். திருவள்ளுவர் வைதீக தர்ம மார்க்கத்தைத் தமிழில் எளிமையாக வழங்கியுள்ளதே திருக்குறள் என்கிற உண்மை எழுகின்றது. திருக்குறளைத் தொடர்ந்து வாசிக்கும் அன்பர்களின் திருக்குறள் பற்றிய பார்வையை இந்நூல் மாற்றும் என்று பரிபூரணமாக நம்புகிறேன்”

பேராசிரியர் வ.வெ.சுவைத் தொடர்ந்து அகில இந்திய வானொலியின் சென்னை மையத்தின் முன்னாள் இயக்குனர் கலைமாமணி டாக்டர் சேயோன் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். திருவள்ளுவரைப் போற்றும் விதமாக ஒரு பாடலுடன் தன் உரையைத் தொடங்கிய டாக்டர் சேயோன், தாம் நடத்திவரும் மயிலைத் திருவள்ளுவர் சங்கத்தின் பல ஆண்டுகால சேவைகளைப் பற்றிய சிறு அறிமுகத்தையும் கொடுத்தார்.

அவர் தன்னுடைய உரையில், “டாக்டர் நாகஸ்வாமி அவர்களின் இப்பணி மிகவும் போற்றுதலுக்கு உரியது. திருக்குறளில் திருவள்ளுவர் நமது வேத, தர்ம சாஸ்த்திரங்களின் கருத்துப்பொருட்களைக் கையாண்டுள்ளார் என்பது மறுக்க முடியாத உண்மை. அதைத் தெளிவாகவே தொகுத்தளித்துள்ளார் டாக்டர் நாகஸ்வாமி. குறிப்பாகப் பொருட்பாலில், மன்னரின் அட்சி முறைப் பற்றியும் செங்கோல் பற்றியும் பேசுமிடங்களில் எல்லாம் திருவள்ளுவர் அர்த்த சாஸ்த்திரத்தையும் தர்ம சாஸ்த்திரங்களையும் குறிப்பிட்டே பேசுகிறார். ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தாலும் தமிழ் இலக்கிய உலகில் இந்நூல் நிச்சயம் ஒரு தாக்கத்தை உண்டாக்கும். இதன் மூலம் திருவள்ளுவர் மற்றும் திருக்குறள் பற்றிய ஆய்வும் விவாதங்களும் மேலும் தொடரும். தமிழ் இலக்கிய உலகு நன்மை பெறும்” என்றார்.

முறைப்படியே மறுத்தார்கள்

# நச்சுக் கருத்துப் பரப்பும் நாகசாமி

-இறையெழிலன்

மேனாள் தொல்லியல் இயக்குநர் திரு. நாகசாமி தமிழைக் கொச்சைப்படுத்தி “Mirror of Tamil and Sanskrit”” என்னும் ஆங்கிலத்தில் எழுதிய நூலில் தமிழுக்கு எதிரான, பொய்யான தகவல்களை வெளியிட்டுள்ளார்.

வேதங்களிலிருந்து திருக்குறள் வந்தது என்றும் பகவத் கீதை என்னும் நூலின் சாரம் குறள் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

2012இல் வெளியான இந்நூலில் "தமிழ் மொழி எழுத்து முறை” பார்ப்பனர்களிடமிருந்து பெற்றது என்றும், தொல்காப்பியம், புறநானூறு, அகநானூறு, சிலப்பதிகாரம் முதலியவை சமற்கிருத நூல்களைப் பார்த்து எழுதப்பட்டவை என்றும், சங்க இலக்கியங்கள் அனைத்தும் சமயச் சார்புடையவை என்றும் பதிவு செய்துள்ளார். இவை எல்லாவற்றையும் விடத் தொல்காப்பியம் ஒர் இலக்கண நூலே அன்று என்றும் எழுதி யுள்ளார்.அத்தோடு திருக்குறள் பற்றிய மற்று மொரு நூலில் நான்கு வர்ணத்தை கொண்டு "திருக்குறளை” கட்டமைக்கும்

அவரது செயல்  சிறிதும் நாணயமில்லாதது; கண்டனத்துக்குரியது. அத்தோடு, தமிழை ஒரு கிளை மொழி என்கிறார். பழங்குடிகளின் ஒரு கிளைமொழியாக (Dialect) இருந்த தமிழ் சமற்கிருதத்திலிருந்து கடன் பெற்றுத்தான் செம்மொழியாக வளர்ந்தது” என்கிறார்.

இந்த நிலையில்தான் இந்திய அரசு இவருக்கு 2018ஆம் ஆண்டு "பத்ம பூசண்” விருதை வழங்கியது. தமிழைத் தாழ்த்தி, சமற்கிருதத்தை தூக்கிப் பிடித்த அவருக்கு "பத்மபூசண் பட்டம்” கொடுத்த கையோடு இன்று தமிழ் இலக்கியம் அனைத்தும் சமற்கிருத  நூல்களின் தழுவல் என்று எழுதிய அவரைத் தேர்ந்தெடுத்து தமிழ் செம்மொழி ஆய்வு மையத்தின் தலைவர் பதவியைக் கொடுத்திருக்கிறது.

உலகப் பொதுமறையாக, உலக அறிஞர்களால் ஏற்றுகொள்ளப்பட்ட திருக்குறளை இழிவுபடுத்தி நாகசாமி கூறியுள்ள கருத்தை அறிவுலகம் ஏற்காது.

"வள்ளுவர் செய் திருக்குறளை மறுவற நன்குணர்ந்தோர்கள்
உள்ளுவரோ, மனுவாதி ஒரு குலத்துக் கொருநீதி” என  மனோன்மணியம் சுந்தரனார் கூறினார்.

"தமிழைத் தாய்மொழியாகக் கொண்டு, தமிழ் மரபில் தோன்றிய தமிழனால்தான், தமிழ்மொழியின் தொன்மையும், நுட்பத்தையும் ஆழத்தையும் ஆய்வு செய்ய இயலும். அயன்மொழிக்காரர்களும், அயல்நாட்டவரும் தமிழர் வரலாற்றையும்  தமிழையும்  ஆய்வு செய்வது, நுனிப்புல் மேய்வதை யொக்கும்” என்ற மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் உறுதிபடக் கூறுகிறார். வீட்டில் ஒரு மொழியும், நாட்டில் ஒரு மொழியும், ஏட்டில் ஒரு மொழியும் கொண்டுள்ள திரு. நாகசாமி, தமிழ் மொழியையும்,  தமிழர்  வரலாற்றையும் ஆய்வு செய்யத் தகுதியற்றவர். அவர் துணைக்கு அழைத்திருப்பவர்களும் அவ்வாறே.

ஆதிச்சநல்லூரின் பொருநையாற்று நாகரிகம், மதுரை, கீழடியின் வையையாற்று நாகரிகம், சிந்து சமவெளி நாகரிகம், நைல் ஆற்று நாகரிகங்கள், ஒன்றுக்கொன்று தொடர்புடைய, பழந்தமிழர் நாகரிகமே என்பதை திரு. நாகசாமி அறிந்திருக்கமாட்டார். சுமேரிய, பாபிலோனிய, எபிரேய, கிரேக்க, இலத்தீன் மொழி இலக்கியங்களில், நூற்றுக்கணக்கான தமிழ்ச் சொற்கள், திரிந்தும் திரியாமலும் இருப்பதையும் திரு. நாகசாமி அறிந்திருக்கவில்லை. அவருக்குத் தெரிந்தவை, சமற்கிருதம், வேதங்கள், பகவத் கீதை, இதிகாசங்கள், புராணங்கள் போன்றவையே.  சமற்கிருதத்திலிருந்தே தமிழ்மொழி தோன்றியது என்று, தமிழ்நாட்டு அறிஞர்கள் மற்றுமல்லர், உலக மொழியியலறிஞர்கள் எவரும் இதுவரை சொல்லவில்லை. தமிழ்நாட்டில் பிறந்து, தமிழர்களால் வாழ்வு பெற்ற நாகசாமிகள் அவ்வாறு சொல்லிக் கொண்டிருக்கின்றனர்.

சமற்கிருத வேதங்கள் மற்ற இலக்கியங்கள் அனைத்தும் வாய்மொழியாகவே, தலைமுறைகளுக்கு மாற்றம் செய்யப் பட்டன. கி.பி.இரண்டாம் நூற்றாண்டில், குசராத்தில் ஆட்சி செய்த ருத்திர தாமன் காலத்தில்தான், முழுமை செய்யப்படாத சமற்கிருத எழுத்துக்களைக் கொண்ட கல்வெட்டு, முதன்முதலில் அறியப்படுகின்றது.

வாய்மொழியாகச் சொல்லப்பட்டு வந்த வேதங்கள், கி.பி. 200 ஆண்டுகளுக்குப் பிறகே, எழுத்துவடிவம் பெற்றன என்று அறிஞர் பி.ஆர். அம்பேத்கர் கூறுகிறார். ரிக் வேதத்தின் 10ஆவது அதிகாரமான புருஷ சூக்தம், கி.பி. 500 ஆண்டுகளுக்குப் பிறகே, வேதத்தில் இணைக்கப் பட்டதாகவும் கூறுகிறார். முதல் பகுதிகளில் காணப்படும் மொழிநடையும், 10ஆவது சூக்த மொழி நடையும் மாறுபட்டுள்ளதையும் சுட்டிக் காட்டுகிறார். இவற்றுக்கெல்லாம் நாகசாமி போன்றவர்கள் மறுப்போ, விளக்கமோ கூறவில்லை.
மகாபாரதக் கதை, வாய் மொழியாகவே சொல்லப்பட்டு வந்த நிலையில், கி.பி. 17ஆம் நூற்றாண்டு வரையிலும்கூட, மூலக்கதையோடு பல கிளைக்கதைகள் இணைக்கப்பட்டன என்று ஆய்வாளர்கள் கூறுகிறார்கள். பகவத் கீதையும் அவ்வாறு, கி.பி. 8ஆம் நூற்றாண்டுக்குப் பிறகுதான் இணைக்கப்பட்டது. திருக்குறள், பகவத் கீதையின் தழுவல் என்று கூற, எவ்வகையான சான்றும் இல்லை.
நோபல் பரிசு பெற்ற அறிஞர் "ஆல்பர்ட் சுவைட்சர்", இந்தியத் தத்துவங்கள் குறித்து விரிவாக ஆய்ந்திருக்கிறார். பகவத் கீதையானது பிராமணியத்தின் சாரம் என்றால், திருக்குறள் தமிழர் பண்பாட்டின் சாரம் என்று அவர் கருதுகிறார். இந்த இரண்டு நூல்களையும் ஒப்பிட்டு அவர் பின்வருமாறு கூறியுள்ளார்.
"திருக்குறளுக்கும் மனு நீதி சட்ட விதிகளுக்கும் இடையே வேறுபாடு உள்ளது. மனுநீதிச் சட்டவிதிகளில், பிராமண உணர்வின் மேலாதிக்கத்தின் கீழ், உலகமும் வாழ்க்கையும் உண்டு என்கின்ற உறுதிப்பாட்டுத் தத்துவம் உரைக்கப்படுகிறது. அதற்குப் பக்கத்திலேயே, உலகமும் வாழ்க்கையும் இல்லையென்கின்ற மறுப்புத் தத்துவமும் சகித்து ஏற்றுக் கொள்ளப்படுகின்றது. திருக்குறளிலோ உலகமும் வாழ்க்கையும் இல்லை என்கின்ற மறுப்புத் தத்துவமானது வானத்தில் வெகு தொலைவில் காணப்படும் ஒரு மேகமாகும்; அவ்வளவுதான். 250 நீதிக்கருத்துக்களில் - இவை இந்நூலின் இறுதிப் பகுதியாக அமைந்துள்ளன. நிலவுலகுக்குரிய அன்பு பெரிதும் போற்றப்படுகின்றது. அந்நீதிக் கருத்துக்கள் குற்றத்தை ஏற்படுத்தியமையால், கடவுளிடம் ஆன்மாவுக்குள்ள அன்பைப் பற்றியதே அது என்று தொடர் உருவகமாக அவற்றிற்குப் பிற்காலங்களில் பொருள் விளக்கம் அளிக்கப்படுகின்றது”.
"கீதை ஒரு சமயநூல் என்ற வகையில் எல்லைப்பட்டு நிற்பது; அது முன்வைத்துள்ள "சுயநலன் கருதாத செயல்திறன்” என்ற கருத்துநிலை, மக்கள் நலனுக்காகத் தனிமனிதன் தன்னை ஒப்படைக்கவேண்டும் என்ற வகையில் அந்நூலில் அமைந்துள்ள தொனிப்பொருள் என்பன எவ்வளவு உயர்ந்தனவாகக் கருதப்படினும் அதன் சமயத் தளம் அதனைப் பொது நூலாகக் கொள்ள முடியாத வகையில் எல்லைப்படுத்தி விடுகிறது என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டியுள்ளது. குறளுக்கு இவ்வகையான சமய எல்லை இல்லை. அன்பு, அறம் என்பவற்றை மட்டுமே அது தளமாகக் கொண்டதால் மானுடத்தை நேசிக்கும் எவரும் தம்முடைய மன சாட்சியை அதில் தரிசித்து, தம் உடைமையாக, உரிமையாக, அதை ஏற்றுக்கொள்ள வாய்ப்பு உள்ளது.

கீதையின் போதனைகள் பொதுநல நோக்கில் கடமையை வற்புறுத்துவன என்று கொள்ளும்போது யாருடைய, எத்தகு கடமைகள் என்பதை நுனித்து நோக்கினால் அதன் அடித்தளத்திலே குறிப்பிட்ட வருணச் சார்பு நலன் இருப்பதைத் தெளிவாக இனங்காணலாம். வருண தர்மத்தைப் பாதுகாத்து உயர் வருணத்தினர் தம் உயர்நிலையைப் பேணிக் கொள்வதற்காக ஆக்கப்பட்ட நூல் அது என அந்நூல் புரிந்து கொள்ளப்படுவதைத் தவிர்க்க முடியாது. நால் வருணத்தினரும் தத்தமக்கு விதிக்கப்பட்ட கடமைகளை மீறலாகாது என்பது கீதையிலே (3:35, 18:41-47) வற்புறுத்தப்பட்டமை இங்குக் கவனத்திற்கொள்ளத்தக்கது. இன்றைய நோக்கில் கீதையைக் கண்டிப்பவர்களுக்கு அதன் இந்த வருணச்சார்பு என்ற நிலை வாய்ப்பானதொன்றாக உள்ளது. குறளுக்கு இத்தகு பிரச்சினை இல்லை. அதுதான் எழுந்தகாலத்தின் நிலவுடைமைச் சூழலின் உழவுத் தொழில், முடியாட்சிக் கட்டமைப்பு என்பவற்றைச் சார்ந்த நூல் என்பது உணரப்பட்டாலும் அதன் உள்ளீடு ஒட்டுமொத்தமாக பொதுமக்கள் நலன் என்பதை யாரும் மறுப்பதற்கில்லை”.

யாழ்ப்பாணப் பல்கலைக்கழகப் பேராசிரியர்களான முனைவர் நா. சுப்பிரமணியன், பேராசிரியர் திருமதி. கௌசல்யா சுப்பிரமணியன் ஆகியோர் எழுதியுள்ள "இந்தியச் சிந்தனை மரபு” என்னும் நூலில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்கள்.

"நிலவுடைமை எழுச்சிச் சூழலுக்கு ஏற்ப வேதமரபு சார்ந்து நிகழ்ந்த இவ்வாறான சமுதாய, சமய மாற்றங்களுக்கு ஒரு தத்துவ அடிப்படை தேவையாக இருந்தது. வேத மரபில் முன் வைக்கப்பட்ட பிரம்மம், ஆத்மா என்பன தொடர்பான சிந்தனைகளைப் புராண இதிகாச காலத் தெய்வ நம்பிக்கைகளுக்கேற்ப விளக்கியுரைக்க வேண்டிய தேவை ஏற்பட்டது. அடிக்கடி நிகழ்ந்த அந்நியப் படையெடுப்புகளாலும், உள்நாட்டுப் பேரரசு விரிவாக்க முயற்சிகளாலும், இனக்குழுக்களின் சமுதாயக் கட்டமைப்புக்கள் பாதிக்கப்பட்ட நிலைகளில் மக்கள் மத்தியில் கருத்துக் குழப்பங்கள் ஏற்படலாயின. இந்நிலையில் ஆளும் வர்க்கத்தின் மீதான நம்பிக்கையை வலியுறுத்தவும் வர்ணாசிரம தர்மத்தைக் கட்டிக் காக்கவும் தெய்வ நம்பிக்கையுடன் கூடிய ஒரு தத்துவ விளக்கம் தேவைப்பட்டது. இவ்விரு வகைத் தேவைகளையும் நிறைவு செய்யும் நோக்கில் உருவான நூலே கீதை. இது ஒருவகையில் வேத மரபின் வாரிசாகவும், இன்னொரு வகையில் புராண மரபின் சாரமாகவும் வேறொரு வகையில் தர்மசாத்திரங்களை நியாயப்படுத்தும் தத்துவமாகவும் தன்னை வெளிப்படுத்திக் கொண்டது.

"இவ்வாறான ஒரு கருத்துக் குழப்பநிலை உருவான சூழலில் தமிழ் மரபின் மனிதநேய விழுமியங்களிற் காலூன்றி நின்று, அயல் மரபுகளின் உயரிய பண்புகளை உள்வாங்கிக்கொண்டு, அனைத்துலக மானுடத்துக்கும் பொதுவானதாகத் தன்னை வெளிப்படுத்திக் கொண்ட வாழ்வியல் நூலே திருக்குறள். தான் எழுந்த காலச் சூழல் காரணமாக அது உழவுத் தொழிலை முதன்மைப்படுத்தி் நிலவுடைமைச் சமுதாயத்தின் மன்னராட்சியைச் சார்ந்ததாயிற்று. ஆனால் கீதையைப் போல் ஆளும் வர்க்கத்தின் மீதான நம்பிக்கையை வலியுறுத்தும் நோக்கு அதற்கு இருக்கவில்லை. மக்கள் நலனைக் காப்பதில் மன்னராட்சி உட்பட எல்லாக் கூறுகளுமே எப்படிச் செயற்படவேண்டும் என்பதை

விளக்குவதே அதன் இலக்காக இருந்தது. வேதமரபு, சமணம், பௌத்தம், ஆசீவகம், உலகாயதம், தர்மசாஸ்திரங்களின் கருத்துக்கள் என்பவற்றில் எதனையும் நியாயப்படுத்த வேண்டும் என்பதோ அவற்றுக்கு வாரிசுரிமை கோர வேண்டும் என்பதோ குறளின் நோக்கம் அல்ல.

"எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு"

என்பதற்கேற்ப எல்லாவற்றிலும் உள்ள மெய்ம்மைகளைத் தெளிந்து கொள்ளவேண்டும் என்பதே குறளின் நிலைப்பாடு. இங்கே மெய்ம்மை என்பதைச் சமுதாயத்தின் ஒட்டுமொத்த நலனுக்கு ஏற்ற அடிப்படைக் கூறு என்று நாம் பொருள் கொள்ளலாம்.

இவ்வாறாக, மேலே விரிவாக நோக்கியவற்றின் அடிப்படையில் சிந்திக்கும் போது கீதை, குறள் ஆகிய இரண்டும் தாம் தோன்றிய பிரதேசம், தளம், நோக்கு, நிலை என்பவற்றில் வேறுபடுவன என்பது தெளிவாகும்.

சங்க இலக்கியங்கள், ஐம்பெருங்காப்பியங்கள், பக்தி இலக்கியங்கள், வில்லிபுத்தூரார் பாரதம் உட்படத் தமிழில் பாடப்பெற்ற பல்வேறு பாரதங்கள் ஆகியவற்றில் பகவத்கீதையைப் பற்றிய குறிப்போ அந்நூலின் தாக்கமோ காணப்படவில்லை என்பது தெளிவாகிறது. சங்க இலக்கியங்களிலிருந்து வில்லிபுத்தூரார் பாரதம் வரையிலும்-ஏன் அதற்குப் பின்னால் இருபதாம் நூற்றாண்டு வரை தோன்றிய தமிழ் இலக்கியங்கள் பெரும்பாலானவற்றில் குறளின் தாக்கம் காணப்படுகிறது. குறளின் கருத்துக்கள் இந்நூல்களில் விரவியுள்ளன. தமிழ் இலக்கியங்கள் குறள் ஏற்படுத்திய தாக்கத்தினை வேறு எந்த நூலும் ஏற்படுத்தவில்லை. ஏனென்றால் குறளின் கருத்தோட்டம் தமிழர்களின் பண்பாட்டுக் கருத்தோட்டமாக அமைந்தது. தமிழர் பண்பாட்டிற்கு எதிரிடையான கருத்துக்கள் கொண்டதும் வேதமரபின் வாரிசுமான கீதையின் தாக்கம் தமிழிலக்கியத்தில் படியாதது வியப்பிற்குரிய ஒன்று அல்ல.

திருக்குறள், கி.மு. 31ஆண்டுகளில் வெளியிடப்பட்டது அல்லது, திருவள்ளுவரின் பிறப்பாண்டு என்று கருதப்பட்டது. உரோமானிய தத்துவ ஞானியும், கவிஞருமான செனகா திருக்குறள் பற்றியும், திருவள்ளுவர் பற்றியும், இலங்கையைப் பற்றிய தன் குறிப்புகளில் எழுதியுள்ளார் என பேராசிரியர் மருதநாயகம் மேற்கோள் காட்டுகிறார். திருக்குறளின் பெருமையும் புகழும் உரோமைக்கும் சென்றடைந்து, அதனின்றும் மேற்கோள் சொல்லப்பட்டிருப்பதால், கி.மு. 300 ஆண்டுகளில் திருவள்ளுவர் வாழ்ந்திருக்கலாம் என்ற கருத்து உறுதிப்படுகின்றது. இச்செய்திகளை யெல்லாம் திரு. நாகசாமி அறிந்திருக்கவில்லை.

வான்புகழ் வள்ளுவர் இயற்றிய திருக்குறளை இழிவுபடுத்த நினைப்பவர்கள் தமிழை, தமிழரை, தமிழ்நாட்டை இழிவு செய்ய மனப்பால் குடிக்கிறார்கள். 2000 ஆண்டுகாலத்திற்கும் மேலாக இம்முயற்சியில் வடமொழி வெறியாளர்கள் தொடர்ந்து ஈடுபட்டபோதிலும், அவர்களால் வெற்றிபெற இயலாமல் தோற்றுப் புறங்கண்டு ஓடி ஒழிந்துள்ளனர். திருக்குறள் எந்த மொழியில் எழுதப்பட்டதோ, அந்த தமிழ்மொழி சீரிளமைத் திறம் குன்றாத செம்மொழியாக இன்றளவும் வாழ்கிறது. உலகம் உள்ளளவும் வாழ்ந்து சிறந்தோங்கும்.

## சித்திரை முதல் நாள் விழாக் கொண்டாடுதல் தமிழ்மரபு

## அதனைப் புத்தாண்டுப் பிறப்பு எனத் திரித்துக் கூறியது புராணப் புனைவு

சித்திரை முதல் நாள், விழா சிறப்புறக் கொண்டாடலாம்.ஏனெனில் அது இளவேனில் பருவத்தின் தொடக்கம்.

மனமகிழ்ச்சியுடன் கொண்டாடலாம் .இசை,நடனக் கலைகளின் துணையோடு!

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தமிழ்நாட்டில் குறிப்பாக,சோழநாட்டில் சித்திரை முதல் நாளிலிருந்து இருபத்தெட்டு நாள்கள் ஊரெங்கும் விழாக் கோண்டாடிய செய்தியைச் சிலப்பதிகாரம், மணிமேகலை முதலான காப்பியங்களில் காணலாம்.இப்படிக் கொண்டாடுவதால் பசி,பிணி,பகை முதலான எதிர்மறைகள் விலகி ஒற்றுமை,நேயம்,நல்லிணக்கம் முதலான உடன்பாட்டுப் பண்புகள் ஓங்கிவளரும் என அக்கால மக்கள் கருதினர்.

தூங்கெயில் எறிந்த தொடித்தோள் செம்பியன் என்னும் சோழ மன்னன் தான் இந்த விழால் கொண்டாடும் வழக்கத்தை இன்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகள் முன்னர் தொடங்கிவைத்தானாம்.அதன்பின் வழிவழி வந்த சோழமன்னர்கள் இந்த விழாக் கொண்டாடி உலகெங்கிருந்தும்-ஏன்? – வானலோகத்திலிருந்துகூட அனைவரும் விருந்தினராக வந்து விழாவில் கலந்துமகிழ்வராம்.யாரோ ஒரு சோழ மன்னன் இப்படி விழாநடத்தத் தவறியதால்தான் இந்திரனுக்குக் கோபம் ஏற்பட்டுப் பூம்புகார் நகரம் கடலுக்குள் மூழ்கும்படி ஆனதாம்.

இவையெல்லாம் தமிழ்த்தொன்மங்கள்.

இங்குக் குறிப்பிட்ட இந்திரனுக்கும் வேதங்களில் குறிப்பிடப்படும் இந்திரனுக்கும் எத்தகைய தொடர்பும் இல்லை. இதனை விரித்துரைக்கப் போனால் இந்தச் செய்திக் குறிப்பு ஓர் ஆய்வுக்கட்டுரையாகிச் சலிப்பு ஊட்டிவிடும்.

நம் கருத்து என்னவென்றால் சித்திரை முதல்நாள் விழா எடுத்துச் சுற்றமும் நட்பும் சூழ மகிழ்ந்திருப்பதில் எந்தத் தவறும் இல்லை.ஆனால் அப்படிக் கொண்டாடும் நம் வழக்கம் அறிந்து இதனை ஆண்டுப் பிறப்பு எனக் கதைதிரித்தல் தவறு என்பதனைச் சுட்டிக்காட்டவே விரும்புகிறோம்.

கார்த்திகையை மிகவும் மகிழ்வோடு கொண்டாடிக் கொண்டிருந்தோம். விளக்குவரிசையுடன் ஒவ்வொரு வீடும் ஒளிமயமாகக் காட்சியளித்துப் புத்தாடை அணிந்து விருந்தினர் வரவேற்றுக் கொண்டாடியகாலம் மலையேறிவிட்டது.

'கல்யாணம்,கார்த்திகை ' என்னும் தொடர்வழக்கும் மறைந்துவிட்டது. அதனைக் களவாடி விளக்கீடு அல்லது வெள்ளணி என்னும் சொல் தீபாவளியாக மாற்றம் பெற்றுப் புதுக்கதை புனைந்து ஐப்பசிக்கு அந்த விழாவை முன்தள்ளியதும் புராணப் புனைவே.

சித்திரையிலே தொடங்குவதாக சோடிக்கப்பட்ட சமற்கிருத ஆண்டுக்கும் தை முதல்நாளில் நாம் கொண்டாடும் தமிழ்ப் புத்தாண்டு அல்லது திருவள்ளுவர் தொடர் ஆண்டுப் பிறப்புக்கும் உள்ள வேறுபாட்டைச் சுருக்கமாகப் பட்டியலிடுகிறேன்.

அதற்கு முன் ஒரு குறிப்பு:

சித்திரையில் கூறப்படும் ஆண்டு -அறுபது ஆண்டுக்கு ஒருமுறை -மீண்டும் சுழற்சியில் வரும்.இது காலக்கணக்குக்கு உதவாது.தையில் தொடங்கும் திருவள்ளுவர் தொடர் ஆண்டு சாலிவாகன சகாப்தம் போல,கொல்லம் ஆண்டு போல காலக்கணக்குக்கு உதவும்.

எடுத்துக்காட்டு:

சிலப்பதிகாரம் திருவள்ளுவருக்குப் பின் ஆண்டு (தி.பி.) 231-க்கு உரியது.

நல்வழி பாடிய ஔவையார் காலம் தி.பி.1431

காந்தி பிறந்தது தி.பி.1900.

இது போன்று காலக்குறிப்புக்கு சமற்கிருத ஆண்டு உதவாது.அறிஞர் அண்ணா சௌமிய ஆண்டு பிறந்தார் என்றால் உண்மை.ஆனால் எந்தச் சௌமிய ஆண்டு என எப்படிக் குறிப்பிடுவது?இந்தக் குழப்பத்திற்குக் காரணம் சமற்கிருத ஆண்டு சுழற்சிமுறை ஆண்டு என்பதே.ஆனால் திருவள்ளுவர் ஆண்டு தொடர் ஆண்டு என்பதால் எந்தக் குழப்பமும் இல்லை.

இரண்டுக்கும் உள்ள வேறுபாடுகளைச் சுருக்கமாகப் பட்டியலிட்டுக் காணலாம்.

| தைத் திங்களில் தொடங்கும் தமிழ்ப்புத்தாண்டு | சித்திரையில் தொடங்கும் சமற்கிருத ஆண்டு |
|---|---|
| தமிழ்ப் பண்பாட்டைப் பின்புலமாகக் கொண்டது | புராணக் கதையைப் பின்புலமாகக் கொண்ட்து. |
| பழமையைப் போக்கிப் புதுமையை வரவேற்பது.( போக்கி > தை) | விழா அயர்தல் மட்டுமே கொண்டது. |
| அறுவடை கண்டு அகம் மகிழ்வது | இளவேனிற் பருவத்தின் தொடக்கம் |
| பண்பாட்டு மீட்டுருவாக்கம் கருதித் தமிழறிஞர்களால் உருவாக்கப்பட்டது | சாதகக்கணிப்புக்காகச் சோதிடக் கலைஞர்களால் உருவாக்கப்பட்டது |
| இந்து,இசுலாமிய,கிறித்தவர்களைச் சமயம் கடந்து இணைப்பது | இந்துக்களில் தமிழ் பேசுவோரில் ஆதிக்கச் சாதியினர் பின்பற்றுவது |
| அனைவரையும் ஒருங்கிணைப்பது-பெரும்பான்மையினருக்கானது | சிறுபான்மையினருக்கானது.இந்துக்களில் பிறமொழி பேசும் இந்துக்களுக்குத் தனித்தனி ஆண்டுக் கணக்கு. |
| உழவர், நாட்டுப்புறக் கலைஞர், கைத்தொழிலாளரால் வழிவழியாகப் பின்பற்றப்படுவது. நாட்டுபுறப் பண்பாட்டை அடித்தளமாகக் கொண்டது. | சோதிடர்,புரோகிதர்மட்டுமே போற்றுவது. நகர்மையங் கொண்டது. |
| உலகத் தமிழரை ஒருங்கிணைப்பது. | தமிழ்நாட்டிலேயே மக்களைப் பிரிக்கும் போக்குடையது. |
| கிரிகோரியன் ஆண்டுக்கு இணையாக நாம் கண்ட ஆண்டுக்கணக்கு-நமக்கே உரியது. | கடன்வாங்கப்பட்ட ஆண்டுக்கணக்கு |
| தமிழ்ப்பண்பாட்டுக்கு ஓர் அடையாளமாகத் திகழும் பெரும்புலவர்திருவள்ளுவரைப் போற்ற வழிவகுப்பது | நாரதருக்குப் பிறந்ததாகக் கூறப்படும் அடையாளம்தெரியாதவர்களின் பொருள்விளங்காத பெயர்களைத் தாங்கியது |
| வரலாற்றுக் கண்ணோட்டத்தில் ஆய்வுசெய்ய வழிகாட்டும் தொடர் ஆண்டுமுறை | மீண்டும் மீண்டும் வரும் சுழற்சி ஆண்டுமுறை |
| கீழடி காட்டும் தொன்மைமிக்க நாகரிகத்திற்குப் பெருமை சேர்ப்பது | மொழி,பண்பாடு ஆகியவை குறித்த அடிப்படை ஈடுபாடும் இல்லாதது. |

இப்போது உங்களுக்குத் தெளிவாகப் புரிந்திருக்கும்.

தை முதல் நாள் திருவள்ளுவர் தொடர் ஆண்டு தொடங்குகிறது.அது சமய வேறுபாடுகள் இல்லாத புத்தாண்டுப் பிறப்பு.

சித்திரை முதல் நாள் இளவேனில் பருவம் தொடங்குகிறது.

இரண்டுமே நட்பு சுற்றத்துடன் கொண்டாடப்படவேண்டிய தருணங்களே.

ஆனால் வேறுபாட்டைப் புரிந்துகொள்ளுங்கள்.

------மறைமலை இலக்குவனார்



அண்ணல் அம்பேத்கர்
வடக்கில் உதித்த சமத்துவச் சூரியன்; பலர்
வாழ்வில் கிழக்காய் இருந்த பகலவன்;
வேண்டாததை நீக்கிய சிற்பி;
வேண்டியதைச் சேர்த்த ஓவியர்;
எதிர்காலத்திற்கு ஒளிவிளக்கு;
சமூகம் ஏற்படுத்திய ஏற்றத் தாழ்வைச்
சமப்படுத்திய போராளி;
சாதிக் கொடுமையால் இருண்ட உலகத்தை
ஞானத்தால் விடிய வைத்த விடிவெள்ளி.
----மாண்புமிகு முதல்வர் தளபதியார்

## சமத்துவ நாயகன்

---திருமதி. விக்டோரியா, துணை முதல்வர், வித்யா விதையின் கூட்டுப்பள்ளி

மனநலம் நன்குடையர் ஆயினும் சான்றோர்க்கு

இனநலம் ஏமாப்பு உடைத்து. (குறள் 458)

247 ஆண்டுகாலம் அடிமைகளாய் ஆங்கிலேயரிடம் இருந்தோம். அன்னியன் நம்மை ஆள்கிறான் என்பதால் நாடு முழுவதும் பல ஆயிரக்கணக்கான தலைவர்களின் போராட்டத்தால் சுந்தந்திரம் பெறப்பட்டதாம் வெள்ளையனிடமிருந்து என்று கற்றுத் தெரிந்து கொண்டேன் பாடப்புத்தகத்திலிருந்து…!ஆனால் 2500 ஆண்டுகளுக்கும் மேலாக தன் சொந்த நாட்டிலேயே அடிமைகளாய், தீண்டத்தகாதவர்களாய், கீழ்சாதி வகுப்பினராய் “சாதி” என்னும் பெயரால் வாழ்ந்த மக்களுக்கு யாரிடம் இருந்து பெறப்பட்டது சுதந்திரம்? யார் பெற்றுத் தந்தது? மனிதனை மனிதனாய் பாகுபாடின்றி

சமத்துவ நோக்கோடு நடத்தவில்லை என்பதை பார்த்துத் தெரிந்து கொண்டேன் அனுபவத்திலிருந்து…!

இதோ உங்களையும் சிந்திக்க வைக்க முயல்கிறேன், சமத்துவம் பெற்றுத் தந்த நம் சரித்திர நாயகனை சாதியின் நாயகனாக சித்தரிக்கும் நம் இந்தியாவைக் குறித்து.

கார்ல் மார்க்ஸ் பற்றி படியுங்கள் என்றபோது

நீங்கள் யூதனா என்று கேட்கவில்லை,

விலாடிமிர் பற்றி படியுங்கள் என்றபோது

நீங்கள் ரஷ்யனா என்று கேட்கவில்லை,

பிடல் காஸ்ட்ரோ பற்றி படியுங்கள் என்றபோது

நீங்கள் க்யூபனா என்று கேட்கவில்லை,

மார்டின் லூதர் கிங்கைப் பற்றி படியுங்கள் என்றபோது

நீங்கள் நீக்ரோவா என்று கேட்கவில்லை,

ஆனால் தன் வாழ்நாளில் 46 லட்சம் புத்தகங்களை வாசித்த, உலகின் மிகப்பெரிய வடிவிலான அரசியலமைப்புச் சட்டத்தை வடிவமைத்து, 15000 பக்கங்களை எழுதி 55-க்கும் மேற்பட்ட புத்தகங்களை வெளியிட்ட, சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம், பகுத்தறிவு, பொதுவுடைமை போதித்து, காலனி ஆதிக்கத்தை ஒழித்த, பாபா சாஹிப் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அவர்களைப் பற்றி படியுங்கள் என்று சொன்னால்… நீங்கள் தலித் இனத்தவரா?!!! என்று கேட்பது ஏன்?

தன் தாய்நாட்டிலேயே படிக்க வழியில்லாமல் இருக்க இருப்பிடமில்லாமல் செய்கின்ற தொழிலை வைத்து உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்று மனிதனை வேறுபடுதியதும், ஆண் என்றும் பெண் என்றும் வேறுபடுத்தியதும் மதத்தில் உயர்வு தாழ்வு என்று மதம் பிடித்து அலைந்ததும் நம் இந்தியர்கள் தான். காலணி அணியக்கூடாது, கீழ்சாதிப் பெண்கள் மேலாடை அணியக்கூடாது, பொதுக்குளத்தில்

நீரருந்தக்கூடாது, கோவிலுக்குள் நுழையக்கூடாது என்று கட்டுப்பாடுகளை விதித்தது நம் இந்தியர்களே!

சூத்திரன் கல்வி கற்க அனுமதி இல்லை, உயர்தொழில் செய்யும் அருகதை அற்றவன் என்றது ஆங்கிலேயன் அல்ல! நம் இந்தியனே!

உண்மையை உரக்கச் சொல்ல வேண்டுமானால் ஆங்கிலேயர்களின் அடக்குமுறை மற்றும் ஆதிக்கப் போக்கைக் காட்டிலும் கொடுமையானது நம் இந்திய நாட்டின் சாதி முறைகளும், அவற்றை உள்ளடக்கிய சடங்குகளும், மூடப்பழக்கங்களும் மற்றும் சமத்துவமற்ற நிலையும்…

இவற்றையெல்லாம் அடியோடு நாட்டிலிருந்து அகற்றி அனைத்து வழிகளிலும் இனம், சாதி, மதம், மொழி, நிறம் வேறுப்பாடற்ற சமத்துவ இந்தியாவை கொடுத்தவர் நம் டாக்டர் அம்பேத்கர் அவர்கள்.

பல ஆயிரக்கணக்கான ஆண்டுகள் இந்தியா மன்னராட்சியைப் பின்பற்றிய நாடு. இந்தியர்கள் மட்டுமல்லாது வெளிநாட்டிலிருந்து இந்தியாவில் குடியேறியதோடு அரியணையில் அமர்ந்து அடக்குமுறையான மன்னராட்சியைப் பின்பற்றியவர்கள் பலர்..

கோரி வம்சம், துக்களக் வம்சம், கில்ஜி வம்சம் சையது வம்சம், லோடி வம்சம், சூரி வம்சம், முகாலய வம்சம், பிறகு ஆங்கிலேயர் ஆட்சியெனத் தொடர்ந்து மன்னர்களின் கீழ் மக்கள் கைப்பொம்மைகளாய் மாறுவதையும், ஒவ்வொரு முறையும் இந்தியாவை மற்ற நாடுகள் ஆக்கிரமித்து, அடிமைப்படுத்தியதும், ஒவ்வொரு பிரிவினரின் அடக்குமுறையால் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மேன்மேலும் அடிமைப்படுதியதும் மன்னராட்சியால்தான் என்பதை உணர்ந்த டாக்டர் அம்பேத்கர் அரிசனம் அரியணை ஏற அரசியலமைப்பை மலரச்செய்தார்.

“எவன் ஒருவன் தன் உரிமைகளை எப்பொழுதும் தற்காத்துக் கொள்ளத் தயாராக இருக்கிறானோ! எவன் பொது விமர்சனத்திற்கு அச்சப்படாமல் இருக்கிறானோ! அடுத்தவன் கைப்பாவையாக இல்லாமல் போதிய சிந்தனையும் சுயமரியாதையும்

பெற்று இருக்கிறானோ! அவனே சுதந்திரமான மனிதன் என்பேன்'' என்று உலகத்திற்குச் சுதந்திரம் என்னும் வார்த்தையின் வலிமையின் உன்னதத்தை உரக்கச் சொன்னவர். நம் நாட்டில் பல்வேறு சாதிகளும், மதங்களும் மொழிகளும் பின்னிப் பிணைந்து நாட்டின் ஒற்றுமை வேறுபட்டுக் காணப்பட்ட நிலையில் "இந்தியாவை யாரும் சொந்தம் கொண்ட முடியாது, இது பல இனக்குழுக்களின் தேசம், அப்படி சொந்தம் கொண்டாடிட வேண்டிய நிலை வந்தால் இந்தியாவின் பூர்வகுடியான தமிழர்களே கொண்டாட முடியும்" என தமிழ் மொழியின் தொன்மையை 1949 ஆம் ஆண்டிலேயே தீர்க்கமாகக் கூறியவர்.

தன் வாழ்நாளின் கடைசி நேரத்தில் "என் இந்திய மக்களுக்காக நான் சாதித்தவைகளெல்லாம் தனி ஆளாக நின்று கொடுமையான துயரங்களையும், முடிவற்ற சிரமங்களையும் கடந்து எல்லாப் பக்கங்களிலிருந்தும் குறிப்பாக இந்து பத்திரிக்கையிடமிருந்து வந்த அவதூறுகளையும் என் எதிரிகளுக்கு எதிராகப் போராடி பெற்றவையே, என் வாழ்நாளின் இறுதிவரை ஒடுக்கப்பட்ட எனது சகோதரர்களுக்காகவும், பெண்களின் முன்னேற்றத்திற்காகவும், இந்த நாட்டிற்காகவும் எனது பணியைத் தொடர்வேன். என் நாட்டு மக்கள் பயணிக்கும் இந்த ஊர்தியை மிகவும் சிரமப்பட்டே இப்போது இருக்கும் இடத்திற்குக் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறேன், வழியில் வரும் தடைகளையும், மேடு பள்ளங்களையும் பொருட்படுத்தாமல் என் நாட்டு இளைஞர் சமுதாயத்தால் இந்த ஊர்தி முன்னேறிச் செல்லட்டும்.

மாண்புடனும், மரியாதையுடனும் என் மக்கள் வாழ நினைத்தால் இச்சமுதாயத்தில் அவர்கள் கிளர்ந்தெழ வேண்டும். என் மக்களாலும், என் இயக்கத்தினராலும் அந்த ஊர்தியை இழுத்துச் செல்ல முடியாது போனால், அது இப்போது எங்கு நிற்கிறதோ அங்கேயே அதனை விட்டுச் செல்லட்டும். அனால் அதனை எந்த சூழ்நிலையிலும் பின்னோக்கித் தள்ளி விட வேண்டாம்"

அவர் அச்செய்தியால் குறிப்பிட்டது நாட்டில் சாதி, மதம், இனம்,மொழி, வேறுபாடு இல்லாமல் நாடு சமத்துவத்தை பின்பற்றி முன்னேற்ற வேண்டும். இதனை அவர் ஒரு குறிப்பிட்ட சாதியினருக்கு மட்டுமே கொடுத்துச் செல்லவில்லை. இந்தியா என்ற

பழம்பெரும் நாடு "இந்தியன் என்ற மானிட சாதியாக மாற வேண்டும்" என்பதே அவரின் நோக்கமும் தாக்கமும்.

"உனக்குப் பெருமை வேண்டுமானாலும், உற்சாகம் வேண்டுமானாலும் பிற மனிதனுக்குத் தொண்டு செய்வதில் போட்டி போடுவதின் மூலம் தேடிக்கொள், இன்று நீ தலை குனிந்து படிப்பதே நாளை தலை நிமிரத்தான்" என்பது தெருவிளக்கின் வெளிச்சத்தில் படித்துத் தலைநிமிர்ந்தவரின் கூற்று.

ஆனால், அவர் இந்திய நாட்டின் சட்ட மாமேதை என்றும், இந்திய அரசியலமைப்பின் தந்தை என்றும் வரலாற்றில் இடம் பெற்றுள்ளார். எனினும் அவரது பிறந்தநாளை நாம் எவ்வாறு கொண்டாடுகிறோம்?

நம் சிந்தனையைத் தூண்ட சில நடப்பு நிகழ்வுகளை குறிப்பிடுகிறேன்..

"காந்திக்கு காந்தி ஜெயந்தி, நேருவிற்கு குழந்தைகள் தினம், இராதாகிருஷ்ணன் அவர்களுக்கு ஆசிரியர் தினம்" என நாடு முழுதும் கொண்டாடுகிறோம். இவ்விழாகளின் மூலம் மாணவர்களுக்குத் தலைவர்களின் பெருமை, உழைப்பு, தியாகம் கடைசிக்கு பெயர் என்பதை மாணவர்களிடம் கொண்டு சேர்க்கத் தான் என நானும் அறிவேன்.

ஆனால் அண்ணலின் பிறந்தநாளை மேற்கூறிய நோக்குடன் கொண்டாடப்படுகிறதா? சிந்தியுங்கள்!! தமிழகத்தைப் பொறுத்தவரை அவரின் பிறந்தநாள் என்பதை விட தமிழ் வருடப் பிறப்பு விடுமுறை என்றே பெரும்பாலானோர் கருதுகின்றனர்.

அரசியல் தலைவர்களும், சாதிச் சங்கத்தலைவர்களும் அந்நாளை அவரின் திருவுருவச் சிலைக்கு மாலை அணிவித்துப் பேட்டிகொடுத்துக் கொண்டாடுகின்றனர்.

சட்டம் இயக்கிய சாணக்கியனுக்கு சாதிப் பெயரால் மட்டுமே விழா எடுக்கப்படுகிறது. பல கிராமங்களில் தெருமுனையில் அம்பேத்கரின் சிலை இருப்பின், அது கீழ்ச்சாதி மக்கள் வாழும் இடம் என்றே அடையாளம் காணப்படுகிறது. அவர் ஒரு தலித்தினத் தலைவர் என்றே பெரும்பானையோருக்குத் தெரியும் என்பது மறுக்க முடியாத உண்மை. ஒருவேளை காந்தி, நேரு,இராதாகிருஷ்ணன் போன்ற தலைவர்கள் மேல்

சாதி, அதனால்தான் நாடுமுழுதும் கொண்டாடபடுகிறார்களோ என்ற சந்தேகம் எழத் தோன்றுகிறது. அவர் அனைத்துச் சமுதாய மக்களுக்காகவும் குரல் கொடுத்தவர் அண்ணல் அம்பேத்கர்.**[உங்கள் குறையைத் தமிழ்நாட்டு முதல்வர் நீக்கிவிட்டாரே]**

அவரின் தொண்டுகள், உழைப்பு, முயற்சி, எழுத்துக்கள், புரட்சி மிக்க கருத்துக்கள், தியாக உணர்வுகள் என அண்ணலின் அனைத்தையும் மாணவர்களுக்கு நாம் எடுத்துரைக்க வேண்டும். இன்றும் நடக்கும் ஏற்றத் தாழ்வுகளை வேரோடு அழிக்க வேண்டும். அழகான மானிட உலகம் பிறக்க வேண்டும். அவர் கூறிய ஊர்தியை நகர்த்த மாணவர்களால் மட்டுமே முடியும்.சாதிக் கேவலத்திலிருந்தே சாதிக்கக் கற்றவனின் வரலாறு ஒவ்வோர் இந்தியக் குடிமகனும்/குடிமகளும் கற்க வேண்டிய பாடம். தன்னை வறுமை தின்று செரித்த போதும் இன்னொருவர் பட்டினிக்கு தன் கல்வியால் உணவு தயாரித்தவன். அவரின் ஆளுமை வெறும் சாதியினால் போற்றி மூடி வைத்துவிட்டதீர்கள். அவர் ஒரு புரட்சியாளர், போராளி, மேதை, வெறும்.. வெறும் இந்த சாதியின் அடையாளமாக மாற்றி விட வேண்டாம்.

"அண்ணல் அம்பேத்கர் வடக்கில் உதித்த சமத்துவ சூரியன்; பலர் வாழ்வில் கிழக்காய் இருந்த பகலவன்; சமூகம் ஏற்படுத்திய ஏற்றத் தாழ்வை, கல்வி, சட்டம், அரசியல் எழுச்சி மூலமாக சமப்படுத்திய போராளி; ‘இருட்டறையில் இருக்குதடா உலகம்; சாதி இருக்கிறதென்போனும் இருக்கின்றானே’ என்ற புரட்சிக் கவிஞர் பாரதிதாசனுடைய வரிகளைப்போல, சாதிக் கொடுமையால் இருண்ட உலகத்தைத் தன்னுடைய பரந்த அறிவால், ஞானத்தால் விடிய வைத்த விடிவெள்ளி அண்ணல் அம்பேத்கர். அவர் வேண்டாததை நீக்கிய சிற்பி; வேண்டியதைச் சேர்த்த ஓவியர்; அண்ணல் அறிவுச்சுடராய் விளங்கி அரசியலமைப்புச் சட்டத்தை வகுத்துக்கொடுத்தவர். அவருடைய கருத்துக்கள் ஆழமும், விரிவும் கொண்டவை; எதிர்காலத்திற்கு ஒளிவிளக்கு அது.ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நலத் துறை சார்பாக மாநில அளவிலான உயர்நிலை விழிப்புணர்வு மற்றும் கண்காணிப்புக் குழுக் கூட்டம் நேற்று நடைபெற்றது. அந்தக் கூட்டத்தில் பெரியார் பிறந்தநாளை ‘சமூகநீதி நாளாக’அறிவித்தது போல, அண்ணல் அம்பேத்கர் பிறந்த நாளான ஏப்ரல் 14 ஆம் தேதியை ‘சமத்துவ நாள்’ என்று கொண்டாட வேண்டுமென்ற கோரிக்கை எழுப்பப்பட்டது.இந்தக் கோரிக்கையை ஏற்று, ஏப்ரல் 14 ஆம் தேதி இனி சமத்துவ நாளாகக் கொண்டாடப்படும் என்றும், சமத்துவ நாள் உறுதிமொழி தமிழகம் முழுவதும் எடுத்துக்கொள்ளப்படும் என்றும் மகிழ்ச்சியோடு இந்த அவைக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.-கடந்த ஆண்டு சட்டப்பேரவையில் முதல்வர் தளபதியார் அரிமா முழக்கம்

# குறள்நெறி

மின்னிதழ்:60 “குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்” தி.வ.ஆ.2054 வைகாசி-2--மே-16பொ.ஆ.-2023

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



## அறநெறி பரவிடக் குறள்நெறி பரப்பிடும் தமிழ்நாட்டு அரசின் தலைமைச் செயலாளர் முனைவர் வெ.இறையன்பு அவர்களை மனமாரப் பாராட்டுவோம்!







நாள்தோறும் ஒரு திருக்குறளையும் அதன் பொருளையும் அரசு அலுவலகங்களில் காட்சிப்படுத்தவேண்டும் என்னும் தங்கள் ஆணை அறநெறிவாழ்வுக்கு மிகச் சிறந்த தூண்டலாக அமையும்.

அதுபோன்றே நாள்தோறும் ஓர் ஆங்கிலக் கலைச்சொல்லையும் அதற்கு இணையான தமிழ்ச்சொல்லையும் காட்சிப்படுத்தவேண்டும் என்னும் ஆணையும் ஆட்சித் தமிழ் வளர்ச்சிக்குப் பெரிதும் உறுதுணை விளைவிக்கும்.

# கலைச்சொல்லும் குறளும்:

## பாராட்டிற்குரிய தலைமைச் செயலரின் அறிவுறுத்தல்

தலைமைச்செயலர் முனைவர் வெ.இறையன்பு, அரசு அதிகாரிகளுக்கு சிறப்புவாய்ந்ததொரு அறிவுறுத்தம் வழங்கியுள்ளார். பொதுவான பணி குறித்த அறிவுரையோ கட்டளையோ அல்ல இது. தமிழ் வளர்ச்சிக்கு உதவக் கூடிய, தமிழ் உணர்வைப் பரப்பக்கூடிய நல்லுரை. அவர், தமிழ்நாட்டில் உள்ள அனைத்து அரசு அலுவலகங்களிலும் அன்றாடம் பொருளுடன் கூடிய ஒரு திருக்குறளைக் கட்டாயம் கரும்பலகையில் எழுதிவைக்க வேண்டும் என அறிவுறுத்தியுள்ளார். அத்துடன் ஆட்சி சொல்லகராதியில் உள்ள சொற்களில் நாள்தோறும் ஓர் ஆங்கிலச் சொல்லையும் அதற்குரிய தமிழ்ச் சொல்லையும் கரும்பலகையில் எழுதிவைக்க வேண்டும் என்றும் தெரிவித்துள்ளார்.

சார்நிலை அலுவலகங்களில் மட்டுமல்ல,மாநிலத்தில் உள்ள தமிழ்நாடு அரசின் தலைமைச் செயலகத் துறைகள், துறைத் தலைமை அலுவலகங்கள், தன்னாட்சி நிறுவனங்கள், வாரியங்கள், கழகங்கள், இணையங்கள் ஆகியவற்றின் தலைமை அலுவலகங்களில் என எல்லா வகை அரசு, அரசு சார் அலுவலகங்களிலும் எழுதி வைக்குமாறு தெரிவித்துள்ளார். முந்தைய ஆணைகளுக்கிணங்கச் சில அலுவலகங்களில் இப்பணி தொடர்கிறது.



அறிஞர் இ.திருவள்ளுவன்

இத்தகைய ஆணைகள் பிறப்பிக்கப்படும் பொழுது ஆணைகளைப் பிறப்பித்தவர்களும் உயர்நிலையில் உள்ளவர்களும் இவை தங்களுக்கானவை யல்ல எனக் கண்டும் காணாமல் இருப்பார்கள். எழுதி வைத்தால் ஊதிய உயர்வு என்றால் எழுதுவோர் பெரும்பான்மையர் இருக்கின்றனர். உணர்வில் எழுதுவோர் சிறுபான்மையரே! ஏனெனில் அவர்களை வழி நடத்துவோர் ஆணைகளைப் பின்பற்றினால்தானே இவர்களும் பின்பற்றுவர். உயரதிகாரிகள் பலர் ஆங்கிலேயராக அல்லவா இருக்கின்றனர். சில நாள் முன்னர் போக்குவரத்தில்லாத் தெருவைக் கொண்டாடுவதற்கு ஆங்கிலத்தில்தானே பெயர் சூட்டினர். மிட்சுபி தொடர்பான விழாவில் முழுமையும் ஆங்கிலப் பதாகைதானே காட்சியளித்தது. இத்தகை ஆங்கிலப் பித்தர்களுக்குத் தலைமைச் செயலர் அறிவுறுத்தியதுதான் பாராட்டிற்குரியது.

அனைத்துத் துறைக் கூடுதல் தலைமைச் செயலாளர்கள், முதன்மைச் செயலாளர்கள், செயலாளர்கள், துறைத் தலைமை அலுவலர்கள், மாவட்ட ஆட்சியர்கள், அரசு கழகங்கள், வாரியங்களின் தலைவர்கள், பல்கலைக் கழகங்களின் துணை வேந்தர்கள் என வழி நடத்த வேண்டியவர்களைக் குறிப்பிட்டு அவர் கட்டளையிட்டுள்ளார். இவ்வாணை தங்களுக்கானதல்ல என அவர்கள் ஒதுங்காமல் முன்னெடுத்துக்காட்டாக இருந்து தத்தம் அலுவலகங்களில் கலைச்சொல் விளக்கமும் திருக்குறள் விளக்கமும் இடம் பெறச் செய்ய வேண்டும்.

எனவே, பொதுவான ஆணையாக இட்டுக் கிடப்பில் போடச் செய்யாமல் அனைத்து நிலை அதிகாரிகளையும் குறிப்பிட்டு அறிவுறுத்தியதால் தலைமைச் செயலர் முனைவர் வெ.இறையன்பு இ.ஆ.ப. அவர்களைப் பாராட்டுகிறோம். இதனைப் பின்பற்றும் அனைவருக்கும் நம் சிறப்பான பாராட்டுகள்.

இந்த நேரத்தில் இதன் தொடர்பான என் பணி நினைவைப் பகிர விரும்புகிறேன்.

நான் மதுரையில் (90-97) இல் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநராகப் பணியாற்றினேன். பொதுவாகத் தமிழ் வளர்ச்சி அலுவலகங்கள் என்றால் கழிப்பறை அருகே அல்லது மாடிப்படியின் கீழே ஒதுக்கப்பட்டிருக்கும். மொழி ஞாயிறு பாவாணருக்கும் அகரமுதலித்திட்ட இயக்குநர் என்ற முறையில் – அதுவும் தமிழ்த்துறைதானே – மாடிப்படியின் கீழ்தான் அறை ஒதுக்கப்பட்டிருந்தது. இருப்பினும் இந்தச் சூழலைச் சுற்றுலா மையம் போல் மாற்றும் முறையில் நான் செய்த பணி ஒன்று அமைந்தது. நான் ஆட்சிமொழி வகுப்பு நடத்துவதை வழக்கமாகக் கொண்டிருந்தேன்.அத்துடன் அலுவலகத்திற்கு வருவோரும் பயனுற வேண்டும் என எண்ணி, அலுவலக முகப்பினைக் கரும் பலகையாக மாற்றினேன். அதில்,

**திருக்குறள்**

**கலைச்சொல் விளக்கம்**

**அலுவலகப்பயன்பாட்டிற்கான பிழையின்றி எழுதுவதற்கான இலக்கணக் குறிப்பு**

**தமிழின் சிறப்பைக் கூறும் செய்தி**

என்ற முறையில் எழுதி வைத்தேன்.

அரசுஊழியர்களில் ஒரு பகுதியினர் முதலில் படித்தனர். அன்றாடம் தமிழ்வளர்ச்சி அலுவலக அறையைக் கடந்து செல்லும் மாவட்ட வருவாய் அலுவலர் கரும்பலகைச்செய்தியை ஆட்சியரிடம் தெரிவித்தார். தமிழ் ஆர்வலரான மாவட்ட ஆட்சியர் திரு மணிமாறன் இ.ஆ.ப. இக்கரும்பலகை முன் நின்று எழுதியவற்றைப் படிப்பதை வழக்கமாகக் கொண்டார். ஓய்வறைக்கு அந்தப்பக்கம் வரும் ஆட்சியரின் நேர்முக அலுவலர்களும் படித்துச் செல்வதை வழக்கமாகவும் பின்பற்றுவதைக் கடமையாகவும் கொண்டனர். இதனைப் பார்த்த பிற அதிகாரிகளும் ஊழியர்களும் தவறாமல் படிக்கத் தொடங்கினர். மனு நீதி நாளுக்கு ஆட்சியகத்திற்கு வருகை தந்து காத்திருப்போரும் பிற நாளில் வருகை புரிந்து காத்திருப்போரும் எனப் பொது மக்களும் தமிழ் வளர்ச்சித்துறைக்கு வந்து கரும்பலகைத் தகவல்களைப் படிப்பதை வழக்கமாகக் கொண்டனர். சிலர் சில சொற்களைக் குறிப்பிட்டு அல்லது எழுதுவதில் நேரும்

ஐயங்களைக் குறிப்பிட்டு அவற்றை எழுதுமாறும் வேண்டினர். அவற்றிற்கான விளக்கங்களை எழுதி வைத்ததும் இதில் தங்களின் பங்களிப்பும் இருப்பதாக மகிழ்ந்து வழக்கமான வாசகர் ஆயினர்.

தமிழ் நாளிதழ் ஒன்றில் இதில் சித்திரையாண்டு பற்றி எழுதியதைக் குறிப்பிட்டு எதிராக எழுதியது. ஆனால், உணர்வாளர்கள் இவ்வாறு எழுதுவதை வரவேற்று அந்தப்பக்கம் சென்றாலும் படித்துச் செல்வதை வழக்கமாகக் கொண்டனர்.

தினமணிச் சுடர் அட்டைப்படக் கட்டுரையாக 'இப்படியும் சில இளைஞர்கள்' என என் தமிழ்ப்பணி குறித்தும் எழுதி வெளியிட்டது. இதில், "திருவள்ளுவன், தனது அலுவலகத்தின் முன்புள்ள கரும்பலகையில் வாரமொருமுறை தமிழ் இலக்கணக் குறிப்பு, பிற மொழிச்சொற்களை எப்படி எழுதலாம் என்கிற குறிப்பு, தமிழ் குறித்த சில தகவல்களை எழுதி வைக்கிறார்." எனக் கட்டுரையாளர் மணா குறிப்பிட்டிருந்தார். குங்குமம் இதழும் 'தமிழ்ச்சாதனை' என்னும் தலைப்பில் என்னைப்பற்றி எழுதியிருந்தது. இதன் பிறகு ஆட்சியகத்திற்குத் தொடர்பில்லாதவர்களும் வந்து படிப்பதை வழக்கமாகக் கொண்டனர்.

இவ்வாறு தமிழ்த்தகவல் பரவி பெரும் வரவேற்பைப் பெற்றது. மக்களிடையே தமிழார்வம் இருக்கத்தான் செய்கிறது. தக்க வழிகாட்டினால் அவர்கள் மேலும் ஆர்வத்தை வளர்த்துப் பயன்பெறுவர் என் பதே உண்மை.

இப்போதும் தலைமைச் செயலர் அறிவுறுத்தத்திற்கிணங்கக் கலைச்சொல்லையும் பொருள் விளக்கத்தையும் திருக்குறளை விளக்கத்துடனும் எழுதி வைத்தால் அரசு ஊழியர்கள் மட்டுமல்லாமல் அலுவலகங்கள் வரும் மக்களும் பயனடைவர். தமிழ்க் கலைச்சொற்களும் திருக்குறளும் எளிய மக்களையும் சென்று சேரும்.

எனவே, அரசு அதிகாரிகளும் ஊழியர்களும் தலைமைச் செயலர் அறிவுறுத்தலை இந்தக் காதில் வாங்கி அந்தக் காதில் வெளியேற்றி விடாமல், ஒரு நாள் எழுதி மறுநாள் மறந்து விடாமல் அன்றாடம் பின்பற்ற வேண்டுகிறோம்!

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை. (திருவள்ளுவர்,திருக்குறள் – 672)

– இலக்குவனார் திருவள்ளுவன் (நன்றி-அகரமுதல இதழுரை-13.05.2023)

## வையத்துள் வாழ்வாங்கு வாழ பலவுரைத்தார்

ஈழத்துச் செயராம பாரதியார்
(மகாதேவ ஐயர் ஜெயராமசர்மா)
மேனாள்தமிழ்மொழிக்கல்வி இயக்குநர்
மெல்பேண் .... ஆத்திரேலியா



நல்லறத்தை நன்னெறியை நாமுணர வைப்பதற்கு
வள்ளுவனார் உவந்தளித்த நல்வரமே குறளாகும்
சொன்னயமும் பொருணயமும் எமக்கீயும் நன்னூலாய்
எஞ்ஞான்றும் விளங்குவது எங்கள் திருக்குறளாகும்

ஆயிரத்து முன்னூற்று முப்பதென்ப தெண்ணல்ல
அத்தனையும் அனைவருக்கும் வாய்த்தபெரும் சொத்தன்றோ
ஈராயிரம் வருடம் நிலைத்திருந்து இம்மண்ணில்
பேரொளியாய்த் திகழுவது வள்ளுவத்தின் பெருமையன்றோ

தமிழன்னை பெற்றெடுத்த தவப்புதல்வர் பலராவர்
அனைவருமே அன்னைக்கு ஆசைமிகு புத்திரரே
என்றாலும் வள்ளுவரை எம்மன்னை அணைத்திடுவாள்
வள்ளுவரால் தமிழமுது வானளவும் சென்றதுவே

இல்லறத்தைச் சொன்னார் துறவறத்தைச் சொன்னார்
நல்லறத்தை அதனூடாய் நயமுடனே பயந்தார்
சொல்லறத்தை வள்ளுவத்தின் உயிராக்கி நின்றார்
சுவையோடு கருத்துரைத்து வள்ளுவத்தை ஈந்தார்
எதுவுரைத்த போதும் அதுவாகி நின்றார்
எவருணர்வும் நோகா கருத்துரைக்க நினைத்தார்
நினைத்த கருத்தை நீதியாய் உரைத்தார்
நிலையாக நிற்கும்படி வள்ளுவத்தைக் கொடுத்தார்

அன்னைக்கும் சொன்னார் அப்பனுக்கும் சொன்னார்
அவரீன்ற பிள்ளைகட்கும் அருமையாய்ச் சொன்னார்
கல்லென்று சொன்னார் நடவென்று சொன்னார்
கல்லாமல் இருந்தால் கண்ணில்லை என்றார்

கற்றுவிட்டால் எழுமைக்கும் துணையாகு மென்றார்
கல்லாமை யாவருக்கும் பொல்லாமை என்றார்
கற்றுவிடு கற்றுவிடு எனவுரைத்து நின்றார்
கடவுளடி பற்றுவதே கற்றபயன் என்றார்

சினமடக்கு என்றார் தீயசெயல் கடிந்தார்
தனக்குவமை இல்லான் தாழ்சேரு என்றார்
மனக்கவலை மாற்ற மருந்துபல சொன்னார்
வையத்துள் வாழ்வாங்கு வாழ பலவுரைத்தார்

'நன்மைதரும் இன்சொல்லை நாடு'எனச் சொன்னார்
நலனற்ற சொல்லனைத்தைம் கேடுஎன வுரைத்தார்
இனிமையுடன் பேசுவதே இன்பமெனச் சொன்னார்
இவையனைத்தும் வள்ளுவத்தின் உயிர்மூச்சு என்றார்

கொல்லாதே என்றார் குடியாதே என்றார்
கொல்லுவதைத் தின்னுவதை விட்டுவிடு என்றார்
நீவளர உயிர்வதைத்தல் நீதியிலை என்றார்
உயிரோம்பி வாழுதல்தான் உயர்வாழ்வு என்றார்
புத்துணர்வுக் கருத்துக்களைப் பொறுப்புடனே சொன்னார்
புலனெல்லாம் தூய்மைபெறப் பொருத்தமாய் புகன்றார்
பொருத்தமில்லாக் கருத்துக்களைப் புறந்தள்ளி நின்றார்
புவிவாழ பொருந்துவதை வள்ளுவமாய்க் கொடுத்தார்

## அழுக்காறு' – பாவமா? பாவியா?

-------முதுமுனைவர் ச.சுப்பிரமணியன்



கட்டுரையாசிரியர் திரு.ச.சுப்பிரமணியன் அறுபதுகளில் கரந்தை நாற்றங்காலின் விளைச்சல்களில் ஒருவர்.தந்தை பெரியார், அறிஞர் அண்ணா, கலைஞர் என்னும் தமிழ்த் தளபதிகளின் தடத்தில் நடப்பவர். என்றாலும் திருக்குறள் பரிமேலழகர் உரையைத் தம் நெஞ்சில் தாங்குபவர்.தமிழின் கவிதைக் கட்டுமானச் சிறப்புக்குச் சங்க இலக்கியத்தையும் இலக்கண அமைதிக்குத் தொல்காப்பியத்தையும் தனித்த அடையாளமாக்கும் இவர், தமது கவிதைத் திறனாய்வுக்குப் பாவேந்தரை மட்டுமே அளவுகோலாகக் கொண்டிருக்கிறார்.

முன்னுரை

சமய அடிப்படையில் உரைகாண்பது, மெய்யியல் அடிப்படையில் உரையெழுதுவது, அரசியல் கொள்கைகளுக்கு இயைய உரைகாண்பது, இலக்கணஅடிப்படையில் உரைகாண்பது, காரணகாரிய அடிப்படையில் உரைகாண்பது, சொற்பயன்பாட்டுக்கான காரணம் கண்டறிந்து உரையெழுதுவது, அதிகாரத்தலைப்பு, இயல், பால் இவற்றின் பிரிவினைக்கேற்ப உரைகாண்பது என உரையறிதிறன் பலவாம். எல்லாநெறிகளிலும் செந்நெறி சென்று குறள்நெறி காணமுயலும் கொள்கையுடையார் சிலர். அச்சிலருள் ஒருவர் பரிமேலழகர். 'நோக்கு' என்னும் பழந்தமிழ்த் திறனாய்வு நெறியைப் பயன்படுத்தி அவர் எழுதிய உரையே திருக்குறள் உரையாகும். குறட்பாவை ஓரலகாகக்கொண்டால், அதனுள் அடங்கிய, அடிகள், சீர்கள், அசைகள் எனத் தனித்தனியாக நோக்கியுணர்ந்தபிறகே அவர் உரையெழுதுகிற ஓர்உருவகப் பொருத்தத்திற்கு அவர்கூறும் விளக்கம் இக்கட்டுரையில் சுருக்கமாக ஆராயப்படுகிறது.

**திறனறியும் குறட்பாவும் உரையும்**

'அழுக்காறாமை'
என்னும்அதிகாரத்தில்எட்டாவதுகுறளாகஅமைந்திருப்பது,

"அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்துவிடும்" (168)

இந்தக்குறட்பாவிற்கு,

'அழுக்காறு' எனச் சொல்லப்பட்ட ஒப்பில்லாத பாவி தன்னைஉடையானை இம்மைக்கண் செல்வத்தைக் கெடுத்து மறுமைக்கண் நரகத்தில் செலுத்திவிடும்.

எனப் பொழிப்புரை எழுதிய பரிமேலழகர் விளக்கவுரையையும் தந்திருக்கிறார்.

**பொழிப்புரை நுட்பம்**

- 'ஒரு' என்பதற்கு உலகவழக்கினையொட்டி ஓர் எண்ணாகக் கொள்ளாது 'ஒப்பில்லாத' என உரைகாண்கிறார்.
- 'திரு' என்பது செல்வத்தைக் குறிப்பதால் அது' இம்மைப்பயன்' எனவும் 'தீயுழி' என்பது நரகத்திற்கோர் பெயராதலின் 'மறுமை' எனவும் கண்டறிகிறார்.
- 'யாரைஅழிக்கும்?' என்பதற்கான செயப்படுபொருள் குறட்பாவில் இல்லாததால் 'தன்னை உடையானை' என வருவித்துக் கொள்கிறார்.

**பரிமேலழகர் கண்ட விளக்கவுரை**

"பண்புக்குப் பண்பிஇல்லையேனும் தன்னை ஆக்கினானை (அழுக்காறு என்னும் பண்பை உடையவனை) இருமையும் கெடுத்தற் கொடுமைபற்றி (பண்பாகிய) அழுக்காற்றைப் (பண்பியாகிய) பாவிஎன்றார்." கொடியானைப்பாவி என்னும் வழக்குண்மையின்."

**விளக்கவுரையில் கண்டஉரையருமை**

- 'யாரைஅழிக்கும்?' என்பதற்கான செயப்படுபொருள் குறட்பாவில் இல்லாததால் 'தன்னை உடையானை' என வருவித்துக் கொள்கிறார். கொண்டு 'உடையானை' என்னும் பொழிப்புரையை விளக்கவுரையில்' தன்னை ஆக்கினானை' என மாற்றிக் கொள்கிறார். அதாவது 'அழுக்காறு' என்னும் பண்பைத் தானே உருவாக்கி அதனை உடைமையாகக் கொண்டானாம்.
- 'அழுக்காறு' என்னும் சொல்லுக்குப் பரிமேலழகர் 'பிறர் ஆக்கம் பொறாமை' (35) என்று பொருள் வரையறை செய்கிறார். 'பிறர் ஆக்கம் கண்டவழி மகிழ்ச்சியடையவேண்டிய ஒருவன் பொறாமைப்படுகிறான் 'என்றால் அந்தப் பண்பு அவனால் உருவாக்கிக் கொள்ளப்பட்டது என்பது பெறப்படும். படவே அழுக்காறு என்பது செம்பில் களிம்பு போலல்லாது மனிதன்தானே தேடிக்கொண்ட பண்பு என்பதை அறியமுடியும். அவன் தேடிய செல்வம் அவனைக் காப்பதற்குத் துணை நிற்க வேண்டியதிருக்க, அவன் அழிவுக்குக் காரணமாகிறது என்பது நுண்ணியம். பண்பைப் பண்பியாகத் திருவள்ளுவர் உருவகித்ததற்கான காரணத்தைத் தனக்கே உரிய புலமையாற்றலால் விளக்கிக்காட்டுகிறார்.
- எதிர்மறைப்பண்புகள் காரணமாகக் கொடுஞ்செயலைச் செய்தாரைப் 'பாவி' என அழைப்பது உலக வழக்கு. அவ்வழக்கின் அடிப்படையிலேயே திருவள்ளுவர் அழுக்காறுடையானைப் 'பாவி' என்றாராம். அதாவது அழுக்காற்றை உடையவனைத் தீயவன், கேடன், கயவன் என்றெல்லாம் அழைக்காது அவனைப்' 'பாவி' என ஏன் அழைத்தார் என்பதற்கான காரணத்தை வள்ளுவர் உலக வழக்கினால் அறிந்தார் என்பதாம்.

**பரிமேலழகர் கண்ட உரையருமை**

ஓர் உருவகத்தின் காரணத்தை ஆராய்ந்து எழுதியிருக்கும் அழகருடைய உரைமாண்பு இப்படி அமைகிறது. 'அன்பு' என்பது பண்பு. அதற்குச் செயல்கிடையாது. அதாவது அன்பு தானாகச் செயல்படாது. அந்தப் பண்பைத் தனக்கு இயல்பாகக் கொண்டவன்தான் அதன் பெருமையைத்தன் செயல்வழி உணர்த்தமுடியும். சான்றாக 'இரக்கம்' என்ற உயரிய பண்பு

வள்ளற்பெருமான் வழியாகச் செயல்பட்டுப் பெருமையுற்றது. ‘நன்மை’ செயல்படாது. நல்லவன்தான் செயல்படுவான். ‘தீமைசெயல்படாது’ தீயவன்தான் செயல்படுவான். எனவே பண்புக்குப் பண்பிஇல்லை. ‘அழுக்காறு உடையான் கண்ணேயே’ (135) ஆக்கம் சேராதேயன்றி அழுக்காற்றிடம் சேராது என வள்ளுவர் கூறவில்லை என்பதையும் நோக்குதல் வேண்டும்.

ஆனால் திருவள்ளுவர் ‘பண்பு செயல்படும்’ என்று கூறுகிறார். அதாவது பண்பே பண்பியாகச் செயல்படும் என்கிறார். பண்பு தானாகச் செயல்படுமா? இதுதான் வினா? ‘படாது’ என்பது உண்மை. சில நேர்வுகளில் பண்பு பண்பியாகச் செயல்படும் என்பது திருவள்ளுவர் கருத்து. இந்தக் கருத்தினைத் திருவள்ளுவர் முன்னெடுக்கிறபோது அதற்கான விளக்கத்தை அவர் கூறினாரிலர்.

‘பண்பி இதனைச் செய்வான்’ எனக்கூறாது ‘பண்பே இதனைச் செய்யும் (விடும்) எனக் கூறியமைகிறார் திருவள்ளுவர். இப்போது உரையாசிரியருக்குப் பொறுப்பு கூடுதலாகிறது. நூலாசிரியரின் சொற்பயன்பாட்டுக்கு விளக்கம் சொல்லவேண்டியதுதான் உரையாசிரியர் பணியே தவிர நூலாசிரியர் பதிவில் குறைகாண்பது நெறியாகாது. ‘அழுக்காறு’ என்பது ஒரு பண்பு. அது பண்பி அல்ல. பாவம் என்பது பண்பு. ‘பாவி’ என்பவன் பண்பி. பாவத்தைச் செய்பவன்தான் பாவி. ஆனால் திருவள்ளுவர் அழுக்காற்றையே ஒரு பாவி என்கிறார். இலக்கணப்படி இது உருவகம். ஆனால் பொருளுணர் நெறிப்படி இதுசரியன்று. இதனைக் கூறுகிறவர் தெய்வப்புலவர். ஒரு நுட்பமுமின்றி இவ்வாறு கூறியிருக்கமாட்டார். அந்த நுட்பம் என்ன? பண்புக்குப் பண்பி இல்லை என்பது உண்மைதான். ஆனால் திருவள்ளுவர் மானுடத்தின் எதிர்மறைப் பண்புகளில் பொறாமையை அதாவது பிறர்ஆக்கம் கண்டவழி வயிற்றெரிச்சல்படுகின்ற அந்த அழுக்காற்றைச் சாதாரண எதிர்மறைப் பண்புகளில் ஒன்றாகக் கொள்ளவில்லை. அதனைத் தனியாகப் பிரித்து அதன் கொடுமையைச் சுட்டுகிறார். மற்ற எதிர்மறைப் பண்புகள் பிறருக்கு எதிராகவே செயல்படும். ஆனால் அழுக்காறாகிய இப்பண்பு கொண்டவனுக்கே எதிரியாகும். மற்ற பண்புகள் செயல்பட ‘பண்பி’ தேவை. இதனைச் செயல்படுத்தத் தனியாக ஒருஆள் தேவையில்லை. அந்தப் பண்பே அந்த அழிவுச் செயலை மேற்கொள்ளும். யார்மீது? எவன் பொறாமை கொண்டானோ அவன்மீதே அது தன் தாக்குதலைத் தொடுக்கும். கம்பியில்லாமலேயே பாய்கின்ற மின்சாரம் அழுக்காறு!

‘ஒரு’ என்ற சொல்லுக்கு ஒப்பற்ற என அழகர் உரையெழுதினார். ஏனைய பாவங்களின் செயல்படு எல்லை இம்மை மட்டுமே. அழுக்காறு மறுமையையும் அழிக்கும் பேராற்றல் உடையது என்னும் அதன் ஒப்பின்மையாகிய வலிமை நோக்கி. திருவள்ளுவர் பண்பியில்லாத பண்பைப் பண்பியாக்கினார். அதாவது பாவத்தைப் பாவியாக்கினார். அழகர் அதற்கான காரணத்தைக் கண்டறிந்து எழுதினார்.

**பண்புகள் இடம் மாறினால்**

எதிர்மறைப் பண்பாகிய அழுக்காற்றினை உடைமையாக்கி, இருக்க வேண்டிய உடன்பாட்டுப் பண்பாகிய ஒழுக்கத்தை எதிர்மறையாக்கியும் வள்ளுவர் சிந்தித்திருக்கிறார். அதாவது ஒருவனுக்கு இருக்க வேண்டிய பண்பு இல்லாமல் போனால் என்ன ஆகும்? என்று சிந்தித்த வள்ளுவர், ‘இருக்கக்கூடாத பண்பு உடைமையானால் என்ன ஆகும்?’ என இருவகையாகவும் சிந்தித்திருக்கிறார் என்பதாம்.

“அழுக்காறு உடையான்கண் ஆக்கம்போன்று இல்லை
ஒழுக்க மிலான்கண் உயர்வு’ (135)

உடன்பாட்டுப் பண்புகளை உடைமைகளாகச் சொல்லுவது வள்ளுவம். ஆனால் இந்தக்குறட்பாவில் ‘அழுக்காறுடையான்’ என எதிர்மறைப்பண்பு உடைமையாகக் குறிக்கப்பட்டது. மேலும் உடைமையாக இருக்க வேண்டிய ஒழுக்கம் ‘ஒழுக்கமிலான்’ என எதிர்மறையால் குறிக்கப்பட்டது காண்க. அதனால் இருவழியும் ஒருவனுக்குக் கேடு என்பதை மிகநுட்பமாக வள்ளுவர் குறித்திருக்கிறார். இவற்றையெல்லாம் உள்வாங்கியே பரிமேலழகர் உரை அமைந்திருக்கிறது என்பதை உணரலாம்.

**பரிமேலழகரின் நினைவாற்றல்**

‘பண்பு’ ஒரு செயலூக்கி என்பதைப் ‘பாவி’ என்னும் சொல்லால் குறித்த வள்ளுவத்தைத் தம் உரையாற்றலால் உணரவைத்த பரிமேலழகர் இதனையொத்த இன்னொரு சொல்லுக்கும் இவ்வாறே உரையெழுதுகிறார். “இன்மை என ஒருபாவி’ (1042) என்பதற்கு ‘மேல் ‘அழுக்காறெென ஒரு பாவி’ (168) என்புழி உரைத்தாங்கு உரைக்க” என்று நினைவூட்டுகிறார். இந்த இரண்டு பாடல்களுக்கும் இடையே தொள்ளாயிரம் பாடல்களுக்குமேல் இருக்கின்றன என்பதையும் அக்காலக்கல்விமுறை, சுவடிவழிக்கல்வியே என்பதையும் உட்கொண்டால் பரிமேலேழகர் உட்பட உரையாசிரியர்கள் அனைவர்தம் நினைவாற்றலையும் அறிந்துகொள்ளமுடியும்.

**நிறைவுரை**

பண்பி தான் செயல்படும் என்பது உண்மையேயாயினும் சிலநேர்வுகளில் பண்பே பண்பியாகச் செயல்படும். அது நேர்முகமானால் நன்மை. எதிர்முகமானால் பேரழிவு. ‘அழுக்காறு’ என்னும் பண்பைப் பண்பியாகத் திருவள்ளுவர் உருவகம் செய்தது ஏன் என்பதற்குப் பரிமேலழகர்கண்ட உரைநுட்பம் இதுதான். பரிமேலழகர் உரையால் பண்புக்கும் செயலாற்றல் உண்டு என்று அறிந்துகொண்ட நாம் எண்ணங்களைத் தூய்மையாக வைத்துக் கொள்வதுதான் வள்ளுவரால் அடையவேண்டிய பயன். ‘மனம்போல்வாழ்வு என்பதும் ‘உன் மனசாரச் சொல்லு’ என்பனவும் அவை! எண்ணங்கள் செயலுக்கு மூலம் மட்டுமன்று. பலநேர்வுகளில் அவையே செயலூக்கியுமாகும்! வள்ளுவத்திற்கு எழுதிய அழகரின் உரையில் குறைகள் இருக்கலாம். ஆனால் இத்தகைய அருநெல்லிக்கனிக்குறிப்புக்களும் உண்டு!



# மா. இராசமாணிக்கம் என்னும் மாபெருந்தமிழ்ஆளுமை

-----மறைமலை இலக்குவனார்

மா. இராசமாணிக்கம்அல்லது இராசமாணிக்கனார் (மார்ச் 12, 1907 - 26 மே, 1967) என்னும் மாபெருந்தமிழ்ஆளுமையைத் தமிழுலகு தெளிவுறப் புரிந்துகொண்டதாகத் தெரியவில்லை.

"பத்தோடு பதினொன்று அத்தோடு இதுவும் ஒன்று" என்று பட்டியலிடுகின்ற வகையில் அவரைக் குறிப்பிடுவோர் அறிவிருந்தும் அவர் பெருமை அறியாதாரே.

பத்துவயதிலேயே தந்தையாரை இழந்து துன்புற்றாலும், "தந்தையொடு கல்விபோம்" என்னும் முதுமொழியைப் பொய்ப்பிக்கும் வண்ணம் தமது அண்ணன் இராமகிருட்டிணரால் கல்வி பயிற்றுவிக்கப்பட்டார். கர்நூல், சித்தூர், திண்டுக்கல், நன்னிலம், தஞ்சாவூர் என ஊர்கள் பலவற்றிற்கு அவர் அலைக்கழிக்கப்பட்டாலும் கல்வி பயில்வதில் தணியா வேட்கையுடன் அறிவின் விரிவும் உள்ளத்தின் கனிவுமே குறிக்கோளாய்க் கொண்டு கற்றார். அவர் கற்ற கல்வி இனத்திற்கு எழுச்சியூட்டி மொழிக்கு மறுமலர்ச்சி நல்கும் திறத்தை அவர்க்கு அளித்தது.

மௌனசாமி மடத்தின் இளந்துறவி கற்பித்த சித்தர் பாடல்கள் அவருள்ளத்தில் பகுத்தறிவையும் சுயமரியாதையையும் இளம்வயதிலேயே பதியச்செய்தன. கரந்தைக்கவியரசு வேங்கடாசலம்பிள்ளையின் வழிகாட்டுதல் சங்கச் சான்றோர் செய்யுளையெல்லாம் ஊன்றிக் கற்க உறுதுணையாயின. தமிழவேள் உமாமகேசுவரம்பிள்ளை அவர்களின் அன்பும் பரிவும் இளம்வயதிலேயே தமிழ்ச்சான்றோர் நட்பையும் நல்லுறவையும் பெறத் துணைநல்கின. சென்னை வந்து, வண்ணாரப்பேட்டையிலுள்ள தியாகராயர் நடுநிலைப் பள்ளியில் தமது இருபத்தொரு வயதில் தமிழாசிரியராகப் பொறுப்பேற்றார். அங்கு கண்ணம்மாள் என்பவரைத் தன் 23ஆவது வயதில் மணந்தார். 1928 - 1936 வரையில் தியாகராயர் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றிய இவர் மாணவர்க்கான பாடநூல்களையும் துணைப்பாடநூல்களையும் எழுதினார். அப்போது இவரின் கல்வித்தகுதி பத்தாம்வகுப்பு மட்டுமே என்பது குறிபிடத்தக்கது.1935-ஆம் ஆண்டில் இவர் வித்துவான் பட்டம் பெறும்முன்பே இவர் படைத்த நூல்கள், பல வித்துவான்களை உருவாக்கத் துணைபுரிந்தன. தியாகராயர் நடுநிலைப்பள்ளி, முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளி, சென்னை விவேகானந்தர் கல்லூரி, மதுரைத் தியாகராசர் கல்லூரி, சென்னைப் பல்கலைக்கழகம் என இவரது பணியிடங்கள் மாறினாலும் உயர்நிலைப்பள்ளித் தமிழாசான், கல்லூரி விரிவுரையாளர், தமிழ்த்துறைத்தலைவர், பல்கலைக்கழகப் பேராசிரியர் எனப் பதவிகள் மாறினாலும் இவரது தமிழ்த்தொண்டு எவ்வித மாற்றமுமின்றி ஊக்கமும் ஊற்றமும் கொண்டு தமிழினத்தை ஏற்றமும் எழுச்சியும் பெறத் தூண்டுகோலாய் விளங்கியது.

'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' எனச் சான்றோரிடம் இவர் கற்ற கல்வியைக் கொண்டு கற்போர் உள்ளத்தில் ஐயமும் திரிபும் அகற்றும் வண்ணம் நூல் பல படைத்தார். சமுதாயத்தில் நிலவும் கசடு அற்றுப் போகும் வண்ணம் புதிய ஒளி பாய்ச்சித் தன்மதிப்புணர்வு கொண்டு சமுதாயம் தலைநிமிரும் வகையில் தொண்டாற்றினார்.

மா.ரா. என்னும் ஈரெழுத்தே இவரைக் குறிக்க அன்றைய தமிழ்நாட்டில் புகழுடன் பொலிந்தது. இந்தப் பெயரைக் கேட்டால் தமிழ்நெஞ்சங்களில் இவரது "தமிழர்திருமணத்தில்தாலி" என்னும் நூலே கிளர்ச்சியூட்டும் எண்ணத்தை ஊற்றெடுக்கச்செய்யும்.

தமிழர் திருமணத்தில் தாலிகட்டுதல் கி.பி. பதினோராம் நூற்றாண்டில் ஏற்பட்ட புதிய பழக்கமே என்பதனையும் பண்டைத் தமிழகத்தில் இப்பழக்கம் இல்லை என்பதனையும் விரிவான பல சான்றுகளுடன் இவர் விளக்கியபோது தமிழ்நாடே அதிர்ந்தது. பழமைப்பித்தர்கள் இவரது கருத்தை எதிர்த்துரைக்க முயன்று சான்றுகள் இன்றி இடர்ப்பட்டனர். சங்க இலக்கியத்திலிருந்து நாச்சியார் திருமொழிவரை அடுக்கடுக்காகச் சான்றுகளை இவர் தொகுத்துரைத்துத் தமது நிலைப்பாட்டின் மெய்ம்மையை நாட்டினார். அதுவரை கல்வி என்பது கற்று, புரிந்துகொண்டு விளக்கத்துடன் மீண்டும் கற்பித்தல் என்னும் பொம்மலாட்டக் கூத்தாக இருந்தது. ஆனால் கட்டுடைக்கும் கலையின் முன்னோடியாகத் திகழ்ந்த மா.ரா. கல்வியைத் தகர்ப்புமையநோக்குக் கொண்ட அறிவியக்கமாக மாற்றினார். காலங்காலமாகப் படிந்துகிடக்கும் பழமைப்பாசியை நீக்கி, கற்போர் உள்ளங்களில் அகற்றமுடியாமல் கப்பிக்கொண்டிருக்கும் அழுக்கைப் போக்கிப் பகுத்தறிவுச்சூரியனின் உதயத்தால் புதியவிடியலைப் புலரவைக்கும் பெரியாரின் நெறியில் உழைக்கும் பொருத்தமான கல்வியாளராக மா.ரா. தமிழ்கூறுநல்லுலகெங்கும் புகழுடன் உலாவந்தார்.

தந்தை பெரியாரின் தன்மானஇயக்கம் பரந்துபட்ட அளவில் பார்ப்பனமறுப்பு, சாதிமறுப்பு, சடங்குமறுப்பு என்பவற்றைப் பரப்புரை செய்து மூடத்தனத்தின் முடைநாற்றம் போக்கப் பாடுபட்டது. இதனைப் போலவே தாலிமறுப்புத் திருமணங்களையும் ஏற்படுத்திச் சமூகத்தில் மிகப் பெரிய விழிப்புணர்வை ஏற்படுத்தியது. பெரியார் தாலிஅணிவது தேவையற்றது என்பதை வலியுறுத்திவந்தாலும் தாலிஅணியும் திருமணங்களையும் தலைமைஏற்று நடத்திவைத்துள்ளார். பெண் என்பவள் ஆணின்சொத்து என்ற பிற்போக்கு அடிமைக்கருத்தியலைத் தகர்த்தெறிவதே அவரது முதன்மை நோக்கமாக இருந்தது. அவரது பேச்சையே மேற்கோளாகக் காணலாம்:

“இப்போது இங்குப் பெண்ணுக்குத் தாலிகட்டப்பட்டது. இதற்கு என்னதான் தத்துவார்த்தம் சொல்லப்பட்டாலும் இந்தத் தாலி கட்டுவதானது. ‘இந்தப் பெண், இந்த மாப்பிள்ளையினுடைய சொத்து’ என்கிற அறிகுறிக்காகத்தான். இந்தத் தத்துவம் சுலபத்தில் மாறிவிடும் என்று நான் கருதமுடியவில்லை. தாலி கட்டாத கலியாணம் நடந்தபோதிலும் மணப்பெண் மணமகனுடைய சொத்து என்பது மாறிவிடும் என்றுநான் நினைக்கமுடியவில்லை” (பெரியார்ஈ.வெ.ரா. சிந்தனைகள், தொகுதி 1-3 (சமுதாயம்), பக்கம் 249)

பெரியாரின் பரப்புரைக்கு வலுவான அடித்தளமாக இராசமாணிக்கனாரின் ஆராய்ச்சி அமைந்துள்ளதல்லவா?

அறிஞர் மா.ரா. தமது “தமிழ்இனம்” என்னும் நூலில் பண்டைத் தமிழகத்தில் தொழிலின் அடிப்படையிலும் வாழ்நிலத்தின் அடிப்படையிலும் அரசனால் பெற்ற சிறப்பின் அடிப்படையிலும் வந்த பெயர்கள் பின்னர் சாதிகள் தோன்றக் காரணமாகிவிட்டன என்னும் கருத்தை முன்மொழிகிறார்.

“இங்ஙனம் தொழில் பற்றியும், இடம் பற்றியும், சிறப்புப் பற்றியும் தோன்றிய பெயர்கள் எவ்வாறோ பிறவி பற்றியவை ஆகிவிட்டன. சாதிகளை ஒழித்துச் சமுதாயத்தை ஒருநிலைக்குக் கொண்டுவரமுயன்ற பௌத்தசமயமும் சமணசமயமும் நாட்டில் வீழ்ச்சியுற்றன. வடக்கே ஆட்சியிலிருந்த “ஒருகுலத்துக்கொரு நீதி” கூறும் மனுதர்மசாத்திரம் தென்னாட்டிலும் கால் கொண்டது.”

என்னும் மா.ரா. அவர்களின் விளக்கம் சாதி இடையில் வந்தது என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

1948-ஆம் ஆண்டு இவர் வெளியிட்ட “தமிழ்நாட்டுவடஎல்லை” என்னும் நூலில் பண்டைத்தமிழ்இலக்கியங்களிலும் பிற்கால இலக்கியங்களிலும் வேங்கடம் தமிழ்நாட்டின் வடக்கு எல்லை என்பது தெளிவுற மொழியப்பட்டுள்ளதைப் பல்வேறு சான்றுகளுடன் விளக்குகிறார். மொழிவழி மாநிலம் பிரிக்கப்படும்போது தமிழ்நாட்டின் வடக்குஎல்லையாக வேங்கடம் அமையவேண்டும் என்பதனை வலியுறுத்துவதே இந்நூலின்நோக்கம்.இந்நூலில் கூறப்பட்டுள்ள பல்வேறு சான்றுகளை அடிப்படியாகக் கொண்டு அன்றிருந்த சென்னை மாநிலஅரசு வேங்கடத்தை வடஎல்லையாகப் பெற்றிருக்கலாம்; பெற்றிருக்கவேண்டும்.ஆனால் செய்யத்தவறிவிட்டது.

இவ்வாறு மா.ரா. அவர்களின் ஒவ்வொரு நூலும் தமிழ்இனத்தின் விடிவுக்காகவும் தமிழ்மொழியின் மறுமலர்ச்சிக்காகவும் தன்மானஉணர்வு மேலோங்கித் தமிழ்ச்சமுதாயம் மேன்மைபெறுதற்காகவும் படைக்கப்பட்டது.

ஆராய்ச்சித்துறையில் பலமுன்னோடி நூல்களை இவர் படைத்துள்ளார்.

01. சோழர்வரலாறு

02. இலக்கியஅமுதம்

03. காலஆராய்ச்சி

04. நாற்பெரும்புலவர்கள்

05. பல்லவப்பேரரசர்

06. பல்லவர்வரலாறு

07. பெரியபுராணஆராய்ச்சி

08. புதியதமிழகம்

09. சேக்கிழார் - ஆராய்ச்சிநூல்

10. சேக்கிழார்

11. சைவசமயவளர்ச்சி

12. சைவசமயம்

13. சிலப்பதிகாரக்காட்சிகள்

14. மொஹஞ்சதரோஅல்லதுசிந்துசமவெளிநாகரிகம்

15. தமிழ்அமுதம்

16. தமிழ்இனம்

17. தமிழ்நாட்டுவடஎல்லை

18. தமிழ்மொழிஇலக்கியவரலாறு

19. தமிழகஆட்சி

20. தமிழகக்கலைகள்

என்று இவரது ஆராய்ச்சிநூல்களின் பட்டியல் விரிந்துகொண்டேசெல்லும். ஒவ்வொரு நூலும் தனது தலைப்பில் இதுவரை கூறப்பட்டுள்ள கருத்துகளைத் தகர்த்துப் பல புதிய கருத்துகளைக் கூறுவனவாக அமைந்துள்ளமை இந்நூல்களைக் கற்றால் நன்குபுலப்படும்.வாழ்நாளெல்லாம் ஆராய்ச்சியே இவரது குறிக்கோளாகத் திகழ்ந்தது.

“இவர் மறைந்த சில ஆண்டுகளுக்குப் பின்னர் சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தரான நெ. து.சுந்தரவடிவேலு சென்னைப்பல்கலைக்கழகத்தில் எங்கோ ஓரிடத்தில் பூட்டி வைக்கப்பட்டிருந்த இவ்வுரைகளைத் தற்செயலாகக் கண்டுஎடுத்து பல்கலைக்கழகம் வெளியிட ஏற்பாடு செய்தார்.” என்னும் செய்தி குறிப்பிடத்தக்கது.

எதிர்நீச்சலிட்டு தம்மை வளர்த்துக்கொண்டாற் போலவே தமிழ்ச்சமுதாயத்தையும் வளர்க்கப் பாடுபட்டவர் இராசமாணிக்கனார் என்றும் காக்கை பிடிக்கத் தெரியாத உண்மைத்தமிழராக இருந்த காரணத்தால் இணைப்பேராசியர்(ரீடர்) பதவியிலேயே இருந்தார் என்றும் நெ.து.சுந்தரவடிவேலு குறிப்பிட்டுள்ளார்.

தாம் பாடுபட்டு எழுதிய பத்துப்பாட்டு உரையை வெளியிடவேண்டித் தாம் பணியாற்றிய சென்னைப்பல்கலைக்கழகத்திடம் ஒப்படைத்ததற்குப் பதில் இராசமாணிக்கனாரே வெளியிட்டிருந்தால் அவர் வாழ்ந்தகாலத்திலேயே அவருக்குப் பணமாவது கிடைத்திருக்கும் என்று அவர் வருத்தத்துடன் தெரிவித்துள்ளார்.

சென்னைப்பல்கலைக்கழகம் இவர் எழுதிய பத்துப்பாட்டு உரைநூலை யாரும் காணாதவண்ணம் பூட்டிவைத்துவிட்டது என்றும் பிறகு பதவியிலிருக்கும்போதே இராசமாணிக்கனார் மாரடைப்பால் இறந்தார் என்றும் குறிப்பிடுகின்றார்.

இதனைத் தமிழ்ச்சமுதாயத்திற்குக் களங்கமாகத் துணைவேந்தர் நெ.து. சுந்தரவடிவேலு கருதியுள்ளார். ஆனால் இதுதான் தமிழ்ச்சமுதாயத்தின் அடையாளம் எனக் கருதி ஆறுதல் அடைவோம்.

ஆராய்ச்சி என்னும் பெயரில் உப்பரிகையில் ஏறி ஒதுங்கிப்போய்விடாமல், தனது ஆராய்ச்சி, சமுதாயத்தை எழுச்சிபெறச் செய்வதாக விளங்கவேண்டும் என்னும் ஒரேநோக்கத்துடன் உழைத்த ஒப்பற்ற ஆய்வாளர் மா. இராசமாணிக்கனாருக்கு இணையாக வேறுமொழிகளில் யாரையும் கூறஇயலாது.

மக்களை நோக்கி மக்கள் பயனுற உழைத்த மாபெரும் தமிழ்ஆளுமை மா.இராசமாணிக்கரைப் பெருமிதத்துடன் நினைவுகூர்வோம்.

குவலயமெங்கும் குறள்நெறி பரப்பும் நான்கு இணைய இதழ்கள்

ஆண்டுக் கட்டணம் வேண்டாம்!
நன்கொடை வேண்டாம்!
படியுங்கள்!பகிர்ந்திடுங்கள்!

எதிர்வரும் 1/6/23 அன்று வெளிவரவிருக்கும் ''குறள்நெறி'' கலைஞர் நூற்றாண்டுச் சிறப்பிதழாக வெளிவரவுள்ளது.

கலைஞர் குறித்த

கவிதை,

கட்டுரை,

ஆய்வுரை,

நிகழ்ச்சித்.துணுக்கு,

நினைவுக்குறிப்பு,

உணர்வுத்தெறிப்பு,

உணர்வோவியம்,

ஆளுமைவனைவு

ஆகியவற்றுள்

ஒன்றை அனுப்புமாறு

வேண்டப்படுகின்றனர்.

ஏ4 அளவில் நான்கு பக்கங்களுக்கு

மிகாமல் ஒருங்குறி அச்சுருவில்

கணியச்சு செய்து

சொல்கோப்பு(Word format) இல் அனுப்புங்கள்.

anjal @ kuralvirtual.com

அல்லது

maraimalai@yahoo. com

என்னும் மின்னஞ்சல்

முகவரிக்கு

அனுப்புங்கள்

25.5/23-ஆம் நாளுக்குள்

அனுப்புக.



# குறள்நெறி

மின்னிதழ்:61 "குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்" தி.வ.ஆ.2054 வைகாசி-18-- சூன்-1-பொ.ஆ.-2023

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



## தமிழினத் தலைவர் கலைஞர் நூற்றாண்டுச் சிறப்பிதழ்

குறள்நெறி போற்றிக் குடியர சாள்வோய்!
தமிழ் அன்னையின் தலைமைத் தொண்ட!
தமிழக மக்களின் தனிப் பெருந்தலைவ!
பிற்பட்டோரின் பெறலரும் புரவல!
**கலைஞரின் தமிழாசான் சி.இலக்குவனார்**

















கலைஞரின் ஆசான் பேராசிரியர் சி.இலக்குவனார் 3-6-1972-ஆம் நாள் கலைஞரின் நாற்பத்தெட்டாம் ஆண்டு பிறந்தநாள் விழாவின்போது நேரில் வழங்கிய வாழ்த்துப்பா

## வாழ்க பல்லாண்டு வாழ்க

--- டாக்டர் சி. இலக்குவனார்

கடல்சூழும் ஞாலத்தில் காணுகின்ற மொழிகள்தமை
அடலின்றிப் பெற்றெடுத்த அன்னைமொழி சீர்பெறவே
உடலோடு உயிருடைமை அனைத்தினையும் உரித்தாக்கிக்
கெடலின்றி உழைத்துவரும் கெழுதகைமை பூண்டுள்ள
நடமாடும் பல்கலையாய் நற்றிறனாய் நானிலத்தில்
படல் ஒல்லாப் புகழ்பரப்பும் பாவலராம் காவலரே!

இளமை முதல் தமிழ்த்தொண்டில் ஈடுபட்ட ஏந்தலாய்
வளமைமிகு கலைகளையே வாய்த்திடுநல் கருவிகளாய்
உளமதனில் அயர்வின்றி உறுத்துவரும் தமிழ்ப்பகையைக்
களமதனில் வென்றுவரும் கலைஞர் எனும் பெரியீரே!

பெரியாரின் வழிச்சென்று பேரறிஞர் அண்ணாவின்
உரிமைமிகு தம்பியராய் உயர்திறல்கள் பலபெற்றே
விரியுலகம் உமைநோக்க வீற்றிருக்கும் முதலமைச்சாய்
பரிவுடனே நாடாளும் பண்புமிகு அருட்செல்வ!



பேராசிரியர் சி.இலக்குவனார் வேலூர்ச் சிறையிலிருந்து வந்தபின் கலைஞர் மதுரைக் குறள்நெறி அச்சகத்துக்கு வந்து சந்தித்தார்

நாற்பதின்மேல் எட்டாண்டை நண்ணுகின்ற நன்னாளில்
ஏற்பதுபல் புகழார்ந்த ஏற்றமிகு நல்வாழ்த்தே
நோற்பதுபோல் கடனாற்றும் நும்பெருமை சொலப்புகுந்தால்
தோற்பதுயாம்; சொலற்கரிய பல்புகழ! சொலல்வல்ல!

முன்னேற்றக் கழகத்தின் முடிசூடா மன்னன் நீ;
இன்னினிய பலநூல்கள் எழுதுகின்ற அறிஞன் நீ;
பன்னரிய நாடகங்கள் பரவுகின்ற நடிகன் நீ;
கன்னல் எனும் நற்பாக்கள் கட்டுரைக்கும் புலவன் நீ

கல்லக்குடி கொண்டோய் நீ;-தேர்தலில்
வெல்லப்புகழ் கொண்டோய் நீ;-இந்திப் பேயை
கொல்லச்சூள் கொண்டோய் நீ; - வறுமைப்பிணி
செல்லப்பணி பூண்டோய் நீ; - பிச்சைக்காரர்
மறுவாழ்வு காண்பாய் நீ; - எனவே

அன்பு நீ; - உழைப்பு நீ;
அருள் நீ; - ஊக்கம் நீ;
இன்பம் நீ; - தொண்டு நீ;
எழில் நீ; தூய்மை நீ;
புதுமை நீ; - தமிழ் நீ;
பழமை நீ; - தாய் நீ;
புரட்சி நீ; - வாய்மை நீ;
பொறுமை நீ; - வண்மை நீ;
எனவாங்கு –
செந்தமிழ் நாடு செய்தவப் பயனாய்
முத்தமிழ் போற்ற முத்து வேலரும்
அஞ்சுகம் அம்மையும் அன்பின் ஈன்ற
நற்றமிழ்ச் செல்வ! நாடாள் பாவல!
உலகம் போற்றும் உயரிய புலவ!
குறள்நெறி போற்றிக் குடியர சாள்வோய்!
தமிழ் அன்னையின் தலைமைத் தொண்ட
தமிழக மக்களின் தனிப் பெருந்தலைவ!
பிற்பட்டோரின் பெறலரும் புரவல!
முற்பட்டோரின் முதன்மைக் காவல!
உரிமைத் தமிழகம் உயர்ந்து விளங்கி
எல்லா நாடும் இனிதே போற்றிட
பசியும் பகையும் பாரில் நீங்கிட
வசியும் வளனும் வந்து பொருந்திட
இன்பத் தமிழ்மொழி இனிதே ஆண்டிட
இல்லத் தரசி இனிய நற்றுணை
தயாளு அம்மையின் தண்ணகை ஒளியுடன்
வாழ்க பல்லாண்டு வாழ்க
சூழ்கடல் உலகில் தொல்தமிழ் போன்றே!
- டாக்டர் சி. இலக்குவனார்
(3-6-1972-ஆம் நாள் கலைஞரின் நாற்பத்தெட்டாம்
ஆண்டு பிறந்தநாள் விழாவின்போது நேரில்
வழங்கிய வாழ்த்துப்பா)



## பைந்தமிழ் காத்த தமிழ்த்தென்றல்!

- முனைவர் கடவூர் மணிமாறன்

ஆரூர்க் கலைஞர் தமிழினத்தின்
அடங்க மறுத்த போராளி
பாரோர் போற்றும் சொற்கொண்டல்
பைந்தமிழ் காத்த தமிழ்த்தென்றல்!
இனத்தின் மேன்மைக்கு உழைத்திட்டார்;
இந்தித் திணிப்பை எதிர்த்திட்டார்
மனத்தில் பெரியார் அண்ணாவை
மாண்புற இருத்திய மதிவல்லார்!
சாதிகள் மதங்களைச் சாடியவர்
சங்கத் தமிழைப் பாடியவர்
வேதியர் அண்டப் புளுகுகளை
விரிவாய் அவையில் முழங்கியவர்!
இலக்கியக் கொடையை அளித்திட்டார்
இடஒதுக் கீட்டால் பயன்சேர்த்தார்!
உலகத் தமிழர் உளம்நின்றார்
ஓயுதல் இன்றிக் களம்வென்றார்!
மடமை நோய்க்கு மருந்தளித்தார்;
மாநில உரிமைக் குரல்தந்தார்;
கடமை கண்ணியம் நெறிநின்றே
காவல் அரணாய் ஒளிர்ந்திட்டார்!
ஏச்சுரை நகைத்தே ஒதுக்கியவர்
எதற்கும் அஞ்சார் நம் கலைஞர்
பேச்சில் எழுத்தில் பெரும்புலவர்
பேதையர் மூடரின் நெருப்பிவரே!



நம் எண்ணத்தில் கலந்துள்ளவர்

----- கவிஞர் பொன்னடி

இன்றைக்கும் மாண்புரு வாகவே இருப்பவர்
ஏறுநடை கலைஞர்பிரான்: - உயர்
இன்பத்தின் தமிழ்ச்சுவை யானவர்தன்மான
இலக்கியம் கலைஞர்பிரான்! - நித்தம்
குன்றாத புகழ்ஒளிக் கோமக னானவர்
குலையாநம் கலைஞர்பிரான் - கொண்ட
கொள்கையின் மறவர்க்கே இலக்கண மானவர்
கொஞ்சுதமிழ்க் குரலின்பிரான்:

அஞ்சாமை என்ற ஓர் சொல்லுக்கு இந்நாளில்
அடையாளம் இவர் இவர்தான்! - சூழ்ந்த
அறியாமை இருளோட்டும் தலைவரோ யாரெனில்
அறிவொளி இவர்! இவர்தான்! - எங்கும்
கெஞ்சாமை, துஞ்சாமை, எனும்இரு கண்கொண்ட
கிளர்ச்சியின் முழக்கமிவர்தான்! - வாழ்வின்
கீழ்மையின் இருளோட்டத் துடிப்போடும் மேலெழும்
கிழக்கொளி இவர்: இவர் தான்! -

புன்மைகள் விரட்டிடும் போர்க்குணத் தோழர்கள்
புடைசூழப் போகின்றவர்: - கொடும்
பொல்லாங்கே தொழிலான அரசியல் களத்தினில்
சாகசம் புரிகின்றவர் - நம் தென்னகத்
திருநிலம் தென்போடு நடைபோடத்
தன்னையே தருகின்றவர் – இன்றும்
திருந்தாக சமூகத்தின் நலம்பேணும் ஓர் அரு
மருந்தாகி வருகின்றவர்!

ஆன்றவிந்(து) அடங்கிய அறிஞர்க்கே அறிஞராய்
அணிநடை பயில்கின்றவர் - வளர்
அறிவியல் உலகிற்கே ஏற்ற ஓர் தலைவரெனும்
அற்புதக் கலைவல்லுநர்! - நமை
ஈன்றதாய் போல்நின்று ஏற்றவழி கள்தந்து
இதயத்தைக் கவர்ந்துள்ளவர் பெரு
இந்திய மண்ணையும் காக்கின்ற தலைவராய்
இதயத்தில் கலந்துள்ளவர் - நம்
எண்ணத்தில் நிறைந்துள்ளவர்

வாழ்த்திடுவோம் உன் புகழை நூற்றாண்டு நாயகனே!

மருத்துவமாமணி சோம.இளங்கோவன்

இயக்குநர்,பெரியார் பன்னாட்டமைப்பு,சிக்காகோ,அமெரிக்கா.

தோன்றிற் புகழோடு தோன்றுக
தோன்றினீர் திருக்குவளை புகழ்பெறவே !
பிறப்பு முதல் உம் முதலீடு உழைப்பெனவே
சிறப்பாக உழைத்தீர் உயர்வுற்றீர் !
போற்றியோர் சிலர் தூற்றியோர் பலர்
புன்னகையே பதிலென்றே கடந்திட்டீர்
எந்நகையும் பதில் பெறுமே
நகைச்சுவையால் நனைத்திட்டீர் !
பெரியாரும் புரட்சிக் கவிஞரும்
வார்த்திட்ட வார்ப்பே நீர்
அறிஞர் அண்ணாவின் வளர்ப்பன்றோ !
தமிழுக்கு உழைத்தீர் தமிழர்க்கு உழைத்திட்டீர்
அமுதம் பல படைத்தீர் அழகு தமிழ் பேசிடவே
அனைவர்க்கும் பயிற்சி தந்தீர் !
தொடாத துறையுமில்லை அடையாத புகழுமில்லை
ஏழையின் பங்காளன் எழுத்தாளர் நண்பன்
உழைப்பாளி உன் இதயத்தில் !
நாட்டிற்கே உழைத்தாய் நாடு நலம்பெறவே
திட்டங்கள் தீட்டியே திறம்படவே செயலாற்றி
வாழ்வாங்கு வாழ்ந்து வானுயர்ந்தாய் இதயத்தில் !
வாழ்த்திடுவோம் உன் புகழை !
நூற்றாண்டு நாயகனே கலைஞர் எனும் பெருமானே !





# தமிழிருக்கும் காலம்வரை கலைஞருமே இருப்பார் !

-மகாதேவ ஐயர் ஜெயராமசர்மா
மேனாள் தமிழ்மொழிக் கல்வி இயக்குநர்,மெல்பேண் ..
ஆத்திரேலியா



**ஆத்திரேலியப் பாரதியார்**

முத்தமிழ் சொத்தே முத்துவேல் முத்தே
எத்திக்கும் மு க வாய் எழுகின்ற ஞாயிறே
திருக்குவளை மலரே தமிழருந்தும் வண்டே
பக்குவமாய்த் தமிழைப் பாதுகாத்தாய் தலைவா

இளமையில் தமிழை ஏந்தியே நின்றாய்
அழகுற எழுத ஆர்வமும் கொண்டாய்
எழுதினாய் எழுதினாய் இளந்தமிழ் எழுச்சியாய்
ஏற்றனர் ஏற்றனர் ஏந்தினார் அனைவரும்

நாடகம் எழுதினாய் நடிக்கவும் செய்தாய்
பாடலும் யாத்தாய் பழந்தமிழ் சுவைத்தாய்
காதலாய் தமிழ்மொழி இலக்கியம் கற்றாய்
கருணா நிதியாக ஒளிர்ந்திட்டாய் தமிழில்

துள்ளு தமிழாலே வெள்ளித்திரை வந்தாய்
தெள்ளு தமிழெழுந்து வெள்ளமாய்ப் பெருகியதே
உன்வரவால் வெள்ளித்திரை ஒளிமயமாய் ஆகியதே
உன்தமிழைப் பேசியதால் உயர்ந்தாரே பலபேரும்

கருணாநிதி கலைஞராய் தலை நிமிர்ந்தார்
கன்னித் தமிழும் களிப்பெய்தி நின்றது
பூதலத்தில் புதுத்தமிழை புகுத்திவிட வந்த
காவலராய் கலைஞரைக் கண்டாளே தமிழன்னை

கல்லூரி செல்லவில்லை உயர்கல்வி கற்கவில்லை
கற்பதை விடவுமில்லை காலமெலாம் கற்றாரே
இலக்கியத்தைக் கற்றார் இலக்கணத்தைக் கற்றார்
தலைக்கனத்தை விட்டுக் கற்பவற்றைக் கற்றார்

சங்கத் தமிழோடு சாமான்யத் தமிழவர்க்கு
இங்கிதமாய் இதயத்தில் ஏறியே அமர்ந்ததுவே
எழுதுவார் அரங்கேறி ஏற்றபடி பேசார்
எங்கலைஞர் எல்லாமே இயல்பாக ஈவார்

முத்தமிழை அடைமொழியாய் ஆக்கியவர் நின்றார்
முத்தமிழை வரமாக ஆக்கியவரும் அவரே
எத்திக்கும் வாழ்கின்ற தமிரெலாம் ஏத்தும்
தித்திக்கும் தமிழாறு கலைஞரே ஆவார்

சிலம்பிலே திளைத்தார் சிந்தையிலே இருத்தினார்
கண்ணகியைக் கண்டார் கைதொழுது ஏற்றினார்
தமிழச்சி உயர்ச்சி தானவரும் உணர்ந்தார்
தமிழுணர்ச்சி கலைஞர் வாழ்வாக்கிக் கொண்டார்

வாழுகின்ற நூலாக வள்ளுவத்தைக் கண்டார்
வையத்தை வாழ்விக்கும் மகத்துவத்தை தெரிந்தார்
வள்ளுவரை வள்ளுவத்தை மனமுழுக்க நிறைத்தார்
மாக்கடலில் வள்ளுவரை நிறுத்திட்டார் கலைஞர்

வள்ளுவத்தை மனமிருத்த நல்லுரையைத் தந்தார்
உள்ளமதில் பதியும்படி உரைபகர்ந்து நின்றார்
நல்லபல கருத்துக்களை அவ்வுரையில் கொணர்ந்தார்
அவ்வுரையில் வாழுகிறார் நந்தலைவர் கலைஞர்
தமிழிருக்கும் காலம்வரை கலைஞருமே இருப்பார்
மறைவில்லாக் கலைஞருக்கு மறைவுதான் உண்டோ
அமுதான தமிழ்மொழில் அவர்கலந்து விட்டார்
ஆதாலால் கலைஞர் வாழுகிறார் அகத்தில்!

## கலைஞர் ஊன்றிய ஆல்விதை

--- மலேசியப் பாவலர்

முனைவர் முரசு நெடுமாறன்



கலைஞர் என்ற கவின்பேழை திறந்தேன்
எத்தனை எத்தனை எழிலார் செயல்கள்
ஆற்றிய வரலாற்று ஆவணச் சுவடிகள்
அடுக்கிவைத் திருந்த அருமையைக் கண்டேன்!
அத்தனை மலரையும் அருகுவைத்து நுகர
எத்தனை காலம் இவண்செலவாகும்?
அதனால் அவற்றின் உள்ளிருந் துடனே
ஒருமடல் உருவி உற்றுப் பார்த்தேன்
கலைஞர் மனவிரிவுக் காட்சி தெரிந்தது!
வடஇம யம்தென் குமரி முனையுடன்
முத்தமிழ் முழங்கும் எல்லைக் கோடு
முடிந்து விட்டதாய் முன்னய தலைவர்கள்
எண்ணிய தால்பிற எல்லையில் கூடிய
ஆக்கப் பெருமைகள் அவர்க்கெட்ட வில்லை
தமிழ்நாட்டுத் தலைவர்கள் தம்முள் கலைஞர்
நன்மனம் மட்டும் நாநில மெங்கும்
பரந்து கிடந்த பைந்தமிழ் நெஞ்சரை
எண்ணி அவர்கட்கு எற்றது செய்ய
முனைந்த அவர்தம் முகம்கண்டு உவந்தேன்.
மலேசிய மண்ணின் மைந்தன் 1 ஒருவன்
அந்த நாட்டில்; அணிசேர் சிங்கையில்
தமிழர் கொட்டிய செந்நீர் விளைத்த
சீர்களை; அங்குச் செந்தமிழ்ப் பாவலர்
பாடிக் குவித்த பாக்களைக் காட்டும்
களஞ்சியம் 2 கண்டு களித்து வியந்தார்

சுவடி ஆக்கிச் சுவைபடத் தந்த
பாவலர்க்குப் பைந்தமிழ்ப் பரிசிலாய்ப்
**'பாவேந்தர் விருது'** பரிவுடன் வழங்கினார்
நற்றமிழ்ப்படைப்புகள் நயமுறத் தந்த
ஈழப்பே ராசிரியர் ஏந்தல்சிவத் தம்பிக்குத்
' திரு.வி.க விருது'தேர்ந்து கொடுத்தார்.
புதுப்புது வரலாறு பூத்தது இவரால்
முன்னாள் முதல்வராம் முத்தமிழ் அறிஞர்
ஊன்றிய ஆல்விதை ஓங்கியது மரமாய்
அவர்திரு மகனார் அருந்திறத் தளபதி
இந்நாள் முதல்வர் ஈடில்லா ஸ்டாலினால்
ஆலின் விழுதுகள் அடர்ந்து பரந்தன
புலம்பெயர் தமிழர் புத்தாக்கம் பெற்றிட
அமைச்சுப்பூச் செண்டில் அவர்க்குமணம்
பரப்ப
ஒருபூங் கொத்தும் ஒட்டிக் கொண்டது
ஆண்டில் ஒருநாள் அனைவரும் கூடக்
கனிந்த வாய்ப்பிற்குக் கால்கோளிட்டார்
கலைஞர் நினைவுகள் கலக்குமிவ்
வேளையில்
அரியன செய்த அவரைப்
போற்றி வணக்கம் புகன்றிடுவோமே!

1. முரசு நெடுமாறன்
2. மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்.



# உலகே வியக்கக் காண்கிறோம்!

குமரன் வேலு இராமசாமி மலேசியக் கல்வியாளர்

எழுதுகோல் எடுத்தாய் ஈட்டியாய்க் கோடி
இளையர் எழுந்தாரே!
இன்னுயிர் தன்னைத் தாய்மொழிக் காக
இழக்கத் துணிந்தாரே!
பழுதிலாத் தமிழைப் பயின்றிடா தவரும்
படிக்க நினைத்தாரே!
பாமரர் நெஞ்சில் பாய்ந்தது தமிழும்
பற்றும் கொண்டாரே!
அழுதிடா ரில்லை! அஞ்சிடாரில்லை!
அம்பு போல்பாயும்
அண்ணலே நின்சொல் அதுசெயும் மாயம்!
அசையும் மனம்தானே!
தொழுதிடாய்க் கோயில் வழிபடாய் எனினும்
தொண்டில் மெய்சிறந்தாய்!
தூய்தமிழ் எங்கும் முழங்கிடும் வண்ணம்
தூண்டு கோலானாய்!
திட்டமும் தீட்டித் திருக்குறள் ஏட்டில்
சேர வழிசெய்தாய்!
செந்தமிழ் நாட்டில் சேர்ந்தனர் தமிழர்
திகழ்ந்தாய் தலைவரென்றே!
கட்டளை இடுவாய்! கண்மணித் தொண்டர்
கணக்காய் முடிப்பாரே!
கலைஞநின் கைகள் காட்டிடும் திசையில்
கடமை செய்வாரே!
பட்டெனத் தூய்மை பார்த்தனர் உன்றன்
பகுத்த றிவுகண்டு
பயனதை வியந்து பாரிடை புகழ்ந்து
பைந்த மிழ்ப்பாட்டின்
மெட்டெனத் தொண்டர் மீட்டினர் நெஞ்சில்
மிளிர்ந்தாய் நூறாண்டு!
விளைந்தது எங்கும் தமிழ்வயல்! உலகே
வியக்கக் காண்கின்றோம்!



கலைஞரின் கல்லக்குடிப் போராட்டம்

[என் இயற்பெயர் குமரன் வேலு இராமசாமி. மலேசியத் தமிழ்க் கவிதை வளர்மன்றத்தின் தலைவராக மரபு கவிதையின் வளர்ச்சிக்குப் பங்களித்துப் பாடாற்றி வருகின்றேன். அறிவியல் துறை பட்டம் பெற்றுள்ளேன். கணிதக் கல்வியில் முனைவர் பட்டம் பெற்றுள்ளேன். மலேசியக் கல்வியமைச்சில் பணியாற்றி ஓய்வு பெற்ற பின்னர் மலேசியாவில் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு அரசாங்க ஆதரவு பெற்ற நிறுவனமான மலேசியத் தமிழ்மொழிக் காப்பகத்தின் வழி பங்காற்ற வருகிறேன். ]

# இறுமாப்பே இல்லாத மேதை



அய்யன்திருச் சிலையினையே குமரியில் வைத்து
அடையாளமாய் நாட்டின்தெற் கெல்லை செய்தார்
மெய்யாகக் குமரிக்கண் டமன்றோ இந்த
மெய்யுலகின் இருப்புக்கே தொடக்கமாகும்
மெய்யப்பன் வடித்தளித்த திருக்குறளையிம்
மேல்நாட்டார் கீழ்நாட்டார் மற்று மிந்த
வையமெங்கும் வந்துதமிழ் நாட்டைக்காண
வருவாரும் அறியும்படி கோட்டம் செய்தார்

நேர்வகிடு எடுத்ததனால் தானோ கலைஞர்
நேர்த்தியாக யாவற்றையும் நிகழ்த்திச் சென்றார்
ஏர்கலையின் அறிவியலைப் பயிற்றுவிக்க
ஏற்றமிகு வேளாண்மைப் பல்கலை கண்டார்
பாரினிலே தென்கிழக்கு ஆசியாவில்
பல்கலையைக் கால்நடைமருத்துவத்தில் நமது
ஊரினிலே முதன்முதலில் தோற்றுவித்தார்
உழவர்க்கும் ஏழைகட்க்கும் வாழ்வளித்தார்



இறுமாப்பே இல்லாத மேதை கலைஞர்
ஈரோட்டுப் பகுத்தறிவே இவரின் பாதை!
நறுங்காப்பாய் வகுப்புரிமைக்(கு)அணியைச் செய்தார்
நலிந்தோர்கள் மேன்மைபெற திட்டம் செய்தார்
பெருமாப்பே தான்வைத்தார் ஆரியத்திற்கே
பெருந்தொண்டு தான்செய்தார் தமிழ்மொ ழிக்கே
கருத்தினிலே மட்டுமல்ல கலைஞர் வென்றார்
களத்தினிலும் எழுத்தினிலும் என்றும் வென்றார்!

ஆதிமுதல் அறிஞர்பலர் ஆண்டாண்டாக
அரியணையைத் தமிழுக்கே தேடி வந்தார்!
ஆதிமொழித் தமிழ்மொழியைச் செம்மொழி என்றே
அறிவிக்கச் செய்தவரே கலைஞர் தானே!
சாதிவெறி தமிழ்நாட்டில் ஒழிய வேண்டி
சமத்துவபுரம் சமைத்தவரும் அவரே அன்றோ!
நீதிநெறி நூல்மிகுந்த தமிழ்மொ ழிக்கே
நெஞ்சுக்கு நீதிதந்த கலைஞர் வாழ்க!

கலைமாமணி
**முனைவர். பெரு. மதியழகன்**
perumathi@gmail.com

## குறிஞ்சிமலர்போல் கிடைத்த குவளைமலர்



**கவிஞர் பிச்சினிக்காடு இளங்கோ**

**“மக்கள் மனம்” இதழாசிரியர்**

**சிங்கப்பூரின் மூத்த ஊடகவியலாளர்**

குறிஞ்சிமலர்போல் கிடைத்த
குவளைமலர்
திருக்குவளை மலர்

மெக்காபோல்
மெதினாபோல்
திருக்குவளை எங்களுக்குத் திருத்தலம்

தமிழ்விளையாடிய
நாவால்
தமிழர்தம் இதயக்கடலில்
நித்தமும் நீந்தும்
நிரந்தர நாவாய்

கூர்த்தமதியைத்தான்
நிறைநிலாவாய்
நீ சூடியிருக்கிறாய்
தலையில்

இயக்கத்தின்
அடையாளத்தை
உன்முகம்தான்
சூரியனாய்
முன்னுரைக்கும்

மொழி
ஒருநடையைக் கற்றுக்கொண்டது உன்னிடத்தில்.

மொழி
தனிக்குரலைப்
பெற்றுக்கொண்டது உன்னிடத்தில்.

மொழி

புதுமொழியைப்பேசியது உன் வழியில்.

விளைவு

குறளோ ஓவியமானது

குரலோ இன்னிசையானது

இன்னிசையும்

ஓவியமும்

இணைந்த பெயரே

கலைஞர்.



## கலைஞர் எனும் கதிரவன்

சான் ஆரோக்கிய ரிச்சர்டு

அயர்லாந்து




காலத்தால் அழியாக்
காந்தக் குரலோன்
கலைஞர் எனும் சிற்பி
செதுக்கியவை எல்லாம்
பெருமைநிறைப் பெரியாரின்
பெருங்கனவான சமூகநீதியும்
அறிவுநிறை அண்ணாவின்
ஆசைத்திட்டமான சுயாட்சியும்
திசையெங்கும் ஓங்கி ஒலிக்கும்
திராவிடச் சிந்தனைக் குரலும்!



அசைக்க முடியா அடித்தளமிட்டு
ஆற்றல்மிகு தமிழ்நாட்டை
அழகாய் நிர்மாணித்த
அவர்தம் புகழ் - மறைக்க இயலா
உதயசூரியன் உள்ளளவும்
உள்ளமனைத்தும் நிறைந்து நிலைக்கும்
உலகெலாம் ஓங்கி ஒலிக்கும்!

## சூரியப் பூ.....



தமிழர்களின் கட்டைவிரல்!ஞான ரேகை!
தன்மான நெருப்பெழுத்தின் வெற்றி வாகை!
இமைக்காமல் தும்முகிற பெருவி ழிப்பு!
இடைநில்லாப் பூமிதோற்கும் பேருழைப்பு!
தமிழ்ஞானக் கலைஞர்நீ தாய்ப்பால் ஆறு!
தன்மான வேர்!குறிஞ்சி மலையின் தேக்கு!
நிமிர்வானின் நிலாப்பறித்து விருந்து வைக்கும்
நீள்கையால் பொதுவுடைமைச் சூரி யப்பூ!

கவிக்கோ துரைவசந்தராசன்
நிறுவுநர்,பண்ணைத் தமிழ்ச்சங்கம்.
"பாவேந்தர் இல்லம்"
34/11,மூன்றாம் தெரு, வங்கிக் குடியிருப்பு,
மாதவரம் பால்பண்ணை,
சென்னை -600051

உலகத்தின் ஒட்டுமொத்தத் தமிழர் வாழ்வில்
"உடன்பிறப்பே" உயிலெழுத்து! "கலைஞர் பட்டா!"
சிலைநேர்த்திச் சொல்லெடுக்கும் விரல்நக த்தில்
செம்மொழிதன் முகம்பார்த்துக் களித்தி ருக்கும்
கலகமலை நெருங்கிவந்தால் அருக ணைத்துக்
கனிநகையால் மலைபொடித்துத் தூளி கட்டும்
விலைபோகாத் திராவிடவேர் கலைஞர் நீயோ
வெடித்தெழுந்தால் இமயமது குள்ளத் திட்டு!



காடெழுதிப் போகின்ற நதியாய் வண்டாய்
காற்றெழுதிக் களிக்கின்ற மரமாய்,பூவாய்
ஏடெழுதி நீபோட, நதிக ளெல்லாம்
எதிர்த்திசையில் பயந்தோட எங்க ளுக்காய்
நாடெழுதிப் போனவனே!ஆரிய த்தின்
நுகத்தடிக்கும் நுரைக்காமல் உழுத உன்றன்
பாடெழுத்தே வரலாற்றுப் பாட மாகும்!
பன்னூறு தலைமுறைக்கும் வேத மாகும்!

ஆரியத்தைச் சுருங்கவைத்த பெரியார் மைநீ!
அழுக்குநீக்கித் திராவிடத்தைச் சுத்தி கரித்த
சூரியனின் சுடர்விழிநீ! பூமி தோற்கச்
சலியாமல் சுழன்றுழைத்த மூச்சுக் காற்றாய்
வீரியத்தின் வேர் கிளைத்த வினைப்ப லாநீ!
விழுமழையின் பேதமிலாத் தூய்மைத் தாய்நீ!
கூரியக்கை வேல்முனையில் புன்ன கைப்பூக்
கொடிநாட்டிச் செயல்வென்றாய்! வணங்கு கின்றோம்!

## தளபதியைத் தந்தார் வாழி

-முனைவர் வேணுகுணசேகரன்





அகரமெனில் உயிரெழுத்தாம்; அண்ணா ஆகும்!
அவரால்தான் ஆட்சிமொழி தமிழ்ஆ யிற்று!
ககரமெனில் உயிர்மெய்யாம்; கலைஞர் ஆகும்!
கலைஞரால்தான் தமிழரெலாம் தலைநி மிர்ந்தார்
தகரமதும் கலைஞர்கை பட்டு விட்டால்
தங்கமென மதிப்பேறும்! யார்யா ரையோ
சிகரமதில் ஏற்றிவைப்பார்; ஏறி நின்றோர்
சிலகாலம் கழிந்தபின்னால் ஏசி நிற்பார்!
பாறையுமே உடைந்துவிடும்; கலைஞர் நெஞ்சம்
பாறையையும் தோற்கடிக்கும் இரும்புக் கோட்டை
ஆறிலுமே நூறிலுமே சாவென் பார்கள்!
அடைவதுஓர் லட்சியமென் றாலோ,
பொங்கிச் சீறுகிற நாகமென மாறி, மக்கள்
சிறப்புக்குப் போராடும் ஒரேத லைவர்!
ஊறுகிற அறிவுத்தேன் உண்ப வர்கள்
ஒளிவீசும் கலைஞர்வழி பின்தொ டர்வார்!
முத்தமிழ்போல் பொலிவுசேர் வனப்பு மிக்க
மூத்தஇளை ஞர்கலைஞர்; அரும்பு மீசை
புத்தழகு சேர்க்கின்ற சிரிப்பு வேந்தர்!
பொல்லார்க்கோ என்றென்றும் நெருப்புப் பந்தம்
கத்தியினும் கூர்மையான எழுத்துச் சிற்பி!
ககனம்போல் மனம்விரிந்த பழுத்த ஞானி!
இத்தரையில் தமிழர்களுக் கிவரைப் போல
முத்தாகத் தளபதியைத் தந்தார் நன்றி!

## என்றும் எமையாளும் தலைவருக்கு எழிலார்ந்த தமிழ்வணக்கம்

- பாவரசு வதிலை பிரதாபன்
தலைவர் - மராத்திய மாநிலத் தமிழ் எழுத்தாளர் மன்றம்



தென்னகத்துக் கதிரவனாய் திசையெங்கும் புகழ்பரப்பித்
தெள்ளுதமிழ்ப் பாட்டெழுதி தெவிட்டாத முழக்கமிட்டு
திராவிடத்துக் கதிரொளியாய் தனையீந்து தமிழாய்ந்து
உள்ளத்து உணர்விற்கு உணவாகும் உரம்வளர்த்து
இல்லத்துச் சொந்தமென இதமான மகிழ்வளித்து
மொழியோடு இனங்காக்க முழக்கமிட்ட முன்னேராம்
தந்தை பெரியாரும் தகைமைசார் அண்ணாவும்
எடுத்துரைத்த சிந்தைதனை ஏந்தித்தான் காத்திட்டு
அரசியலும் இலக்கியமும் ஆன்றோர் அவையாவும்
அள்ளியள்ளி வாழ்த்திட்டு அரவணைத்துக் காத்திட்ட
அன்புசார் கலைஞரவர் ஆற்றலமை தலைவரவர்
நூற்றாண்டு உலகெங்கும் கொண்டாடும் காலமதில்
கவிமலர்கள் பூத்திட்டுக் கருத்தரங்கு மகிழ்ந்திடவே
திரைத்துறையும் பொதுத்துறையும் தவிர்க்கத்தான் இயலாத
தங்கமகன் கலைஞருக்குத் தரணியெங்கும் புகழ்மாலை
உலகத்துத் தமிழர்க்கு உணர்வூட்டும் தலைவருக்கு
இதயங்கள் மகிழ்வுடைத்து இனமொழியால் களிப்புடைத்து
எழுதிட்ட படைப்புகளும் எழுச்சிமிகு உரைவீச்சும்
காலங்கள் கடந்தாலும் காக்கின்ற அரணாகும்
தாயகத்துத் தமிழருக்குத் தாயாகும் செறிவாகும்
சொற்சுவையும் பொருட்சுவையும் செறிவார்ந்த சிந்தனையும்
குறைவின்றி வழங்கிட்ட கருத்தாளர் கலைஞருக்கு
உலகத்தார் உவகையுடன் உளமாரக் கொண்டாடி
தலைவருக்கு அணிசெய்தல் தமிழுக்கே அணியாகும்
நாவினிக்கப் புகழ்பாடி நறுமணத்தில் கருத்துரைத்த
நாட்களெல்லாம் நினைவூட்டும் நற்றமிழில் புகழ்பாடும்
தேன் தமிழே! தென்னகமே!! தெவிட்டாத சுடரொளியே!

மறையாத புகழுடனே நீ நிலைத்து நிற்பதற்கு
நிறைவான விருந்தாக அறிவுப்பசி போக்குதற்குக்
குறையாமல் படைத்திட்ட படைப்புகளே  சான்றாகும்.
விதைத்திட்ட சிந்தனையே விளைச்சலென வழிவகுக்கும்
எண்ணத்து விளக்காகி எழுச்சிக்கு உரமாகி
எமையாளும் தலைவருக்கு எழிலார்ந்த தமிழ்வணக்கம்



**கலைஞர் அதிகாரம்**

--- பாவலர் சுப முருகானந்தம்

மதுரை நகர் மாவட்டச் செயலாளர்,திராவிடர் கழகம்,மாநிலத் துணைத் தலைவர்,

பகுத்தறிவு எழுத்தாளர் மன்றம்



விரைந்தே விழியற்றோர் விம்மல் தணித்தே
கரைந்த அருள்நிதியைக் காண்.1

காண்பவை யெல்லாம் கலைஞர் திறன்பேசும்
தாண்டியவர் யாருண்டு? சாற்று!!2

சாற்றினார் சங்கத் தமிழெடுத்து! பாமரரும்
போற்றித் துதித்தார் புகழ்ந்து!!.3

துண்டாம் பதவி துறந்தேனும் நாட்டிற்குத்
தொண்டினைச் செய்தார் தொடர்ந்து.4

தொடர்ந்து தமிழ்நாடு தொய்வின்றிச் செல்லவே
தந்தாரே ஸ்டாலின் தலை.5

தனையெண்ணிப் பார்க்காமல் தண்டமிழ் நாட்டைப்
பனையெனக் காத்தாரைப் பார்.6

பார்போற்றும் செம்மொழியாய்ப் பைந்தமிழை ஆக்கியே
வேர்போற்றச் செய்தார் வினை.7.

செய்த வினையாலே சீராக்கி நம்மினமும்
உய்யவே செய்தார் உயர்ந்து.8

"உயர்பதவி வேண்டாம் உயரம் அறிவேன்"
நயமுறச் சொன்னதமிழ் நா.9

நாமென்றால் ஒட்டும் நமதுதடும் ஒட்டாதே
தாமென்று சொல்லென்ற தாய்.10

திருக்குறளாய் வாழ்ந்த திருக்குவளை மலர்!

-கவிச்சிங்கம் கண்மதியன் --



முத்தமிழ் நாட்டின் முப்பால் நதியே!
எத்திசைத் தமிழர்க்கும் வேறிலை கதியே!
கடல்நீர் போலும் கலைஞரின் உள்ளம்
ஒடுங்குவ தில்லை உள்ளங்கை எல்லை!
ஆல மரத்தின் ஓர்விழு தாகக்
காலச் சுவரில் கலைஞர் வரைந்த
கோலக் குறளின் குரலொலி காண்மின்:
உலகப் பொதுநூல் ஒப்பிலாத் திருக்குறள்
விளக்காய் எரிந்திட விரட்டும் மன இருள்!
வழுவிலா நூலை வாழ்விய லாக்கிட எழுந்தது
'திருக்குறள்-கலைஞர் உரை'யே!
எக்காலம் யாத்த நூலென்றாயினும்
இக்காலம் ஏற்கும் ஏற்புரை கண்டோன்;



கன்னித் தமிழுக்கே காணிக்கை என்றோன்!
முன்னூற் றைம்பத்து நான்கு குறள்கள்
உரைநடை விளக்கம் உயர்நடை; அதுவே
'குறளோ வியம்'எனும் கொம்புத் தேனடை!
வள்ளுவர் படத்தோ(டு) ஓர்குறள் பொருளொ(டு)
எல்லோர் கண்ணிலும் எழிலாய்த் தோன்றப்
பேருந்தில் வைத்த பெம்மான்! சட்டப்
பேரவையில் வள்ளுவர் படத்தைக் குடியரசுத்
தலைவரும் திறந்திட தகுசெயல் திறத்தோன்!
தலைநகர் சென்னையில் வள்ளுவர் கோட்டம்;
கொள்ளைகொள் குமரி முனையிலே கடலில்
வள்ளுவர் சிலையை வானுயர வைத்தோன்!
பல்கலைக் கழகங்களில் குறளாய்(வு) இருக்கை;
வள்ளுவர் கோட்டத்தில் வாரம் தோறும்
ஆய்வுகள் நடத்த ஆணை; ஆட்சி
அரியணை தாளில் வள்ளுவர் ஆண்டு;
வள்ளுவர் திருநாள் விருதென வழங்கி
உள்ளம் குறளாய் ஒன்றிய குணத்தோன்|
நம்மொழி மண்ணின் முதல்மொழி தமிழைச்
செம்மொழி ஆக்கிய சிம்மக் குரலோன்|
உலகில் குறளும் உயர்வான் தொட்டதே;
கலைஞர் வாழ்வும் கல்வெட் டானதே



தமிழினத் தலைவர் கலைஞர் அவர்களின் 100ஆம் பிறந்தநாள் வாழ்த்து!

**காலத்தை வென்றிவர் பேரிருக்கும்!**



**--செல்வ மீனாட்சி சுந்தரம்**

*கும்மி(செந்தமிழ் நாடெனும் போதினிலே மெட்டு)*

மேற்கிலு தித்தசெஞ் சூரியனாம் - அவர்
மேட்டிலே றிப்பாய்ந்த காவிரியாம்!
காற்றுவெளி ஊன்றும் வேரிவராம்! அவர்
காரிருள் காணாத இராப்பொழுதாம்!

கூர்மதி குன்றாநி றைமதியாம் - விண்மீன்
கூட்டம்வி யக்கும்பு கழ்வெளியாம்!
சீர்மதியால் பகை வென்றவராம் - தமிழ்
சேர்மதியா லுள்ளம் ஆண்டவராம்!



வேர்மதி யாவிழு தில்லையவர் - காஞ்சி
வேந்தர்அண் ணாபுகழ் போற்றியவர்!
பேர்மதி யாளரின் தம்பியெனச் சொல்லிப்
பீடுகொண்ட கரு ணாநிதியாம்!

ஈரோட்டுப் பெரியாரின் பாதையிலே - அவர்
எட்டுவைத் தார்தன் இளமையிலே!
நீரோட்டம் எதிர்த்து நீந்தியவர் - நெஞ்சில்
நீங்காமு யற்சியை ஊன்றியவர்!



திட்டிப்பி ழைத்தவர் கோடியுண்டு! - இவரைச்
சுற்றித்த மிழ்நாடுஞ்சு ழன்றதன்று!
எட்டப்பர் சூழ்ந்திட வாழ்ந்திருந்தும் - இவர்
எட்டினார் உச்சத்தை நாள்முழுதும்!

தீப்பொறி சிந்துமெ ரிமலையாம்! - விரல்
தீண்டிய தாளெல்லாம் தமிழ்மழையாம்!
நாப்பற்றுஞ் சொல்லெல்லாந் தீப்பந்தமாம்! - சிந்தை
நற்றமிழ் தாலாட்டும் அலைகடலாம்!

வள்ளுவர் கோட்டத்தைச் சென்னையிலே - கட்டி
வானுயர் சிலைகண்டார் குமரியிலே!
எல்லைச் சாமியென வள்ளுவரை வைத்தார்
எந்தமிழ் நாட்டுக்குக் காவலென்றே!

ஐந்துமுறை நாட்டின்மு தல்வரென - அவர்
ஆட்சிக் கட்டிலேறி ஆண்டிருந்தார்!
ஏந்தலி வர்தந்த நற்கொடையாய் - ஸ்டாலின்
எங்கள்மு தல்வராய் வந்துதித்தார்!

காலத்தை வென்றிவர் பேரிருக்கும்! தமிழ்க்
காலம் மட்டும்புகழ் வாழ்ந்திருக்கும்!
ஆலவி ழுதுகள் நாமிசைப்போம் - நம்மின்
ஆணி வேரின்புகழ் பாடிநிற்போம்!

ஊராண்ட மன்னவன் மண்பிறந்து - இன்று
நூறாண்டு மானதே பொழுதளந்து!
சீராண்ட தென்னவன் திறம்வியந்து - இன்று
தீட்டினேன் நானொரு பாவிருந்து!



**மூவேந்தர்க்கிணையான மூதறிஞர் புகழ் வாழி!**

எழுச்சிக்கவிஞர் இரெ.கங்கைமணிமாறன்,மயிலாடுதுறை:செல்: 9443408824

திருக்குவளைப்பூவாகப்பூத்தவர்-அவர்

திருவாரூர்த் தேர்போல மூத்தவர்!

கருக்கொண்ட முகிலைப்போல் ஆர்த்தவர் அவர்

கனல்கொண்டு தமிழெழுதிப் பார்த்தவர்!

'இளமையினைப் பலி'யாகக் கொடுத்தவர்-அவர்

இனவேங்கைப் புலியாகச்சிலிர்த்தவர்!

களமாடி வாழத்தான் முளைத்தவர்-புதுக்

கற்பனையில் அற்புதங்கள் விளைத்தவர்!

துயரத்தைப் பலகாலம் சகித்தவர்-தமிழ்த்

தொண்டைத்தான் அமிழ்தென்று சுகித்தவர்!

உயரத்தை உழைப்பாலே எடுத்தவர்-அவர்

'ஒருகண்ணைத்' தமிழுக்காய்க் கொடுத்தவர்!

இந்திப்பேய் வரும்போது தடுத்தவர்-உயர்

எண்ணத்தில் புயலாகித் துடித்தவர்!

முந்திப்போய் சிறைவாசம் அடைந்தவர்-தன்

மூளையினால் எதிரிகளைக் கடைந்தவர்!

பெரியாரின் ஏடுகளைச் சுமந்தவர்-அவர்

பேசிநின்ற சுவடுகளில் நடந்தவர்!

எரிமலையின் சீற்றத்தை முகந்தவர்-அவர்

எதிர்ப்புகளுக்  கிடையேதான் வளர்ந்தவர்!

சூரியனில் சுடரெடுத்துச் சுழன்றவர்-அவர்

சுற்றிவரும் பூமியைப்போல் உழன்றவர்!

ஆரியத்தின் ஆயுதங்கள் அளந்தவர்-அதை

அண்ணாவின் கவசத்தால் பிளந்தவர்!

தனிச்சிறையில்என்றாலும்கிடந்தவர்-அவர்

தமிழ்காக்க இருட்டறையில் தவழ்ந்தவர்!

'அணிலோடும்' விளையாடி மகிழ்ந்தவர்-அவர்

அரசியலைத் தமிழாக்கிக் குளிர்ந்தவர்!

தடைகண்டு படைகண்டு சிரித்தவர்-தன்

தலைகொண்டு தொடர்வண்டி மறித்தவர்!

நடைவண்டி யில்சென்றும் உழைத்தவர்-தன்

நாவாலே வெற்றிகளைக் குவித்தவர்!

சமத்துவத்தை வாழ்நெறியாய் வரித்தவர்- புகழ்ச்

சரிதத்தைப் பொன்னேட்டில் பொறித்தவர்!

நமக்கென்றே 'தளபதியை' அளித்தவர்-நம்

நரம்புகளில் உணர்வேற்றிக் களித்தவர்!

வரலாற்றின் பெருமிதமாய் நிமிர்ந்தவர்-தன்

வரலாற்றில் தமிழகத்தை வரைந்தவர்!

உரைநடையின் ஒளியாகி உயர்ந்தவர்-அவர்

உவமையிலாக் கலைஞானம் மிகுந்தவர்!

தனைக்கொண்டு தனையெழுதி நின்றவர்-அவர்

தமிழென்னும் தானைகொண்டு வென்றவர்!

முனைமுகத்தில் எப்போதும் முன்னவர்-அவர்

மூவேந்தர்க் கிணையான மன்னவர்!

காற்றுக்கும் திசைகாட்ட வந்தவர்-அவர்

காந்தவிசைத் தமிழள்ளித் தந்தவர்!

ஆற்றலின்பேர் கலைஞரென வாழ்ந்தவர்-நமை

ஆகாயம் போலென்றும் சூழ்ந்தவர்!

அவர்போற்றிவைத்ததமிழ்வாழியே!-அவர்

அடிவைத்த தடமெல்லாம் வாழியே!

அவர்செய்த அணிகலன்கள் வாழியே!- நல்

அறம்போல அவர்புகழும் வாழியே!



**தலைவரைப்போற்றுவோம்!** முனைவர் க.தமிழமல்லன்



ஆசிரியர் வெல்லும்துாயதமிழ்
66,தட்டாஞ்சாவடி,புதுச்சேரி-605009

இலக்கியம் ஆய்ந்த இணையிலாத் தலைவர்!
இனிஎக் காலம் இங்குக் கிடைப்பார்?
கலைஞரே கழக இலக்கியம் கற்றவர்!
கற்றதைப் படமாய்க் காட்சி செய்தவர்!
காற்சிலம் பேந்திய கண்ணகி பாவியம்
கலைஞரால் மக்கள் கண்ணைக் கவர்ந்தது!
பூம்புகார் மலர்ந்தது புலர்ந்தது விடியல்!
பூத்தது எங்கும்! பொற்கா லத்தை,
இலக்கிய உலகில் பொங்கிடச் செய்தார்!
துலக்கிக் காட்டினார் துாய்தமிழ்க் குறளை!
குறளோ வியத்தால் குன்றென உயர்ந்தார்!
புறப்பொருள் கொண்டு அறப்பொருள் தந்தார்!
புதினம் சிறுகதை புதிய நாடகம்
எதிலும் தமிழை இழைத்தவர் கலைஞர்!
செம்மொழி விருதைச் சிறப்பாய்ச் செய்தவர்!
செந்தமிழ்ப் பற்றால் சேரனாய் உயர்ந்தவர்!
பாண்டியன் போலப் பாவல ரானார்!
சீண்டிய இந்தியைச் சீறி அடக்கினார்!
தாரா சுரத்தின் தாழாக் கோயிலாய்த்
தேருடன் வள்ளுவர் கோட்டம் அமைத்தார்!
தெள்ளிய தமிழ்மேல் தேர்ந்த பற்றினால்

வள்ளுவர் சிலையைத் தெற்கினில் அமைத்தர்!
தமிழின் வாயிலாய் தமிழர் கற்றிடத்
தான்ஒரு திட்டம் தகவாய்ச் செய்தார்
ஊக்க ஊதியம் ஒன்றைத் தந்தும்
உருப்படாத் தமிழர் ஓடி வரவிலை!
தமிழில் படித்தால் பணிதரும் வகையில்
தங்கமாய்த் தக்க ஒதுக்கீ டளித்தார்!
இலக்கிய வாணராய் இருந்த கலைஞரால்
எங்கும் தமிழ்எனும் இன்னிசை ஒலித்ததே!
தம்மைப் போலத் தமிழ்ப்பணி செய்திடத்
தலைமகன் தந்த தலைவரைப் போற்றுக!



## ஆற்றல் கூட்டும் வழிகாட்டி

**-- கவிப்பேரொளி. நீரை. அத்திப்பூ**



அருமைக் கலைஞர் செம்மொழியின்
ஆற்றல் கூட்டும் வழிகாட்டி – அவர்
அயரா உழைப்பே என்னாளும்
அனைவரும் விரும்பும் திறம்நாட்டி!

பெருமை அவர்க்குத் தமிழாலே
பேரிமய மாக உருவாகி – புகழ்
பெற்றுக்கொடுத்தது உலகோரும்
போற்றிக் களிக்கிறோம் உணர்வாகி!

கோவைச் செம்மொழி மாநாடு
கொள்கை அவர் உள வெளிப்பாடு – இதை
குவலயம் வாழும் சான்றோர்கள்
கொண்டாடினரே களிப்போடு!

தேவை நமக்குள் ஒற்றுமைதான்
தினமும் கலைஞர் கனவாகி - தமிழ்
திசைபுகழ் பெற்றுச் சிறப்படையத்
தினமும் உழைத்தார் முனைப்பாகி!

எத்தனை வயதிலும் தமிழாலே
இளைஞர் போலவே உழைத்தாரே – அதை
இத்தரை மக்கள் உணர்வோடு ஏற்றனர்
எழுச்சியாய் அழைத்தாரே!

நித்தமும் தமிழர் நெஞ்ச மெலாம்
நீங்காதிருந்து ஒளிர்கின்றார் – அவர்
நிழலாய் எல்லோரும் உறவாட
நிலைத்தபுகழ் ஒளி மிளிர்கின்றார்!

உத்தமத் தலைவர் கலைஞரென
உலகோர் போற்றிப் புகழ்கின்றார் – அதன்
உயர்வைக் கண்முன் காணுகிறோம்
உண்மை இமயமாய்த் திகழ்கின்றார்!

முத்தமிழ்க் கலைஞர் நூற்றாண்டு
முழுமனம் நிறைந்து தொடரட்டும் – நம்
முன்னேற்றப் பாதையில் புகழின் ஒளி
முழுமை வழிதினம் காட்டட்டும்!

கவிப்பேரொளி. நீரை. அத்திப்பூ
சே.அப்துல் லத்தீப், பள்ளிவாசல் தெரு, நீர்முளை அஞ்சல் 614711, திருக்குவளை வட்டம், நாகை மாவட்டம்
செல்பேசி: 9444446350, மின்னஞ்சல்: kaviathippu@yahoo.co.in



## இந்த நூற்றாண்டின் நாயகன் நீயன்றோ !

--------- கவிச்சுடர் கா.ந.கல்யாணசுந்தரம்



மல்லிகையா... முல்லையா... ஆம்பலா ?
இல்லையில்லை திருக்குவளை அல்லவா
உமது பிறப்பிடம் !
முத்துவேலர் அஞ்சுகம் தம்பதியரின்
முத்தமிழ் அறிஞரே ...!
கலையுலகம் போற்றிய கலைஞரே ...
காலத்தை வென்று புவிமீதில்
கவிதை மொழி பகன்ற பகலவனே !
காலப்பேழையின் கவிதைச் சாவியில்
மலரும் நினைவுகள் முத்துக் குவியலாய்
உமது பேசும் கலை மிளிர்கிறது
செம்மொழித் தேரிழுத்து தமிழ்நாட்டின்
செம்மாந்த வாழ்வுக்கு விடிவெள்ளி கண்ட
தென்பாண்டிச் சிங்கம் நீ !
மாணவநேசன் இளமையில்
முகிழ்த்த உமது கையெழுத்துப் பத்திரிகை !
தொல்காப்பியப் பூங்கா சுவரெங்கும்
குறளோவியம் தீட்டி வாழ்கிறது !
சரித்திரத் திருப்பமாய் சுழல்விளக்கில்
பொன்னர் சங்கரும் ரோமாபுரிப் பாண்டியனும்
பூம்புகார் கதை வசனத்தோடு
வீறு நடை போடுகின்றன !
உமது சொல் நயங்களும் சிந்தனைச் சிதறல்களும்
நினைவில் வந்து நடனம் புரிகின்றன !
உன்னைத்தான் தம்பியும் மந்திரி குமாரியும்
நாடகத் தமிழுக்கோர் மகுடம் !
ஒரு மரம் பூத்ததென்று சிறுகதை
பழக்கூடை என இன்னொரு கதை
உயிர்ப்புடன் உமது எழுத்துகள்
இமயத்தைத் தொட்ட வெற்றிநடை உலகறியும் !
ஐந்து முறை அரசாண்ட வித்தகரே
இந்த நூற்றாண்டின் நாயகன் நீயன்றோ !

## உலகெலாம் உயர்த்துவோம் அவர் புகழை

நன்னன்குடி அவ்வை



பகுத்தறிவு ஒளியூட்டும் பகலவனாய் பெரியார்
ஒளி பெற்றோர் நிலவன்னார் அல்லர்
ஒளிர்ந்து மிளிரும் உடுக்கள் என உயர்ந்தார். அன்னாரில் ஒருவர் கலைஞர்
தந்தையின் நேயம் அண்ணணின் அன்பு
உடன்பிறப்பின் நெருக்கம் இவை அனைத்தின் தொகுப்பாய் அமைந்த கலைஞருக்கு நூறாண்டு
அன்போடும் ஆற்றலோடும் ஆண்ட அண்ணலுக்கு நூறாண்டு
அண்டவில்லை ஒரு பகையும்
மெய்ம்மறையாய் கலைஞர் அனைவரையும் காத்ததாலே
செங்கோலாய் உயர்ந்த எழுதுகோல்
செம்மொழி என நம் மொழி ஏற்றிய கோல்
குறளுக்கு ஓவியம் தீட்டிய கோல்
குறளாசானுக்குக் கோட்டம் கண்டு
குமரியிலே அலைகடல் தாலாட்டும்
குன்றாப் புகழ் வள்ளுவச் சிலை அமைத்து
கோடாச் செங்கோல் அவரின் கோல்
அரசின் ஆணைகளாய் அன்பின் மடல்களாய் அறிவூட்டும் பாக்களாய்
திறம் வளர்க்கும் திரைப்படங்களாய்
எழுச்சியூட்டிய அவரது எழுதுகோல்
தலை காட்டிய அரங்கிலெல்லாம் தலைவராகத்
தொட்ட துறை ஒவ்வொன்றும் துலங்கிடவே
துவளாது தொடர்ந் துழைத்த தொண்டர்
தொண்டர் உள்ளம் கொள்ளை கொண்ட தலைவருக்கு
அருமையாய் நூறாண்டுத் தொடக்கம்
அன்றாடம் ஒரு நூறு விழா எடுப்போம்
நாள்தோறும் நலம் பெருக்கும் நற்கவிதை ஊர்தோறும் பட்டிமன்றம
விதைப்போம் நற் கருத்துகளை
விளைப்போம் நலங்களையே
உலகெலாம் உயர்த்துவோம் அவர் புகழை
உயர்வோம் கலைஞரின் உடன்பிறப்புகளாய்-

## கலைஞர் புகழ் மலர்

- நன்னன்குடி வேண்மாள்



திராவிடத் தலைவனுக்கு நூற்றாண்டு விழா
திராவிடக் குமுகாயம் உயர வழிகண்ட
முத்தமிழ் அறிஞரின் முத்தான திட்டங்கள்
நினைவு கூர்ந்து  தலைவரைப் போற்றுவோம்
கண்ணொளி வழங்கும் கண்ணான திட்டம்
இரவலர் மறுவாழ்வு இல்லம் கண்டார்
மனிதனை மனிதன் இழுக்கும் இழிவை ஒழித்தார்
உழவர் சந்தை அமைத்து உழவரைக் காத்தார்
உழவர் நலம்காக்க கட்டணமில்லா மின்சாரம்
பெரியார் சமத்துவபுரம் கண்டார் சமூகநிதி காத்தார்
மின்னணு நகரம் கண்டார் அறிவியல் வளர்த்தார்
பாலங்கள் கட்டிப் போக்குவரத்தைச் சீர்செய்தார்
தமிழ் வளர்ச்சிக்குச் சிறப்பாக ஓரமைச்சர் கண்டார்
பேருந்துகள் நாட்டுடைமை பேருந்துகளில் திருக்குறள்
தமிழ்நாட்டுக் குடிசை மாற்று வாரியம் அமைத்தார்
சிற்றூர்களுக்கு மின்சாரம் சாலை தந்தார்
பெண்ணுக்குச் சொத்தில்  உரிமை சட்டம் செய்தார்
வள்ளுவருக்குக் கோட்டம் குமரியில் சிலை அமைத்தார்
அண்ணா நூற்றாண்டு நூலகம் பெருமையுடன் கண்டார்
முத்தமிழறிஞர் செய்த புரட்சிகள் ஏராளம்
அறிஞர் விட்டுச் சென்ற கழகத்தைக் கட்டிக் காத்தார்
கலைஞருக்கு எழுதுகோல் நினைவுச் சின்னம் அமைப்போம்
கலைஞர்வழி திராவிட மாடல் ஆட்சியைப் போற்றுவோம்.
தலைவர் கலைஞரின் நினைவைப் போற்றுவோம்
…வேண்மாள்

**உலகம் போற்றும் உயர்பெருந்தலைவர்**

--மறைமலை இலக்குவனார்




**துறைதொறும் துறைதொறும் வித்தகம் நிறுவி**
**வரலாற்றேட்டில் வான்புகழ் பதித்த**
**கலைஞரின் பெருமை உரைத்திட இயலுமோ?**
**அரசியல் உலகின் அதிசயப் பிறவி;**
**இலக்கிய வானின் துருவ விண்மீன்;**
**திரைப்பட வரலாற்றில் திருப்புமையம்;**
**உரைநடைத் தமிழுக்குப் புதிய உரைகல்;**
**இதழியல் வளர்ச்சிக்குக் கலங்கரை விளக்கம்;**
**கவிதைத் துறையின் தலைமைச் செயலகம்;**
**மேடைப் பேச்சின் பாடப் புத்தகம்;**
**ஆட்சி நிருவாகத்தின் அருங்கலைக் களஞ்சியம்;**
**நலத் திட்டங்களால் நாட்டுக்கே வழிகாட்டி;**
**வறுமை இருளை ஓட்டிய சூரியன்;**
**பகைநினைப் போர்க்கும் குளிர்ச்சித் திங்கள்;**
**செம்மொழித் தமிழின் புதிய ஊற்றுக்கண்;**
**தெருவோரத் திருநங்கைக்கு அரியணைப் பீடம்;**
**மாற்றுத் திறனாளிகளின் மாற்று இதயம்;**
**நெசவாளர் துயர்தீர்த்த நேயச்சுமைதாங்கி;**
**வசவாளர் வந்தாலும் நிழல்தரும் குளிர்தரு;**
**அண்ணா புகழ்பாடும் புலமைக் குயில்;**
**தமிழ்ப்பகை விரட்டிட முழங்கிய அரிமா;**
**நேர்மை எனும் ஒரேவழிச் சாலையாய்**
**சீர்மைமிக்க அரசியல் பேணித்**
**தூய்மை காத்த அண்ணனின் தம்பி;**
**தாய்மை உணர்வுடன் தொண்டரைப் போற்றித்**
**தலைமைக்கு இலக்கணம் வகுத்த பெருந்தகை;**
**சிக்கல் ஏதும் மக்களுக்கு வந்தால்**
**அக்கணமே களைவதில் அக்கறை காட்டிய**
**மனுநீதிச் சோழன்;அன்புத் தோழன்;**
**புலவரைப் போற்றிய புதுயுகப் பாண்டியன்;**
**இடுக்கண் இந்திய அரசுக்கு நேர்ந்தால்**
**உடுக்கை இழந்தவன் கைபோல் உதவி**

**வடக்கை வென்றிடும் வழிமுறை தேர்ந்தவர்;**
**புகழின் இமயம்;புலமைக் கடல்;**
**ஆட்சிப் பொறுப்பில் இல்லாத நாளிலும்**
**அனைத்துத் தமிழரும் போற்றிய தலைவர்;**
**அடுக்கிய கோடியாய் அளவிலா நிதியைப்**
**பெருக்கிய செல்வர் அருள்தனைப் பெறுவதே**
**குறிக்கோளாய்க் கொண்ட தலைவர் போலின்றி**
**கசங்கிய சட்டையும் கலங்கிய கண்களும்**
**வாட்டிடும் வறுமையும் சொத்தாய்ப் பெற்ற**
**அடித்தள மக்களின் அல்லல் தீர்ப்பதே**
**வாழ்வின் நோக்கமாய் வாழ்ந்து காட்டினார்;**
**ஆட்சித் துறையின் நுணுக்கம் அறிந்தே**
**தரமும் திறமும் குறையா வண்ணம்**
**சுருங்கிய செலவில் பெரும்பயன் நல்கும்**
**தொலைநோக்குடனே நலத் திட்டங்களை**
**நாட்டு மக்களுக்கு அளிப்பதில் முனைப்புக்**
**காட்டிய தலைவர் எனப்புகழ் கொண்டார்.**
**காலம் அவரைக் கவர்ந்து சென்றாலும்**
**மக்கள் இதயமே அரியணையாக**
**என்றும் வாழ்வார்!ஓங்குக அவர்புகழ்!**



தமிழ்க் காவலர் கலைஞர்

**பேராசிரியர் பெஞ்சமின் இலெபோ**



[ அயலகத்தில் தமிழ்த்தொண்டாற்றி வரும் சிறந்த மொழியியல் அறிஞர்.தமிழ்நாட்டு அரசின் பாராட்டைப் பெற்றவர்.]

பழங்காலத்திலிருந்தே தமிழ்ப் புலவர்கள் தமிழ்க் கன்னியின் காவலர்களாகச் செயல்பட்டுள்ளனர். இந்த வரிசையில் 21-ஆம் நூற்றாண்டின் கன்னித் தமிழ்க் காவலர் ஆக விளங்கியவர் கலைஞர் கருணாநிதி. அவர் கன்னித்தமிழ்க் காதலரும் ஆனவர்.

கலைஞர் - தமிழ்நாட்டு அரசியல் வானில் வட மீனின் திறன் கூட்டி உடன்பிறப்புகளுக்கு அரசியல் வழிகாட்டியாக இருந்தார்! ஐந்து முறை அரியணை ஏறிய தமிழக முதல்வர்! தொண்ணூறு வயது முதுமை யிலும் அரசியலில் புதுமை படைத்தவர்! அவர் எந்தத் தேர்தலிலும் தோல்வியடையாத வெற்றியாளர்! இந்திய அரசியலில் அவரைப் போல் இறுதிவரை உறுதியாக நின்றவர் , வென்றவர் எவரும் இலர்!!அரசியலிலும் தற்காலத் தமிழ் இலக்கியத்திலும் உறுதியாக வேரூன்றியவர் அவர் மட்டுமே! அரசியலும் இலக்கியமும் அவர்க்கு இரு கண்கள்; நாணயத்தின் இரு பக்கங்கள்! அவரது அரசியல் வாழ்க்கையைப் புறந்தள்ளிப் பார்த்தாலும், கன்னித் தமிழ்க் காதலராக/காவலராக, அவர் ஆற்றிய தமிழ்ப்பணி பாராட்டுக்குரியது!பன்முகத் தன்மை கொண்டு அவர் ஆற்றிய பணிகளைப் போற்றிப் புகழ்ந்திட இன்றொரு நாள் போதுமோ; ஒரு நாவுதான் போதுமோ!

என் பள்ளிப் பருவத்தில் ஆங்கிலம் அறிவியல் எனப் படித்து வந்த காலத்தில் தமிழ்ப் பக்கம் என் கவனத்தைத் திருப்பியவர் கலைஞரே!; தமிழ் இலக்கிய ஆர்வத்தைத் தூண்டியவர் அவரே!! ஷேக்ஸ்பியர், மில்தன், செல்லி.... என ஆங்கிலப் புலவர்களின் மோகத்தில் மூழ்கிக் கிடந்த என்னைத் தமிழின் பால் திருப்பியவர் கலைஞரே! துள்ளி வரும் மான் போல் அவர் அள்ளித்தெளித்த எதுகைகளும் மோனைகளும் அருவி எனப் பெருகி வந்த அவரழகுத் தமிழ்ப் பேச்சும் என்னைப் பெரிதும் கவர்ந்தன!

வடமொழியின் தாக்கத்தால் முடங்கிக் கிடந்த மொழியை, தனித்தமிழ் வழி காட்டி நடமாட வைத்தவர் மறைமலை அடிகள்; அவருக்குப் பிறகுதிரு. வி.க ., சீவா, பேரறிஞர் அண்ணாதுரை ஆகியோர் வந்தனர். அவர்களைப் போன்றவர்கள் தமிழ்த் தென்றலை மேடையில் உலவ விட்டு அரசியல் மேடைகளைத் தமிழ்ப் பூங்காவாக ஆக்கினார்! பேரறிஞர் அண்ணாதுரை திரையுலக உரையாடல்களில் அழகான தமிழ் வார்த்தைகளை உருவாக்கினார்;அடுக்கு மொழியில் அமைந்த அவரது உரையாடல்கள் திரையுலகைக் கவர்ந்தன! அண்ணாவின் தம்பியாகப் பரிணமித்த கலைஞர் தமிழ் உரையை வசன கவிதையாகச் செதுக்கத் தொடங்கினார்!பள்ளி இறுதி ஆண்டு கூடத் தேர்ச்சி

பெறாத கருணாநிதியிடம் நிதி இல்லை ; ஆனால் கூர்மையான மதி இருந்தது (இந்தக் கூர்த்த மதி கடைசி வரை குறைவு படா வளர்மதியாகவே இருந்தது.)பெரியாரின் பகுத்தறிவுப் பாசறையில் புடம் போடப்பட்ட போர் வாள் !"காலை இளம் பருதி கண் விழிக்கும் முன்னே எழுந்து கடமைகள் ஆற்றிப் பகலவன் உறங்கச் சென்ற போதும் கண்ணயராக் கடமை வீரர்! இவர் தமிழ்க் காதலராகக் கன்னித் தமிழ்க் காவலராக வாழ்ந்தவர்!

கன்னித் தமிழ்க் காதலர் இவர் என நிறுவச் சில சான்றுகள் :
இவரின் வசன கவிதை பாணியால் படத்தின் வசனங்களுக்கு உயிர் கொடுத்தார்! அவற்றை என்னால் இன்றுவரை மறக்க முடியவில்லை!
பராசக்தித் திரைப்படத்தில் பல வசனங்கள் இன்றும் உயிர்ப்புடன் உள்ளன.
“ஓடினாள், ஓடினாள், வாழ்வின் எல்லை வரை ஓடினாள். »
" தென்றலைத் தீண்டியதில்லை ; தீயைத் தாண்டி இருக்கிறேன்!"
""கோயில் கூடாது என்பதற்காக அல்ல; கோயில் கொடியவர்கள் கூடாரமா க ஆகக் கூடாது என்பதற்காக"
"வானத்தை முட்டும் கோபுரங்கள் : மானத்தை இழந்த மனிதர்கள்"
“நட்ட கல்லைத் தெய்வம் என்று சாற்றியே
சுற்றி வந்து முணுமுணுக்கும் மந்திரமாவது ஏதடா!
நட்ட கல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில்?"
"ஓடப்பராய் இருக்கும் ஏழையப்பர் உதையப்பர் ஆகிவிட்டால்
ஓர்நொடிக்குள்
ஓடப்பர் உதைப்பர் எல்லாம் மாறி ஒப்பப்பர் ஆய்விடுவார் உணரப்பா நீ"
கலைஞரின் இத்தகு கன்னித் தமிழ் வசனங்களில் உள்ளத்தைப் பறிகொடுத்தேன்!
தமிழ் இலக்கியக் கடலில் மூழ்கத் தொடங்கிய போதுதான் தெரிந்தது"நட்ட கல்லைத் தெய்வம் என்று ..." என்ற பாடல் சித்தர் பாடல் என்று! அது போலவே, ஓடப்பர் உதையப்பர் ... பாடல் பாவேந்தர் பாரதிதாசன் பாடல் என்று அறிந்தேன்..... இவற்றால் ஈர்க்கப்பட்ட என்னைத் தமிழ்க் கடலுள் தள்ளிய பெருமை கலைஞரையே சேரும்.
அக்காலத்தில் முத்தாரம், முரசொலி....போன்ற தாளிகைகளில் கலைஞர் எழுதி வந்த கட்டுரைகளைத்தேடிப் பிடித்துப் படித்தேன் - தமிழ்த் தேன் சொட்டும் அவர் நடைக்காக!
ஒரு கட்டுரையில் அவர் எழுதுகிறார்:
"காதலனைத் தே டிச்செல்லும் காதலி புரட்டாசி கூறும் புரோகிதர் வாழ் வீதி கடந்து ஐப்பசிக்கு உணவு தேடிநின்றாள் ..." மாதங்களின் பெயர்களையே பொருள் பொதிந்த வசனமாக்கி அழகிய ந்டையைப் படைத்து விட்ட கலைஞரின் கூர்த்த மதியை இன்றும் மறக்க இயலவில்லை.
இவர் எழுதியநாடககளில் எல்லாம் அனல் பறக்கும் வசனங்கள் இருக்கும் ; கருத்துகள் கனல் பறக்கும்; தூள் பறக்கும் துணுக்குகள்.... ஏராளம், ஏராளம் :
"ஏதென்சு நகரத்து எழில் மிக்க வாலிபர்களே !" என்று கம்பீரமாகத் தொடங்கும் சாக்கிரடீஸ் நாடகம்

" தீட்டிய வாளும் தினவெடுத்த தோள்களில் தூக்கிய ஈட்டியும் போதாது வீரர்களே! நான் தரும் அறிவாயுததையும் எடுத்துக்கொள்ளுங்கள்".... என்று தொடரும் வசனங்களில் என்னை இழந்தேன்!! தூக்கு மேடை, அசோகச் சக்கரவர்த்தி, அனார்கலி, மனோகரா, பராசக்தி... போன்றவை கலைஞரின் வசனங்களுக்குகாவே புகழ் பெற்றன! அவை மட்டும் அல்ல: தமிழ் இலக்கியங்ளின் புகழ் பெற்ற பாடல் வரிகளுத் தன் வசன கவிதைகளால் புத்துயிர் கொடுத்தவர் கலைஞர்.'கெடுக சிந்தை கடிதிவள் துணிவே " என்ற ஒக்கூர் மாசாத்தியாரின் புறநானூற்றுப் பாடலுக்குக் கலைஞர் எழுதிய வசனகவிதை இன்று படித்தாலும் உயிர் ஓட்டத்துடன் உணர்ச்சி ஊட்டும்!

தமிழே தன் மூச்சாகவும் பேச்சாகவும் வாழ்ந்த கலைஞர் கன்னித் தமிழ்க் காதலர் என்பதற்கு இன்னும் பல சான்றுகள் உண்டு: விரிவஞ்சி விடுக்கிறேன்.

காதலியைக் காப்பது அல்லவா காதலன் கடமை ! காதலித்த கன்னித் தமிழைக் கடைசி வரை காத்து நின்றவர் கலைஞர்!

கன்னித் தமிழின் காவலர் அவர் என்பதை அவர் வசன கவிதை ஒன்று சுட்டிக்காட்டும் : "... என் கவிதை
யாப்பின்றிப் போனாலும் போகட்டும்
நம் நாடு, மொழி, இனம் எல்லாம்
காப்பின்றிப் போகக் கூடாதென்ற கொள்கை ஒன்றால்
.........................................................நெஞ்சில்
ஊறுகின்ற உணர்ச்சிகளை வரிகளாக்கிக் கொள்கை
மாறுகின்ற கோடரிகள் உணர்வதற்கு ஒன்று சொல்வேன் ".

குமரிமுனையில் கடலின் நடுவில் 133 அடியில் நிறுவப்பட்டுள்ள திருவள்ளுவர் சிலையானது, தமிழ்க் கவிஞருக்குச் செய்யப்பட்ட மிக உயர்ந்த மரியாதையாகும். உலகில் இதுவரையிலும் இதுபோன்று கவிஞர் ஒருவருக்குச் சிலை நிறுவப்பட்டிருக்க வாய்ப்பு இல்லை. பிரமாண்டமான முறையில் சிலையை நிறுவியுள்ள கலைஞரின் செயல்திட்டத்தின் பின்புலத்தில் தமிழ் அரசியல் பொதிந்திருக்கிறது.விரிக்கின் பெருகும்.

சென்னை வள்ளுவர் கோட்டத்தில் வள்ளுவர் தன்னை அமரவைத்த கலைஞர் குமரிக் கடல் ஓரத்தில் நிற்க்க வைத்தது ஏன் ? கலைஞரைப் பற்றி நான் எழுதிய கவிதை ஒன்றில் இதற்கான விடை தந்து இருக்கிறேன்! வள்ளுவர் கோட்டத்தில் அறம் உரைக்கும் வள்ளுவரைக் காட்சிப் படுத்தியதால் அவரை அமரவைத்தார் கலைஞர்! அறம் உரைப்பார் அமர்ந்துதான் அறம் உரைப்பர்.குமரிக் கடலில தமிழகத்தைக் காக்கும் காவலராக வள்ளுவரை நிற்க வைத்தார் ; காவல் வீரர்கள் அமர்ந்திருப்பதில்லை; வில்லை ஊன்றிய கையோடும் வெய்துயிர்ப்போடும் கங்குல் எல்லை காண்பளவும் நின்றிப்பார் . அதனால்தான் குமரிக் கடலில் வள்ளுவரை நிற்கவைத்திருக்கிறார் கலைஞர் என்பது என் கருத்து.

1967ஆம் ஆண்டு திமுக ஆட்சியில் 1969ஆம் ஆண்டு வரை ஸ்டேட் எக்ஸ்பிரஸ் என்ற ஆங்கிலப் பெயரில் இயக்கப்பட்ட பேருந்துகளுக்குப் போக்குவரத்துத் துறை அமைச்சர் கலைஞர் அவர்கள் தமிழ்நாடு போக்குவரத்துக் கழகம் என்று பெயர் மாற்றம் செய்தார்.

பேருந்துகளிலும், திருக்குறளும் திருவள்ளுவர் படமும் வைக்கப்பட்டு, அருகிலேயே அதன விளக்கத்தை எழுதி, மக்கள் மனத்தில் நல்ல கருத்துகளை விதைத்தார்.

1970களுக்கு முன், கல்வி நிறுவனங்களில் நடக்கும் விழாக்களில் பாடப்பட்ட பாடலுக்குப் பதிலாக, 1970-ஆம் ஆண்டு முதல் தாய்த் தமிழ் வாழ்த்துப் பாடலாக அறிவிக்கப்பட்ட “நீரருங் கடலுடித்த நிலமடந்தை கெழிலொழுக்கும்” என்று தொடங்கும் பேராசிரியர் மனோன்மணியம் சுந்தரனாரின் நாடகக் காவியம் வந்தது. தமிழக அரசின் சார்பில் தாய்த் தமிழ் வாழ்த்துப் பாடலாக்க முதல்வர் கலைஞரின் ஆணை பிறந்தது !

பின்னர், 2006 ஆம் ஆண்டு, சித்திரையில் தமிழ்ப் புத்தாண்டைத் தொடங்கும் நடைமுறைக்குப் பதிலாக, சனவரி 14- ஆம் நாள் தமிழ் ஆண்டு தொடங்கும் என்று முதல்வர் கலைஞர் அறிவித்தார்.

வள்ளுவர் கோட்டத்தை திருக்குறள் அடிப்படையில் திட்டமிட்டு உருவாக்கிய பெருமை முத்தமிழ் முதல்வர் கலைஞரையே சாரும்.

பூம்புகாரில் சிலப்பதிகார சிற்பக் கூடம் நிறுவப்பட்டது, தஞ்சாவூரில் ராஜராஜ சோழன் சிலை நிறுவப்பட்டது, தர்மபுரியில் அவ்வையாருக்கு நெல்லிக் கனி கொடுத்த அதியமான் மன்னன் சிலைகளை வைத்து கோட்டம் கட்டப்பட்டது. திமுக ஆட்சியில் சென்னை கடற்கரையில் விவேகானந்தர் வரலாற்றுக் கண்காட்சியுடன் விவேகானந்தர் இல்லம் கட்டப்பட்டது.

22 நாடுகளில் வாழும் 36.87 மில்லியன் தமிழர்களின் நலனைக் கவனிப்பதற்காக சிங்கப்பூர் உட்பட பல நாடுகளுக்குச் சென்ற தமிழக அரசின் தமிழ்க் குழு. நாட்டில் வாழும்தமிழுக்காக தனி அமைச்சகம் ஏற்படுத்தி நம் அன்னைத் தமிழுக்குச் செம்மொழித் தகுதி பெற்றுத்தந்து மொழிக்காவலர் ஆனார். தமிழர்களுக்கு தேவையான புத்தகங்களை அனுப்பி தமிழக அரசு உதவி வருகிறது.

1996-2001ல் திமுக ஆட்சியில் தமிழ் மொழிக்கென தனி அமைச்சர் பதவி உருவாக்கப்பட்டது. திருவள்ளுவர் சிலை திறக்கப்பட்டது.

இரு மொழிக்கொள்கை, தமிழ் ஆங்கிலம் மட்டுமே அலுவல் மற்றும் பயிற்று மொழியாக அமையும் வகையில் தீர்மானம் கொண்டுவரப்பட்டது.

• தமிழுக்கு உழைத்த பெருந்தலைவர்களின் பெயரில் புதிய பல்கலைக்கழகங்கள்
• மொழிப்போர்த் தியாகிகளுக்கு ஓய்வூதியம்
• தமிழ் இணைய மாநாடு மற்றும் தமிழ் இணையப் பல்கலைக்கழகம்.
• தமிழைப் பயிற்று மொழியாக கொண்டவர்களுக்கு அரசுப் பணி நியமனங்களில் 20 விழுக்காடு இட ஒதுக்கீடு.
• கன்னியாகுமரியில் வள்ளுவர் சிலை அமைப்பு.
• தமிழறிஞர்களின் நூல்கள் நாட்டுடைமையாக்கப்பட்டன.
• விடுதலைப் போராட்ட வீரர்கள், தமிழறிஞர்களுக்கு சிலைகள் மற்றும் நினைவு மண்டபங்கள்.
• தமிழ் செம்மொழியாக அங்கீகாரம்
• செம்மொழி ஆய்வு நிறுவனம் சென்னையில் அமைக்கப்பட்டது.
• தை முதல் நாள் தமிழ்ப் புத்தாண்டாக அறிவிப்பு

தமிழுணர்வை வளர்த்தல், பழந்தமிழ் இலக்கிய ஆர்வத்தை உருவாக்கல், தமிழ்ப் பண்பாட்டை மீட்டல், ஆரியப்பண்பாட்டை அகற்றல் முதலானவை திராவிடர் இயக்க எழுத்தின் மைய இழைகளாகத் திகழ்ந்தன.
கலைஞர் படைப்புகளும் இதே திசையில் புதிய கருத்துகளைக் காட்டின. முற்போக்கு உலகு நோக்கி அழைத்துச் செல்வதை நோக்கமாக்க கொண்டிருந்தன.

பழந்தமிழ் இலக்கிய ஆர்வத்தை உருவாக்குவதற்கும் தமிழ்ப் பண்பாட்டை மீட்பதற்கு கலைஞர் உருவாக்கிய படைப்புகள் பல 'குறளோவியம், சங்கத் தமிழ், தொல்காப்பிய பூங்கா' முதலிய நூல்கள் இந்த நோக்கத்தோடு எழுதப்பட்டவை
நாமக்கல் வெ.இராமலிங்கம் பிள்ளை, இறுதிக்காலத்தில் வறுமையில் வாடிய போது, கலைஞர் மாதந்தோறும் அரசின் சார்பில் உதவித்தொகை வழங்கிட ஏற்பாடு செய்தார். 'தமிழனென்று சொல்லடா தலை நிமிர்ந்து நில்லடா' எனப் பாடிய கவிஞரின் நினைவைப் போற்றும் வகையில் அவர் வாழ்ந்த வீட்டை 'நினைவு இல்லமாக' ஆக்கியதுடன், சென்னைக் கோட்டையில் அரசு தலைமைச் செயலகப் பத்து மாடிக் கட்டடத்திற்கு அவருடைய பெயர் வைக்கப்படக் காரணமாகயிருந்தார்.
விடுதலைப் போராட்ட வீரரும் பத்திரிகையாளரும் படைப்பாளருமான பரலி சு.நெல்லையப்பருக்குத் தமிழக அரசின் சார்பில் மாதந்தோறும் நிதியுதவி வழங்கிட கலைஞர் ஆவனசெய்தார். இருவரும் காங்கிரஸ் இயக்கத்தைச் சார்ந்தவர்களெனினும், அவர்கள் செய்த தமிழ் இலக்கியச் செயல்களைக் கருத்தில்கொண்டு, பாரபட்சமின்றிச் செயல்படும் மனம் கலைஞருக்கு இருந்தது. தமிழ் அறிஞர்கள் பலரின் நூல்களை நாட்டுடைமை ஆக்கினார் ; அந்த அர்கனர்களின் வழி மரபினருக்குப் பெருந்தொகை வழங்க வழி வகுத்தார்!
தமிழுக்கெனத் தனி அமைச்சகம் ஏற்படுத்தி, தமிழ் வளர்ச்சியை மேம்படுத்திய கலைஞர், நடுவண் அரசுடன் போராடி, தமிழுக்குச் 'செம்மொழி' தகுதி பெற்றிட முதன்மைக் காரணமாக விளங்குகிறார். செம்மொழி மாநாடு நடத்தி நம் மொழிக்குப் பெருமை தேடித் தந்தவர் கலைஞர்!
2,000 ஆண்டு வரலாற்றுப் பழைமையான இலக்கியப் படைப்புகளை இளந்தலைமுறை யினருக்கு அறிமுகப்படுத்தும் வகையில்தாம் 'சங்கச் சித்திரங்கள்', 'தொல்காப்பியப் பூங்கா' போன்ற நூல்களைக் கலைஞர் எளிய முறையில் எழுதியுள்ளார். இந்தச் செயல், ஒருவகையில் தமிழ்ப் பண்பாட்டினை மீட்டுருவாக்கம் செய்வதாகும்.
இப்படி எண்ணற்ற வழிகளில் எல்லாம் அல்லும் எல்லும் கன்னித் தமிழைக் காத்து நின்றவர் கலைஞர்!!
தமிழ் உள்ளவரை தமிழர் வாழும் வரை அவர் புகழ் நின்று என்றும் வாழும்!

[தமது உடல்நலிவைப் பொருட்படுத்தாது நெடிய உணர்வுரை எழுதி அனுப்பிய பிரெஞ்சுத் தமிழறிஞருக்கு நன்றி]

**கலைஞர் புகழ்ப்பாடல்**

-பாவலர் கொ.வீ.நன்னன், மேனாள் சட்டப்பேரவை உறுப்பினர்



செந்தமிழுக்குச் செம்மொழியெனும் மகுடம்-கலைஞர்
சூட்டியதால் உலகம் முழுதும் மகிழும்-(செந்தமிழுக்கு)
இந்தமொழிக்கு எந்த மொழி நிகரோது-உளம்
இனிக்கும் தேன் மணக்கும்சுவை குறையாது
விந்தையாய் நெஞ்சினைத் தொடுமாறு-வளம்
முந்திமுந்திப் பிறந்தது இதன் வரலாறு-(செந்தமிழுக்கு)

தந்தை பெரியார் ஊட்டிவிட்ட உணர்வோடு-பழகும்
தகையாளர் அண்ணா காட்டிய துணிவோடு
வந்த பகை ஓடும் வரை போர்க்களத்தில்-கழகத்
தொண்டர் படையோடு நிற்பார் தமிழ்நிலத்தில்-(செந்தமிழுக்கு)

திரைப்பட வசனத்தில் தீப்பொறி பறக்கும்-புவி
வரைபடத்தில் என்றும் அவை நிலைத்திருக்கும்
உரையாற்றும் கலையில் மலைச்சிகரம்-அவை
உதிக்கும் கருத்து இடிமின்னலாய் தெரியும்-(செந்தமிழுக்கு)



சிந்தித்துச் செயல்படுத்தும் வல்லவர்-அவரை
நிந்தித்து வந்தவர்க்கும் நல்லவர்
சந்தித்துத் தன்குறையைச் சொன்னவர்க்கும்-அவர்
சங்கடத்தைத் தீர்த்துவைத்த தலைவர்-(செந்தமிழுக்கு)
பகுத்தறிவுப் பாதையிலே நடைபோட்டு-தன்னை
பார்க்கவரும் எவர்களையும் எடைபோட்டு-தான்
வகுத்துவைத்த கொள்கைகளைப் பரப்பிவிட்டு-பிறர்க்கு
வாக்களித்ததைத் தவறாமல் கடைப்பிடித்து-இன்பச்
செந்தமிழுக்குச் செம்மொழியெனும் மகுடம்-கலைஞர்
சூட்டியதால் உலகமுழுதும் மகிழும்-முத்தமிழ்

## குவலயமெங்கும் குறள்நெறி பரப்பும் நான்கு இணைய இதழ்கள்













ஆண்டுக் கட்டணம் வேண்டாம்!

நன்கொடை வேண்டாம்!

படியுங்கள்!பகிர்ந்திடுங்கள்!

anjal@kuralvirtual.com என்னும் மின்னஞ்சலுக்கு
உங்கள் மின்னஞ்சல் முகவரி அல்லது
புலன எண் தெரிவித்தால் போதும்!

# குறள்நெறி

மின்னிதழ்:61 “குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்” தி.வ.ஆ.2054 ஆனி-1-- சூன்-16-பொ.ஆ.-2023

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்




## திருக்குறள்நெறித் தோன்றல் ஒய்.எம்.சி.ஏ.பக்தவத்சலனார் நினைவிதழ்







பதறிக் கதறிப் புலம்புகிறேன் !

========================----- முனைவர் ஔவை நடராசன்



பதறிப் பதறிக் கதறிப் புலம்பினாலும் பக்தவச்சலம் இனி மீளப்போவதில்லை. அறுபதாண்டுகளுக்கு மேலாக என் உயிரில் கலந்த நண்பராகத் திகழ்ந்த திலகம் பக்தவச்சலம்.

என் வாழ்வின் அனைத்து நிலைகளிலும் அவர் பங்கு பெற்றவர். ஞாயிற்றுக்கிழமை மாலை சிறிதும் மனம் குலையாமல் எனக்கு ஆறுதல் சொல்லிப் பேசினார்.

தாமரையால் இத்துயரத்தை தாங்கவே முடியாது. இலைகள் உதிர்வது இயல்பு. மலையா இப்படிச் சாய்வது? என் மனக்கலக்கத்தை எழுத முடியவில்லை.

எண்ணினால், எண்பது பேருக்கு மேல் "எங்கே உங்கள் பக்தவச்சலம் எப்படி நீங்கள் இனி அவர் துணையில்லாமல் நிகழ்ச்சிகளில் பங்கு பெறுவீர்கள்?" என்று கேட்டு என் மனத்தை வாட்டியபடி இருக்கிறார்கள்.

அவர் மறைந்தார் அல்ல. கவிப்பேரரசு ஆறுதல் கூறியது போல, அவர் வாழ்வில் நிறைந்தார். நினைவில் நினைத்தபடி இருப்பார். கண்ணை மூடினால் அவர் தோற்றம்தான் தெரிகிறது.

தொட்டுத் தொட்டு அன்பைக் கொட்டி கொட்டி பழகியவர். தன் மனத்துயரை மற்றவரிடம் அவர் பகிர்ந்ததேயில்லை. அவர் எது சொன்னாலும் நான் முரண்பட்டதில்லை.

ஒய்.எம்.சி.ஏ. அரங்கம் ஓவென்று கதறுகிறது. எண்பதாம் ஆண்டு விழா இப்படிதானா நடப்பது? ஊரடங்கு உலகத்தையே கலக்கும்போது, பக்தவச்சலம் அடங்கியிருப்பது விழிமேல் இடிவிழுந்ததாக இருக்கிறது.



தாமரையின் தடந்தோள்களை இங்கிருந்தபடியே தழுவிக்கொள்கிறேன். பட்டிமன்றத்தை சொற்கட்டி மன்றமாக நடத்திய வரலாற்றினைத் தாமரைதான் தொடர்ந்து எழுத வேண்டும்.

என் ஏக்கத்துக்கு எல்லையில்லை.

அழுவதற்கு கண்ணீரில்லை.

தேம்புகிற நெஞ்சத்துக்கு போதிய உரமில்லை.

## அடுத்த வாரம் செவ்வாய் பார்க்கலாமா ஐயா?

--மறைமலை இலக்குவனார்




நாகசுரம் இல்லாமல் திருமணமா

சந்தனம் இல்லாமல் நறுமணமா

நீர்ப்பெருக்கு இல்லாமல் அருவியா

உயிரெழுத்து இல்லாமல் கவிதையா?

பயிர்பச்சை இல்லாமல் சிற்றூரா?

அரசன் இல்லாத

அத்தாணி மண்டபமா???

பக்தவத்சலம் இல்லாமல்

ஒய்.எம்.சி.ஏ.பட்டிமன்றமா?

பெருநகர்க் குடிநீர் வாரியத்தில்

பெரிய பதவி வகித்தவரே!



உண்ணும் நீரினும் நீர் உவந்தது

இந்தப் பட்டிமன்றம் தானே அய்யா?

திருப்பள்ளித் தெருவில்

தோன்றிய தமிழ்ப்பள்ளியே

அறிஞர் அண்ணாவையே

அசரவைத்த மாணவரே!

உங்கள் ஒவ்வொரு நாடியும்

துடிக்கும் பொழுது

ஒவ்வொரு கூட்டத்துக்கும்

திட்டங்கள் உதிக்கும் வேளை!

ஐம்பது ஆண்டுகளாக

மே திங்களைத் தவிர்த்து

நாற்பத்தெட்டு

செவ்வாய்க்கிழமைகள்

நற்றமிழன்னைக்குப் புதுப்புதுச்

சொல்மாலைகள்!



விருது...

சென்னையில் ஒய்.எம்.சி.ஏ. பட்டிமன்றம் சார்பில் செவ்வாய்க்கிழமை நடைபெற்ற விழாவில் தமிழறிஞர் சி.இலக்குவனார் விருதை 'கவிதை உறவு' ஆசிரியர் ஏர்வாடி ராதாகிருஷ்ணனுக்கு வழங்குகிறார் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் அவ்வை நடராஜன். உடன் (இடமிருந்து) மன்ற இணைச் செயலர் பு.சீ.கிருட்டிணமூர்த்தி, செயலாளர் கெ.பக்தவச்சலம், துணைத் தலைவர் மறைமலை இலக்குவனார், விருது பெற்ற கலசம் இராமலிங்கம், மு.ச.சிவம், மூத்த வழக்கறிஞர் காந்தி, செங்கைப் பொதுவன், பாவலர் புரட்சிதாசன், கவிஞர் பழனிபாரதி, கம்பன் கழகச் செயலர் இலக்கியவீதி இனியவன்.

கருத்துக் கருவூலங்கள்!

ஆண் வேடமிட்டுத் தமிழ்த்தாய்

அவ்வப்போது வந்து

அருவியென அருந்தமிழ் பொழிந்து

பெருவிருந்துகள் எம் செவிக்கு வழங்கிய

அந்த நாள்கள் வந்திடுமா இனி?

சங்க இலக்கிய நூல்களும்

சிலம்பும் மேகலையும்

சிலம்பொலியார் விளக்கத்துடன்

நாங்கள் கற்று வந்த

பல்கலைக்கழகமாகப் பட்டிமன்றத்தை

மிளிரச் செய்த தமிழ்வேந்தே!

கலைமாமணியும் அரசு விருதுகளும்

உம்மைச் சேர்ந்து தம்மைப்

பெருமைப்படுத்திக்கொள்ளாததால்

நாணமடைந்து நாடிதளர்ந்து

நடைப்பிணமாய்விட்டன!

எங்கிருந்து பெற்றீர் அய்யா இந்த

இருபத்துநான்கு மணிநேரமும்

உழைக்கும் வித்தையை?

சொல்லின் செல்வர் சேதுப்பிள்ளை

மு.வ.,ம.பொ.சி,,நாரண துரைக்கண்ணன்

சிதம்பரநாதனார் இலக்குவனார்

பாவாணர்,தெ.பொ.மீ. என

நீங்கள் பார்க்காத அறிஞரில்லை!

பாவேந்தர்,கண்ணதாசன்,

முடியரசன்,வேழவேந்தன்,

பொன்னடி,தெசிணி என

நீங்கள் பழகாத அறிஞரில்லை!

உலகம் முழுமையும் வாழும்







புதுகைத்தென்றல் தருமராசனார்-பேராசிரியர் பானுமதி பாராட்டுவிழா



ஆத்திரேலியா சிட்னி தமிழ்வளர்ச்சி மைய அமைப்பாளர் முனைவர் அன்புசெயா அவர்களின் வரவேற்புவிழாவில்



அறிஞர் அனைவரையும்

அழைத்துப் பேசவைத்தீர்!

பட்டிமன்றம் உங்களால்

ஒரு தேனொலி நிலையமாகியதே!

உலகத் தமிழ்ப் பூங்காவாக

உலகத் தமிழ்ச் சங்கமமாக

மற்றொரு பொதிகையாகப்

பட்டிமன்றத்தை மாற்றிய

அகத்தியரே!

அந்த நாள்கள் வந்திடுமா இனி?

சந்தனத் தென்றலாய்ச்

சங்கத் தமிழ் மறைந்தது!

தென்பாங்குச் சிந்து பாடும்

அன்பான குயில் பறந்தது?

தமிழ்நலன் நாடும் அனைவரின்

உயர்வுக்கு உழைத்த

தமிழ்வள்ளல் மறைந்தார்!

எங்கள் வழிகாட்டி

இனிய நண்பர் பிரிந்தார்!

உயிர்வற்றிப் போயினவே.

வார்த்தைகள்!

உணர்வற்றுப் போனதே உள்ளம்

ஐயா எங்கே போனீர்கள்?

அடுத்த வாரம் செவ்வாய் பார்க்கலாமா ஐயா?










## தமிழறச் செம்மல் பக்தவத்சலம் இலக்கியத் தொண்டில் விடை பெற்றார்!



---அறிஞர் இலக்குவனார் திருவள்ளுவன்

செவ்வாய்தோறும் சென்னையில் தமிழ்க்கூடலை நிகழ்த்தி வந்த பொறியாளர் கெ.பக்தவத்சலம் இன்று(ஆனி 16, 2051/30.06.2020)காலை 8.30 மணியளவில் அயராது ஆற்றி வந்த தமிழ்ப்பணிகளில் இருந்து விடை பெற்றார்.



வாழ்விணையர் திருமதி ப.வசந்தாஅவர்கள்
6.12.1945-14.4.2013.

கிறித்துவ இலக்கியக்கழகத்தின் (ஒய்.எம்.சி.ஏ.) பட்டிமன்றம் என்றதும் அறியாதார் கிறித்துவ அமைப்பின் வாதுரை மன்றம் என எண்ணுவர். ஆனால் தமிழ்வளர்க்கும் தமிழ் ஆர்வலர்களின் சங்கமம் இது என்பதைத் தமிழன்பர்கள் அறிவர். சொல்லின் செல்வர் இரா.பி.சேது(பிள்ளை) அவர்களை முதல் தலைவராகக் கொண்டு 75 ஆண்டுகளாக இயங்கி வருகிறது இந்த அமைப்பு. இதில் 1966 ஆம் ஆண்டு முதல் தொடர்ந்து செயலராகத் திறம்படச் செயலாற்றி வருகிறார்.

தமிழ்நாட்டின் தலைநகரில் தமிழ் அமைப்பு ஒன்றின் செயலராகத் தொடர்ந்து 54 ஆண்டுகள் தொண்டாற்றுவது அருவினைச்செயலாகும். இவர் நடத்தும் நிகழ்ச்சிகளில் முதல்நிலைத் தமிழறிஞர்களும் வளர்நிலைத் தமிழாசிரியர்களும் மலர்நிலை தமிழ் ஆய்வாளர்களும் பங்குபெற்றுள்ளனர். அவ்வாறு பங்கேற்கா அறிஞர் யாருமிலர் எனலாம். இவரது செவ்வாய்க்கிழமை நடத்தும் பட்டிமன்ற நிகழ்ச்சியில் பங்கேற்பதைப் பெருமையாகக் கருதும் சூழலை இவர் உருவாக்கினார்.

1958இல் இளநிலைப்பொறியாளராகத் தம் பணி வாழ்வை சென்னை மாநகராட்சியில் தொடங்கினார். பொறியியல் சான்றிதழ்க் கல்வியை முடித்தவர் தணியாத் தமிழார்வத்தால் குமுகவியலில் இளங்கலைப் பட்டத்தையும் அரசறிவியலில் முதுகலைப் பட்டத்தையும் பெற்றார். என்றாலும் பள்ளிப்பருவத்தில் தமிழில் மிகுதியாக மதிப்பெண் பெற்ற இவர் நாட்டம் முழுமையும் தமிழில்தான் இருந்தது. தம் வீட்டிற்கே 'தமிழ் இல்லம்' என்று பெயர் சூட்டியவர் தமிழை எங்ஙனம் மறக்க இயலும்? மாணவப் பருவத்திலேயே ஏ.வி.பி.ஆசைத்தம்பியின் தனிஅரசு, சி.பி.சிற்றரசுவின் தீப்பொறி, கவியரசு கண்ணதாசனின் தென்றல், நாரண துரைக்கண்ணனின் பிரசண்ட விகடன், ஆனந்தபோதினி ஆகிய இதழ்களில் கட்டுரைகள் எழுதி வந்தார். பணிவாழ்க்கையில் இணைந்தாலும் தமிழ் வாழ்வாக மாற்றிக் கொண்டார்.

'நித்திலக்கோ' என்னும் புனைபெயரிலும் இலக்கியக் கட்டுரைகள் எழுதியுள்ளார். இளந்தமிழன், தாமரை, ஓம் சக்தி வாசகர்கள் இவரை நன்கு அறியும் வகையில் அவற்றில் சிறப்பான கட்டுரைகளைப் படைத்து வந்தார்.

கி.இ.க.(ஒய்.எம்.சி.ஏ.)பட்டிமன்ற நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு அறிஞர்களின் உரைகளைக் குறிப்பெடுத்து இலக்கிய இதழ்களுக்கு அனுப்பி வந்தார்.




தமிழக அரசின் திருக்குள்நெறி பரப்பு மையம் 'திருக்குறள் நெறித்தோன்றல்' விருதும், பெரியார் நூலக வாசகர் வட்டம் 'பெரியார் விருது'ம் வழங்கியுள்ளன. உலகத்திருக்குறள் பேரவை, வில்லிவாக்கம் திருக்குறள் வாழ்வியல் சங்கம், வாணுவம்பேட்டை திருவள்ளுவர் இலக்கிய மன்றம், சென்னை நண்பர்கள் கழகம் முதலான தமிழ் அமைப்புகளும் இவருக்கு விருதுகளும் பாராட்டிதழ்களும் அளித்துச் சிறப்பித்துள்ளன. முகம்மாமணி, கவிதை உறவு முதலான இதழ்கள் இவரைப்பற்றிய சிறப்புக் கட்டுரைகளை வெளியிட்டுள்ளன.

வேதநாயகர், அறம் வளர்த்த ஆன்றோர்கள், புகழாளர்கள் முதலான நூல்களை எழுதித் தமிழான்றோர்களை இக்காலத்தலை முறையினர் உணரச்செய்தார். இலக்கியக்கூட்டங்களில் இவர் ஆற்றிய பொழிவுகளும் வானொலி, தொலைக்காட்சி உரைகளும் மென்மையும் நுண்மையும் மிக்கன. இச்சிறப்பின் காரணமாகத்தான் 'சன்'தொலைக்காட்சியில் இவர் 'வணக்கம் தமிழகம்' நிகழ்ச்சியில் இருமுறை பங்கேற்றார்.

மேதை வேதநாயகம்மீது பற்றுக் கொண்டு அவரது நினைவு மலரைச் சிறப்பாகத் தொகுத்துத் தந்தார். அம்பத்தூர் இலக்குவனார் இலக்கியப் பேரவையில் அவர் குறித்துச் சிறப்பாகப் புகழுரை வழங்கினார்.

வாசுதேவ(பிள்ளை)அறக்கட்டளையின் அறங்காவலராகத் திகழ்ந்தும் அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், வானவில் பண்பாட்டு மையம் ஆகிய அமைப்புகளில் செயற்குழு உறுப்பினர் பொறுப்பேற்றும் 'கருணீகர் நல்வாழ்வு' இதழின் சிறப்பாசிரியராக இருந்தும் பிற பொதுவாழ்விலும் ஈடுபடுத்திக் கொண்டவர்.

இலக்கிய உரைகள், கவிதைகள், தொடர் சொற்பொழிவுகள், இலக்கியத் திறனாய்வுகள் என அறுநூற்றுக்கு மேற்பட்ட நிகழ்வுகளால் 'செவ்வாய்தோறும் செந்தமிழ்' எனத் தமிழன்னைக்கு வாரந்தோறும் தமிழ்மாலை அணிவித்து வந்த செம்மல் தம் பணிகளில் இருந்து விடை பெறுகிறார். இவற்றில் குறிப்பிடத்தகுந்தது, பேரா.முனைவர் மறைமலை இலக்குவனார் வாழும் கவிஞர்கள் குறித்து ஆற்றிய 128 தொடர் சொற்பொழிவுகளாகும்.

கணிணிவழிக் கிரந்தத்திணிப்பு எதிர்ப்பிற்காக "மணிப்பிரவாளத்திற்கு மறுவாழ்வா" என நிகழ்ச்சி நடத்தி என்னைச் சிறப்புரையாற்றச் செய்தார். என் தலைமையில் இவர் வள்ளலார்பற்றி ஆற்றிய உரை, வள்ளலார் குறித்த சிறந்த இலக்கிய ஆய்வாகும்.

ஆட்சித்துறையினர், நீதித்துறையினர், திரைத்துறையினர், இதழியல்துறையினர், கலைத்துறையினர், முதலான எத்துறையில் இருந்தாலும் தமிழ் ஆர்வலர்களை அழைத்து நிகழ்ச்சிகள் நடத்துவது இவரின் தனிச்சிறப்பு. அயல்வாழ் தமிழறிஞர்கள் இங்கு வரும்பொழுது அவர்களை அழைத்தும் பட்டிமன்ற நிகழ்ச்சியை நடத்திவிடுவார்.

அறிஞர்களின், கவிஞர்களின் பிறந்தநாள் விழாக்கள், நினைவு விழாக்கள், நூற்றாண்டு விழாக்கள் ஆகியவற்றைச் சிறப்புடன் நடத்துவதும் இவரின் செயற்சிறப்பு. தமிழ்ப்போராளி பேரா.சி.இலக்குவனாரின் நூற்றாண்டு விழாவை நடத்தியதுடன் அதற்கு முன்பும் பின்புமாகத் தொடர்ந்து 35 ஆண்டுகள் இலக்குவனார் நினைவரங்கம் நிகழ்த்தி அவர் மீதான அளவுகடந்த பற்றை வெளிப்படுத்தியுள்ளார். எந்த ஓர் அமைப்பும் எந்தத் தமிழறிஞருக்கும் இவ்வாறு தொடர்நினைவரங்கம் நிகழ்த்தியதில்லை!

இவருக்குத் தோன்றாத் துணையாக விளங்கிய மனைவி திருவாட்டி வசந்தா பக்தவத்சலம் ஈராண்டுகளுக்கு முன்னர் மறைந்து அவருக்குப் பெருந்துயரம் தந்தார். இன்றோ இவரே மறைந்து தம் வழியில் ஒய்.எம்.சி.ஏ. பட்டிமன்றப்பணிகளில் ஈடுபட்டுத் துணைச்செயலராகத் திகழும் மகன் பேரா. தாமரைக்கண்ணன், பெண் மக்கள் திருவாட்டி கல்யாணி, திருவாட்டி சுமதி, பெயரர்கள், தமிழ்ச்சுற்றத்தார் துயருற நம்மிடமிருந்து விடை பெற்றுவிட்டார்

வாழும் பொழுது ஓய்வு எடுக்காமல் பணியாற்றியதால் வாழ்வில் இருந்து பெறும் ஓய்வே தமிழ்ப்பணிக்குமான ஓய்வானது.

அண்மையில் உடல் நலமுற்று மருத்துவமனையில் இருந்து வீடு திரும்பியதும் அலைபேசி வழி உரையாடினார். மகுடைத் தொற்றால் நிகழ்ச்சிகள் நடத்த முடியாதது குறித்து வருந்தினார். அவருக்கான ஓய்வுக்காலமாகக் கருதுமாறும் வரும் தைத்திங்களில் பட்டிமன்ற நிகழ்ச்சி, பட்டிமன்ற முத்துவிழா, தமிழர்திருநாள் எனச் சிறப்பாக நடத்தலாம் என்றும் அமைதிகாக்குமாறும் தெரிவித்தேன். திசம்பரில் வரும் அவரின்பிறந்தநாள் பெருமங்கலத்தையும் அப்பொழுது இணைத்துக் கொண்டாட வேண்டும் என்றேன். ஆனால், காலன் அதற்கான வாய்ப்பை நல்கவில்லையே!

தமிழ்க்காப்புக்கழகம், தமிழ்நாடு-புதுச்சேரி தமிழ் அமைப்புகள், இலக்குவனார் இலக்கிய இணையம் இலக்குவனார் இலக்கியப்பேரவை, அம்பத்தூர், அகரமுதல இதழ் ஆகியவற்றின் சார்பிலும் தனிப்பட்ட முறையிலும் குடும்பத்தினருக்கு ஆழ்ந்த இரங்கலைத் தெரிவிக்கிறோம்.

இனியும் கி.இ.க.பட்டிமன்றத்தில் "செவ்வாய்தோறும் செந்தமிழ்" முழங்கும். ஆனால், அங்கே தமிழ்த்தாய் இவரைத் தேடுவார்!

---துயரத்துடன் இலக்குவனார் திருவள்ளுவன்

## திருக்குறள் உணர்த்தும் மழைநீர் சேமிப்பு



---தமிழ்ப் பொறியாளர் கெ. பக்தவத்சலம் (செயலாளர், ஒய்.எம்.சி.ஏ. பட்டி மன்றம்)

இந்திய தேசிய நூலாக ஏற்கப் பெறும் செந்தமிழ்ப் பொதுமறையாம் திருக்குறள், "எல்லாப் பொருளும் இதன்பால் உள" என்னும் பெருமைக்குரிய தலைசிறந்த கலைக் களஞ்சியமாகவும் திகழ்கின்றது. இந்நிலையில், திருக்குறளை வாழ்வியல் வழிகாட்டியாகக் கடந்த ஐம்பதாண்டுகளாக ஆர்வமுடன் பயின்றுவரும் தமிழ்ப் பொறியாளனாகிய எனக்கு
அண்மையில் ஒரு கடிதம் வந்தது.

அக்கடிதத்தில், "திருக்குறளில் எல்லாப் பொருளும் இருப்பதாகப் பாராட்டுகிறார்களே!
அண்மைக்காலத்தில், நம் நாடெங்கும் குறைந்து வரும் நிலத்தடி நீர் வளத்தை மேம்படுத்த வீடுகள் தோறும் அமைக்கப்படும் 'மழைநீர் சேமிப்புத் திட்டம்' பற்றிய குறிப்புகள் திருக்குறளில் உள்ளனவா?" என்று ஒரு நண்பர் பரிவோடு வினைவியிருந்தார்.
அவருக்கு நான் எழுதிய பதிலிற் பதித்திருந்த திருக்குறள் மணிகளின் விளக்கத்தினை, நீங்களும் படித்துப் பாருங்களேன்.
திருக்குறளில் கடவுள் வாழ்த்தினை அடுத்து இரண்டாவது அதிகாரமாக, மழையின் பெருமையினை, "வான்சிறப்பு" என்று பாயிரம் பாடியவர் திருவள்ளுவர்.
பருவமழை தவறாமல் பெய்தால்தான் உலகத்தில் உயிர்கள் வாழும்; அவ்வாறு மழை இடையறாமல் பெய்வதால்தான், உலகம் தோன்றிய நாள் தொடங்கி இன்றுவரை நிலை பேறுடையதாக விளங்குகிறது.
உயர்திணையாகிய மனிதர்களும், அஃறிணையாகிய விலங்கினங்களும், தாவரங்களும், ஏன், கண்ணுக்குத்தெரியாத நுண்ணுயிரிகளும் கூட, நிலத்தில் மட்டுமல்லாது நீரினும். உயிர்வாழ்வதற்கு, விண்ணிலிருந்து பொழியும் மழை இன்றியமையாதது . வானத்திலிருந்து வீழ்வதால் மழைக்கு, "வானம்" என்பதே வள்ளுவர் வழங்கிய தமிழ்ப் பெயர். வானத்தில் தூய்மையின் வடிவமாகத் தோன்றி, மண்ணில் பெய் எனப் பெய்யும்' மாரியாகப் பொழிந்து, மன்பதையைக் காக்கும் மழைக்கு 'அமிழ்தம்' என்ற பெயரைச் சூட்டுகிறார் திருவள்ளுவர்.
அமிழ்தம் சாவாமருந்து, அது வானத்தில் மட்டுமே கிடைப்பது, அமிழ்தத்தை உண்டவர் சாவாமல் நிலைபெறுவர் என்பது நம்பிக்கை விண்ணிலிருந்து மண்ணுக்கு வரும் மழையால் உலகமும் மறையாது. காலத்தை வென்று நிலைத்து நிற்பதால், 'வானை அமிழ்தமென்று உணர்க' என்று வான்சிறப்பின் எடுத்த எடுப்பிலேயே அறிவுறுத்துகிறார் திருவள்ளுவப் பேராசான்.
"வான்-நின்(று) உலகம் வழங்கி வருதலாம் தான்-அமிழ்தம்
என்று உணரற் பாற்று" (திருக்குறள் -11]
'வாராது வந்த மாமருந்தாம் மழைநீர், நிலத்தில் வீழ்ந்து திரிந்து வீணாகிப் போகிறதே' என்று மனம் வருந்துகிறார் திருவள்ளுவர்.
'நிலத்தின் தன்மையால் நீரானது தன்நிறம், சுவை முதலியன வேறுபட்டு, அந்நிலத்தின் தன்மையாக மாறும். அதுபோல, மக்களுக்குத் தாம் சேர்ந்த இனத்தின் தன்மையாக அறிவு மாறுபடும்' என்னுங் கருத்தமைய, 'சிற்றினம் சேராமை' என்னும் அதிகாரத்துள்
"நிலத்தியல்பான் நீர்திரிந்(து) அற்றாகும்"
(திருக்குறள் -452]
என்று தம் உள்ளக்கிடக்கையை, எடுத்துக் காட்டு உவமையாக்குகிறார் திருவள்ளுவர் பெருந்தகை. திருவள்ளுவரின் மாசுக் கட்டுப்பாட்டுச் சிந்தனையின் முதற்படியாக, இந்தக் குறட்பாவினைக் கொள்ளலாம்.




ஆற்றில் மழைக் காலங்களில் வெள்ளப் பெருக்கெடுத்துப் பாய்ந்தோடிக் கடலிற் சென்று கலந்து, குறுகிய காலத்தில் வீணாகும் மழைநீரைத் தடுத்து நிறுத்தி, ஆண்டு முழுவதற்கும் வேளாண்மை நீர்ப் பாசனத்திற்குப் பயன்படுத்தும், பொதுமைப் பொறியியல், நீர்வள மேலாண்மைச் செயற்பாடே அணைக்கட்டுகளை வடிவமைக்க மூல காரணமாயிற்று.
சென்னை முதலிய பெருநகரங்களில், மழைக் காலங்களில் வீதியெல்லாம் வெள்ளக் காடாவதைத் தடுக்க, மழைநீர் வடிகால்கள் பெருமளவில் கட்டப் பெறுகின்றன. தெருவில் உபரியாகத் தேங்கும் நீரும், வீடுகளின் கூரைகளில் வழிந்தோடும் மழைநீரும், வீழ்குழாய்கள் வழியே, மழைநீர்க் கால்வாய்களோடு இணைக்கப் பெறுகின்றன. இவ்வாறு வீதிகளிலும், வீடுகளின் முற்றத்திலும் சேரும்நீர். புழுதி கரைந்த சேறாக அழுக்கேறிய நிலையில், யாருக்கும் பயன்படாமல், கடைசியில் கடலிற் சென்று கலக்கிறது.
நகரங்களில் சிமெண்டு, தார் பாவிய சாலைகளில், மழைநீர் வழிந்தோடுவதனால், பூமியில் போதுமான நீர் உறிஞ்சப் பெறாது, நிலத்தடி நீர்பிடிப்புக்கு நேர்மாறான சூழல் நேர்கிறது.



இதனால் நகரிலுள்ள கேணிகள், கிணறுகள். நிலத்தடி நீர் ஆதாரங்கள் முதலியன பெரிதும் வற்றி, மக்களின் குளித்தல், துணி துவைத்தல், கழுவுதல், தோட்டங்களுக்கு நீர்பாய்ச்சுதல் முதலிய எல்லா நீர்த் தேவைகட்கும், பாதுகாக்கப்பட்ட, பெரும் பொருட்செலவில் தூய்மையாக்கப்பட்டுக் குழாய்கள் வழியே நகராட்சி மற்றும் குடிநீர் வாரியம் போன்ற நீர்வழங்கு நிறுவனங்கள் வழங்கும் நீரையே எதிர்பார்க்கும் நிலை நீடிக்கிறது இவ்வாறு வீணாகும் மழை நீரைப் பெருமளவில் சேமித்து, நம்வீட்டு நிலத்தடி நீர் ஊற்றுக் கண்களுக்கு, ஊட்டச் சத்தூட்டும் திட்டம்தான், மழைநீர் சேகரிப்புத் திட்டமாக மலர்ந்துள்ளது. இதனையே ஆங்கிலத்தில் 'மழைநீர் அறுவடை' (Rainwater Harvesting) என்றும் சொல்வார்கள்! 'நிலத்தியல்பான் நீர் திரி' வதனை. அறிவியற் கண்ணோட்டத்தோடு உவமையாகக் காட்டிய திருவள்ளுவர் 'தூய்மையில்லாத முற்றத்தில் மழைநீர் பொழிந்து, மாசாகி, வீணாவதைத் தடுக்க வேண்டும்' என்ற கருத்தினையும் கொண்டிருந்தார் என்பதனைக் குறிப்பால் உணர்த்துகிறது மற்றொரு குறட்பா.

'தம்மைப் போன்று கற்றார் இல்லாத மற்றையோர் அவையில் ஒன்றையும் சொல்லுதல் கூடாது. அப்புல்லவையுள் சொல்வராயின், அது தூய்மையில்லாத முற்றத்தில் அமிழ்தத்தினைக் கொட்டியது போலும்' என்பது திருக்குறளில் 'அவை அறிதல்' என்னும் அதிகாரத்துள் நிறைவாக விளங்கும் குறள்.



"அங்கணத்துள் உக்க அமிழ்(து) அற்றால், தம்கணத்தர்
அல்லார்முன் கோட்டி கொளல்" [திருக்குறள் -720]

அங்கணம் என்பது வீட்டு முற்றம், சாக்கடை என்றும் கூறுவர். முற்றத்தை, 'முன்றில்' என்று பழந்தமிழ் வழங்கும். இல்லத்தின் முன்னேயுள்ள பகுதி என்னும் பொருளில், 'இல்முன்' என்பது. முன்றில் என முன்பின்னாக மாறியது இலக்கணப் போலி எனப்படும்.

'சாவா மருந்தாதல் அறிந்து, நுகர்வார் கையினும் படாது. அவ்வங்கணத்துக்கு இயைபின்றிக் கெட்டவாறு தோன்ற, 'உக்க அமிழ்தென்றார்' என்று இக்குறளுக்குப் பரிமேலழகர் பதசாரங் கூறுவர். முதலில்

"வான்நின்(று) உலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்(று) உணரற் பாற்று."

என்ற திருக்குறளில், 'மழையினை அமிழ்தம் என்று எண்ணத்தாக்கதாகும்' என்று கூறிய கருத்தோடு, 'அங்கணத்துள் உக்க அமிழ்து' என்ற குறளைப் பொருத்திப் பொருள் கொண்டால், 'திருக்குறள் உணர்த்தும் மழைநீர் சேமிப்பு' பற்றிய, காலத்திற்கேற்ற புதுப்பொருள், தானே வந்தமையக் காணலாம்.

மழை விண்ணமிழ்து; நிலவு தண்ணமிழ்து; பசுவின் பால் வெண்ணமிழ்தம்! காட்டுக்கெரித்த கதிர் நிலவைப்பற்றி யாரும் கவலைப்படுவதில்லை. கெட்டுவிட்ட பாலைச் சாக்கடையில் கொட்டுவதே வழக்கம், ஆனால் தூய உருப்பளிங்கு போன்ற மழைநீர் அமிழ்தத்தினை, மாசுநீக்கி, நிதான வடிகட்டி முறையில், நிலத்தடி நீர் மட்டத்துள் செலுத்தி, மீண்டும் பயன்படச் செய்வதுதான், மழைநீர் அறுவடை! இத்திட்டத்திற்கு வித்திட்டவர் திருவள்ளுவர். வினைத்திட்பத்தோடு, வடிவமைத்துச் செயற்படுத்தியவர்கள் மக்கள் நல்வாழ்வுப் பொறியாளர்கள்.





# திருக்குறளும் பொறியியலும்

பக்தவத்சலனாரின் குறள் ஆய்வுரைமணிகளாக விளங்கும் இரு கட்டுரைகளும் மக்கள்மன்றத்தில் குறள்பரப்புதற்குரிய கட்டுரை ஆக்கநெறியைப் பயிற்றுவிப்பன.சுருங்கச்சொல்லி விளங்கவைக்கும் ஆற்றல் மிக்க அவரது எழுத்துக்கள் என்றென்றும் அவரது நினைவுச்சின்னங்களாக நின்று நிலவும்.

-பொறியாளர் கெ. பக்தவத்சலம்

Engineering  (எஞ்சினீயரிங்) என்னும் ஆங்கிலச் சொல், பொறியியல் என்று தமிழாக்கம் செய்யப் பெற்றுள்ளது. எஞ்சினீயரிங் என்ற அறிவியல் கலைச் சொல், 'Engine' எந்திரங்களோடு தொடர்புடையதாகக் கருதப்பெற்று பொறியியல் என்று  மொழிபெயர்க்கப் பட்டிருக்கலாம்.

பொறி என்ற சொல்லுக்கு. அடையாளம், அறிவு, இயந்திரம், எழுத்து, தந்திரம், திரட்சி, தீப்பொறி, புலப்பொறி, புள்ளி, பொருள்,செல்வம், திறப்பு, மரக்கலம், முத்திரை முதலிய பல பொருள்களைத் தமிழ் அகராதி குறிப்பிடும்.

‘அறிவியல் துறைச் சொற்களைத் தமிழில் மொழிபெயர்க்கும்போது அவற்றின் வேர்ச்சொற்களைக் கவனித்து அவற்றுக்கேற்ப மொழிபெயர்க்க வேண்டும்' என்பார் 'அறிவியல் தமிழ்' அறிஞர் டாக்டர் வா.செ. குழந்தைசாமி

Engineering' என்பது Ingenious என்ற இலத்தீன் சொல்லின் அடிப்படையில் வந்தது. ஆக்கத்திறன், மதிநுட்பம் போன்ற பொருள் தொன்டது. எனவே பொறியியல் என்பது ‘Engineering' என்பதற்கு ஏற்ற மொழிபெயர்ப்பு அன்று.

"பொறியியல் என்பது பொறிகளைப் பற்றியது மட்டுமல்ல. வீடுகட்டுதல், வேளாண்மைச் சாதனங்கள் படைத்தல், சாலை அமைத்தல், தந்திக் கம்பிகள் எழுப்பல் போன்ற அனைத்தும் பொறியியலாகும். பொறியியல் என்ற சொல் இன்று வழக்கில் வந்துவிட்டது. அதன் பொருள் நமக்குப்புரிகிறது. இனி அதை மாற்ற வேண்டும் என்பதில்லை. ஆனால் Human Engineering, Safety Engineering போன்ற தொடர்களை மொழிபெயர்ப்பதில் சிக்கல் எழுகிறது. எனவே ஒரு சொல்லை மொழிபெயர்க்கும் போது, அதன் மூலம் என்ன என்பதை ஆராய்ந்து, மொழிபெயர்ப்பு அதனோடு அடிப்படையில் சிறிதளவாவது தொடர்புடையதாக இருக்குமாறு பார்த்துக்கொள்ளவேண்டும்" என்பது அவர் தரும் விளக்கம். (மொழிபெயர்ப்பியல் கோட்பாடுகளும் உத்திகளும், பாக்டர் சேது மணியன், ப. 16)

பல்வேறு துறைகளாகப் பரந்து பட்ட பொறியியலில் ஏதேனும் ஒருதுறையில் தேர்ச்சி பெறுவோரும் பொறியாளராவர் (Engineer).

பொறியாளர்கள், எளிதில் புரிந்து கொள்ள முடியாத நுண்ணிய (சூட்சும) கணித வாய்பாடுகள், சூத்திரங்களின் அடிப்படையில், துல்லியமாகக் கணக்கிட்டு, விதவிதமான பொறியில் கணித மாதிரிகளை வடிவமைத்துத் திட்டமிடுகின்றனர். ஆனால் அவர்கள் கணக்கறிஞர்கள் மட்டுந்தானா?

சோதனைக் கூடங்களில் பகுப்பாய்வுகளால் சீர்தூக்கி மதிப்பீடு செய்யும் அறிவியல் முறைகளைப் பொறியாளர்கள் பின்பற்றுகின்றனர். இருப்பினும் அவர்களுக்கும் விஞ்ஞானிகளுக்கும் வேறுபாடுண்டு.

பொருட்களைத் தயாரிப்பதற்கு ஆகும் செலவினங்களைக் கட்டுப்படுத்துவதோடு, சிக்கனத்தைக் கடைப்பிடிப்பதிலும் ஒரு பொருளாதார நிபுணரைப் போல் பொறியாளர்கள் கண்ணுங் கருத்துமாகக் கவனம் செலுத்தி வருகின்றனர். ஆயினும் அவர்கள் பொருளாதார வல்லுநர்கள் என்ற அளவில் மட்டும் நிற்பதில்லை.

காலம் காலமாக, மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தி, வசதிகளைப் பெருக்குவதற்குப் பொறியாளர்கள் முழுமூச்சுடன் பாடுபட்டு வருகின்றனர். எனினும் அவர்களைச் சமுதாயச் சிற்பிகளாக எடுத்துக் கொள்வதில்லை.

பெருந்தொழிற்சாலைகளையும், ஆலைகளையும், கலைக் கூடங் களையும் பொறியாளர்கள்தாம் நிருமாணித்து நிருவகிக்கின்றனர். என்றாலும் அவர்களை மேலாண்மைத்திறம் மிக்கவர்களாக மெச்சுவதில்லை

கட்டடங்கள், சாலைகள், அணைக்கட்டுகள், எந்திரங்கள், கருவிகள் என எந்த அறிவியற் படைப்பாயினும், அதனை அழகுணர்ச்சியுடனும், கலை நயத்துடனும் பொறியாளர்கள் வடிவமைத்துச் செயற்படுத்துகின்றனர். இருப்பினும் அவர்களை நாம் கலைஞர் என்ற கண்கொண்டு பார்ப்பதில்லை அப்படியானால் யார்தாம் பொறியாளர் என்போர்?

1993ஆம் ஆண்டில், இந்தியப்பொறியாளர் கழகம் நிகழ்த்திய  தொழில்நுட்பக் கருத்தரங்கு ஒன்றில் பேராசிரியர் சி.எஸ்.ஜ அவர்கள் எழுப்பிய சிந்தனைப் பொறிகளே, மேற்குறித்த சுவையான விவாதம் எனலாம். (The Hindu, 10-2-1993 : 'Inside an Engineer's head')

பொறியாளர் என்போர். கணிதமேதை, விஞ்ஞான வித்தகர், பொருளதார நிபுணர், சமுதாய அறிஞர், நிருவாக வல்லுநர், கைதேர்ந்த கலைஞர். ஆகிய ஆறுமுக ஆளுமையும் ஒருங்கே கொண்ட ஆற்றலாளர் என்பதே பேராசிரியர் சி.எஸ்.ஜா அவர்கள் கருத்தின்

சாரமாகும் 'ஆலமர வித்தாக, இத்தனைப் பொருட்சிறப்புகளும் அடங்கிய பொறியியல்', 'பொறியாளர் என்னும் அறிவியல் தமிழ்க் கலைச்சொற்களை ஊன்றிப் பார்க்கும்பொழுது, அவை திருக்குறள் அடிப்படையில் தோன்றிய பொருத்தமான மொழிபெயர்ப்பாகவே ஏற்றுக்கொள்ளலாம்

திருக்குறள் பொருட்பாலுள் ஆள்வினை உடைமை (முயற்சி) என்னும் அதிகாரத்தில் இடம்பெற்றுள்ள ஓர் அரிய குறட்பா:
"பொறிஇன்மை யார்க்கும் பழி.அன்று அறிவறிந்து ஆள்வினை இன்மை பழி." (618)
இந்தக் குறளில் வரும் 'பொறி' என்ற சொல்லுக்கு, 'விதி' என்று பொருள் கொண்டார் பரிமேலழகர். 'பயனை' (நன்மையைத்) தருவதாகிய விதி இல்லாமை யாவர்க்கும் பழியாகாது அறியத் தகுவனவற்றை அறிந்து முயற்சி செய்யாமையே ஒருவர்க்குப் பழியாகும் என்பது பரிமேலழகர் உரையின் திரண்ட கருத்தாகும்.
திருக்குறள் முதல் அதிகாரத்தின் இரண்டு குறட்பாக்கள் பொறி என்ற சொல்லாட்சி பெற்றுள்ளன. முதலில்,
"பொறிவாயில் ஐந்தவித்தான், பொய்தீர் ஒழுக்க நெறிநின்றார் நீடுவாழ் வார்" (6)
என்ற குறளில் வரும் பொறி என்ற சொல், மனித உடலில் அமைந்துள்ள ஐம்பொறிகளைக் குறித்ததாகும்.




பொறி என்பது இங்கே உடம்பின் அறிவுக் கருவிகளைக் குறிக்கும்.
இப்பொறிகள் ஐந்து:
மெய் (உடல், அதாவது தொடுவது உணரும் மேல் தோல்),
வாய் (சுவையுணர்வுடைய நாக்கு),
கண் (காட்சியுணர்வுடையது),
மூக்கு (முகர்வுணர்வுடையது),
செவி (ஓசை கேட்கும் உணர்வுடையது), ஆகியவையே அவை.
உயிர் புற உலகினின்று அறிவு பெறுவதற்குரிய வழிகளாக, வாசல்களாக இவை அமைவதனாலேயே வாயில்கள் எனப்படுகின்றன. இவற்றின் மூலமான அறிவுகள், சுவை (நாவுணர்வு), ஒளி (பார்வை), ஊறு (தொடுதல்), ஓசை (செவியின் கேள்வியுணர்வு), நாற்றம் (மூக்கின் மளவுணர்வு) ஆகியவையே. புலன்கள் எனப்படுபவை இவையே.
'பொறிவாயில் ஐந்து அவித்தான்' என்பது பொறிகளாகிய இவ்வாயில்களையுடைய ஐந்து புல அவாக்களையும் அடக்கித் தன் வயப்படுத்தியவர் என்று பொருள்படுவதாகும். (திருக்குறள் மணிவிளக்கவுரை : பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரை, 1967)
திருவள்ளுவர், 'பொறிவாயில் ஐந்து' என்று ஐம்பொறிகளைக் குறிக்க அமைத்த 'பொறி' என்னும் உரிய சொற் பொருளைப் பின்பற்றியே, பரிதியார் என்னும் மற்றோர் உரையாசிரியர், பொறியின்மை என்று தொடங்கும் திருக்குறளுக்கு உரை வரைந்தார்.
''மெய், வாய், கண், மூக்கு, செவி குறைந்தது பங்கமல்ல; அறிவின்மை பங்கம்" என்பது பரிதி உரை.
'ஆள்விளையுடைமை என்னும் அதிகாரத்துக்குத் தொடர்பாக, 'அறிவறிந்து ஆள்வினை இன்மை' என்ற மூலமே இருப்பவும், அதற்கு அறிவின்மை எனப் பரிதியார் பொருள் கூறுவது பொருந்தாது. எனினும் ``பொறி' என்ற சொல்லுக்கு உறுப்புப் பொருளாக எழுதிய பரிதி உரையே ஏற்றது" என்பர், பேராசிரியர் இரா. சாரங்கபாணி. (திருக்குறள் உரைவேற்றுமை, அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, 1992). அடுத்து திருக்குறள் பாயிரத்தில்,
"கோளில் பொறியில் குணமிலவே, எண்குணத்தான் தாளை வணங்காத் தலை." (9)
என்ற குறட்பாவிலும், பொறி என்று ஐம்பொறியைக் குறித்தமை கருதத் தக்கது. இவ்வைந்து பொறியும் தலையிலேயே அமைந்துள்ள குறிப்பையும் எண்ணிப் பார்க்க வேண்டும். கண், வாய், செவி, மூக்கு, நான்கொடு, மெய்யின் தலையாய ஒரு பகுதியும் தலையில் தானே உள்ளது !
திருக்குறளின் தொடக்கத்திலேயே 'பொறி' என்ற சொல் இடம்பெற்றுள்ள இரு குறட்பாக்களோடு,
“பொறியின்மை யார்க்கும் பழியன்று; அறிவறிந்து ஆள்வினை இன்மை பழி''
என்னும் குறட்பாவும் ஒருவகையில் அறிவியலுக்கு அணியாவதனை இனிக் காண்போம்.
"மாந்தருக்கு ஐந்து பொறியில்லாமை பழிதான். ஆனால், 'அறிவறிந்து ஆள்வினை இன்மைதான் பழி'. ஆள்வினை (முயற்சி) இருந்தால், கண்பார்வையில்லாதவரும் வாழ்வில் சிறக்கலாம் என்பதற்கு, நம் கால ஹெலன் கெல்லர் மாபெரும் சான்றாவார். இன்றளவும் நாட்டில் உயர்ந்து திகழும் பார்வையற்ற பலர் பழிசொல்லப்படாதவர்கள். இதுபோன்றே, ஆள்வினையால் மற்றைய பொறிகள் இல்லாமல் உலகில் உயர்ந்து பழியைப் புறங்கண்டோர் பலராவர்.
இந்தக் குறள், இக்கருத்துகளுடன் இக்காலப் பொறிஅறிவியல் முன்னேற்றத்தையும் குறிப்பாகக் காட்டுவதாகக் கொள்ளலாம். இந்நாளில், 'பொறி' என்பது செயற்கையாக உருவாக்கப்பெற்று இயங்கும் எந்திரங்களையும் குறிப்பதாகும். நம் உடல் உறுப்புக்குரிய சொல்லாகிய பொறி என்னும் பெயர், இன்று இயங்கும் எந்திரங்களுக்கும் எவ்வாறு ஆனது?

உடலின் ஐந்து பொறிகளும் தாமும் இயங்கி, மற்றவற்றையும் இயங்க வைக்கின்றவை. கண், பார்வையால் தான் இயங்கி, மாந்தனை நடமாடி இயங்க வைக்கின்றது. பிற உடற்பொறிகளும் இவ்வாறே இவை போன்று இயங்கி, இயங்கவைத்தலால், எந்திரங்களும் பொறி என்று குறிக்கப் படுகின்றன. மேலும் விரிந்து நோக்கினால், இக்காலத்தில் காணப்பட்டுள்ள பொறிகள் அனைத்தும், உடலின் பொறிகள் இயங்கும் நுணுக்கத்தை வைத்தே காணப்பட்டவை என்பதை அறியலாம்.

கண்ணின் இயக்கத்தைப் பார்த்து, நிழற் படப் பொறி காணப்பட்டது. பலவகையாக வளர்ந்தது. காதின் ஒலி வாங்கும் இயக்கத்தை வைத்தே ஒலி வாங்கிகள்; வாயின் பேச்சு இயக்கத்தைக் கொண்டே ஒலி விடுவான்கள், மூளையின் இயக்கத்தை வைத்தே இன்று உலகில் உயர்ந்து வரும் கணினிகள் என யாவும் உடற் பொறிகளின் ஈனல்களே.

இப்பொருத்தத்துடன், 'பொறியின்மையார்க்கும் பழியன்று' என்னும் குறனை நுணுகி நோக்கினாலும், இக்காலப் பொறிகளின் வளர்ச்சியுடன் ஒப்பிட்டு நோக்கினாலும், பொறிகள்தாம் நாட்டின் - மாந்தரின் வாழ்வையே இயக்கி வாழவைக்கின்றன என்பதை உணரலாம்.

மேலும், பொறியில்லாமை எந்த நாட்டிற்கும் பெரும் பழியாகும். மிதிவண்டி முதல் பீச்சிப் பாயும் வெடியூர்தி (இராக்கெட்) வரை பெறாத நாடு, உலகில் பழிகொள்ளும் நாடாகும். ஆனால், பழியின்மை எதனால் உண்டாகும்? ஆள்வினை என்னும் முயற்சியினால்தான் உண்டாகின்றது. ஆள்வினையிலும் அறிவியல் அறிந்த - அறிவறிந்த ஆள்வினையால்தான் உண்டாகின்றது. எனவே, 'பொறியின்மை' என்று தொடங்கும் குறள், தன்குறிப்புப் பொருளால், அறிவியலின் உள்ளீட்டைக் கொண்டதாகிறது. இவ்வுள்ளீட்டுப் பொருளைப் பின்வருமாறு வெளிக்கொணரலாம்,

பொறியின்மை= மின் ஊர்தி, வானூர்தி, கணிப்பொறி முதலிய ஆக்கப்பொறிகள் இல்லாமை யார்க்கும்=உலகில் எந்த நாட்டு மனிதருக்கும்

பழி அன்று= குறை ஆகாது

அறிவறிந்து - அறிவின் செயற்பாடாம் அறிவியலை அறிந்து

ஆள்வினை இன்மை =முயலாதிருத்தலே

பழி =குறையாகும்

"பொருள் கொள்வதை வெறும் இலக்கியப் பொருத்தமாக மட்டும் கருதக் கூடாது. காலச் சூழலின் வெளிப்பாடுகளைக் கணித்துக் கொண்டு நோக்கினால், இப்பொருள்படவும் திருவள்ளுவரின் குறட்பா கோடிகாட்டுவதாகக் கொள்ள முடிகிறது'' என்னும் கோவை இளஞ்சேரன் அவர்களின் கூற்று, திருக்குறளுக்குப் புத்தொளி பாய்ச்சுகிறது (அறிவியல் திருவள்ளுவம், கவிஞர்கோ, கோவை இளஞ்சேரன், பக் 36-391.

இத்தகைய ஆய்வுகள், 'தொட்டனைத்தூறும் மணற் கேணி' யாக திருக்குறள் துலங்குவதனை எடுத்துக்காட்டும். திருக்குறள் கருத்துச் சுரங்கத்துள் பொதிந்துகிடக்கும் அறிவியல், பொறியியல், தொழில்நுட்ப வைர மணிகளை மேலும் வெளிக்கொணர்ந்து பட்டை தீட்டித் தமிழுக்கு அணியாகச் சூட்டுவது அறிஞர் பெருமக்களின் கடமையாகும்.

குவலயமெங்கும் குறள்நெறி பரப்பும் நான்கு இணைய இதழ்கள்

குறள்நெறி

குறள் முழக்கம்

THIRUKKURAL EXPRESS

குறள் விருந்து

ஆண்டுக் கட்டணம் வேண்டாம்!
நன்கொடை வேண்டாம்!
படியுங்கள்! பகிர்ந்திடுங்கள்!
arjal@kuralvirtual.com என்னும் மின்னஞ்சலுக்கு
உங்கள் மின்னஞ்சல் முகவரி ,அல்லது
புலனை எண் தெரிவித்தால் போதும்!



# குறள்நெறி

மின்னிதழ்:62 "குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்" தி.வ.ஆ.2054 வைகாசி-18-- சூன்-16-பொ.ஆ.-2023

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



## புலமைஞாயிறு பெ.அ.இளஞ்செழியனார் நினைவிதழ் இணைப்பு





வாய்மை நேர்மை தூய்மை போற்றினீர்!
வள்ளலார் வழியில் வாழ்வை நடத்தினீர்!
துணைவியார் மறைந்த துயர்மிகு வாழ்வில்
இனிமேல் இடர் ஏன் என நினைத்தீரா?
தொற்று மிகுந்த சுற்றுச் சூழலில்
இலக்கிய நிகழ்ச்சி ஏதும் இல்லாமல்
வெற்று வாழ்வு வேண்டாம் என்றா
பற்று நீங்கிப் பறந்தீர் ஐயா?



## குறள்நெறி இதழுக்குப்

## புலவர்பெருமகனாரின் வாழ்த்து!

குறள்நெறி இதழே! உன்றன்
கொள்கைக்கே இணையே திங்கே
மறவர் இலக்குவ னாரின்
மாத்தமிழ்ப் போர்வாள் நீயே!
அறநெறி புகட்ட வந்த
அறிவான மேடை நீதான்!
பிறநெறி மனுக்கூட் டத்தார்
பித்தத்தை நொறுக்கு வாய்நீ!

மறைமலை எனது நண்பர்
மலையினும் உரமு டையார்!
நிறைமதி போல்வார்,எந்த
நிலையிலும் தளரா நெஞ்சர்!
குறையெலாம் ஒழிவ தற்கே
'குறள்நெறி' தருகின் றாரே!
சிறைப்பட்டுக் கிடக்கும் நம்மோர்
சிறப்பினை மீட்டெ டுப்பார்!

தகவுடை அறிஞர் பல்லோர்
தகுதுணை யாக உள்ளார்!
தகத்தகாயக் கட்டு ரைகள்
தருகின்றார்! குறளா சானைச்
செகமெங்கும் எடுத்துச் செல்வோம்!
சிந்தனை வளர்ப்போம்! தீமை
புகுமெனில் மிதிப்போம்! தீயோர்
புளுகினைப் புதைப்போம் தீயில்!









தங்களின் நீண்டநாள் தாகம்,தந்தையாரின் குறள்நெறி ஏடு,மின்னிதழாக மலர்ந்திருப்பதைப் பார்த்தும் படித்தும் பெருமகிழ்வு எய்தினேன்.தக்கார் பலர் ஒருங்கிணைப்பாளர் களாக அமைந்திருப்பது இதழுக்குச் சிறப்பு.
ஏடு நடத்துவது ஒரு நாடு நடத்துவது போன்ற பெரும்பாடு நிறைந்தது.பெருஞ்சுமையைச் சுமந்துள்ளீர்கள். தங்கள் முயற்சி திருவினையாக வேண்டும்.இதழின் அமைப்புமுறை,
அறிஞர்களின் படைப்புகள் அனைத்தும் அருமை.
நெஞ்சார்ந்த என் மகிழ்வையும் வாழ்த்துகளையும் தெரிவிக்கிறேன்.
குறள்நெறி பரப்புவதில் தங்களுக்குத் துணையாக நானும் இருப்பேன்.எழுதுவேன்.

## நட்பிற்கு வீற்றிருக்கை

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி

ஒல்லும்வாய் ஊன்றும் நிலை.- குறள் 789:

நட்புக்குச் சிறந்த நிலை எது என்றால், எப்போதும் வேறுபடுதல் இல்லாமல், முடியும் போதெல்லாம் உதவி செய்து தாங்கும் நிலையாகும் எனப் பொருள்படும் இக் குறளுக்குத் தனியே விளக்கம் காணவேண்டாம்.புலமைஞாயிறு இளஞ்செழியனார் தமது நட்பின் திறத்தாலே இக் குறளுக்குச் சிறந்த விளக்கம் வழங்கி வாழ்ந்தார்.

22/8/2021-இந்த நாள் புலவர் அவர்களின் எண்பத்துமூன்றாம் அகவை நிறையும் பிறந்தநாள்.
இதன்பின் இரண்டு மாதங்களில் நம்மைப் பிரியப்போகிறார் என்று யாருக்கும் தெரியாது.
முகநூலில் என் தளத்தில் அவரது படத்தை வெளியிட்டுப் பிறந்தநாள் வாழ்த்து தெரிவித்திருந்தேன்.

**மறைமலை இலக்குவனார்**
22 ஆகஸ்ட், 2021 ·
நண்பர்களுடன் பகிர்ந்தது



இன்று ஐயா இளஞ்செழியன் பிறந்தநாளா? துள்ளல்நடைத் தெள்ளுதமிழ்க் கவிதையின் பிறந்தநாள். ஆர்ப்பாட்டம் இல்லாத அழகுதமிழ்ச் சொற்பொழிவின் பிறந்தநாள்.அனைவரையும் இனிய பண்பினால் கவர்ந்திழுக்கும் நேயவுணர்வின் பிறந்தநாள்.போற்றுவோம்.வணங்குவோம்.வாழ்த்தி மகிழ்வோம்.

--இதனைக் கண்ணுற்ற நண்பர்கள் பலர் என் தளத்தின் மூலமே தங்கள் வாழ்த்துகளையும் தெரிவித்தனர்.

**மருதூர் அரங்கராசன்**
வணங்கி மகிழ்கிறேன்

**துரை. குணசேகர்**
வாழ்த்துகள்

**மு.பி.பா. அன்புச் செழியன்**
இனிய பிறந்த நாள் வாழ்த்துகள் ஐயா

**ரகுபதி இரும்புலிக்குறிச்சி**
இனிய அகவைதின நல்வாழ்த்துகள்

**Sivakumar Thiruvengadam**
Vazthukkal Anna Vazgha Valamudan Nalamudan

**ஆவுடையப்பன் நடராசன்**
ஐயா அவர்களுக்கு பிறந்தநாள் நல்வாழ்த்துகள்

**Vrs Sampath**
Many many happy returns of the day pulavar

**திருவள்ளுவர் சேதுராமன்**
பல்லாண்டு வாழ்க வாழ்க

**இசை இன்பன்**
தூய தமிழ் நெஞ்சத்திற்கு இனிய அகவை நாள் வாழ்த்துகள்

**நாஞ்சில் பீற்றர்**
இனிய பிறந்த நாள் வாழ்த்துகள்.

**ஈரோடு தமிழன்பன்**
புலவர் இளஞ்செழியன் புகழ்வாழ்வு தொடரவாழ்த்துகிறேன்.
*புலவர் இளஞ்செழியன்:*
*ஈரோடு தமிழன்பன் மிகுந்த நன்றியுடையேன்*

**இராமசாமி கந்தசாமி**
நல்வாழ்த்துகள்

**கச்தூரி காந்தராஜ்**
இனிய பிறந்தநாள் வாழ்த்துக்கள்



[அறிஞர் அண்ணா அவர்களுடன் –இடதுகோடியில்]





**பாரதி பாலன்**

இனிய பிறந்தநாள் வாழ்த்துக்கள்ஐயா

**இரத்தினம் இராமசாமி**

நல்வாழ்த்துக்கள்.

**வழக்கறிஞர் சு. கலைச்செல்வன்**

வாழ்க வாழ்க வாழ்க

**இராமசாமி துரைப்பாண்டி**

வாழ்த்துகள்

**ஈரோடு தமிழன்பன்**

ஐயா!வணக்கம்.நாவலர்நூல்கள்கிடைக்கின்றனவா?
அவர்குறித்தமலர் ஏதும்தங்களிடம்உண்டா?
புரட்சிக்கவிஞர்பற்றியபெருநூலும் திருக்குறள் உரையும்
என்னிடம் உள்ளன. பிறஉளவாயின்தெரிவிக்கவேண்டுகிறேன்.

**இராமநாயகம் திரவியம்**

பல்லாண்டு,பல்லாண்டு சிறப்பாக வாழ வாழ்த்துகிறேன்.

**கு.சிவமணி**

நிறை நலத்துடன் வாழ்க நூறு பல்லாண்டு
இதனைப் பார்த்த புலவர் என் புலனத்தின்வழி
தமது பின்னூட்டு வழங்கினார்.
பேராசிரியப் பெருமகனார்க்கு
மிகுந்த நன்றியுடையேன்.
முகநூலிலும் என் பிறந்தநாளைப்
படத்துடன் பதிவிட்டு
நண்பர்கள் மிகப்பலர்
பின்னூட்டம் இடவைத்து
எனக்குப் பெருமை சேர்த்த தங்கள்
பேரன்புக்கு ஈடேது?
தங்கள் உள்ளம்தான் அன்புள்ளம்
தாயுள்ளம்! தங்களுக்கு என்
நன்றி மலர்களை மாலையாக்கி
அணிகிறேன்.குறள் விருந்தில்
சுரதாவின் திரைப்பாடல்,நாரா நாச்சியப்பன்
துரைசிங்கம் ஆகியோரின் கட்டுரைகள் அருமை.

இந்தப் பின்னூட்டு எனக்கு நெகிழ்ச்சியும்
மகிழ்ச்சியும் வழங்கியது.

## அண்ணன், தம்பியை என்ன பாராட்டுவது?

### டாக்டர் இரா.நெடுஞ்செழியன் எம்.ஏ.டி.லிட்.,

1993ஆம் ஆண்டுக்கான பாவேந்தர் பாரதிதாசன் விருதினைப் பெற்ற புலவர் இளஞ்செழியன் அவர்களைப் பலரும் இங்கே பாராட்டிப் பேசினார்கள். பலரும் பாராட்டப் பாராட்ட அதனைக் கேட்டுக் கேட்டு மகிழ்ச்சி பெற்றேன். எல்லோருடைய மகிழ்ச்சியிலும் பங்கு பெறுவதே என் நோக்கமாகும். நான் பாராட்டிப் பேச வேண்டிய தேவையில்லை. அண்ணன், தம்பியை என்ன பாராட்டுவது? அதுவும் நெடுஞ்செழியன் இளஞ்செழியனைப் பாராட்டித்தான் தீரவேண்டும் என்பதில்லை.

புலவர் இளஞ்செழியன் பாவேந்தர் பாரதிதாசன் விருது பெறுவதற் கான அனைத்துத் தகுதிகளும் உடையவர். புலவர் இளஞ்செழியன் புகழ் பெற்ற கரந்தைத் தமிழ்ச்சங்கத்தில் முறையாகக் கற்று, முறையாகத் தேர்ந்து, முறையாக வளர்ந்தவர் ஆவார். அவர் புலவர் மட்டுமல்ல, எல்லோர் உள்ளங்களையும் கொள்ளை கொள்ளத்தக்க கவிதைகளையும் எழுதுகிற கவிஞர் ஆவார். உரைநடை எழுதுவதிலும் தனித்தன்மை வாய்ந்தவர். இவை மட்டும் அல்லாமல், புலவர் இளஞ்செழியன் ஒரு குறிப்பிட்ட கொள்கைக்காகவே உழைத்து வருபர்.

எந்த ஒன்றைச் செய்தாலும் அதைத் திறம்படவும் பிறர் பாராட்டும் படியும் செய்வதிலே புலவர் இளஞ்செழியன் கைதேர்ந்தவர். பாவேந்தர் பாரதிதாசன் விருது பெறுவதற்கு என்னென்ன பொருத்தங்கள் வேண்டுமோ, அவ்வளவு பொருத்தங்களும் உள்ளவர் இளஞ்செழியன் என்பதால்தான், என் பரிந்துரையையும் ஏற்று, மாண்புமிகு புரட்சித் தலைவி ஜெயலலிதா அவர்கள், தமிழக அரசின் சார்பில் இந்த ஆண்டுக் குரிய (1993) பாவேந்தர் விருதினைப் புலவர் இளஞ்செழியன் அவர்களுக்கு வழங்கியுள்ளார்கள்.

(4-8-1993 சென்னையில், பாவேந்தர் விருது பெற்ற புலவர் இளஞ்செழியனுக்கு நடந்த பாராட்டு விழாவில்)

அதன்பின் ஓரிருமுறை தொலைபேசிவழித் தொடர்பு கொண்டிருப்பேன்.ஆனால் காலம் செய்த சதி அந்தப் பேரன்புநிலையத்தை என்னிடமிருந்து பிரித்துவிட்டது.ஆம்! 31/10/2021 அவர் விடை பெற்றுச் சென்றவேளையில் அவர் வீட்டுக்குச் சென்று பார்க்கவும் இயலாவண்ணம் பெருந்தொற்றுக் கொடுமையும் தீநுண்மி மீதிருந்த அச்சமும் தடுத்துவிட்டன.
அவர் எனக்கு எழுதும்போதெல்லாம் தமது சொற்களை "இன்சொலால் ஈரம் அளைஇ" அனுப்புவார்.
பாசத்திலே தோய்த்துப் பரிவிலே நனைத்து நேசத்தைக் குழைத்து நட்பும் கேண்மையும் விரவி அவர் எழுதிய எழுத்தெல்லாம் இவ்வுலகில் நான் துய்த்த அமிழ்தம்.



மலர்மாமணி புலவர் கவிஞர் இளஞ்செழியன் அவர்களுக்கு
தமிழக அரசின் பாவேந்தர் பாரதிதாசன் விருதினை,
மாண்புமிகு நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன்
அவர்கள் பொன்னாடை போர்த்தி வழங்குகிறார்.
(கலைவாணர் அரங்கம், 26.8.1993)

என் பிறந்தநாள் குரல்!
(22-08-2021)

தமிழால் நான்!
என்னால்நான் இல்லை!
எனது தமிழே!நான்
உன்னால் இருந்தேன்!
இருக்கின்றேன்! என்பயணம்
தாயே! உனது தயவால் நடக்கிறது!
நாயேன் எனக்கு நடைகற்றுத்
தந்தவள் நீ!
நீச்சுப் பழகினேன் தந்தையால்!
உன்னால்தான்
பேச்சுப் பழகினேன்!
பேசிப் பழகிட என்
நாவைப் பழக்கியநல் ஆசிரியை
நீயன்றோ!
தேவிநீ யன்றி,வேறு
தெய்வம் எனக்கில்லை!
புஞ்சைப் புழுதிநான்!
ஓடோடி வந்துன்னைத்
தஞ்சைத் தரணியிலே
தான்கற்றேன்! நான்காண்டில்,
என்ன முடியும்?
எவரால் முடியுமம்மா?
உன்னோடு எனக்கங்கே
சின்ன அறிமுகமே!
மாமதுரைச் சங்க
மடியில் வளர்ந்தவளே!
தேமதுர மாகடலாய்
அன்றோ இருக்கின்றாய்!
செந்தமிழே! செல்வப் பெருமாட்டி
நீயென்பேன்!
சொந்த இலக்கியச்
சொத்துக்கு அதிபதிநீ!
தொல்காப்பி யம்பெற்ற
தொன்மொழியே! நீஇங்கே
நல்கியுள்ள நூற்செல்வம்
நாடறியும்! நானறிவேன்!
எட்டுத் தொகையென்ன!
பத்துப்பாட்டு என்ன!ஓர்
பட்டாளம் என்னும்
பதினெண்கீழ் நூல்களென்ன!
ஐந்துபெருங் காப்பியங்கள்
என்ன! இவையெல்லாம்
மைந்தன் எனக்கு
மலைப்பூட்டும் நூல்களன்றோ?
வாசிக்க ஏது வயது?
உனைநாங்கள் யாசிக்க
முடியுமம்மா! வாசிக்க ஏலாது!
யாசித்தேன் உன்னைநான்!
யாசகமாய் நீயெனக்குக்
காசு தரவில்லை!
கவிதை வரம்தந்தாய்!
உன்னால்தான் இன்று
கவிதை எழுதுகின்றேன்!
என்னால்நான் இல்லையம்மா!
எல்லாம் உனதருளே!







இயற்கையின் நிழலில் இளைப்பாறும் பட்டிமன்றச் செயலாளர் பொறியாளர் கெ.பக்தவத்சலம் எனது நாற்பதாண்டுக் கால அருமை நண்பர் ஒய்எம்சிஏ பட்டிமன்றச் செயலாளர் பொறியாளர் மறைந்தார் என்னும் செய்தி அறிந்து துடிதுடித்துப் போனேன்.

மலர்ந்தமுகம் மாறாத மாண்புடையவர். தமிழாகவே வாழ்ந்தவர்.தமிழை வளர்த்தவர்.எல்லாருக்கும் இனியவர் எவரெனில்,அவர்தான் அவர்தான் அவரேதான்! என் பெருமதிப்புக்குரிய பேராசிரியர் மறைமலை இலக்குவனார்அவர்கள், ஒய்எம்சி.ஏ. பட்டிமன்றத்தில் என் கவிதைகளையும் அழகாகத் திறனாய்வு செய்தார்கள்.எதிர்பாராத விதமாக அன்று அந்தநிகழ்ச்சியிலே நாத ஒலி நாயகர் என் ஔவைப் பெருமகனாரும் வந்திருந்து, அவரது திருவாயால் என்னுடைய கவிதைகளுக்கு மகுடம் சூட்டினார்.இதற்கெல்லாம் ஏற்பாடு செய்த ஏந்தல் பக்தவத்சலம்! அந்த மாசில்லா மாணிக்க மனிதர் என்மேல் தனிஅன்பு செலுத்தி வந்தார். மலேசியாவுக்கு நண்பர்களுடன் சென்றுவர முயற்சி எடுங்கள் என்று சொல்லிக்கொண்டே இருந்தார். அதனை நான் நிறைவேற்றுவதற்குள் நீங்காத் துயிலில் கலந்துவிட்டார்.நெஞ்சம் அழுகிறது. யாரும் நேரில் சென்று,துயரத்தில் பங்குகொள்ள முடியாத கோரநிலை! கொடுமையான நிலை!

1970களில் சின்னமனூரில் ஔவை நடராசன் அவர்கள் தலைமையில் நடந்த கவியரங்கத்திற்கும் பட்டிமன்றத்திற்கும் இந்தப் பட்டிமன்றச் செயலாளர் ஔவையுடன் சேர்ந்து ஒரு பார்வையாளராகத்தான் வந்தார், நெஞ்சிலே உயர்ந்த ஒரு நோக்கத்தோடு! நிகழ்ச்சிகள் முடிந்த மறுநாள் நான், பக்தவத்சலம், புலவர் ஆடலரசு, புலவர் பூங்கோதை, தஞ்சை கூத்தரசன் ஆகிய எங்கள் ஆறு பேர்களுடன், கரந்தைப் புலவர் கல்லூரியில் என்னுடன் படித்த கூடலூர் நண்பர்களும் சேர்ந்து சேரமன்னன் செங்குட்டுவன் எழுப்பிய "கண்ணகி கோட்டம்" காண்பதற்காக, குமிழிமலை ஏறினோம். நடந்தோம், நடந்தோம், நடந்துகொண்டே இருந்தோம்.காலை 9மணிக்குப் புறப்பட்டோம். பன்னிரண்டு கல் தொலைவு நடந்து, பகல் 12 மணி அளவில் கண்ணகி கோட்டம் அடைந்தோம். பக்தவத்சலமோ மங்கலதேவியைக் கண்ணாரக் காணுகின்ற ஆவலில் எங்களுடன் சோர்வில்லாமல் நடந்தார். நீண்ட சதுர வடிவத்தில் அமைந்த மலைமேட்டில் நான்கு புறமும் சுற்றுமதில் எழுப்பி,கண்ணகியின் சிலையுடன் அந்தக் கோயில் திகழ்கிறது.சுற்றிப் பார்த்தோம்.சோர்வெல்லாம் கண்ணகி கோட்டத்தைப் பார்த்துவிட்ட இன்பத்தில்,சுக்கு நூறாகிப் போனது.பக்தவத்சலமும் நானும் சந்திக்கும் போதெல்லாம் கண்ணகி கோட்டம் பயணத்தை நினைவுகூர்வோம். கண்ணகி கோட்டம் கண்டவர், இன்று மீளாத கண்ணுறக்கத்தில் !

--கண்ணீருடன் இளஞ்செழியன்























என் குடும்ப விளக்கு
விஜயலட்சுமி என்கிற
வெற்றிச்செல்வியின்
6ஆம் ஆண்டு நினைவுநாள்!
என்விஜய லட்சுமியே!
நம்வாழ் வில்நீ
ஏற்றிவைத்த ஒளியில்தான்
இயங்கு கின்றேன்!

உன்முகத்தில் கண்விழித்து
ஒவ்வோர் நாளும்
உயிர்வாழ்ந்து கொண்டுள்ளேன்
என்ற போதும்,

மண்யுகத்தில் மனைவியின்றி
வாழும் வாழ்க்கை,
மண்ணாங்கட்டி வாழ்க்கையென்றே
எண்ணு கின்றேன்!
கண்விழித்து உயிர்த்தெழுந்து
வருவா யாநீ?
கண்ணீரைத் துடைக்க,கை
தருவா யாநீ?
நீங்காத உன் நினைவில்,
உன்னில் பாதி
இளஞ்செழியன்
03-09-2021












# குறள்நெறி

மின்னிதழ்:63 “குறள்நெறி  ஓங்கின் குடியரசு ஓங்கும்”தி.வ.ஆ.2054 -ஆனி-16– சூலை-1-பொ.ஆ.-2023

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்




## உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகம் நடத்திய “குறள்வழி மேலாண்மையியல் “ இணையத் தொடர் வகுப்பு நிறைவு & பரிசளிப்பு விழா

திருக்குறளைப் படிக்கவும் குறள்வழிச்சிந்தித்து வாழ்வுமுறையை நெறிப்படுத்திக் கொள்ளவும் குறள் அமைப்புகள் செயற்பட்டுவருகின்றன.இணையதளத்தைப் பயன்படுத்திக் கொண்டு திருக்குறள் கல்வியை மேலும் விரிவாகவும் விளக்கமாகவும் மக்கள் மன்றத்தில் செல்வாக்குப் பெறச் செய்யும் நோக்குடன் உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகம் (International Thirukkural Virtual Institute)இணையதளத்தில்15/1/2021 முதல் உலாவரத் தொடங்கியது. மறைமலை இலக்குவனாரும் முனைவர் தமிழியலனுமே இம் முயற்சியில் முனைந்தனர். “குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்" என்னும் நன்னோக்கத்தோடு உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகம் (இணையதளம்) http://kuralvirtual.com/ அறிமுகப்படுத்தப்பட்டு செயல்பட்டுவருகிறது. மின்னூல்கள், மின்னிதழ்கள், கட்டுரைகள், கவிதைகள், குறள் ஓவியங்கள், போட்டிகள், திருக்குறள் அமைப்புகளின் நிகழ்வுகள் இணையத்தில் வெளியிடப்பட்டு வருகின்றன.உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகம் ஆங்கில மாதம் தோறும் 1,16 நாள்களில் குறள்நெறி இதழையும் பத்தாம்நாள் குறள்முழக்கம் இதழையும் 24-ஆம் நாள் சிறார்க்கான குறள்விருந்து இதழையும் 15-1-2021 முதல் தவறாது வெளியிட்டு வருகிறது. ஒவ்வொரு ஆங்கில மாதத்தின் முதல் ஞாயிற்றுக்கிழமையும் மூன்றாம் ஞாயிற்றுக்கிழமையும்— Thirukkural Express ஒவ்வொரு ஆங்கில மாதத்தின் பத்தாம் நாள் –குறள் முழக்கம் (திருக்குறள் மன்றங்கள், பரப்புரை,கல்வி தொடர்பான செய்திகளைத் தாங்கிவரும் செய்திமடல்) செபுத்தம்பர் 2021 முதல் வெளியிட்டுவருகிறது.kuralvirtual.com என்னும் இணையதளத்திற்குச் சென்று எவ்விதக் கட்டணமுமின்றித் தரவிறக்கம் செய்து படிக்கலாம்.இவை அனைத்தும் இலவச இணைய இதழ்கள்.

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகம் 2/10/2022 முதல் 16/4/23 வரை “குறள்வழி மேலாண்மையியல் “ என்னும் பொருளில் இணையத் தொடர் வகுப்பு நடத்தியது. 27/ 6/ 23 செவ்வாய் மாலை 4 மணிக்கு நான் ஐஏஎசு அகாடமியில் (அண்ணா நகர், சென்னையில்) குறள் வழி மேலாண்மையியல் வகுப்புகளில் பங்கு பெற்றவர்களுக்கும், முதலிடம், இரண்டாம் இடம், மூன்றாம் இடம், மற்றும் ஊக்கப் பரிசுகள் பெற்றவர்களுக்கும் பாராட்டு விழா நடந்தது.விழாவில் முனைவர் மறைமலை இலக்குவனார் , முனைவர் தமிழ் இயலன் ,சிறப்புறு பேராசிரியர் சோம. வீரப்பன் ஆகியோர் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்கினார்கள். பயிற்சியில் பங்கு பெற்றவர்களுள் சிலரும் திருக்குறள் ஆர்வலர்களும் வந்து கலந்து கொண்டு சிறப்பித்தனர். **மறைமலை இலக்குவனார் உரை:**

இந்த வகுப்பை மிகச் சிறப்பாக நடத்தி மாணவர்களுக்கு அருமையாகப் பல்கலை அறிவும் பாங்குற வழங்கிய எங்கள் சிறப்புறுபேராசிரியரும் நிதியியல் ஆய்வுரையாளரும் மேனாள்பஞ்சாப் நேசனல் வங்கிப் பொது மேலாளருமாகிய ஐயா சோம. வீரப்பன் அவர்களே! இந்த நிகழ்வுக்குரிய தொழில்நுட்பப் பகுதியை மிக அருமையாக ஒருங்கிணைத்தும் இந்த இணையதளத் தொடர்புக்கு உரிய எல்லாப் பின்புலங்களையும் சீர்மையாக நிறைவுற ஒத்துழைத்தும் தமது பல்வேறு அலுவலர்களுக்கிடையே ஓயாது உழைத்த எங்கள் அன்புக்குரிய பேராசிரியர் தமிழியலன் அவர்களே!



சிறப்புறு பேராசிரியர் சோம. வீரப்பன்

இந்த வகுப்பு நிறைவு விழாவுக்கு மிகத் தொலைவிலிருந்து- பிரான்சு நாட்டில் இருந்து- வந்திருக்கின்ற ஐயா புதுவை வேலாயுதம் அவர்களே! அவருடைய துணைவியார் அவர்களே! மாணாக்கர் அரீசு அவர்களே! ஏனைய இலக்கிய ஆர்வலர்களே! பேராசிரியர் தமிழியலனின் அழைப்பின் பேரில் வந்திருக்கின்ற அழகப்பா தொழில்நுட்பக் கழகத்தின் தமிழ்ப் பேராசிரியர் மணிகண்டன் அவர்களே! இலயோலா கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் பாவலன் அவர்களே! இங்கே கூட்டத்தை ஒருங்கிணைப்பு செய்வதற்காக வந்திருக்கின்ற ஊடகவியல் வல்லுனர் செல்வி தமிழ் முல்லை அவர்களே! அனைவருக்கும் வணக்கம்.

மிகச் சிறப்பான ஒரு விழா இன்றைக்கு நடக்கின்றது. பல்வேறு நாடுகளில் இருந்து குறிப்பாக பிரான்சிலே இருபது மாணாக்கர்களைச் சேர்த்தார் நமது ஐயா புதுவை வேலாயுதம் அவர்கள்! அப்பொழுது அமெரிக்கா சென்றிருந்த நன்னன் அவர்களுடைய புதல்வி அவ்வை அவர்களுக்கும் மற்றொரு புதல்வி வேண்மாள் அவர்களுக்கும் அமெரிக்கத் தமிழ் ஆர்வலர் மோகன் வைரக்கண்ணு அவர்களுக்கும் தமிழ்நாட்டின் பல்வேறு கல்லூரியில் இருந்து இந்த வகுப்பைப் பயன் கொண்ட மாணவர்களுக்கும் அகவை மிகுதியாக இருந்தும் இந்த வகுப்பில் மாணவனாகச் சேர்வேன் என்று உறுதிபூண்டு இங்கே வகுப்பைத் தொடர்ந்து கேட்டதுடன் அவ்வப்பொழுது பல வினாக்களையும் கேட்ட ஐயா தங்கவேலனார் போன்ற மூத்த உறுப்பினர்களுக்கும் நன்றிகூறும் நேரம் இது.



புதுவை வேலாயுதம் இணையருடன்

நேரடியாக வர இயலா விட்டாலும் வலையரங்கத்தின் வாயிலாக இந்த நிறைவு விழாவிலே கலந்து கொண்டிருக்கின்ற அனைத்து நண்பர்களுக்கும் என்னுடைய வணக்கம்.

திருவள்ளுவர் “கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக “ என்று மொழிந்தது நம்முடைய உலகத்திருக்குறள் இணையக் கல்விக் கழக மாணவர்களுக்கு இன்னும் சிறப்பாகப் பொருந்துகின்ற வகையில் அமைந்திருக்கின்றது. அந்தக் கல்வியை வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டும் என்பது மனித குலத்துக்கே அவர் விடுத்த வேண்டுகோள் எனலாம். அப்படி ஒரு வேளை பள்ளியிலோ கல்லூரியிலோ கற்கின்ற வாய்ப்பைப் பெறாதவர்களுக்காகத் தான் அவர் சொன்னார் “கற்றிலனாயினும் கேட்க அஃது ஒருவர்க்கு ஒற்கத்தின் ஊற்றாந் துணை” ஒருவேளை அப்படிப் பள்ளியில் படிக்க இயலாவிட்டாலும் ‘கேளுங்கள் அப்படிக் கேட்டால் நமக்கு ஒரு பின்னடைவு ஏற்படும் போது அது நமக்கு உரிய துணையாக அமையும்’ என்று அவர் குறிப்பிட்டது அனைவருக்கும் பொருந்தும் அதே நேரத்தில் “குறள் வகுப்புகளை இணையத்தில் கேளுங்கள். அது நமக்கு உரிய துணையாக அமையும் “ என்று நம் மாணவர்களுக்கு இன்னும் சிறப்பாகப் பொருந்துகிறது.

அந்த வகையில் திருக்குறளை இணையதளத்தின்வழி தொடர் வகுப்பு நடத்துவதற்கு, குறள்வழி மேலாண்மையியல் கற்பிப்பதற்கு, யார் தகுதியானவர்கள் என ஆய்ந்தோம்.

‘வகுப்பு நடத்துபவர் மேலாண்மைத் துறையில் ஆழங்கால் பட்டிருத்தல் வேண்டும், பழுத்த அனுபவம் வாய்ந்தவராக இருக்க வேண்டும். இனிய தமிழில் எளிய நடையில் பொழிவாற்ற வேண்டும்.’ எனத் திட்டமிட்டோம்.அப்படி ஒரு அறிஞர் எங்களுக்குக் கிடைத்தார். பஞ்சாப் நேசனல் வங்கி ‘என்னும் தேசியமயமாக்கப்பட்ட புகழ்வாய்ந்த வங்கியிலே தலைமை வாய்ந்த பொது மேலாளர் என்று மிகப் பெரிய பொறுப்பில் இருந்து அண்மையிலே ஓய்வு பெற்ற நிதியியல் துறையிலும் திருக்குறளைப் பற்றியும் பல நூல்களை எழுதிக் குவித்துள்ள ஐயா சோமவீரப்பன் அவர்களே இதற்கு முற்றிலும் தகுதி வாய்ந்தவர் என முடிவெடுத்தோம்.

அவர்களை அணுகி உசாவியபோது, எங்கள் வேண்டுகோளை விடுத்த பொழுது, மனமுவந்து ஏற்றுக் கொண்டார். இன்னும் சொல்லப் போனால் சொற்பொழிவாற்றுகின்ற கலையைப் பொருள் சேர்க்கும் கலையாக மாற்றி வருகின்ற இந்தக் காலச் சூழ்நிலையிலே ஒரு பைசா கூட நான் வாங்க மாட்டேன், எனக்கு ஒரு பைசா பொருள் வருவாய் கூட இதனால் வேண்டாம், இந்த வகுப்பைக் கேட்பவர்கள் முழுமையாகப் பயனடைந்தால் அதுவே எனக்குப் போதுமானது என்று கூறி இதற்குரிய நழுவு படங்களை, ஒவ்வொரு வகுப்புக்கும் நிறைய நழுவு படங்கள் என்று சொல்லப்படுகின்ற விளக்கப் படங்களை, அவருடைய செலவிலேயே உருவாக்கி மிகவும் திட்டமிட்டு வங்கி அனுபவம், வாழ்க்கை அனுபவம், இரண்டிலுமே அவர் பெற்ற பட்டறிவையும் இது தொடர்பான பல்வேறு நூல்களைக் கரைத்துக் குடித்து அந்த நூல்களில் இருக்கின்ற இன்றிமையாச் செய்திகளையும் அலுப்பு சலிப்புத் தட்டாத வகையிலே வாழ்க்கையிலே நாம் சந்திக்கின்ற நகைச்சுவைப் பகுதிகளையும் ஒருங்கிணைத்து மிகச் சுவையாகத் தம் வகுப்பை நடத்தினார். வேறு ஏதாவது பணி மும்முரத்தாலே அவருடைய வகுப்பை நான் கேட்காமல் போனால் உடனடியாக நம்முடைய தமிழியலன் அவர்கள் பதிவு செய்த அந்த காணொளிக்கீற்றை வேண்டிப் பெற்று உடனே நான் கேட்டு விடுவேன் அவ்வளவு சுவையாக அவ்வளவு ஆழமாக அவ்வளவு தெளிவாக அந்த வகுப்புகளை அவர் அமைத்திருந்த பங்கு அவர் வகுப்புக் கேட்ட அனைவருக்கும் தெரியும் இன்றைக்குக் கூட அந்த வகுப்புகளின் காணொளிக் கீற்றுகளை யார் வேண்டுமானாலும் கேட்கலாம்.



சிறப்புறு பேராசிரியர் சோம. வீரப்பன் அவர்களுக்குப் பொன்னாடை: இயக்குநரும் இணை இயக்குநரும்

கேட்டுப் பயன் அடையலாம். அது என்றைக்கும் நிலைத்திருக்கும் ஒரு கல்வி சார் ஆவணம். இப்படி ஒரு வகுப்பை இதுபோன்ற ஒரு பேராசிரியர் இதற்கு முன்னதாக நடத்தி இருக்கின்றார்களா என்றால் என்னுடைய பட்டறிவுக்குத் தெரிந்தவரை யாரும் இப்படி நடத்தவில்லை எனவே மாணவர்களே நீங்கள் மிகச் சிறந்த பயன் பெற்றுள்ளீர்கள் அந்தப் பயனையும் உங்களுடைய பின்னூட்டங்களின் வாயிலாக எங்களுக்கு நீங்கள் அவ்வப்பொழுது மிகவும் அழுத்தமாக எடுத்துச் சொல்லியுள்ளீர்கள். அங்ஙனம் உங்களுடைய பட்டறிவை எங்களோடு பகிர்ந்து கொண்டமைக்கு மனமார்ந்த நன்றி.



**இணைய வகுப்பு மாணவர் அரீசு சிறப்புறு பேராசிரியருக்கும் இயக்குநர்& இணை இயக்குநருக்கும் சிறப்புச் செய்தல்**

குறள் முழுமையும் அறிமுகம் செய்யும் நூறு காணொளிப்பதிவுகளை வழங்கி இன்றைக்கு நீட் தேர்வு நடப்பதைப் போல வினாக்களைத் தொடுத்து விடை வழங்குமாறு செய்து அந்த விடைகளையும் கணினியே சரி பார்த்து உடனடியாக மதிப்பெண்களை உங்களுக்குத் தெரிவிக்குமாறு அமைக்க வேண்டும் என்று கருதுகின்றோம் ஆங்கிலத்தில் டெம்ப்ளேட் என்று அழைக்கின்றார்களே அத்தகைய ஒழுங்கு நிரலை ஏற்படுத்திக் கொண்டு இந்தத் தேர்வை நடத்த வேண்டும் என்று ஆசைப்படுகிறோம் இதன் விளைவாக உடனுக்குடன் உங்களுடைய குறள் பற்றிய அறிவைச் சோதித்து வளர்த்துக் கொள்ளலாம் இப்படி ஒரு விரிவான தேர்வு நடத்திய பின் குறளிலே நீங்கள் ஆழ்ந்த கல்வி பெற்றுள்ளீர்கள் என்பதை மெய்ப்பித்துக் கொண்டு **குறள் மணி** என்று உங்களுக்கு விருது வழங்கலாம் எனத் தீர்மானித்துள்ளோம்

100 பொழிவுகளையும் கேட்டு 133 அதிகாரங்களையும் கற்று வினாக்களுக்கு விடை வழங்கி நீங்கள் அனைவரும் குறள் மணி ஆக வேண்டும் எனவும் அந்தக் குறள் அறிவு உங்கள் வாழ்க்க. இந்த இடத்திலே நம்முடைய சிறப்புறு பேராசிரியர், நிதியில் வல்லுனர் மேலாண்மை அறிஞர் சோமவீரப்பன் அவர்கள் மிகச் சிறப்பாகப் பாடங்களை நடத்தி நம் அனைவருக்கும்- பாடத்திலே வகுப்பிலே இணைந்தவர்களுக்கும் -வகுப்பிலேயே இணைத்துக் கொள்ளாமல் வெளியே இருந்து கேட்ட என்னைப் போன்ற ஆர்வலர்களுக்கும் -கருத்து விருந்து அளித்துள்ளார். அவருக்கு நன்றி கூறுவதற்குத் தகுதி வாய்ந்த வார்த்தைகளைத் தேடிப் பிடிக்க இயலாது கோதை நாச்சியார் கொஞ்சதமிழில் ‘தலையலால் கைமாறிலேன்’ ‘ என்று கூறிய தொடரே நினைவுக்கு வருகின்றது.

ஐயா சோம வீரப்பன் அவர்களே! உங்கள் பணி மாபெரும் பணி !புதிய கோணங்களில் புதிய துறையில் நல்ல அறிவு வழங்கி அந்த அறிவும் திருக்குறள் மூலமாகப் பெறத்தக்கது என்று கூறி குறள் ஒரு பன்முகப் பாங்கான பல்துறை ஆய்வுக்களஞ்சியம் என்பதை உங்கள் பொழிவுகள் மூலம் வகுப்பின் மூலம் உணர வைத்துள்ளீர்கள். நன்றி ஐயா. நன்றி. தமிழியலன் அவர்களே! ஓயாது உழைத்து வரும் நீங்கள் இந்த வகுப்பின் இணையத் தொடர்பில் முதுகெலும்பாக மைய நாடியாக விளங்கி இணையப்பாங்கு தொய்வு இல்லாமல் உலகெங்கும் வகுப்பைக் கேட்கின்ற வகையில் வலையரங்கத்தை நடத்தி மாண்பு சேர்த்தீர்கள். உங்களையும் உலகத்திருக்குறள் இணையக் கல்விக்கழகமும் மாணாக்கர்களும் திருக்குறள் ஆர்வலர்களும் மனமுவந்து போற்றுகின்றோம். வாழ்த்துகின்றோம். நன்றி ஐயா நன்றி.

அன்பு மாணாக்கர்களே! அகவை முதிர்ந்த பெரியோர்களே! நண்பர்களே!சகோதரிகளே! குறள் பரப்பும் பணி தொய்வுறாது தொடர்வதற்கு உங்கள் ஒவ்வொருவரின் ஒத்துழைப்பும் தேவை. நாளிதழ்களிலும் தொலைக்காட்சிகளிலும் சமூக ஊடகங்களிலும் வன்முறை கொள்ளை படுகொலை என்பவையே தலைப்புச் செய்தியாக நாள்தோறும் காணும் அவலமே நீடிக்கிறது.இவ் வேளையில் குறள்நெறி பரவினால் குவலயம் மேன்மையுறும். அறநெறி தழைக்கும். அன்பு செழிக்கும். மானுடம் மேம்படும். மனிதன் விண்ணளாவிய மேன்மையான சிறப்பை அடைவான் அந்த வகையில் வள்ளுவம் பரவுவதற்கும் வாழ்வியல் சிறப்புறுதற்கும் தொடர்ந்து உழைத்திட நாம் உறுதி கொள்வோம் அதுவே இந்த வகுப்பின் வெற்றியாகக் கருதுவோம். நன்றி



இணை இயக்குநர் பேராசிரியர் தமிழியலன் உரையாற்றுகிறார்



சிறப்புறு பேராசிரியர் சோம வீரப்பன் உரையாற்றுகிறார்.



மாணாக்கர் திருமதி வேதக்கனி



அகவை முதிர்ந்த மாணவர் புதுவை வேலாயுதம் அவர்களுக்கு மாணவர் அரீசு பொன்னாடை போர்த்தல்






## புதுவை வேலாயுதம்



திருச்சிற்றம்பலம்

தென்னாடுடைய சிவனே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி

உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழக இயக்குனர் திருமிகு மறைமலை இலக்குவனார் ஐயா அவர்களே! இணை இயக்குனர் திருமிகு தமிழ் இயலன் ஐயா அவர்களே! சிறப்புறு பேராசிரியர் திருமிகு சோம வீரப்பன் ஐயா அவர்களே ! மற்றுமுள்ள ஆன்றோர்கள் அனைவருக்கும் வணக்கத்தை முதற்கண் தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்றைய பரிசளிப்பு விழாவில் கலந்து கொள்வதில் பெரு மகிழ்ச்சி அடைகிறேன் திருக்குறளின் மீது எனக்கு ஈடுபாடு உண்டு திருக்குறள் பொழிவுகள் கேட்பதிலும், திருக்குறளைப் பற்றி படிப்பதிலும், புதிதாக ஒரு விடயத்தை தெரிந்து கொள்வதிலும் ஆர்வம் உண்டு. உயர் வள்ளுவம் telegram குழுவில் உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகம் சோமவீரப்பன் ஐயாவைக் கொண்டு இணைய வழி மூலம் திருக்குறள் வழியில் மேலாண்மையியல் வகுப்பு நடத்தப் போவதாக அறிவிப்பு விளம்பரம் பார்த்தேன். மகிழ்ந்தேன் வகுப்பில் சேர்வதென்று முடிவு செய்து பிரான்சில் உள்ள சகோதரிகள் குமாரி மற்றும் ஜெயந்தியிடம் இந்தத் தகவலைப் பகிர்ந்தேன் அவர்கள் ஆசிரியர் திரு.சோம வீரப்பன் அவர்களிடம் பேசி எனக்கு முன்பே இணைந்து விட்டு எனக்கு மேலும் சில தகவல்களைப் பகிர்ந்தார்கள். சோமவீரப்பன் ஐயாவின் குறள் வழி மேலாண்மையியல் பற்றிய பேட்டியை வலையொளியில் வலைத்தமிழ் இணைப்பில் பார்த்து உள்ளேன். இந்த வகுப்புப் பற்றிய தகவல்களை, பயன்களை சுமார் 50 பேரிடம் வாட்ஸ் அப் மற்றும் தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டு இணையச் சொன்னேன் பிரான்ஸ் நாட்டில் 15 பேரும், தமிழ்நாடு புதுச்சேரியில் 5 பேரும் மொத்தம் 20 பேர் இணைந்தோம். எனக்கு ஒரு வருத்தம் ஏற்பட்டது கல்லூரிப் படிப்பை முடித்து வேலை தேடுபவர்கள் மற்றும் வேலையில் உள்ள இளைஞர்களுக்கு வகுப்பின் அவசியம் மற்றும் பயன் பற்றி எடுத்துச் சொல்லியும் வகுப்பில் இணையவில்லையே என்று. வகுப்பில் சேராததற்கு சிலர் நேரமின்மை காரணம் என்று சொன்னார்கள் ஆனால் அது உண்மை அல்ல என்பதை நான் உணர்ந்தேன். எப்படி எனில் வகுப்பின் பதிவுகளை வலையொளியில் (youtubeபில்) உடனே பதிவேற்றம் செய்கிறார்கள் காரணம் சொன்ன ஒருவர் கூட வலையொளியில் (youtube) இணைப்பு அனுப்பியும் பார்க்கவில்லை என்று சொன்னதன் மூலம் இதை உறுதி செய்கிறேன். உண்மையான காரணம் நான் பேசிய இளைஞர்களிடம் விருப்பமில்லை என்பதும் அவர்களுக்கு விருப்பத்தை ஏற்படுத்த என்னால் இயலவில்லை என்பதும் ஆகத்தான் இருக்கும் .

சரி சேர்ந்தவர்கள் அனுபவம் என்ன ? மனத்தளவிலும் செயலிலும் நிறைய நல்ல மாற்றங்களை உணர்கிறார்கள் என்றும் தங்கள் தவறு தங்களுக்குத் தெரிகிறது என்கிறார்கள் திருத்திக் கொள்வதாக அனுபவப் பதிவு செய்துள்ளார்கள். மேலும் பிரான்சில் உள்ள சகோதரி குமாரி தினம் கட்செவி நிலைப்பதிவு (What's App status) இல் **தினம் ஒரு குறள்** விளக்கத்தோடு பதிவிடுகிறார், 16 ஜூலை 2023 முதல் பிரெஞ்சு மொழியில் **தினம் ஒரு திருக்குறள்** பதிவைப் பதிவிட ஆவன செய்வதாக கூறினார். பிரான்சில் உள்ள மற்றொரு சகோதரி ஜெயந்தி திருக்குறள் பற்றி இளைஞர்களிடம் எடுத்துச் சொல்லி வருகிறார் செப்டம்பர் 2023 ஆம் மாதம் முதல் திருக்குறள் வகுப்புகள் ஆரம்பிக்க உள்ளார்.

என் அனுபவமாகச் சொல்வதென்றால் சோமவீரப்பன் ஐயா வகுப்புகள் நடத்திய விதம் மிகவும் சிறப்பாக இருந்தது (slides) நழுவுபடங்கள் உபயோகித்தது வகுப்பின் தன்மையை மேலும் சிறப்படையச் செய்தது . பெரும்பாலும் அனைத்துக் குறள்களுக்கும் அவரின் சொந்த மற்றும் பல ஆளுமைகளின் வாழ்வின் அனுபவங்களைப் பகிர்ந்தது மேலும் சிறப்பு செய்தது. இந்தப் பயிற்றுவிக்கும் முறை மாணவர்கள் அவரவர் வாழ்வில் குறளின் கருத்துக்களை பொருத்திப் பார்க்க வழி செய்தது. எனக்கு தெரிந்த விடயங்களை பற்றி பிறர் புரிந்து கொள்ளும்படி எடுத்துச் சொல்ல எனக்குத் தெரியவில்லையே என்று வருந்துவேன் இதை வள்ளுவர் பெருமான் "இணர் ஊழ்த்தும் நாறா மலர் அனையர் கற்றது உணர விரித்துரையாதார்- 650" என்கிறார்.

ஐயா வகுப்பு நடத்தும் போது எனக்குள்ள குறையை வள்ளுவர் நேரே சொன்னது போல உணர்ந்தேன். என்னைப் பாதித்த மற்றொரு குறள் . "ஆகாறு அளவிட்டிதாயினும் கேடில்லை போகாறு அகலாக் கடை- 478"

என் குணக் குற்றங்களை குறைகளை செயல் குற்றங்களை நீக்க உணர்த்திய குறள்கள்

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன் ஆகுல நீர பிற- 34

அழுக்காறு அவா வெகுளி இன்னாச் சொல் நான்கும் இழுக்கா இயன்றது அறம் -35

குறள் நெறி என்னை வலி இல்லாமல் தீமையிலிருந்து விலக்கி வருவதை தூங்குபவன் கையில் உள்ள புத்தகம் தானாக நழுவி விழுவது போல நழுவதாக உணர்கிறேன் நான் வற்புறுத்தி விலக்கினால் மன இறுக்கம் வரும் தானாக விலகுவதால் சுகானுபவமாக உணர்கிறேன். வள்ளுவர் என் கூட இருந்து என்னை வழிநடத்துகிறார் என்பதை உணர்கிறேன் நல்லவர்களோடு வல்லவர்களோடு சேர்ந்து இருப்பதே மகிழ்ச்சி இன்று இங்கு அனைவரோடும் இருப்பதால் அந்த மகிழ்ச்சி பெற்றேன். என் அனுபவங்களை பகிர்ந்து கொள்ள வாய்ப்பளித்த இயக்குனர்களுக்கும் ஆசிரியப் பெருமானுக்கும் பொறுமையோடு கேட்ட உங்கள் அனைவருக்கும் நன்றி பாராட்டி அமைகிறேன் வணக்கம் நன்றி .






உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகம் நடத்திய "குறள்வழி மேலாண்மையியல் " வகுப்புகள் ஏப்ரல் மாதம் நிறைவுற்றன.அதன் தேர்வுகளில் சிறந்த மதிப்பெண்கள் பெற்றுப் பரிசு வென்றவர்களுக்கான பரிசளிப்பு விழா 27 சூன் 23 செவ்வாய் அன்று சென்னை அண்ணாநகர் நான் ஒரு ஐஏஎசு அகாடமி வளாகத்தில் நடைபெற்றது

இதில் 60 வயதுக்கு மேற்பட்ட ஒரு 60 வயதுக்கு உட்பட்டோர் என இரு பிரிவுகளாக முதல் பரிசு இரண்டாம் பரிசு மூன்றாம் பரிசுகள் வழங்கப்பட்டன இது தவிர 3 சிறப்பு பரிசுகளும் நான்கு ஊக்கப் பரிசுகளும் வழங்கப்பட்டன

பரிசு பெற்றவர்கள் விவரம் கீழே;










விழாவில் வரவேற்புரை ஆற்றிய கவிஞர் முனைவர் தமிழியலன் அவர்கள் வகுப்பில் ஊக்கத்துடன் பங்கு பெற்ற மாணவர்கள் அனைவரையும் பாராட்டினார். அத்துடன் இணைய வழியில் பிரான்சு, அமெரிக்கா, இந்தியா எனப் பல்வேறு நாடுகளில் இருந்தவர்களுக்கு இணைய வழியில் பாடம் நடத்தியதோடு இணைய வழியாகவே தேர்வும் நடத்திய சிறப்புறு பேராசிரியர் சோமவீரப்பனைப் பாராட்டினார். இதற்கு ஆணிவேராக. விளங்கிய மறைமலை இலக்குவனார் அவர்களின் பணி ஒப்புயர்வற்றது என்றார்

விழாவில் சிறப்புரையாற்றிய கழகத்தின் இயக்குனர் மறைமலை இலக்குவனார் சோமவீரப்பன் திருக்குறள் பால் கொண்ட பற்றினால் எந்த ஒரு பலனையும் எதிர்பாராது முழுமுனைப்புடன் வகுப்புகளை நடத்தி நிறைவு செய்துள்ளார் என்றார்

வகுப்பின் அனுபவங்களைப் பகிர்ந்து கொண்ட பிரான்சு வேலாயுதம் அவர்கள் இம்மாதிரி வகுப்புகளில் பல நூறு பேர்களாக சேர்ந்து இருக்க வேண்டும் என்றார்.திருக்குறள் கல்வி பலரின் வாழ்க்கை நெறியை முறையை மாற்றிவிட்டது என்றார்

விழாவில் பேசிய சிறப்புறு பேராசிரியர் வீரப்பன் இந்நிகழ்ச்சியின் வெற்றிக்குக் காரணம் அதன் மாணவர்களே. என்றார் 11 வயது முதல் 82 வயது வரை அமெரிக்கா, பிரான்சு, இந்தியா எனப் பல்வேறு நாடுகளில் இருந்தும் தமிழ்நாட்டின் பல ஊர்களில் இருந்தும் பகல் இரவு பாராது மாணவர்கள் கலந்து கொண்டது ஊக்கம் அளித்தது என்றார். இது போன்ற நிகழ்ச்சிகளின் வெற்றி, கற்றுக்கொண்ட பொருள்களை வாழ்க்கையில் பயன்படுத்துவதில் தான் அமைந்திருக்கிறது என்றார். கற்க கசடற என்ற வள்ளுவர் நிற்க அதற்குத் தக என்றும் கூறியுள்ளதை நினைவு கூர்ந்தார்.[வரைவு:சோம.வீ.]




மாணவர்களுக்குப்

பரிசளித்த

நூல்கள்

குறள்நெறி

மின்னிதழ்:64 “குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்” தி.வ.ஆ.2054 ஆனி-31- சூலை-16-பொ.ஆ.-2023

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

# மறைமலை அடிகள் பிறந்தநாள் சிறப்பிதழ்



முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரை
மறைமலையடிகள்

சாகுந்தல நாடக ஆராய்ச்சி
மறைமலை அடிகள்

கட்டுரைகள்
இந்தி பொது மொழியா?
மறைமலை அடிகள்

## புதுவைப்பள்ளிகளில் தமிழ் மொழிப்பாடம் நீக்கம்!

ஒன்றிய அரசின் நேரடியான அதிகாரத்துக்குள் புதுவைக் கல்வித்துறை கட்டுண்டு இருப்பதால் பள்ளிகளில் தமிழ்மொழி கற்காமலேயே படிப்பை நிறைவு செய்யும்வண்ணம் பாடத்திட்டம் வரையறுக்கப்பட்டுவிட்டது. தில்லிக்கு மகிழ்வளிக்கும் வகையில் தமிழ்மொழிப்பாடம் கிள்ளி எறியப்பட்டுவிட்டது.தமிழ் ஆர்வலர்கள் முனைவர் தமிழமல்லன் தலைமையில் போராடிவருகின்றனர்.'உலகின் மூத்த மொழி தமிழே' எனச் சொல்லிக்கொண்டே ஆழ்ந்த குழிக்குள் அமுதத் தமிழைப் புதைத்துவிடத் துணிந்துவிட்டனர்.பாரதியாரும் பாரதிதாசனும் உலாவிய புதுவையில் தமிழ்த்தாய் நடமாடும் உரிமையின்றி முடங்குவதா???

புலையுடல் தினவே கொலையிடும் உணவே
பேணாய் வாணாளில்
புகழ்ஒளி படவே குலவெறி படவே
போராள் சீராளா!
ஒலியுடை சிறுவாய் வகையொலி யறிவாய்
ஓதா மூதாய்வால்
உறுசுவை அமுதாய் ஒலியுடை தமிழாள்
ஓயா வாயோனே!
முளையிடு மயலார் மொழிகளின் மயலால்
மூவாத் தாயாம்நம்
முதன்மொழி உயர்வே துயில்தரும் கனவாய்ப்
போகா தேகாப்பான்
தலையிடும் விடிவேள், தமிழ்மலை யடிகேள்!
தாலோ தாலேலோ
தமிழறி புலவா! பலகலை வலவா!
தாலோ தாலேலோ!

தாலப்பருவம் – பாடல் எண்-1
மறைமலை அடிகள் பிள்ளைத்தமிழ்
- நா.முத்துநிலவன்

## அடிகளார் நூல்கள் படித்திருக்கிறீர்களா?

**மருத்துவம், இயற்கை வாழ்க்கை**

பொருந்தும் உணவும் பொருந்தா உணவும் (1921)

மக்கள் நூறாண்டு உயிர்வாழ்க்கை, இரு தொகுதிகள் (1933)

மனித வசியம் அல்லது மனக்கவர்ச்சி (1927)

யோக நித்திரை: அறிதுயில் (1922)

தொலைவில் உணர்தல் (1935)

மரணத்தின்பின் மனிதர் நிலை (1911)

**மொழியாக்கம்**

சாகுந்தல நாடகம் (சமற்கிருதத்தில் இருந்து மொழி பெயர்த்தது) (1907)

சமற்கிருத ஆராய்ச்சி

சாகுந்தல நாடக ஆராய்ச்சி (1934)

**தொகுப்பு**

ஞானசாகரம் மாதிகை (1902)

**சைவம்**

சாதி வேற்றுமையும் போலிச் சைவரும் (1911)

முனிமொழிப் ப்ரகாசிகை (1899)

மாணிக்க வாசகர் வரலாறு (1952)

சோமசுந்தரக் காஞ்சியாக்கம் (1901)

சோமசுந்தர நாயகர் வரலாறு (1957)

கடவுள் நிலைக்கு மாறான கொள்கைகள் சைவம் ஆகா (1968)

திருவாசக விரிவுரை (1940)

சித்தாந்த ஞான போதம், சதமணிக்கோவை குறிப்புரை (1898)

துகளறு போதம், உரை (1898)

வேதாந்த மத விசாரம் (1899)

வேத சிவாகமப் பிராமண்யம் (1900)

Saiva Siddhanta as a Philosophy of Practical Knowledge (1940)

சைவ சித்தாந்த ஞானபோதம் (1906)

சிவஞான போத ஆராய்ச்சி (1958)

பழந்தமிழ்க் கொள்கையே சைவ சமயம் (1958)

தமிழர் மதம் (1941)

**பழந்தமிழிலக்கிய ஆய்வு**

முற்கால பிற்காலத் தமிழ்ப் புலவோர் (1936)

முல்லைப்பாட்டு- ஆராய்ச்சியுரை (1903)

பட்டினப்பாலை-ஆராய்ச்சியுரை (1906)

உரைமணிக் கோவை (1972)

மாணிக்க வாசகர் மாட்சி (1935)

மாணிக்க வாசகர் வரலாறும் காலமும் (இரு தொகுதி) (1930)

முதற்குறள் வாத நிராகரணம் (1898)

திருக்குறள் ஆராய்ச்சி (1951)

**மரபிலக்கியப்படைப்புகள்**

மறைமலையடிகள் பாமணிக் கோவை (பாடல்கள்) (1977)

அம்பிகாபதி அமராவதி (நாடகம்) (1954)

திருவொற்றி முருகர் மும்மணிக்கோவை (1900)

**புதினம்**

கோகிலாம்பாள் கடிதங்கள் (1921)

குமுதவல்லி: அல்லது நாகநாட்டரசி (1911

**பொது**

மறைமலை அடிகள் கடிதங்கள் (1957)

அறிவுரைக் கொத்து (1921)

அறிவுரைக் கோவை (1971)

கருத்தோவியம் (1976)

சிந்தனைக் கட்டுரைகள் (1908)

சிறுவற்கான செந்தமிழ் (1934)

இளைஞர்க்கான இன்றமிழ் (1957)

இந்தி பொது மொழியா? (1937)

தமிழ் நாட்டவரும், மேல்நாட்டவரும் (1936)

பண்டைக்காலத் தமிழரும் ஆரியரும் (1906)

வேளாளர் நாகரிகம் (1923)






பல்லாவரத்தில் அடிகளார் வாழ்ந்த இல்லம் அமைந்த தெரு சாவடி தெரு என்னும் பெயர் கொண்டிருந்தது.மறைமலை அடிகளாரின் புகழ்மணம் கமழும் அத் தெரு அவர் பெயரைத் தாங்கு அமைவதே சிறப்பு எனக் கருதித் தமிழ்நாட்டு அரசு அத் தெருவின் பெயரை அவர் பெயரிலேயே அமைத்து ஆணை பிறப்பித்திருந்தது.இப்போது அதற்கேற்ப புதிய பெயர்ப்பலகை மாநகராட்சியால் நிறுவப்பட்டுள்ளது.அடிகளாரின் புகழ்பரப்பும் பணிகளில் எந் நாளும் முன் நிற்கும் தமிழ்நாட்டு அரசு,மாண்புமிகு முதல்வர் தளபதியார்,தமிழ்வளர்ச்சி அமைச்சர்,வணக்கத்திற்குரிய மாநகராட்சித் தலைவர்,அனைவரின் கவனத்திற்கும் கொண்டுசென்று ஆவன செய்த அடிகளார் கல்வி அறக்கட்டளை நிறுவுநர் மறை.தாயுமானவர் ஆகிய அனைவருக்கும் தமிழுணர்வாளர் சார்பில் எம் நன்றி.









ஓம்

பல்லாவரம்,
17-9-1945

அன்புமிக்க கனகராயர்க்கு அம்பலவாணரம்மை திருவருளால் எல்லா நலங்களும் பெருகுக! உங்கள் நேற்றைக் கடிதத்தால் உங்கள் அருமைத் தந்தையார் காலமான செய்தியறிந்து வருந்தினேம். உங்களையெல்லாம் பெற்றுவளர்த்து நன்னிலையில் வைத்துத் தமது கடமையை நன்கு செய்து முடித்த நுங்கள் தந்தையாரான பெரியார் சிவபிரான் திருவடி நீழலில் அமர்ந்து ஆறுதலெய்திப் பேரின்பம் நுகர்ந்திருப்பாராக! உங்கள் அருமைத் தாயார் சிறியதந்தையார் முதலான உங்கள் குடும்பத்தார் அனைவர்க்கும் எங்கள் ஆறுதல் மொழிகளைத் தெரிவியுங்கள்

அன்புமிக்க
மறைமலையடிகள்



# என்றென்றும் வழிகாட்டும் மறைமலையடிகள்

(சூலை 15, 1876 - செப்டம்பர் 15, 1950)

மறைமலை இலக்குவனார்

தமிழ்ச்சான்றோர்களைக் குறிப்பிடும் போது வாலாயமாகக் கூறும் 'தமிழ்த்தாயின் தவப்புதல்வர்களுள் ஒருவர்' என்னும் சாற்றுமொழி அடிகளாருக்குப் பொருந்திவராது. ஏன்?ஏனைய சான்றோர்களைப் போன்று மொழிவளர்ச்சியிலும் இலக்கியப் படைப்பாக்கத்திலும் தம் புலமைத்திறமும் படைப்பாற்றலும் உறுதுணையாய்க் கொண்டு உழைத்ததுடன் அடிகளார் அமைந்துவிடவில்லை.தமது அறிவுத்திறத்தைத் தகைமைசான்றதாக நிலைநிறுத்திய காலம் தொடங்கித் தம் வாழ்நாள்முழுமையும் கண்ணை இமை காப்பதைப்போல் தமிழுக்கு எத்திசையிலிருந்தும் ஊறு வராமல் காப்பதே குறிக்கோளாகக் கொண்டு ஓயாது உழைத்து ஒரு தாய் தன் குழந்தையைக் காப்பதைப் போல் தமிழ்க்காப்புக் களம் அமைத்துப் பாடாற்றிய பெருந்தகை என்பதால் இவரைத் தமிழுக்குத் தாய் போன்ற தகைசால் புலவர் என அறிமுகம் செய்தலே பொருந்தும்.

தமிழினத்துக்கு இவர் தம் கொடையாக அளித்துச் சென்றுள்ள அறிவுக்கருவூலமாகிய நூல்களே இவரது மலையொத்த புலமைக்குச் சான்றளிப்பன.மருத்துவம், இயற்கை வாழ்க்கை, மொழியாக்கம், சைவம்,மெய்ப்பொருளியல் ஆராய்ச்சி, பழந்தமிழிலக்கிய ஆய்வு, நல வாழ்வு, உளவியல், மரபுக்கவிதை, புதுமைநெறி மடல் இலக்கியம், புதினம்,நாடகம், இறையியல், மொழிபெயர்ப்பிலக்கியம், சிந்தனைக்கட்டுரைகள்,தன்முன்னேற்ற இலக்கியம் அல்லது ஆளுமைவளர்ச்சி இலக்கியம், பண்பாட்டு ஒப்பியல்,சிறுவர் இலக்கியம் எனப் பல்வேறு இலக்கிய வகைமைகளில் தடம்பதித்த ஒரே தமிழறிஞர் இவரே. ஆங்கிலத்திலும் மொழி ஆராய்ச்சி,பண்பாட்டு ஆய்வு,ஒப்பியல் ஆய்வு ஆகிய துறைகளில் நூல் படைத்தளித்தவரும் தமிழ்,ஆங்கிலம் எனும் இரு மொழிகளிலும் இதழ்நடத்தி இதழின் வாயிலாகவும் எழுத்திக் குவித்தவரும் இவரே.

தமிழ்,ஆங்கிலம்,வடமொழி ஆகிய மூன்று மொழிகளிலும் ஆழ்ந்த புலமை பெற்ற அடிகளாரின் வடமொழிப்புலமை அக்காலச் சங்கராச்சாரியாராலேயே பாராட்டப்பெற்றது.முப்புரிநூல் இல்லையெனும் காரணத்தால் சாதிப்பாகுபாடு காரணமாக இவருக்கு வடமொழிக்கல்வி வாய்ப்பு மறுக்கப்பட்ட அவலச்சூழலிலும் 'வடமொழி பயின்றே தீருவேன்' என்னும் வைரநெஞ்சுடன் வடமொழி பயின்றுவந்த தனது பார்ப்பனத்தோழன்வழி வடமொழியறிவு பெற்றுப் பின் நூல்களின் துணைக்கொண்டு ஆழ்ந்த ஆய்வுடனும் கூர்த்த நோக்குடனும் செறிவும் விரிவும் மிக்க இலக்கிய இலக்கணநூல்களையும் வேதங்களையும் உபநிடதங்களையும் கற்றதன் விளைவாகவே புலமையால் இமயம் ஒத்த பெருமையும் திண்மையும் பெற்றார்.

சிக்காகோ உலகச் சமய மாநாட்டுக்குச் சென்றுவந்த விவேகானந்தர் அங்கே வேதாந்தத்தை மட்டுமே அறிமுகப்படுத்தினார் என்னும் செய்தியறிந்து சைவசித்தாந்தத்தை அவர் அறிந்திலர் என்பதைக் கேள்விப்பட்டுத் சூளை சோமசுந்தரநாயகர் (ஆகத்து 16,1846-- பிப்ரவரி 22,1901) விவேகானந்தரைக் கருத்துப்போருக்கு அழைத்ததும் வேதாந்தமே முதன்மை மிக்கது என வாதிட்ட விவேகானந்தரை எதிர்த்து சைவசித்தாந்தமே தொன்மையும் முதன்மையும் வாய்ந்தது என்னும் தம் கருத்தைத் தக்க சான்றுகளுடன் சூளை சோமசுந்தரநாயகர் நிறுவியதும் விவேகானந்தர் தம் தோல்வியை ஒப்புக்கொண்டதும் இன்றைய தலைமுறைக்குச் சொல்வார் இலர்.சைவசித்தாந்தத்தைத் தெரிந்துகொள்ளாமல் சிக்காகோ மாநாட்டுக்குச் சென்றது தம் தவறென விவேகானந்தர் ஏற்றுக்கொண்டார்.இதன் விளைவாகச் 'சைவ சித்தாந்த சண்ட மாருதம்' எனவும் 'பரசமயகோளரி' எனவும் நாயகர் பாராட்டடப்பட்டார்.

இதனைப் போன்றே மனோன்மணீயம் சுந்தரனார் விவேகானந்தரைத் திருவனந்தபுரத்தில் உள்ள தமது வளமனைக்கு அழைத்து விருந்துகொடுத்தபோது சிறுபான்மை உயர்வகுப்பினர் பெரும்பான்மையோரை அடிமைப்படுத்தி அடக்கி ஒடுக்கும் கொடுமையை எதிர்த்து விழிப்புணர்வு தமிழ்நாட்டில் ஏற்பட்டுவருகிறது என்பதையும் வடநாடு இவ் வகையில் விழிப்புணர்வு கொள்ளாதிருப்பதையும் சுட்டிக்காட்டினார்.'உங்கள் கோத்திரம் என்ன?' எனத் துறவி விவேகானந்தர் தம்மை வினவியகாலை இத்தகைய வினாக்களைத் தென்னகத்தில் கேட்கவேண்டாம் என மனோன்மணியம் சுந்தரனார் தெளிவுபடுத்தியுள்ளார்.

சோமசுந்தரநாயகரும் மனோன்மணியம் சுந்தரனாருமே மறைமலையடிகளுக்கு வேலைவாய்ப்புக் கிட்டவும் சான்றோர் அவையில் அறிந்தேற்புப் பெறவும் அடித்தளம் அமைத்தவர்கள்.

இவர்களது அஞ்சாமையும் துணிவும் மறைமலையடிகளின் ஆளுமை வீறுபெற்றோங்க அடித்தளமாயின.

சோமசுந்தர நாயகரின் மாணவர் மறைமலையடிகள் பிற்காலத்தில் தனித் தமிழில் ஈடுபாடு கொண்டதால் அவரது ஆசான் நாயகரும் தூய தமிழில் எழுதவும் பேசவும் தொடங்கினார் என்பது அடிகளாரின் தமிழ்வீறு எத்தகையது என்பதற்குச் சான்றாகிறது.

சோமசுந்தர நாயகர் தம் மாணவரான மறைமலையடிகளைத் தம் மகனாகக் கருதி மதித்தார். மறைமலையடிகளும் அவ்வாறே தம் ஆசிரியரைப் பெரிதும் போற்றினார். சோமசுந்தர நாயகர் மறைந்தபோது மறைமலையார் 'சோமசுந்தரக் காஞ்சி' யைப் பாடினார். மேலும் 'சோமசுந்தரக் காஞ்சியாக்கம்' என்னும் நூலையும் 'சோமசுந்தர நாயகர் வரலாறு' என்னும் நூலையும் மறைமலையடிகள் எழுதினார்.

தமிழ்மறுமலர்ச்சிக்கும் தமிழ்த்தேசிய உணர்வெழுச்சிக்கும் அடித்தளம் அமைத்த மனோன்மணியம் சுந்தரனாரின் தாக்கமே அடிகளார் இவ்விரு வரலாற்றுத் திருப்பங்களுக்கும் உந்துவிசையாகச் செயற்படக் காரணமாகியது.

அடிகளார் வள்ளலாரின் பாடலில் இடம்பெற்ற ‘உற்ற தேகம்’ என்னும் தொடரை ‘உற்ற யாக்கை’ எனக் கூறினால் சிறப்பாக இருக்கும் எனத் தம் அருமைத் திருமகளார் நீலாம்பிகையம்மையிடம் கூறியதன் விளைவும் தொடர்செயல்முறையுமே தமிழியக்கத்தின் தோற்றத்திற்குக் காரணமாயின என்பது உண்மைதான்.ஆனால் இதனைத் ‘தனித்தமிழியக்கம்’ என மொழித்தூய்மைவாதம் என்னும் ஒற்றைக் கோணத்தில் அணுகுதல் பெரும்பிழை.

மறைமலையடிகள் கண்டதும் நிறுவியதும் வழிகாட்டியதும் தொடர்ந்து வழிகாட்டிவருவதும் தமிழியக்கம் என்னும் களப்பணிக்குத்தான் என்பதைத் தமிழினம் உணரவேண்டும்.

ஆட்சிமன்றில் தமிழ்,வழக்குமன்றில் தமிழ்,உயர்கல்வியரங்குகளில் தமிழ்,இசையில் தமிழ்,கூத்துமுறைகளில் தமிழ்,வணிகத்தில் தமிழ்,வழிபாட்டில் தமிழ் எனத் தமிழ் எழுச்சிபெறவேண்டும் என்பதனைத்தான் அடிகளார் தமது ஒவ்வொரு பொழிவிலும்,ஒவ்வொரு கட்டுரையிலும்,ஒவ்வொரு நூலிலும் வலியுறுத்திவந்தார்.இத்தகைய முழுமைபெற்ற மறுமலர்ச்சி இயக்கமே தமிழியக்கம் என அடிகளார் அறிவுறுத்தியதைத் தெளிவுறப் புரிந்துகொண்டுதான் “தமிழியக்கம்” என்னும் கொள்கைவிளக்கநூலைப் பாவேந்தர் பாரதிதாசனார் படைத்தளித்தார்.எனவே அடிகளார் கண்டது “தனித் தமிழியக்கம்” என மொழித்தூய்மைவாதத்துக்குள் மட்டும் முடங்கிப்போய்விடாமல் ‘தமிழியக்கம்’ என்பது நாம் அடையவேண்டிய தமிழ்மறுமலர்ச்சி என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

> “மறைமலையடிகள் திராவிடம் என்னும் கருத்தாக்கத்தை தமிழியம் என்னும் கருத்தாக்கத்திற்கு எதிரான ஒன்றாக பார்த்தார். அது தெலுங்கர்களால் முன்வைக்கப்படுவது என தொடர்ந்து ஐயம் கொண்டிருந்தார். பின்னர் அவருடைய வழிவந்தவர்கள் திராவிட இயக்கத்துடன் இணைந்து செயல்பட்டாலும் தமிழியக்கத்தை திராவிடக் கருத்தியலுக்கு எதிராக நிறுத்தும் போக்கு தொடர்கிறது. அதன் தொடக்கப்புள்ளி மறைமலையடிகளே.”

என்னும் தமிழ்விக்கியின் கூற்று போகிறபோக்கில் ஒரு கலகத்தை மூட்டிப் பார்க்கும் சாணக்கியக்குறும்பாகத் தோன்றுகிறது.

திராவிட இயக்கம் இல்லையெனில் அடிகளின் தமிழியக்கக்கனவு கனவாகவே போயிருக்கும். தமிழியக்கம் என்னும் தொடரிப்பாதையின் இரண்டு இணையச்சுகளாகத் திகழ்பவர்கள் அடிகளாரும் தந்தை பெரியாருமே ஆவர்.

அடிகளாரின் தமிழியக்கம் ஒரு புலமைமுயற்சியாகச் சுருங்கிப் போய்விடாமல் மக்கள் இயக்கமாக விரிவுபெற்று ஒரு நூற்றாண்டு தொடர்ந்து வருவதற்குத் திராவிட இயக்கமே காரணம். மொழிப்பார்வையுடன் சமூகப்பார்வையும் ஒருங்கிணைந்து செயற்பட்டமையே இதன் வெற்றிக்குக் காரணமாக விளங்கியது.

வைதீகர்களும் சைவர்களும் ‘நமச்காரம்’ எனவும் வைணவர்கள் ‘சேவீச்சுக்கிறேன்’எனவும் கிறித்தவர்கள் ‘ச்தோத்திரம்’ எனவும் இசுலாமியர்கள் ‘சலாம் அலைகும்’எனவும் சிற்றூர்ப்புறத்து அடித்தளமக்கள் ‘கும்பிடறேனுங்க சாமி” எனவும் தத்தம் சாதிசமயப் பின்புலத்தோடு வழங்கிய மரியாதைச் சொல் ‘வணக்கம்’என்றானபின் சாதி சமய உணர்வு தொலைந்துபோவதைச் சுயமரியாதை இயக்கமே மக்கள்மன்றத்திற்கு அறிவுறுத்தியது. எனினும் பெரும் போராட்டத்துக்குப் பின்னரே இச் சொல் மக்கள்வழக்கில் நிலைபெறுவதில் வெற்றியடைய முடிந்தது.”வணக்கம்’என்று சொன்னாலே “நீ சு.ம.காரனா?” எனக் கேட்கும் காலம் ஒன்றிருந்தது. தமிழியக்கம் முழுமையாக வெற்றி இலக்கையடைய ஒரு நூற்றாண்டு ஆகிவிட்டது.இன்னும் முழுமையான வெற்றியடையவில்லை.ஆட்சிமன்றும், வழக்குமன்றும்,வழிபடும்கோயிலும் முற்றிலும் தமிழ் கோலோச்சும் இடமாக இன்னும் மாறவில்லை.அடிகளாரின் வழியில் அவர் காட்டிய முனைப்புடன் நாம் செயற்படவேண்டும்.ஒன்று படுவோம்’உழைப்போம் ; உறுதியாக வென்றுவிடுவோம்.

நன்றி:விடுதலை-14/7/23

# குறள்நெறி


மின்னிதழ்:65 **“குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்”** தி.வ.ஆ.2054 ஆடி-16- ஆகத்து-1-பொ.ஆ.-2023

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்









## முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம் அவர்கள் நிறுவிய தமிழகப் புலவர் குழுவின் 115-ஆவது கூட்டம்

புலவர்குழுவின் தலைவராக விளங்கிய அறிஞர் ஔவை நடராசன் அவர்களுக்குப் புகழ்வணக்கம் இக் கூட்டத்தின் முதல் நிகழ்ச்சியாக அமைந்தது. எஞ்ஞான்றும் முறுவல் மலர்ந்த முகத்தினராய் அகநக நட்பாடும் அன்பின் உறைவிடமாய் அனைத்துப் புலவர்களையும் தமது அன்பால் ஆட்கொண்ட ஔவை நடராசப் பெருமகனாரை எண்ணி எண்ணிக் கசிந்த புலவர் பெருமக்கள் தமது புகழ்வணக்கத்தைச் செலுத்திய இந் நிகழ்ச்சி சொற்களால் விளக்க வல்லதோ?பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன் அவர்கள் நினைவுரையும் கையறு நிலைக்கவிதையும் வழங்கினார்.

அவருக்குப் பின் புலவர்குழிவின் தலைமையேற்கக் கல்விக்கோ கோ.விசுவநாதம் அவர்களையே அனைவரும் வேண்டினர்.ஒருமனதான புலவர்தம் விழைவைக் கல்விக்கோ அவர்களும் ஏற்றனர்.

உலகம் உவப்பத் தமிழியக்கம் என்னும் அனைத்துலக அமைப்பை நடத்திவரும் அப் பெருமகனார் புலவர் குழுவைப் பொதிகைமலை மீதேற்றிய பொற்குடமாய்ப் பொலியச் செய்வார் என்பதில் ஐயமும் உண்டோ?



படத்திறப்பும் புகழ்வணக்கமும்

பெருந்தகைகள்: (இடமிருந்து வலம்)
கல்விக்கோ கோ.வி.அவர்கள்
பெருங்கவிக்கோ வா.மு.சே.அவர்கள்
கி.ஆ.பெ.வி.மணிமேகலை கண்னன் அவர்கள்
கி.ஆ.பெ.வி.கதிரேசன் அவர்கள்
ஔவை ந.அருள் அவர்கள்
குறள்நெறிச்செல்வர் வி.ஜி.பி.சந்தோசம் அவர்கள்
குறள்நெறிப் பொறுப்பாசிரியர் மறைமலை இலக்குவனார்



மா.நன்னன் நூற்றாண்டு நிறைவு விழாவில் முதலமைச்சர் மு.க.ஸ்டாலின் அறிவிப்பு

"புலவர் நன்னன் அவர்களின் புத்தகங்கள் நாட்டுடைமை ஆக்கப்படும்!"

சென்னைசூலை 31 "தமிழ்நாடு அரசின் சார்பில் நன்னன் அவர்களுக்குப் புகழ் சேர்த்திடும் வகையில், நன்னன் அவர்களின் புத்தகங்கள் நாட்டுடைமை ஆக்கப்படும்" என்று மா.நன்னன் நூற்றாண்டு விழாவில் முதலமைச்சர் மு.க.ஸ்டாலின் அவர்கள் அறிவித்தார்.

**பேராசிரியர் மா.நன்னன் அவர்களின் நூற்றாண்டு நிறைவு விழா**

தமிழ்நாடு முதலமைச்சர்மு.க.ஸ்டாலின் அவர்கள் நேற்று (30.7.2023) சென்னை, சர்.பிட்டி தியாகராயர் கலை மன்றத்தில் நடைபெற்ற பேராசிரியர் மா.நன்னன் அவர்களின் நூற்றாண்டு நிறைவு விழாவில் கலந்து கொண்டு ஆற்றிய சிறப்புரை வருமாறு:

மதிப்பிற்குரிய பேராசிரியர் மா.நன்னன் அவர்களின் நூற்றாண்டு நிறைவு விழா நிகழ்ச்சிக்கு தலைமையேற்று எழுச்சியுரை ஆற்றி அமர்ந்திருக்கக்கூடிய திராவிடர் கழகத்தினுடைய தலைவர், தமிழர் தலைவர் அய்யா ஆசிரியர் அவர்களே,

மருத்துவம் மற்றும் மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் மா.சுப்பிரமணியன் அவர்களே, பள்ளிக் கல்வித் துறை அமைச்சர் அன்பில் மகேஸ் பொய்யா மொழி அவர்களே, சட்டமன்ற உறுப்பினர்கள் மயிலை வேலு அவர்களே, ஜெ. கருணாநிதி அவர்களே, திராவிட இயக்கத்தினுடைய எழுத்தாளர் பெருமதிப்பிற்குரிய திருநாவுக்கரசு அவர்களே,

இந்த நிகழ்ச்சியில் பங்கேற்று சிறப்பித்திருக்கக்கூடிய என்னுடைய மதிப்பிற்குரிய இயக்குநர் அமிர்தம் அவர்களே, துணை மேயர் மகேஷ்குமார் அவர்களே, ஆய்வரங்க நிகழ்ச்சியில் பங்கேற்று உரையாற்றியிருக் கக்கூடிய வழக்குரைஞர் அருள்மொழி அவர்களே, கவிஞர் கலி. பூங்குன்றன் அவர்களே, புலவர் நன்னன் அவர்களுடைய அருமைமிகு துணைவியார் பார்வதி அம்மையார் அவர்களே மற்றும் அவருடைய குடும்பத்தை சார்ந்திருக்கக் கூடியவர்களே, வருகை தந்துள்ள மாணவச் செல்வங்களே, பெற்றோர்களே, தாய்மார்களே, நன்னன் குடி சொந்தங்களே, பத்திரிகை மற்றும் ஊடகத் துறையைச் சார்ந்திருக்கக்கூடிய சகோதரர்களே, என் உயிரோடு கலந்திருக்கக்கூடிய தலைவர் கலைஞர் அவர்களின் உயிரினும், உயிரான அன்பு உடன்பிறப்புக்களே,உங்கள் அனைவருக்கும் என்னுடைய அன்பான வணக்கம்.

**மிகப் பெரிய பெருமையாக நான் கருதுகிறேன்**

பேராசிரியர் நன்னன் அவர்களுடைய நூற்றாண்டு நிறைவு விழா நிகழ்ச்சியில் உங்களோடு சேர்ந்து நானும் பங்கேற்பதில் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன். எனக்குக் கிடைத்திருக்கக்கூடிய மிகப் பெரிய பெருமையாக நான் கருதுகிறேன்.

நீதிக்கட்சியினுடைய அடையாளமாக விளங்கிக் கொண்டிருக்கக்கூடிய வெள்ளுடை வேந்தர் தியாக ராயருடைய பெயரில் அமைந்துள்ள இந்த தியாகராய நகரில், இந்த சர்.பிட்டி தியாகராயர் கலை மன்றத்தில் இந்த விழா நடைபெறுகிறது.

திராவிடர் கழகத்தின் தலைவரான ஆசிரியர் அவர்கள் இந்த மேடையில் இருக்கிறார்கள். திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய தலைவராக நானும் பங்கெடுத்திருக்கிறேன்.

நீதிக்கட்சியில் நுழைந்து, திராவிடர் கழகத்தில் செயல்பட்டு, திராவிட முன்னேற்றக் கழகத்தில் மிகத் தீவிரமாக இயங்கியவர் நன்னன் என்பதன் அடை யாளமாகவே இந்த நிகழ்ச்சி பொருத்தமாக அமைந் திருக்கிறது.

பேராசிரியர் நன்னன் அவர்களுடைய நூற்றாண்டு விழாவை,

· புத்தக வெளியீட்டு விழா

·மாணவச் செல்வங்களுக்கு பரிசுகள் வழங்கும் விழா

ஆகியவற்றோடு இணைத்து ஏற்பாடு செய்துள்ள நன்னன் குடி அமைப்புக்கு என்னுடைய வாழ்த்துகளை, நன்றியை நான் முதலில் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

அவருடைய வாழ்க்கை வரலாற்று நூலுக்கு "அகமும் புறமும்" என்று தலைப்பு வைத்து முன்பு வெளியிட்டேன்.

புலவர் நன்னன் அவர்கள் அகமும் புறமும் அப்பழுக்கற்றவராக, நேர்மையானவராக விளங்கியவர். அத்தகைய பெருமகனாருக்கு நூற்றாண்டு நிறைவு விழாவை நாம் கொண்டாடிக் கொண்டிருக்கிறோம்.

இனப்பற்றும், மொழிப்பற்றும் இருந்த காரணத்தால்தான்...

தந்தை பெரியார், தலைவர் கலைஞரை போல புலவர் நன்னன் அவர்களும் 90 ஆண்டுகளை கடந்து வாழ்ந்தவர். இனப்பற்றும், மொழிப்பற்றும் இருந்த காரணத்தால்தான் இத்தனை ஆண்டுகள் பாடுபடு வதற்காக வாழ்நாளை நீட்டித்து வைக்கிறது.
வாழ்நாளெல்லாம் நாட்டுக்காக, மொழிக்காக ஓயாது உழைத்துக் கொண்டிருப்பதுதான் முக்கியமானது. அது எல்லோராலும் முடியாது. தந்தை பெரியாரைப் போல, கலைஞரைப் போல, நன்னனைப் போல ஒரு சிலரால் தான் முடியும். இறுதி வரைக்கும் உழைத்தவர்கள் இவர்கள். இவர்களால் சும்மா இருக்கமுடியாது. இவர்கள் மட்டுமல்ல, இவர்களுக்கு பக்கத்தில் இருப்பவர்களையும் சும்மா விடமாட்டார்கள்.
எழுதிக் குவித்திருக்கக்கூடிய புலவர் நன்னன் அவர்களது விரலுக்கு மோதிரம் அணிவித்தவன் நான்!
நன்னன் அவர்கள் எழுதிக் கொண்டே இருந்தார்கள். எனக்கு என்ன பெருமை என்று சொன்னால், பல்லாயிரம் பக்கங்களை எழுதிக் குவித்திருக்கக்கூடிய புலவர் நன்னன் அவர்களது விரலுக்கு, விழுப்புரத்தில் நடை பெற்ற இளைஞரணி பாசறை கூட்டத்தில் மோதிரம் அணிவித்தவன் நான். அதனை இன்றைக்கும் நினைத்து பெருமையாக கருதிக் கொண்டிருக்கிறேன். அவரை பொறுத்தவரைக்கும், என்னோடு வாரத்திற்கு இரண்டு முறையாவது தொலைபேசியில் தொடர்பு கொள் வதுண்டு. அப்படி தொடர்பு கொள்கிறபோதெல்லாம் உங்கள் அறிக்கையை பார்த்தேன். உங்கள் பேச்சை படித்துப் பார்த்தேன். நன்றாக இருந்தது. அதைதாண்டி, எனக்கு அறிவுரையும் பல நேரங்களில் அவர் சொல்லி யிருக்கிறார்.
திடீரென்று ஒரு வாரம் அவரிடத்திலிருந்து எனக்கு ஃபோன் வரவில்லை. நானே நினைத்துக் கொண்டேன். உடல் நிலை சரியில்லை போலிருக்கிறது என்று கருதி, உடனே அவரை நேரடியாக சென்று பார்த்து விசாரித் தேன். ஆமாம் என்று சொன்னார். அதனால்தான் உன்னை தொடர்பு கொள்ள முடியவில்லை என்று வருத்தத்தோடு சொன்னார். அப்போதும் எனக்கு உற்சாகத்தை வழங்கினார்.
அப்போது அந்த நேரத்தில் 'முரசொலி' பொங்கல் மலர் வெளியீடு நடந்தது. அந்த மலரை கொண்டு சென்று அவரிடத்தில் கொடுத்தேன். அவர் திருப்பி எனக்கு 'பெரியார் கணினி' புத்தகத்தை கொடுத்தார்.
திடீரென்று ஒருநாள் 2017 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் உடல்நலம் பாதிக்கப்பட்டிருக்கின்ற நேரத்தில் அறிவாலயத்திற்கு வந்தார். அனைவரையும் பார்த்து விட்டுப் போகவேண்டும், உற்சாகப்படுத்தி விட்டுப் போகவேண்டும் என்பதற்காகதான் வந்தேன் என்று சொல்லிவிட்டுச் சென்றார்.
நவம்பர் மாதம் 7 ஆம் நாள் நன்னன் அவர்கள் மறைந்தார்கள். மறைந்தார் என்று சொல்ல முடியாது. அவர் மறைந்த பிறகும், புத்தகங்கள் அவர் பெயரால் வெளிவந்து கொண்டிருக்கிறது என்றால், எழுத்தால், சிந்தனையால், செயலால் நன்னன் அவர்கள் வாழ்கிறார். தொடர்ந்து அவர் வாழ்வார்.
நாம் அனைவரும் நன்னன் குடியைச் சேர்ந்தவர்கள் தான்
ஒன்றல்ல இரண்டல்ல, 124 புத்தகங்களை நமக்காக உருவாக்கிக் கொடுத்துச் சென்றிருக்கிறார் நன்னன் அவர்கள். இந்த நூல்களை நன்னன் குடி அமைப்பு வெளியிட்டுள்ளது. நன்னன் குடி என்றால் அவரது குடும்பத்தினர் மட்டுமல்ல, நாம் அனைவரும் நன்னன் குடியைச் சேர்ந்தவர்கள் தான்.
திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய பொதுக்குழு நடந்தால், செயற்குழு நடந்தால் முதல் வரிசையில் வந்து உட்கார்ந்திருப்பார். முக்கியமான புத்தக வெளியீட்டு விழா என்று சொன்னால், தலைவர் கலைஞர் அவர்கள் நிகழ்ச்சியில் பங்கேற்கிறார் என்று சொன்னால், அந்த நிகழ்ச்சிக்கு வந்து கலந்து கொண்டு சிறப்பிப்பார். அந்த மேடைகளில் பங்கேற்று பேசியும் இருக்கிறார். எவ்வளவு நேரம் பேசினாலும், நன்னன் அவர்களது உரையை உற்றுக் கவனிப்பார் நம்முடைய தலைவர் கலைஞர் அவர்கள். தி.மு. கழகத்தின் முப்பெரும் விழா நடக்கின்ற போதெல்லாம், பட்டிமன்ற நிகழ்ச்சிக்கு நடுவராக இருந்து அதை நடத்திக் காட்டியிருக்கிறார்.
கடந்த 2012 ஆம் ஆண்டு திராவிட இயக்கத்தின் நூற்றாண்டு விழா நடந்தது. தலைவர் கலைஞர் அவர்களோடு, இனமானப் பேராசிரியர் அவர்களும், நம்முடைய ஆசிரியர் அவர்களும் கலந்து கொண் டார்கள். நான் அந்த நிகழ்ச்சிக்கு வரவேற்புரை ஆற்றினேன். நம்முடைய நன்னன் அவர்களும் அதில் பங்கெடுத்து சிறப்பான உரையை ஆற்றினார்கள்.
கலைஞர் அவர்கள் எப்படி கடைசி காலத்தில், உடல்நலம் பாதிக்கப்பட்டு, உட்கார்ந்து பேசுவாரோ, அதேபோல, நன்னன் அவர்களும் உட்கார்ந்து அந்த நிகழ்ச்சியில் பேசினார். அவரது பேச்சு என்பது திராவிட இயக்க வகுப்பு நடத்துவதுபோல இருக்கும்.
**100 ஆண்டு வரலாற்றை 10 நிமிடத்தில் அனைவருடைய மனக்கண் முன்னால் நிறுத்திப் பேசக்கூடியவர்**
100 ஆண்டுகளுக்கு முன்னால் எப்படி இருந்தோம்? இப்போது நிலைமை எப்படி மாறி இருக்கிறது என்பதை விளக்கிச் சொன்னார் நன்னன் அவர்கள். அந்த 100 ஆண்டு வரலாற்றை 10 நிமிடத்தில் அனைவருடைய மனக்கண் முன்னால் நிறுத்தி பேசக்கூடிய ஆற்றல் அவருக்குத்தான் உண்டு. இதுதான் அவரது பாணி.
அந்த விழாவில் தான் தலைவர் கலைஞர் அவர்கள் பேசும் போது குறிப்பிட்டார்கள். "13 வயதில் தமிழ்க் கொடி ஏந்திப் போராடியவன் இந்தக் கருணாநிதி, இன்றைக்கும், அந்தக் கருணாநிதியினுடைய பரம்பரை, கருணாநிதியுனுடைய வழித்தோன்றல்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்கள் இருக்கிற காரணத்தால் ஒரு கருணாநிதி போனாலும், பல கருணாநிதிகள் நிச்சயமாக உங்களுக்காக உழைக்க வந்து கொண்டே இருப்பார்கள்" என்று பேசினார்.
திராவிடக் கொள்கைகளை ஏற்றுக் கொண்டிருக்கக்கூடிய அனைவரும்
கலைஞரின் வழித்தோன்றல்கள் தான்
அத்தகைய கலைஞரின் பரம்பரையினராக, வழித் தோன்றல்களாக நாம் இன்று
செயல்பட்டுக் கொண்டு இருக்கிறோம். கலைஞரின் வாரிசு என்றால் நான் மட்டுமல்ல, திராவிடக் கொள்கைகளை ஏற்றுக் கொண் டிருக்கக்கூடிய அனைவரும் கலைஞரின் வழித் தோன்றல்கள் தான்.
இந்த வழித் தோன்றல்கள்தான் தோன்றிக் கொண்டே இருப்பார்கள். அடக்குமுறைக்கு வழித்தோன்றல்கள் இருப்பதைப் போல, விடுதலை இயக்கத்துக்கும் வழித் தோன்றல்கள் எப்போதும் இருப்பார்கள். தனக்கென ஒரு எழுத்து நடையை, பேச்சு நடையை நன்னன் அவர்கள் வைத்திருந்தார்கள்.

பிழையின்றி எப்படி எழுத வேண்டும், பிழையின்றி எப்படி பேச வேண்டும் என்பதை கற்பிக்கும் மிகப் பெரிய ஆசானாக அவர் விளங்கினார். சென்னை தொலைக்காட்சியில் அவரது தமிழ் வகுப்புகள் 17 ஆண்டுகள் வந்துள்ளது. எந்த ஒரு தமிழாசிரியரும், தமிழ்ப் பேராசிரியரும் அடைய முடியாத பெருமை இது.

தனக்கு முன்னால் மாணவர்கள் உட்கார்ந்து கேட்ப தாக நினைத்துக் கொண்டு அவர் எடுத்த வகுப்பு உண்மையில் ஆச்சரியமானது, அசத்தலானது. திராவிட முன்னேற்றக் கழகம் நடத்திய தனது முப்பெரும் விழாவில் நன்னன் அவர்களுக்கு தந்தை பெரியார் விருது வழங்கியது.

தமிழ்நாட்டுக்கு ஒரு பெரியார் இருந்ததைப் போல, மற்ற மாநிலங்களுக்கு இல்லையே!

பெரியாரைப் பேசாத நாளெல்லாம், பிறவாத நாள் என வாழ்ந்த தமிழ்ப் பெரியார் தான் நம்முடைய நன்னன் அவர்கள். இந்தியாவையே கபளீகரம் செய்ய சனாதன, வர்ணாசிரம சக்திகள் துடித்துக் கொண்டிருக்கும் காலக்கட்டத்தில் தந்தை பெரியாரின் எழுத்துக்களை 21 மொழிகளில் கொண்டு வர நாம் முன்னெடுப்புகளைச் செய்து கொண்டு வருகிறோம்.

தமிழ்நாட்டுக்கு ஒரு பெரியார் இருந்ததைப் போல, மற்ற மாநிலங்களுக்கு இல்லை. எங்களுக்கு ஒரு தந்தை பெரியார் இல்லையே, திராவிட இயக்கம் இல்லையே என்ற ஏக்கம் இன்றைக்கு மற்ற மாநிலங்களைச் சேர்ந்தவர்களுக்கெல்லாம் வந்திருக்கிறது.

சனாதனம், வர்ணாசிரமம் குறித்து நம்முடைய ஆளுநர் நாள்தோறும் பேசிக் கொண்டிருக்கிறார் அல்லவா? அவர் பேசுவது நமக்கு ஒரு பிரச்சாரமாக அமைந்திருக்கிறது. அது வேறு. நான் பல கூட்டங்களில் சொல்லியிருக்கிறேன். தொடர்ந்து அவரே இருக்க வேண்டும், இருந்தால்தான் நம்முடைய கொள்கைகளை நாம் வளர்க்கமுடியும். நம்முடைய பிரச்சாரத்தை நாம் சிறப்பாக செய்யமுடியும்.

நாள்தோறும் தவறான பாடங் களை நடத்திக் கொண்டு இருக்கிறார். அவர் பேசி வரு வதே நமது கொள்கைகளுக்கு மிகப்பெரிய விளம் பரத்தைக் கொடுத்து வருகிறது.

'எனது எதிரிகள்தான் என்னை உற்சாகமாக வைத்திருக்கிறார்கள்': தந்தை பெரியார்!

பேரறிஞர் அண்ணா அவர்கள் சொன்னார்கள், 'வாழ்க வசவாளர்கள்' என்று அதைத்தான் இப்போது நான் சொல்ல வேண்டி இருக்கிறது. 'எனது எதிரிகள்தான் என்னை உற்சாகமாக வைத்திருக்கிறார்கள்' என்று தந்தை பெரியார் அவர்கள் சொன்னார்கள். அத்தகைய எதிரிகளுக்கு பதில் சொல்வதற்கு நன்னன் அவர்களின் எழுத்துகள் அதிகமாக நமக்கு பயன்படும்.

எப்படி எழுத வேண்டும், எப்படி பேச வேண்டும் என்பதை மட்டுமல்ல, எப்படி வாழ வேண்டும் என்றும் கற்று கொடுத்தார் நம்முடைய நன்னன் அவர்கள். வாழ் நாளெல்லாம் கொள்கைக்காக வாழ்ந்தார். கொள்கையின் அடையாளமாகவே வாழ்ந்தார். தனது குடும்பத்தை யையும், கொள்கையையும் இணைத்துக் கொண்டு வாழ்ந்தார்.

மரணம் நெருங்கும்போது அவர் சொன்னார், எனக்கு வருத்தம் எதுவும் கிடையாது.

நான் நிறைவாழ்க்கை வாழ்ந்து விட்டேன் என்று சொன்னார்.

தனக்குப் பின்னால் தனது குடும்பம், தனது செயலைத் தொடர்ந்து செய்ய வழிகாட்டினார்.

**நன்னன் அவர்களின் புத்தகங்கள் நாட்டுடைமை ஆக்கப்படும்!**

நன்னன் காலத்தைப் போலவே, புத்தக வெளியீடுகள் நடக்கின்றன.

சமூக சேவை தொடர்கிறது. விழாக்கள் நடக்கின்றன.

நன்னன் அவருடைய நூற்றாண்டை கொண்டாடும் இந்த நேரத்தில், தமிழ்நாட்டின் முதலமைச்சராக நான் இருக்கின்ற காரணத்தால், அந்தப் பெருமையோடு நான் குறிப்பிட விரும்புகிறேன். தமிழ்நாடு அரசின் சார்பில் நன்னன் அவர்களுக்குப் புகழ் சேர்த்திடும் வகையில், நன்னன் அவர்களின் புத்தகங்கள் நாட்டுடைமை ஆக்கப்படும் என்பதை அறிவிப்பதில் நான் மகிழ்ச்சியடைகிறேன். நன்னன் அவர்களின் குடும்பத்தினரோ, உறவினர்களோ, வேறு யாரும் கோரிக்கைகளை இந்த நேரத்தில் வைக்கவில்லை.

யாரும் வைக்காமல் இந்த கோரிக்கையை நான் செய்கிறேன் என்று சொன்னால், நன்னன் குடியில் நானும் ஒருவன் என்ற அடிப்படையில், இந்த அறிவிப்பை செய்திருக்கிறேன். நன்னன் அவர்கள் காலமாகவில்லை, அவர் காலம் தொடர்ந்து கொண்டே தான் இருக்கிறது.

நன்னன் புகழ் வாழ்க!நன்னன் குடி செழிக்கட்டும் என வாழ்த்தி விடை பெறுகிறேன். நன்றி, வணக்கம்.

- இவ்வாறு முதலமைச்சர் மு.க.ஸ்டாலின் அவர்கள் உரையாற்றினார்.

### தகைசால் தமிழரே! வாழ்க வாழ்கவே!



கொள்கை வீரமும் மணிநிகர் எழுத்தும்
கனிவுறு பேச்சும் துணிவுறு செயலும்
ஓயா உழைப்பும் உலகெலாம் பயணமும்
தாயாய்த் தொண்டரைத் தாங்கிடும் அன்பும்
தமக்கென வாய்ந்த தனிப்பெரும் பண்பினர்;
தமிழினம் எதிர்கொளும் தாளாத் துயர்களை
உமியென ஊதிடும் உலையாத் திண்மையும்
ஓருருக் கொண்ட உயர்பெரும் சிறப்பினர்;
பராவிடும் புகழ்மிகு பெரியார் நெறியைப்
பரப்புதல் ஒன்றே வாழ்வெனக் கொண்டவர்;
திராவிடர் கழகத் திறமிகு தலைவர்
தொண்ணூறு ஆண்டிலும் ஓய்விலா இளைஞர்
எண்ணுவதெல்லாம் தமிழர் நலனே!
மன்பதைத் தொண்டினில் நாளெலாம் போக்கி
வந்திடும் நோய்களைத் துரத்தி விரட்டி
மதப்பேய் ஓட்டி சாதித்தீ அணைத்து
அனைவரும் சமமெனும் உணர்வினை ஊட்டி
புதிய தலைமுறை பொலிவுடன் வளர்ந்திடக்
கல்விச் செல்வத்தைக் கருத்துடன் வழங்கிப்
பெண்ணினம் பெருமை பெற்றிடும் வகையில்
எண்ணமும் திட்டமும் வாய்ப்பும் அளித்து
அடுக்கிய துன்பம் அல்லல் செய்தாலும்
ஒடுக்கப் பட்டோர் உயர்வு மேம்பட
மிடுக்குடன் செயல்படும் தமிழர் தலைவர்!
தளபதி ஆட்சியில் தகைசால் தமிழராய்ப்
போற்றப் படுவதில் வியப்பும் உண்டோ?
கலைஞர் பெற்ற கொள்கை வேழம்
தலைவர் தாலின் ஆட்சி பொலிவுறத்
தக்க துணையாய்த் தகவுடன் விளங்கி
இன்னும் நூறாண்டு எம்முடன் இருந்து
இன்னல் தீர்ந்து தமிழினம் இன்புற
வழிகாட்டிடுவீர்! வாழிய!வாழிய!
தொண்டர்கள் போற்ற அன்பர்கள் வாழ்த்த
தமிழ்த்தாய் மகிழ்ந்திட வாழிய! வாழிய!
அன்புத் துணைவியார், மக்கள். சுற்றம்
அனைவரும் வாழ்க!நலமெலாம் சூழ்க!
தகைசால் தமிழரே! வாழ்க வாழ்கவே!

----மறைமலை இலக்குவனார்
பொறுப்பாசிரியர்,
குறள்நெறி இதழ்க் குழுமம்

## நான்காவது உலகத் தமிழாராய்ச்சி மாநாடு - நினைவலைகள்

அமரர் சு. வித்தியானந்தன் அவர்கள் மறைந்த நினைவு நாள் சனவரி 21. அதையொட்டியது இந்த நினைவுக்கட்டுரை. கட்டுரையை எழுதியவர் தற்போது சிட்னியில் வசித்து வரும் பேராசிரியர் பொ. பூலோகசிங்கம் அவர்கள்.

மலை ஒன்றினை முழுமையாகக் காணவேண்டுமாயின், தொலைதூரத்திலே போய் நின்று பார்க்க வேண்டும்; வரலாற்று நிகழ்ச்சியை மதிப்பிடக் காலம் செல்லவேண்டும் என்பர் சான்றோர். நான்காவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாடு யாழ்ப்பாணத்தில் 1974ஆம் ஆண்டு சனவரி மூன்றாம் தேதி முதல் ஒன்பதாம் தேதிவரை செவ்வனே கோலாகலமாக நடந்து, பத்தாம் தேதி விருந்துபசார விழா இனவெறியின் விஷமத்தனத்தினால் அவதியுற்று முடிவடைந்தது முப்பதாண்டுகளுக்கு மேலாகிவிட்டது. நான்காவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாட்டின் சூத்திரதாரி பேராசிரியர் சுப்பிரமணியம் வித்தியானந்தன் 1989ஆம் ஆண்டு சனவரி மாதம் 21ஆம் தேதி கொழும்பிலே மறைந்தார். இப்போது அம்மாநாடு பற்றியும் அந்தப் 'பார்த்தசாரதி' பற்றியும் நின்று நிதானித்துச் சிந்திப்பது உண்மை வரலாற்றிற்கு உகந்தது என்பதை இக்கால இடைவெளியில் உதிக்கப்பட்ட துணுக்குகளை அறிந்தவர் - கேட்டவர் ஏற்றுக்கொள்வர்.

1960 ஜூலை மாதம் நடைபெற்ற ஐந்தாவது பொதுத்தேர்தலிலே சிறிமா பண்டாரநாயக்காவின் ஸ்ரீலங்கா சுதந்திரக்கட்சி வெற்றிபெற்றதைத் தொடர்ந்து மீண்டும் இனவெறி அலைகள் அசுரவேகத்தோடு மோதத் தொடங்கின. வடகிழக்கில் ஒத்துழையாமை இயக்கத்தினைத் தமிழரசுக் கட்சியினர் முன்னின்று நடத்தினார்கள். அதனால் கோபமுற்ற அரசு தமிழரசுத் தலைவர்களையும் ஏனைய தமிழ்த் தலைவர்களையும் பனாகொடையிலே தடுப்புக் காவலில் வைக்க, தமிழ்ப் பிரதேசங்களிலும் ஏனைய பிரதேசங்களிலும் வாழ்ந்த தமிழருக்கு எதிராகச் சிங்கள இராணுவமும் காவற்படையினரும் கர்ண கொடூரமான செயல்களிலே ஈடுபட்டனர். சிங்கள தேசியவாதத்திற்கு இடதுசாரிகள் உறுதுணையாகினர். 1964 கடைசியிலே ஒரு வாக்கினாலே இடதுசாரி கூட்டாட்சி பாராளுமன்றத்திலே முறியடிக்கப்பட்டது.

1965 மார்ச்சு மாததிலே நடைபெற்ற ஆறாவது பொதுத்தேர்தலிலே டட்லி சேனநாயக்க தலைமையிலான ஐக்கிய தேசியக்கட்சி வெற்றிபெற்று தேசிய அரசினை அமைத்தது. டட்லி-செல்வநாயகம் உடன்படிக்கை, தமிழ் உபயோகமொழி மசோதா என்பன நம்பிக்கை அளித்தன. ஆயினும் எதிரணியிலே இருந்த முதலாளிகளுடனும் தொழிலாளர் வர்க்கக்கட்சிகளுடனும் பௌத்தத்துறவிகளுடனும் தேசிய அரசு போட்டியிட முடியவில்லை; தேசிய ஒற்றுமை எதனையும் அவர்கள் விரும்பவில்லை.

இக்காலகட்டத்திற்தான் 1964 சனவரியின் ஆரம்பத்தில் புதுதில்லியில் நடந்த 26வது அகில உலகக் கீழைத்தேயக் கல்வி ஆய்வாளர் மாநாட்டின்போதுதான் அனைத்துலகத் தமிழாராய்ச்சி மன்றம் உருவாகியது. தமிழ், திராவிட ஆய்வுகளில் ஈடுபாடுள்ளவரும் மாநாட்டிற் கலந்து கொண்டவர்களுமான இருபத்தாறு பேர், பேராசிரியர் தனிநாயக அடிகளாரும் பேராசிரியர் வ. ஐ. சுப்பிரமணியமும் விடுத்த அழைப்பினை ஏற்றுச் சனவரி ஏழாம் தேதி உத்தியோகப் பற்றற்ற முறையிலே புதுதில்லியிற் கூடி அனைத்துலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றத்தினை தோற்றுவித்தனர். அக்குழுக் கூட்டத்திலே கலந்து கொண்டவர்களிலே பேராசிரியர் தனிநாயக அடிகளார், பேராசிரியர் க. கணபதிப்பிள்ளை, பண்டிதர் க. பொ. இரத்தினம் என்போர் ஈழநாட்டினர்.

தனிநாயக அடிகளார் அப்பொழுது (1961-1970) மலேசியப் பல்கலைக்கழகத்திலே இந்தியக் கல்வியாய்வுகள் துறையிலே தலைமை வகுத்துக் கொண்டிருந்தார். அவர் ஏற்கனவே 'தமிழ் கல்ச்சர்' எனும் சஞ்சிகை மூலம் அகில உலகத்திலுமுள்ள தமிழ், திராவிட ஆர்வலரை ஒன்றுசேர்க்க முற்பட்டு ஓரளவு வெற்றியும் கண்டவர். அவர் மலேசிய அரசு தமிழ்ச் சமூகத்திற்கு அளித்த ஆதரவின் துணையோடு பிரம்மாண்டமான முறையிலே முதல் மாநாடு கோலாலம்பூரிலே 1966 ஏப்பிரல் 16-23 தேதிகளில் நடாத்தப்பட்டது.

கோலாலம்பூர் மாநாட்டிற்கு இலங்கைக் குழுவுக்குத் தலைமை வகித்துச் சென்றவர் டாக்டர் H. W. தம்பையா. அவர் அப்பொழுது இலங்கை சுப்ரீம் கோர்ட்டு நீதிபதி. பேராதனைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவராக விளங்கிய வி. செல்வநாயகம் கட்டுரை சமர்ப்பித்தபோதும் மாநாட்டிற்குச் செல்லவில்லை. கோலாலம்பூர் மாநாட்டிற்குச் சுமார் ஐம்பது இலங்கைப் பிரதிநிதிகள் சென்றிருக்கிறார்கள். இவர்களிலே சரிபாதிக்கு மேல் பார்வையாளர்கள், மாநாட்டிற்கு எவ்விதமான

ஆய்வுகளையும் சமர்ப்பிக்காதவர்கள். இது குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

1967இல் சி. என். அண்ணாத்துரை தலைமையிலான திமுக வெற்றிபெற்றுத் தமிழ் நாட்டிலே அரசாங்கம் அமைத்தது. எம். பக்தவத்சலம் முன்பு கோலாலம்பூரிலே விடுத்த அழைப்பினை ஏற்றுச் சென்னையிலே திமுக இரண்டாவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாட்டினை நடாத்த முன்வந்தது. அது 1968 ஆம் ஆண்டு சனவரி 3-10ஆம் தேதிகளிற் சென்னையிலே நடந்தது. அதேகாலத்திலே 'பூம்புகார்' பொதுமக்கள் விழாவும் முக்கியத்துவம் பெற்றது. சென்னையிலே ஆய்வரங்குகளா ஜனரஞ்சகமான அரங்குகளா சிறந்தோங்கி நின்றன என்று அறுதியிட்டுக் கூறுவது அரிது. ஆயினும் தமிழ் ஆராய்ச்சி மன்றத்தினை நிறுவியமைக்கான காரணங்களும் இலட்சியங்களும் சென்னையிலே அடிபட்டுப்போயின என்று கருதிய ஆய்வாளர் தொகை குறிப்பிடத்தக்கது.

பேராசிரியர் ஜீன் பிலியோசா பாரிசிலே மூன்றாவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாட்டினை 1970இலே நடத்தினார். முன்னைய இரு மாநாடுகளுக்கும் பாரீஸ் மாநாட்டிற்கும் பெரும் வித்தியாசம். சலசலப்பின்றி வழமை போல் நடைபெறும் கருத்தரங்கு போன்று அது அமைந்திருந்தது. இம்மாநாட்டிற்கு இலங்கைக் கிளை பேராசிரியர் சு. வித்தியானந்தன், கலாநிதி க. கைலாசபதி, ஜனாப் எஸ். எம். கமாலுதீன் எனும் மூவரையும் பிரதிநிதிகளாக அனுப்பி வைத்தது.

1972இலே நான்காவது மாநாடு இலங்கையிலே நடைபெற வேண்டியிருந்தது. சோசலிசம் கதைத்த இலங்கை முற்போகு எழுத்தாளர் சங்கம் (இ.மு.எ.ச.) ஐக்கிய முன்னணி அரசு 1970இலே தோன்றியபோது மீண்டும் தழைத்தது. அமைச்சர் செல்லையா குமாரசூரியர் தமிழ் சம்பந்தமான விடயங்களுக்கான அரசின் பிரதான ஆலோசகராக உயர்ந்தார். அவருடைய ஆலோசனை வட்டத்திலே இ.மு.எ.ச. முக்கிய இடத்திலே வகித்தது. இந்தக் கட்டத்திலே கே.சி.தங்கராசா குழுவினர் அரச ஆசிகளோடு வலம் வந்து கொண்டிருந்தவர்களை முகாமைச் சபையிலே சேர்த்துத் தமிழாராய்ச்சி மாநாட்டினை நடாத்த முடிவு கட்டினர். ஆனால் அத்திட்டம் தடம் புரண்டு போயிற்று.

1972இலே இலங்கைக் கிளையின் பொதுக்கூட்டம் பம்பலப்பிட்டி மிலாகிரிய அவெனியூவிலுள்ள 'சாந்தம்' மனையிலே கூடுவதற்கு முன்பே இரு கட்சிகள் உருவாகிவிட்டன. ஆளுங்கட்சி கொண்டுவர இருந்த புதிய யாப்பு ஆவணம் பற்றியும், அவர்கள் பதவியில் வைக்க இருந்த முகாமைக் குழுவினர் பற்றியும், அக்கட்சியினைச் சேராத வட்டங்களுக்குப் பொதுக்கூட்டத்தின் முன்பே நன்குபுலனாயின. இதனால் ஆளுங்கட்சி எதிர்பாராத அளவுக்குத் தமிழறிஞரும் தமிழபிமானிகளும் பெருந்திரளாகப் பொதுக்கூட்டத்திற்கு எழுந்தருளியிருந்தார்கள். அந்தக் கூட்டத்திலே ஆளுங்கட்சியினர் கொண்டு வந்த யாப்பாவணம் பல்வேறு திருத்தங்கள் மூலம் புதிய வடிவம் பெற்றமையும் அவர்கள் முன்வைத்த முகாமைக்குழு உறுப்பினருக்குப் பலத்த போட்டி ஏற்பட்டு அவர்கள் தோல்வியுற்றதும் அன்று முதல் தொடர்ந்துபல மாதங்களாகத் தமிழர் வட்டாரங்களிலே சிலாகித்துப் பேசப்பட்டன.

இலங்கை அனைத்துலகத் தமிழாராய்ச்சி மன்றக் கிளைக்குப் புதியதொரு முகாமைச்சபை உருவாகியது. எதேசாதிகாரத்தினை எதிர்க்க ஒற்றுமை இருந்தபோதும், புதிய முகாமைச்சபை கருத்து வேறுபாடுகளினால் ஒன்றிணைந்து நிற்கமுடியவில்லை. அரசுடன் ஒத்தூதிய இடதுசாரிகளை அநுமதிக்க இடம் வைக்கக்கூடாது என்று துணிந்தவர்களுக்கு அரசாங்கத்தின் ஏனைய அடிவருடிகளை அப்போது கவனிக்கும் யோசனை இருக்கவில்லை. அதனால் ஏற்பட்ட விளைவுகள்..!

H.W.தம்பையா 1966இலே கோலாலம்பூர் மாநாட்டிற்கு இலங்கைப் பிரதிநிதிகளுக்குத் தலைமை தாங்கிச் சென்றவர், அங்கு அவர் தமிழாராய்ச்சி மன்றத்தின் துணைத்தலவர்களில் ஒருவராக நியமனம் பெற்றவர். தம்பையா கம்யூனிஸ்டுகளின் முற்போக்கு சங்கத்தினருக்கும் வேண்டியவர். ஆயினும் அவரை இலங்கைக் கிளையின் முகாமைக்குழுவின் தலைவராகப் பிரேரித்த போது யாரும் மறுப்புத் தெரிவிக்கவில்லை. அவர் அரசாங்கத்திற்குச் சார்பாக மாநாட்டினைக் கொழும்பிலே வைக்கவேண்டும் என்று 1973 அக்டோபர் ஆரம்பம் வரை அடுத்தடுத்து நடைபெற்ற முகாமைக்குழுக் கூட்டங்களிலே வற்புறுத்திப் பலருடைய கோபத்திற்கும் ஆளாயினார். அவரைத் தலைமைப் பதவியினைத் துறக்கும்படி முகத்திற்கு முன்னே கேட்கும்படி ஆயிற்று. அவரும் 1973 இலே தமது பதவியினைத் துறந்தார். அவர் நன்கொடையாகத் தாம் வழங்கிய பணத்தைத் திருப்பித் தரும்படி கேட்டுக் கூசவைத்தார். அவருக்கு சிறிமா அரசு வெளிநாட்டுத் தானிகர் பதவி அளித்துக் கௌரவித்தது.

பேராசிரியர் சு. வித்தியானந்தன் 5.10.73இலே முகாமைக்குழுவின் தலைமைப் பொறுப்பினை ஏற்றுக் கொண்டார். மாநாடு நடத்துவதற்கு அவகாசம் மூன்று மாதம் கூட இல்லை. பாதுகாப்பமைச்சர் லக்ஷ்மண் ஜெயக்கொடியின் அழைப்பினை ஏற்றுத் தலைவரை, வி.எஸ்.ரி.யும் யாமும் அழைத்துக் கொண்டு சென்றோம். தலைவர் தனியனாகவே அமைச்சசரைச் சந்தித்தார். அமைச்சர் மூன்று அம்சங்களை முன்வைத்து அவற்றை ஏற்றுக் கொண்டால் மாநாடு வைப்பதற்குச் சகல வசதிகளும் செய்து தருவதாகக் கூறினார். அவ்வம்சங்கள்:

1. மாநாடு கொழும்பிலே நடத்த வேண்டும்; மாநாட்டினை பண்டாரநாயக்க மண்டபத்திலே எவ்விதமான சலாருமின்றி நடாத்த அமைச்சர் உறுதி தந்தார்.

2. பிரதமர் சிறிமா மாநாட்டினை ஆரம்பித்து வைக்கவேண்டும்;

3. அமைச்சர் செல்லையா குமாரசூரியர் வரவேற்புரை ஆற்றவேண்டும். மாநாட்டில் கலந்து கொள்ள இருந்தவர்களுக்கு அரசின் செலவில் தங்கும் வசதியும் உணவு வசதிகளும் முன்வைக்கப்பட்டன.

தலைவர் முதல் அம்சத்தினையே மறுத்து விட்டார். அதனால் பேச்சுகே இடமில்லாமற் போய்விட்டது. அமைச்சர் பொறுமையிழந்து 'அபேபலமு' (நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்) என்று சூள்விட்டார். அரசு ஆதரவு தராமல் இருப்பதோடு குந்தகமும் செய்யப்போகிறது என்பதைத் தெளிவாக உணர்ந்து கொண்டோம். இதனால் அசுர வேகத்தில் எல்லா ஒழுங்குகளும் நடந்தன. கடைசி நேரம் மட்டும் நடக்குமா இல்லையா என்ற தயக்கம். வெளிநாடுகளிலுள்ள இலங்கைத் தூதரகங்கள் மாநாட்டிற்கு வரவிருந்த பிரதிநிதிகளுக்கு ஆதரவு தரவில்லை; வந்தவர்கள் திருப்பி விடப்பட்டனர். அனால் தலைவர் மனதிலே தயக்கம் எதுவும் இருக்கவில்லை. மாநாட்டிற்கு அரசாதரவு இனத்துவேஷத்தின் அடிப்படையில் மறுக்கப்பட்டதென்ற கருத்து உலகிலே பரவியபோது, அதனை விரும்பாத அரசு மாநாடு ஆரம்பிப்பதற்கு முத்தினங்களுக்கு முன்பே 'விசா' வழங்கியது.

யாழ்ப்பாணம் தமிழினத்தின் மானத்தைக் காப்பாற்றியது. தலைவர் தலைமையுரையிலே, மாநாடு யாழ்ப்பாணத்திலே நடக்க வேண்டியதற்கான காரணங்களையும், அதன் தகுதியையும் எடுத்துக் காட்டினார். அதனை யாழ்மக்கள் உறுதிப்படுத்தினார்கள். தென்னங்குருத்தோலை, மாவிலைத் தோரணங்களால் அலங்கரிப்பது போதாதென்று தென்னை, பனை மரங்களால் வீதிகளில் எல்லாம் அலங்கரித்த ஆர்வம் மிக்க மக்கள் அவர்கள்.

தமிழ் மக்களின் பெருமிதத்தினைக் கண்ட இனவெறி கொண்ட கூட்டம் ஆத்திரம் அடைந்தது. மாநாடும் கருத்தரங்குகளும் நிறைவேறிய மறுநாள், சனவரி 10ஆம் தேதி, பரிசளிப்பும் விருந்தினருக்கு உபசாரமும் செய்ய ஒழுங்கான பொதுக்கூட்டத்திலே 'பஞ்சாப்படுகொலை' நடத்திக் காட்டினர். பேராசிரியர் ஏ. ஜே. வில்சன் சனவரி 10ஆம் தேதி நிகழ்ச்சிகள் பற்றிக் கூறுமிடத்து,

"தமிழ்த்தேசிய தீவிரவாதத்தினை மீளமுடியாத எல்லைக்கு இட்டுச் சென்றது 1974 சனவரி பத்தாம்தேதிச் சோகம். அப்பொழுது இளைஞர் உரையாடுவதும் உடன்படிக்கையும் சிங்கள பௌத்தமயமான அரசுகளுடன் வீண் என்றும் பயன் எதுவும் அளிக்கப்போவதில்லை என்றும் உணர்ந்தார்கள்." என்பர் (S.J.V. Chelvanayagam and the Crisis of Sri Lankan Nationalism, 1947-1977).

பேராசிரியர் வித்தியானந்தனுடைய முடிவு திடீரென 1989 சனவரி 21இலே வந்தது. யாழ்ப்பாணவளாகத் தலைவராகவும் தொடர்ந்து மும்முறை யாழ் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகவும் செயலாற்றிய பேராசிரியருக்கு நான்காம் முறையும் அப்பதவி அளிக்கப்பட்டபோது, அவரை அவதிக்குள்ளாக்கியதால் அவர் கொழும்பிலே தங்கத் தொடங்கினார். யாழ்ப்பாணத்திலே மாபெரும் மாநாட்டினைக் கோலாகலமான விழாவாக நடாத்தித் தமிழ்ச் சமூகத்தின் பெருமதிப்பினைப் பெற்றிருந்த வித்தியானந்தன் தமக்கு யாழ்ப்பாணத்தில் நடந்த அலங்கோலத்தினை எதிர்பார்க்கவே இல்லை. அக்கடைசி நாட்கள் இன்றும் கண்முன்னே தோன்றுகின்றன. அந்த ஆதங்கத்தினை அவருடைய இரங்கற் கூட்டங்களிலே கொழும்பிலே பேசியும் பத்திரிகைகளில் இரங்கல் கட்டுரைகள் அப்போது எழுதியும் ஆற்ற முயன்றோம்.http://srinoolakam.blogspot.com/2006/01/blog-post_113842778311498982.html தமிழ் வலையின் மினி-நூலகம்

## வாசகர் குரல்

அருமை...சிறப்பு ஐயாஇந்த மாதம் மறைமலையடிகள் பிறந்தநாள் விழாவை நாங்கள் மன்றத்தின் சார்பில் நடத்தவுள்ளோம்.இந்த நேரத்தில் மன்றத்தில் பகிர்ந்து மகிழத்தக்க இதழிது. **பாவரசு வதிலை பிரதாபன்**

*தலைவர் - மராத்திய மாநிலத் தமிழ் எழுத்தாளர் மன்றம் மும்பை*

மறைமலையடிகளாரின் தமிழியக்கத்திற்கு கொள்கை விளக்க நூல் தந்த புரட்சிக் கவிஞரும், மற்ற பல தமிழ் பெரியவர்களும் கண்ட முழுமை பெற்ற தமிழ் மறுமலர்ச்சி இயக்கம் தொடர்ச்சியாக ஆட்சி மன்றிலிலும், அதிகார மன்றிலிலும், வழக்காற்று மற்றும் மக்கள் வாழ்வியலிலும் வெற்றி பெற ஏங்கும் கோடான கோடி தமிழ் இதயங்களில் ஒருவராக...... நல்லதொரு விழிப்புணர்வுக் கட்டுரைக்குக் கருத்துக் கூறலாக பேராசிரியர் திரு. மறைமலை இலக்குவனார் கட்டுரை அமைந்தது.

*திருமதி.பாலா இளங்கோ,புது தில்லி.*



# குறள்நெறி

மின்னிதழ்:66 “குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்” தி.வ.ஆ.2054 ஆடி-31- ஆகத்து-16-பொ.ஆ.-2023

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்










தகைசால் தமிழர் விருதுக்குப் பெருமை!

வழங்கியவராலும் பெற்றவராலும் தமிழ்நாட்டுக்குப் பெருமை.

வாழ்த்தி வணங்கி மகிழ்வது நமக்குப் பெருமை!












சென்னை தலைமை செயலகத்தில் தமிழ் வளர்ச்சித்துறை சார்பில் நேற்று நடந்த 2021ம் ஆண்டிற்கான தமிழ்ச்செம்மல் விருது வழங்கும் விழாவில் பேராசிரியர் வினோதினிக்கு தமிழ்செம்மல் விருதினை முதல்வர் ஸ்டாலின் வழங்கினார்.

## தமிழ்ச் செம்மல்  திருமதி செ. வினோதினி

திருமதி செ. வினோதினி. தமிழ்நாட்டில் உள்ள பெரம்பலூர் மாவட்டத்தில் வசித்து வருகிறார். இவர் சீனிவாசன் கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் ஆங்கிலத் துறையில் உதவிப் பேராசிரியராக இருக்கிறார். இவர் பிறந்த ஊர் அரியலூர் மாவட்டத்திலுள்ள ஜெயங்கொண்டம் நகராட்சியில் இருக்கின்ற காட்டாத்தூர் என்கின்ற சிறிய கிராமம் ஆகும்.
இவரின் தந்தையின் பெயர் செல்வம். தாயின் பெயர் ருக்மணி. இவரின் தந்தை ஒரு காவல்துறை அதிகாரி. இவரின் தாய் செவிலியர்.

இவரின் தந்தை காவல்துறை அதிகாரி என்பதால் வினோதினி தனது பள்ளிப்படிப்பை திருச்சி ,குளித்தலை, கரூர், முசிறி என்று பல மாவட்டங்களில் படிக்க நேர்ந்தது.
பல்வேறு இடங்களுக்குச் சென்று கல்வி பயின்றதன் விளைவாகப் பல விதமான அனுபவங்கள் இவருடைய வாழ்வில் கிடைத்தன.. இவருக்குச் சிறு வயதிலிருந்தே விளையாட்டு, பேச்சு, கவிதை, நாடகம், நடிப்பு என்று பல துறைகளில் விருப்பம் அதிகம்.
கையுந்து பந்து விளையாட்டில் மாநில வீராங்கனை, கிரிக்கெட் விளையாட்டில் மாவட்ட வீராங்கனை.
தனது பள்ளிப் படிப்பிலும், கல்லூரி ப்படிப்பிலும் பல மாவட்டங்களுக்குச் சென்று பலவிதமான போட்டிகளில் கலந்து கொண்டதன் பயனாக, பல விதமான அனுபவங்களை இவர் பெற்றார். தமிழின் மீது இருக்கின்ற அளவற்ற காதலின் காரணமாக பல தமிழ் அமைப்புகளின் பொறுப்பாளராக இருந்து, பலவிதமான தமிழ்ப் பணிகளையும், சமூகப் பணிகளையும் ஆற்றி வருகிறார்.
பல கல்லூரிகள் மற்றும் பள்ளிகளில் சிறப்பு விருந்தினராக அழைக்கப்பட்டுச் சிறப்பு உரை ஆற்றி உள்ளார்.
மேலும் "அகழ் " என்ற கலை இலக்கிய அறக்கட்டளையை உருவாக்கி, புத்தகங்கள் வெளியிடுதல், இதழ்கள் வெளியிடுதல் மற்றும் பலவிதமான போட்டிகளை மாணவர்களுக்கும், பொதுமக்களுக்கும் நடத்துதல் என்று பல சேவைகளை இவர் செய்து வருகிறார்.
இவரின் கவிதை ஆற்றலைப் பாராட்டி இவருக்கு "காந்தியடிகள் விருது" " நா. முத்துக்குமார் விருது" மற்றும் "சமூக கவி சிற்பி விருது" போன்ற விருதுகள் வழங்கப்பட்டது. இவரின் வாழ்க்கைக் கட்டுரை தன்னம்பிக்கை கட்டுரைகளாக பலவிதமான இதழ்களில் வெளிவந்துள்ளது.
இவரின் சீரிய சமூகப் பணிகளையும், தமிழ்ப் பணிகளையும் பாராட்டிப் பெரம்பலூர் மாவட்ட ஆட்சித் தலைவர் அவர்களால் பெரம்பலூரின் சாதனைப்பெண் மற்றும் தமிழ் ஆர்வலர் என்ற விருது வழங்கி கௌரவிக்கப்பட்டார்.
மேலும் இவரின் அமைப்பு 1330 திருக்குறளுக்கு, 1330 கதைகள், 133 நபர்களை வைத்து 133 நிமிடங்களில் உருவாக்கி உலக சாதனையையும் படைத்துள்ளது. மேலும் அகழ் அறக்கட்டளையின் மூலம், 80திற்கும் மேற்பட்ட எழுத்தாளர்களை வைத்து, மூன்று புத்தகங்களை உருவாக்கியுள்ளார்.
"மறுக்கப்பட்ட காலத்தின் கதை"  என்ற கொரோனா காலச் சூழ்நிலையைச் சொல்லும் புத்தகம், "ஒரு கதை சொல்லட்டுமா? " என்ற குழந்தைகள் இலக்கியம், "கூண்டு பறவை" என்ற மனிதர்களின் உணர்வுகளை சொல்கின்ற புத்தகங்கள் என்று மூன்று புத்தகங்களை இவருடைய அமைப்பு உருவாக்கியிருக்கிறது.
இவர், "கார்மேகச் சாரல்கள்" என்று தமிழிலும், " Drizzles from the black cloud " என்று ஆங்கிலத்திலும் தன்னம்பிக்கை கட்டுரை நூலை வெளியிட்டிருக்கிறார்.
" The portrayal of society in JUMBHA LAHIRI'S " THE NAME SAKE" என்ற ஆங்கில இலக்கிய ஆய்வு நூலை வெளியிட்டுள்ளார்.
" The Rainbow of Thoughts" என்ற ஆங்கிலக் கவிதைத்  தொகுப்பு நூலில் " " Black " என்ற கவிதையை படைத்துள்ளார்.
" பூர்வீகம்" என்ற தொகுப்பு நூலுக்கு, தன் சொந்த ஊரான, அரியலூரில் உள்ள, காட்டாத்தூர் என்னும் கிராமத்தைப் பற்றி கவிதை படைத்துள்ளார்.
அகில இந்திய வானொலியில், இரண்டு முறை, சிறப்பு விருந்தினராக அழைக்கப்பட்டு, சிறப்புரையும், " இரவு, இசை, இனிமை" என்ற வானொலி நிகழ்ச்சியை தொகுத்தும் வழங்கியுள்ளார்.
இப்பொழுது 1330 குறளுக்கும் 1330 கதைகள் உருவாக்குகின்ற  அரும்பணியை ஆற்றி வருகிறார். 133 அதிகாரங்களில் உள்ள திருக்குறளின் வாழ்வியல் கருத்துக்களை சொல்லும் கதைகளைக் கொண்ட புத்தகங்களை இவர் வெளியிட்டுள்ளார்.
1330 கதைகளும் அடங்கிய, திருக்குறளுக்கான உலகின் மிகப்பெரும் புத்தகத்தை, 7 அடி புத்தகமாக உருவாக்கியிருக்கிறார்
இவரின் தமிழ் சார்ந்த சமூக செயல்பாடுகளைப் பாராட்டித் தமிழ்நாடு அரசு இவருக்கு 2021 ம் ஆண்டிற்கான தமிழ் செம்மல் விருதினை வழங்கிப் பாராட்டியுள்ளது.

1330 குறள்கள், 1330 கதைகள், 133 எழுத்தாளர்கள், 133 புத்தகங்கள்.

திருக்குறளில் ஒரு இமாலயச் சாதனை.

2021 திசம்பர்த் திங்களில் ´அகழ் கலை இலக்கிய அறக்கட்டளை´ திருக்குறளில் ஒரு உலக ச் சாதனை முயற்சியைச் செய்ய வேண்டும் என்று தீர்மானித்தது. திருக்குறளில் ஒருவர் ஒரு அதிகாரத்தை எடுத்துக் கொண்டு, ஒவ்வொரு குறளுக்கும் ஒரு கதை எழுதவேண்டும், ஒருவர் பத்து கதைகள் வீதம், 133 நபர்கள் 1330 கதைகளை த் திருக்குறள் விளக்கமாக எழுதி அதில் வரலாற்றுச் சாதனை படைக்க வேண்டும் என்று முடிவெடுத்தோம்.

இதனைப் பற்றிய அறிவிப்பை, நாங்கள் அனைத்து எழுத்தாளர்களுக்கும், பேச்சாளர்களுக்கும், இலக்கிய ஆர்வலர்களுக்கும், இணைய வழி மூலமாகக் கொடுத்தோம். இதைப்பற்றி ஆல் இந்தியா புக் ஆப் ரெக்கார்ட்ஸ் பாண்டிச்சேரிக்கு தெரிவித்தோம். அவர்களும் தாராளமாகச் செய்யுங்கள் என்று சொன்னார்கள்.

பிறகு, நாங்கள் இணைய வழியின் மூலமாக, அனைத்து தகவல்களையும் அனைவருக்கும் அனுப்பினோம். பலரும் ஆர்வமாக வந்து கலந்து கொண்டார்கள். ஒவ்வொரு அதிகாரமாக எடுத்து, அதற்கானக் கதைகளை அவர்கள் எழுதத் துவங்கினார்கள். கிட்டத்தட்ட 110 அதிகாரங்கள் அனைவராலும் எடுக்கப்பட்டுவிட்டது. மீதி இருக்கின்ற அதிகாரங்களை மட்டும் யாரும் எடுக்க முன்வரவில்லை. ஏனென்றால், அவை இன்பத்துப்பாலில் இருந்த ஒரே ஒரு காரணம்தான். அதனால், வயதில் மூத்த பேராசிரியர்கள், சான்றோர்கள் போன்றோர்களைத் தேடிச் சென்றோம். அவர்கள் மிக ஆர்வமாக அந்த அதிகாரங்களை எடுத்துக் கதைகளை எழுதினார்கள். உண்மையில் நாங்கள் 133 அன்பர்களைத் திரட்டுவதற்காகச் செய்த பணியை ஓரிரு வார்த்தைகளில் சொல்லிவிட முடியாது.

முதலில் ஒரு சிலர் பெயர் கொடுப்பார்கள். பிறகு அதோடு நின்று விடுவார்கள். அதற்குப்பிறகு நடக்கின்ற எந்தச் செயல்பாடுகளிலும் கலந்து கொள்ள மாட்டார்கள். பிறகு, அவர்களுக்காக நாங்கள் மீண்டும் மற்றவர்களைத் தேர்ந்தெடுத்தோம். அவர்களில் ஒரு சிலர் திடீரென்று எந்தத் தகவலும் கொடுக்காமல் சென்று விடுவார்கள். இவ்வாறு மாற்றி மாற்றி 133 நபர்களை, தேடித் தேடி நாங்கள் சென்றுகொண்டே இருந்தோம்.

இந்த நிகழ்வு ஜனவரி 15, 2022, திருவள்ளுவர் தினம் அன்று இணைய வழியிலேயே நடைபெற்றது. அனைவரும் கூகுள் செயலி மூலமாக ஒன்றிணைந்து, திருக்குறளுக்கான கதைகளைக் கையால் எழுதினர். 133 நிமிடங்களில், அனைவராலும் அந்தக் கதைகள் எழுதப்பட்டது. அனைத்து கதைகளும் கையால் எழுதப்பட்டு, அதற்காக ஒரு மின்னஞ்சல் உருவாக்கப்பட்டது. அந்த மின்னஞ்சலுக்கு அனைவரும் அனுப்பினார்கள்.

’ஆல் இந்தியா புக் ஆப் ரெக்கார்ட்ஸ்´ எங்களுடைய இந்த செயல்பாட்டை ஏற்றுக்கொண்டு, எங்களுக்கு உலகச் சாதனைச் சான்றிதழ்களை வழங்கினார்கள். ஒவ்வொரு எழுத்தாளர்களுக்கும் அவர்களுடைய உலகச்சாதனை சான்றிதழ்களை வழங்கினார்கள். அவ்வாறு கையால் எழுதப்பட்ட கதைகளைப் புத்தகமாகும் பணி துவங்கியது.

எழுத்தாளர்களையே நாங்கள் அதனைத் தட்டச்சு செய்து அனுப்பச் சொன்னோம். பலரும் ஆர்வமாகத் தங்களுடைய கதைகளை அனுப்பினார்கள். நிகழ்வு அன்று ஒரு பக்கக் கதைகள் தான் அனைவராலும் எழுதப்பட்டது. ஒரு குறளுக்கு ஒரு பக்கம் என்று கதைகள் எழுதப்பட்டது. ஆனால், புத்தகமாக்கும் பொழுது, கொஞ்சம் அந்தக் கதைகள் விரிவாக இருக்க வேண்டும் என்று அறிவித்தோம். அதனால் பலரும் இன்னும் சிறப்பாக அந்தக் கதைகளை மாற்றி வடிவமைத்து எங்களுக்குக் கொடுத்தார்கள். ஒரு 2 மாத காலம், நாங்கள் அதற்கான பணிகளைச் செய்து வந்தோம்.
இந்தப் புத்தக உருவாக்கும் பணி அதிக ச் செலவு மிக்கதாக இருந்தது. அதனை நாங்கள் 133 பேரும் சேர்ந்து பகிர்ந்து கொண்டோம். அவ ரவர்களுடைய புத்தகத்திற்குப் பதிப்புச் செலவு எவ்வளவு ஆகுமோ , அதை அந்த எழுத்தாளர்களே ஏற்றுக் கொண்டார்கள். அவர்கள் தொகை அனுப்ப அனுப்ப, நாங்கள் ஒவ்வொரு அதிகாரத்திலும் மூன்றே மூன்று புத்தகங்களை மட்டும் பதிப்பு ச் செய்தோம். ஏனென்றால் ஒரு புத்தகம் உருவாக்கப்படுகிறது என்றால் , அதை அந்த எழுத்தாளர் ஒருமுறை பார்க்க வேண்டும். அதற்கு பிறகு தான் அதிக புத்தகங்கள் போட இயலும். அதனால் அதிகமாக ப் போட வேண்டாம் , மூன்று மட்டும் போதும் ஒன்று உங்களுக்கு , மற்றொன்று எங்களுக்கு , மற்றொன்று சான்றுக்காக என்று சொல்லி மூன்றே மூன்று மட்டும் பதிப்புச் செய்தோம். இவ்வாறு 133 புத்தகங்கள் உருவாக்கப்பட்டன.
இந்தப் புத்தகம் உருவாக்கும் பணியிலும், முப்பத்தி எட்டு பேர் கலந்து கொள்ளவில்லை. மீண்டும் நாங்கள் தேடிச் சென்றோம். "ஒரு சில அதிகாரங்களுக்குக் கதைகள் எழுதவேண்டும். ஆர்வம் இருக்கிறவர்கள் வரலாம்" என்று நாங்கள் அறிவிப்பினை வெளியிட, பலரும் ஆர்வமாக வந்தார்கள். எழுதத் துவங்கினார்கள். அதில் ஒரு பதினைந்து எழுத்தாளர்கள் கிடைத்தார்கள். மீதி அதிகாரங்களுக்கான எழுத்தாளர்களை மீண்டும் மீண்டும் தேடிச் சென்றோம். அறிவிப்புகளைக் கொடுத்தோம்.
பலரும், கதைகளை இன்று தருகிறோம், நாளை தருகிறோம் என்று நேரத்தை இழுத்துக் கொண்டே சென்றார்கள். அது மற்ற எழுத்தாளர்களை அதிகமாகப் பாதித்தது. அதனால், நாங்கள் மீண்டும் மாணவர்களை நோக்கிச் சென்றோம். உண்மையில் மாணவர்கள் மிக மகிழ்ச்சியாக அனைத்து அதிகாரத்தையும் எடுத்துக் கொண்டு எழுதினார்கள். "எங்களுக்கு முன்பே தெரிந்திருந்தால், நிச்சயம் நாங்கள் இதில் கலந்துகொண்டு எப்பவோ எழுதி இருப்போம்" என்று சொன்னார்கள். பிறகு நாங்கள் அவர்களிடம், "இறுதி நேரத்தில் உங்களுக்குக் கிடைத்ததால், நீங்கள் நிகழ்வுக்கு வரும்பொழுது இதற்கான கதைகளை எடுத்து வாருங்கள்.

மேடையில் அறிமுகப்படுத்தலாம்" என்றுச் சொன்னோம். அவர்களும் சரி என்று கதைகளைக் கையெழுத்துப் படியாக்க் கொண்டுவந்தார்கள்.

இவ்வாறு பல கட்டங்களைச் சந்தித்துத்தான் 133 புத்தகங்கள் முதலில் அறிமுகப்படுத்தப்பட்டன. இதில் இந்த 133 புத்தகங்களையும், 133 எழுத்தாளர்களையும் ஒருங்கிணைப்பது, எங்களுக்குப் பெரிய அறைகூவலாக இருந்தது. ஏனென்றால் சிறந்த ஆசிரியர்கள், எழுத்தாளர்கள், ஆராய்ச்சியாளர்கள் போன்றோரிலிருந்து, இல்லத்தரசிகள், பள்ளி மாணவிகள் வரை பலர் இந்த 133 எழுத்தாளர்களில் இருக்கிறார்கள்.

ஒவ்வொருவர்களுக்கும் ஏற்றவாறு அவர்கள் ஏற்றுக் கொள்ளும் வகையில், அவர்களிடம் பேசி அவர்களை ஒருங்கிணைப்புச் செய்தது, எங்களுக்கு பெரும் பொறுப்பாக இருந்தது. ஆனால், பலரும் நாங்கள் என்ன சொல்கிறோமோ அதனைச் செய்தார்கள். அதனாலேயே இன்று இந்த நிகழ்ச்சி, இந்தச் செயல்பாடு ஒரு வெற்றிமிக்க செயல்பாடாக இருக்கிறது.

ஒரு சிலர் வேண்டும் என்று பல சிக்கல்களை ஏற்படுத்தினார்கள். இந்தச் செயல்பாடு சிறப்பான செயல்பாடாக இருக்கிறது என்று, எங்கள் எழுத்தாளர்களை அவர்கள் பக்கம் இழுக்கும் செயல்களையும் பலரும் மேற்கொண்டார்கள். நாங்கள் மிகவும் கண்ணும் கருத்துமாக அந்தச் செயல்பாடுகளில் கவனம் கொண்டோம். எங்கள் எழுத்தாளர்களிடமும் அடிக்கடி சொல்லிக் கொண்டே இருந்தோம் கவனமாக இருங்கள் என்று. சந்தித்த இன்னல்களை வைத்து ஒரு புத்தகமே போடலாம். அத்தனையை சந்தித்தோம். இவ்வாறு பல கட்டங்களைத் தாண்டி வந்தது தான், இந்த 1330 கதைகள்.

இந்த 133 புத்தகங்களை இரண்டே மாதங்களில் உருவாக்கினோம். இரவு பகல் தூங்கவில்லை. வேறு எந்த நினைப்பும் இருந்ததில்லை. திருக்குறள் 133 அதிகாரம் 133 புத்தகங்களை 133 எழுத்தாளர்கள் இந்த எண்ணம் மட்டுமே இந்த இரண்டு மாதமும் இருந்தது. வேறு எந்த ஒரு செயல்பாட்டையும் எங்களால் செய்ய முடியவில்லை. ஏனென்றால் எங்களை நம்பி 133 எழுத்தாளர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கான இந்தப் புத்தகங்களை மிகச் சிறப்பாக உருவாக்கிக் கொடுக்க வேண்டும். அந்தக் கதைகளைச் சிறந்த கதைகளாக உருவாக்க வேண்டும் என்று இரவு பகல் பார்க்காமல், வேறு எதிலும் கவனம் செலுத்தாமல், இந்தப் புத்தகத்துக்காக மட்டுமே நாங்கள் எங்களுடைய நாள்களைச் செலவு செய்தோம். அதன் விளைவாக இப்பொழுது அருமையான திருக்குறளுக்கான 1330 கதைகள் தயாராக இருக்கிறது. 09 .07.2022 அன்று இந்தக் கதைகள் அனைத்தும் அறிமுகம் செய்யப்பட்டது. அந்த நிகழ்வின் பொழுது 133 எழுத்தாளர்களும், அவர்களின் குடும்பத்தோடு வந்து கலந்து கொண்டனர். தங்கள் புத்தகங்களைப் பெற்றுக் கொண்டு வீடு திரும்பினர். அதற்கு பிறகு அனைவரும் அவர்களுடைய புத்தகத்தைப் பார்த்த பிறகு, பல மாற்றங்களைச் செய்ய விரும்பினார்கள். இன்னும் கதைகளைப் பெரிது படுத்துதல், அதில் இருக்கும் பிழைகளை நீக்குதல் என்று அடுத்த செயல்பாடு தொடங்கியது. பலரும் எங்களுக்குச் சரியாக பிழை திருத்தம் செய்ய இயலாது, தெரியாது என்று சொன்னார்கள்.

நாம் கதைகளை உருவாக்குவதை விட, அதனைப் பிழையில்லாக் கதைகளாக--குறளின் பொருளை, எளிமையாக ,சரியாக விளக்குகின்ற கதைகளாக-- உருவாக்க வேண்டும். ஆதலால் அதற்கேற்றாற் போல் செயல்பட வேண்டும் என்று தீர்மானித்த பொழுது, இதற்கான பிழைகளை யாராவது திருத்தித் தர மாட்டார்களா என்று எண்ணத்தோடு நாங்கள் ஒரு தேடலில் இறங்கிய பொழுதுதான், பெரம்பலூரில், தமிழக அரசின் தூயத் தமிழ்ப் பற்றாளர் விருது பெற்ற விளவை செம்பியன் ஐயா அவர்கள், 1330 கதைகளையும் பிழை திருத்தம் செய்யும் பெரும் பணியினை மேற்கொண்டார். எங்கள் அனைவருக்கும் பெரும் மகிழ்ச்சியாக இருந்தது. ஒற்றை ஆளாக அனைத்துக் கதைகளையும் படித்து, அனைத்துப் பிழைகளையும் சரி செய்து கொடுத்த அவருடைய பணியை ஓரிரு வார்த்தைகளில் விவரித்துவிட முடியாது. ஐயா அவர்களுக்கு நன்றி என்ற ஒற்றை வார்த்தை போதாது. ஒரு சிறு பிழை கூட இல்லாமல், ஒற்றுப்பிழை, வாக்கியப் பிழை, இலக்கணப் பிழை என்று அனைத்தும் மாற்றப்பட்டு, அவை இன்னும் சிறந்த கதைகளாக உருவாக்கும் பணி துவங்கியது.

இந்தப் பணி கிட்டத்தட்ட ஓராண்டு நடைபெற்றது. இதிலும் எழுத்தாளர்கள் பலர் தொடரவில்லை. அதற்குக் காரணம் "எங்களுக்கு இதற்கு மேல் கதைகள் எழுத வரவில்லை. நாங்கள் எழுதுவதை விட. சிறப்பானவர்கள் எழுதினால், கதைகள் சிறப்பாக இருக்கும். குறளுக்கும் பெருமை சேர்த்தது போல் இருக்கும்" என்று அவர்களாகவே விலகி விட்டார்கள். மற்றொன்று, நாங்கள் கூறிய மாற்றங்களை ஒரு சிலர் ஏற்றுக் கொள்ளவில்லை. இப்படித்தான் எழுதுவோம் என்றார்கள். ஆனால், அந்த கதைகள் குறளுக்கு ஏற்றாற் போல் இல்லாததால், அவர்களும் விலகி விட்டனர். ஒரு சிலர், குடும்பச் சூழல், பணிச் சூழல், காரணமாக தொடர முடியாமல் சென்றது.

ஒரு 35 எழுத்தாளர்கள் எங்களுக்கு மீண்டும் தேவைப்பட்டனர். அதனால் மீண்டும் ஒரு அறிவிப்பு கொடுத்தோம். அந்த அறிவிப்பில் எங்களுக்கு மிகச் சிறந்த எழுத்தாளர்கள் கிடைத்தார்கள். அவர்களைக் கொண்டு மீண்டும் புதிதாகக் கதைகள் எழுதப்பட்டு, இப்பொழுது இந்தச் செயல்பாட்டில் அந்தக் கதைகளும் ஈடுபடுத்தப்பட்டுள்ளது. 133 எழுத்தாளர்களைத் தேடும் எங்கள் பணியில் நாங்கள் சந்தித்தது கிட்டத்தட்ட 500க்கும் மேற்பட்டவர்கள். அனைவரும் வந்தனர், சென்றனர். ஒரு சிலர் மட்டுமே நிலை பெற்றனர். எங்களிடமிருந்து விடை பெற்றுச் சென்ற எழுத்தாளர்களுக்கு நாங்கள் சொல்ல விரும்புவதெல்லாம், "கவலை கொள்ள வேண்டாம். மீண்டும் சிறப்பான செயல்பாடுகளைச் செய்யும் பொழுது உங்களுக்கு அறிவிப்போம்" என்பது தான். பல கட்டங்களை, பல திருத்தங்களைத் தாண்டி, இந்த நிமிடம் வரை இந்தச் செயல்பாட்டில் நிலைத்து நிற்கும் 133 எழுத்தாளர்களை, சாதாரண வார்த்தையில் நாம் பாராட்டி விட முடியாது.

எம்மால் முடிந்த ஒரு சிறு பணியையாவது திருக்குறளுக்காகச் செய்ய வேண்டும் என்ற ஒற்றை நோக்கோடு, இந்தப் பயணத்தில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் எங்கள் எழுத்தாளர்களுக்கு, மனம் நிறைந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம். இந்தச் செயல்பாட்டில் ஈடுபட்டு இருப்பவர்கள், சிறு குழந்தைகள் முதல், முதலாக எழுதுகோலை எடுத்து எழுதியவர்களில் இருந்து, தங்களுடைய படைப்புகளைப் பாடப் புத்தகத்தில் கொண்டுள்ள சான்றோர்கள் வரை, இல்லத்தரசிகள், இளைஞர்கள் என்று பலதரப்பட்டவர்களாக இருக்கிறார்கள்.

இந்தச் செயல்பாட்டில் குழந்தைகளும் ஈடுபடுத்தப்பட்டனர். பெரியோர்களாலேயே கதைகள் எழுத முடியாத போது, திருக்குறளுக்குப் பொருத்தமாக எழுதத் தடுமாறும் போது, எப்படிக் குழந்தைகளால் எழுத முடியும்? அதனால் முதலில் அவர்களுக்குக் குறளையும், பொருளையும் படிக்கும் பயிற்சி வழங்கப்பட்டது. அதற்குப் பிறகு கதைகள் உருவாக்க வேண்டிய சூழல் விவரித்து சொல்லப்பட்டது. அந்தச் சூழலுக்கு ஏற்ப அழகாகக் குழந்தைகள் கதைகளைச் சொன்னார்கள். ஆனால் குறளின் பொருளுக்கு ஏற்ற வகையில் அவர்களுக்கு முடிக்கத் தெரியவில்லை. ஒரு இரண்டு கதைகளுக்கு, எவ்வாறு முடிக்க வேண்டும் என்று சொல்லப்பட்டது. அதற்கு பிறகு குழந்தைகள் மிகச் சிறப்பாகக் கதைகளைச் சொன்னார்கள். அவர்கள் எழுத்துப் பயிற்சியை முழுமையாக அடையாத குழந்தைகள் என்பதால், அவர்கள் செல்லச் செல்ல, அவர்களின் பெற்றோர்கள் மற்றும் உறவினர்களின் மூலமாக எழுதப்பட்டது. அவர்கள் சொன்னக் கதைகள் புத்தகமாக்கப்பட்டதைப் பார்த்து, குழந்தைகள் மகிழ்ந்ததைப் பார்த்து, பெரு மகிழ்ச்சி கொள்கிறது அகழ் குழுமம்.

ஒவ்வொருவரும் அவர்கள் சூழலுக்கு ஏற்ப தங்கள் கதைகளைப் படைத்து இருக்கிறார்கள். யாருடைய கதை போக்கிலும் நாங்கள் கை வைக்கவில்லை. ஏனென்றால் அது அவர்களின் திறன். குறளுக்கேற்றாற் போல், அந்தக் கதைகள் இல்லை என்றால் மட்டும், அவை மீண்டும் திருத்தப்பட்டு, மாற்றப்பட்டு, இங்குச் சேர்க்கப்பட்டுள்ளது. இவ்வாறு பல கட்டங்களைத் தாண்டி வந்தது தான், இந்தக் கதைகள்.

இந்த நொடி வரை என் கரம் பிடித்து, எனக்குத் துணை நின்று, இந்தச் செயல்பாடு சிறப்பாக நடைபெறக் காரணமாக இருந்த 133 எழுத்தாளர்களுக்கும், இந்தக் கடினமான பணியை என்னோடு சேர்ந்து மேற்கொண்ட, எங்கள் அகழ் குழு உறுப்பினர்களுக்கும், மனம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தக் கதைகள் அனைத்தும் மாற்றங்களுக்கு உட்பட்டவை. ஏதேனும், பிழைகளைத் தவற விட்டிருந்தாலோ, இல்லையென்றால் குறளுக்கு ஏற்றாற் போல் கதைகள் இல்லை என்றாலும், எதுவாக இருந்தாலும் எங்களிடம் தெரிவியுங்கள். உறுதியாக நாங்கள் அதைக் கருத்தில் கொண்டு, பணி செய்வோம். எங்களுடைய ஒரே நோக்கம், திருக்குறளுக்குச் சிறந்த கதைகளைக் கொடுப்பது மட்டுமே. அதற்காக எந்தப் பணிகளைச் செய்வதற்கும் நாங்கள் ஆயத்தமாக இருக்கிறோம்.



# வள்ளுவரும் (இ)லாவோட்சுவும்
# [திருக்குறளும் தாவோவும்]
# ---தீயவன் டேவிட்




திருவள்ளுவர் தமிழ்நாட்டைச் சார்ந்தவர். 2500 ஆண்டுகளுக்குமுன் பொ.ஆ.முதல் நூற்றாண்டில் வாழ்ந்ததாக நம்பப்படுகிறது. அவர் எழுதிய நூல் "திருக்குறள்".
(இ)லாவோட்சு : சீனாவைச் சார்ந்தவர். 2500 ஆண்டுகளுக்குமுன் பொ.ஆ.முதல் நூற்றாண்டில் வாழ்ந்ததாக நம்பப்படுகிறது. அவர் எழுதிய நூல் "தாவோ தே சிங்" (Tao Te Ching). தாவோயிசம் எனும் மதத்தின் அடிப்படை நூல் இதுவே.

(இ)லாவோட்சு எழுதிய தாவோ தே சிங் -இல் எளிமையான வாழ்க்கை, உயிர்களின் மூலம், பற்றின்மை பற்றியும் போர், அதிகாரம், தண்டனை, ஆயுதம் ஆகியவற்றிற்கு எதிரான கருத்துகளும் காணப்படும். மொத்தம் 81 உரைப்பாக்களை கொண்ட சிறிய நூல். திருக்குறளோ தமிழில் கிடைக்கபெற்ற நூல்களில் வாழ்க்கைக்குப் பயனுள்ள, இல்வாழ்க்கை முதல் ஞானத்தை நோக்கிய தவம், துறவு வரை மூன்று பகுதிகளாக (அறம்,பொருள்,இன்பம்) ஒவ்வொரு குறளும் இரண்டு அடிக்குள் மொத்தம் 1330 குறள்கள் அடங்கிய பழமையான சிறப்புமிக்க நூலாக விளங்குகிறது.

திருவள்ளுவரும், (இ)லாவோட்சு'வும் மிகச்சிறந்த கவிஞர்கள், எழுத்தாளர்கள், தத்துவவாதிகள் மட்டுமல்ல இருவரும் தலைசிறந்த மெய்யியலாளர்கள், ஞானிகள். இவர்கள் ஞானத்தின் வெளிப்பாடே இந்த நூல்கள், ஞானமடைந்தவர்களின் சொற்களே இந்த நூல்கள். வெவ்வேறு நாடு வெவ்வேறு மொழி என்றபோதிலும் இவற்றிலும் சில ஒற்றுமைகள், ஒத்த கருத்துக்கள் காணப்படுகிறது. அவற்றை ஒப்பிட்டு விளக்கத்துடன் ஒன்றன்பின் ஒன்றாக பார்ப்போம்.

தாவோ தே சிங் - உரைப்பா 7 :
.......... ஞானி தன்னைப் பின்னால் இருத்திக்கொள்கிறான்;
அதனால், அவன் முன்னால் இருக்கிறான்.
ஞானி 'தன்' நினைப்பு இல்லாமல் இருக்கிறான்;
அதனால், அவன் தன்னைத் தக்கவைத்துக்கொள்கிறான்.
ஞானிக்குத் 'தன்' நலத்தில் அக்கறை இல்லாததால்தானே
அவன் சுய-நலம் நிலைநிறுத்தப்படுகிறது?

குறள் 268 :
தன்னுயிர் தான்அறப் பெற்றானை ஏனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்.
(பொருள் : தவ வலிமையால் தன்னுடைய உயிர், 'தான்' என்னும் பற்று நீங்கப் பெற்றவனை மற்ற உயிர்கள் எல்லாம் -அவனுடைய பெருமையை உணர்ந்து- தொழும்)

விளக்கம் : இதற்கு விளக்கம் தேவைப்படாது படிக்கும் போதே இதில் உள்ள ஒற்றுமை - சாரத்தை புரிந்துகொள்ளலாம். குறள் 346 இதே கூற்றையே வெளிப்படுத்துகிறது.

தாவோ தே சிங் – உரைப்பா- 8 :
மிகச்சிறந்த நல்லதன்மை , நீர் மாதிரி;
நீர் எல்லாப் பொருளுக்கும் நன்மை செய்கிறது.
என்றாலும், அது எதனுடனும் போட்டியிடுவதில்லை.
தாழ்வு என்று மற்றவை நினைக்கிற இடங்களில் அது தங்கியிருக்கிறது.
எனவே, நீர் தாவோவிற்கு நெருக்கமாக இருக்கிறது....

குறள் 11:
வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று.
(பொருள் : மழை பெய்ய உலகம் வாழ்ந்து வருவதால், மழையானது உலகத்து வாழும் உயிர்களுக்கு "அமிழ்தம்" என்று உணரத்தக்கதாகும்)

விளக்கம்: நீர் எல்லா உயிர்களுக்கும் நன்மை செய்து தன்னை உயர்ந்தது என்று பகட்டிக்கொள்ளாமல் இருப்பதால் அது தாவோவிற்கு (பிரபஞ்சத்தின் மூலத்துடன்) நெருக்கமாக இருக்கிறது. உயந்த குணம் நீரின் குணத்தை போன்று இருக்கும் என்று லாவோட்சு கூறுகிறார். வள்ளுவரும் கிட்டத்தட்ட அவ்வாறே சொல்கிறார் நீர் அனைத்துயிர்களுக்கும் நன்மைசெய்வதால் அது "அமிர்தம்" என உணரலாம் என்கிறார்.
தாவோ தே சிங் – உரைப்பா 12 :
ஐந்து நிறங்கள் கண்ணைக் குருடாக்கும்.

ஐந்து சுரங்கள் காதைச் செவிடாக்கும்.
ஐந்து சுவைகள் நாக்கைக் கெடுக்கும்.
குதிரைப் பந்தயமும் வேட்டையும் மனிதனைப் பைத்தியமாக்கும்.
விலைமதிப்பற்ற பொக்கிசங்கள் மனிதனின் நடத்தையைச் சீர்குலைக்கும்.

எனவே, ஞானி புலங்களை விடுத்து உள்ளிருப்பதன்படிக் கவனித்து நடத்தப்படுகிறார்
ஆகவே அவர் புறத்திருப்பதை விடுத்ச்து உண்மையைத் தேர்வுசெய்கிறார்.

குறள் 6 :
பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.
(பொருள் : பொருள் : ஐம்பொறி வழியாக எழுகின்ற ஆசைகளை அவித்தவனின் பொய்ம்மை இல்லாத ஒழுக்க நெறியில் நின்றவரே நிலையான வாழ்வினர் ஆவர்)

குறள் 27 :
சுவைஒளி ஊறுஓசை நாற்றமென ஐந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு.
(பொருள் : சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்று கூறப்படுகின்ற ஐந்தின் வகைகளையும் தெரிந்து நடப்பவனிடமே உலகம் உள்ளது)

விளக்கம்: புலன்களும்,உணர்வுகளும் ஒருசமயத்தில் நம்மைச் சீர்குலையச் செய்துவிடும் என்பதை அறிந்ததால் ஞானி புலன்களின்படி நடக்காமல் உள்ளத்தின்படி நடக்கிறான் என்கிறார் லாவோட்சு. திருவள்ளுவரின் இந்த இரு குறள்களும் மற்றும் குறள் 6 -உம் இதனையே எடுத்துரைப்பதாக உள்ளது.

தாவோ தே சிங் – உரைப்பா 20 :
உண்டு என்பதற்கும் இல்லை என்பதற்கும் எவ்வளவு வித்தியாசம் இருக்கிறது ?
நன்மை என்பதற்கும் தீமை என்பதற்கும் எவ்வளவு வித்தியாசம் இருக்கிறது ?
எதற்கு மற்றவர்கள் பயப்படுகிறார்களோ அதற்கு நாம் பயந்தாகவேண்டும்!!
அவைதான் எத்தனை எத்தனை!

பொதுவாக மக்கள் ஆனந்தமாக இருக்கிறார்கள் ஏதோ விருந்தை அனுபவிப்பது மாதிரி;
அல்லது வசந்த காலத்தில் உல்லாசப்பயணம் போகின்றவர்கள் மாதிரி;
நான்மட்டும் சலனமற்று இருக்கிறேன்,
என்ன என்று காட்டிக்கொள்ள முடியாத, இன்னும் சிரிக்கமுடியாத சிசு மாதிரி;
கதியில்லாமல், போவதற்கு வீடு இல்லாத மாதிரி......

................................நான்மட்டும் மற்றவர்களிடமிருந்து வேறுபட்டு இருக்கிறேன்.
ஆனால் நான் அன்னையால் (தாவோ) ஊட்டமடைகிறேன்.
(நீளம் காரணமாக இடையில் நீக்கப்பட்டுள்ளது)

குறள் 23 :
இருமை வகைதெரிந்து ஈண்டுஅறம் பூண்டார்
பெருமை பிறங்கிற்று உலகு.
(பொருள் : இம்மை மறுமை என்னும் இரண்டின் கூறுகளைத் தெரிந்து இவ்வுலகில் அறநெறியை மேற்கொண்டவரின் பெருமையே உயர்ந்ததாகும்)

விளக்கம் : இம்மை மறுமை என்னும் இரண்டின் கூறுகளைத் தெரிந்து தாவோவின் வழியில் அல்லது அறநெறியில் வாழ்பவனின் வாழ்க்கை, உலக மக்களின் வாழ்க்கைக்கு மாறானதாக அல்லது முட்டாள்தனமானதாகத் தோன்றலாம் ஆனால் அதுவே உண்மையான வாழ்க்கை என்பதைத்தான் இவ்விரண்டும் சொல்கிறது.

தாவோ தே சிங் – உரைப்பா 31 :
........ராணுவ வெற்றிகளில் தாவோ மனிதன் மகிழ்ச்சியடைவதில்லை.
அவன் அவற்றில் மகிழ்ச்சியடைந்தால் மக்களின் படுகொலையில் அவன் மகிழ்ச்சியடைகிறான் என்று அர்த்தம். மக்களின் படுகொலையில் மகிழ்ச்சியடைகிற மனிதன் தன் சித்தத்தை நிறைவேற்றிக்கொள்ள முடியாது.

குறள் 327 :
தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை.
(பொருள் : தனது உயிர் போய்விடும் என்றாலும் செய்யக்கூடாது தன்னைப் போன்ற அடுத்தவரின் இன்பமான உயிரைப் போக்கும் காரியத்தை.)

விளக்கம் : ஒரு தாவோ மனிதன் - ஞானி பிற உயிரைக் கொல்லும் போர்களில் மகிழ்ச்சி கொள்வதில்லை அப்படி மகிழ்கிறவன் முழுமையடைவதில்லை என்று கொல்லாமையைப் பற்றிச் சொல்கிறார். இதற்கு வள்ளுவரின் ஒரு குறள் மட்டுமல்ல. கொல்லாமை மற்றும் இன்னாசெய்யாமை ஆகிய இரண்டு அதிகாரங்கள் முழுக்க இதனையே வலியுறுத்தியிருப்பார்.

தாவோ தே சிங் – உரைப்பா 46 :
மனிதர்கள் ஆசைப்படுவதை தேடிக்கொண்டிருப்பதைவிட பெரிய குற்றம் வேறு எதுவுமில்லை;
மனநிறைவை அறியாமலிருப்பதைவிடப் பெரிய துயரம் வேறு எதுவுமில்லை;

பேராசைக்கு இடம்கொடுப்பதைவிட ப் பெரிய கேடு வேறு எதுவுமில்லை.
எனவே, மனநிறைவை அறிகிற மனநிறைவு எப்போதும் மனநிறைவுடன் இருக்கும்.

குறள் 368 :
அவாஇல்லார்க் கில்லாகுந் துன்பம் அஃதுண்டேல்
தவாஅது மேன்மேல் வரும்.
(பொருள் : ஆசை இல்லாதவர்க்குத் துன்பம் வராது; இருப்பவர்க்கோ இடைவிடாமல், தொடர்ந்து துன்பம் வரும்.)

குறள் 369 :
இன்பம் இடையறா தீண்டும் அவாவென்னும்
துன்பத்துள் துன்பங் கெடின்.
(பொருள் : ஆசை எனப்படும் பெருந்துன்பம் இல்லாது போனால், இன்பம் இடைவிடாமல் வரும்.)

குறள் 367 :
அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்.
(பொருள் : ஒருவன் ஆசையை முழுதும் ஒழித்தால், அவன் கெடாமல் வாழ்வதற்கு உரிய நல்ல செயல் அவன் விரும்புமாறு வாய்க்கும்.)

குறள் 370 :
ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்.
(பொருள் : ஒருபோதும் நிரம்பாத தன்மை உடைய ஆசையை ஒழித்தால் ஒழித்த அந்நிலையே எப்போதும் மாறாதிருக்கும் இன்ப வாழ்வைத் தரும்.)

விளக்கம் : மனநிறைவில்லாமல் பேராசைகளுடன் இருப்பதே துன்பங்களுக்குக் காரணமாக அமைகிறதென்று லாவோட்சுவும் வள்ளுவரும் கூறுகிறார்கள், திருக்குறளில் அவா அறுத்தல் எனும் அதிகாரம் முழுவதும் இதனையே வலியுறுத்தும்.

தாவோ தே சிங் – உரைப்பா 52 :
....மனிதன் தன் வாயை மூடிக்கொண்டு தன் வாயில்களை அடைத்துக்கொண்டால்
அவன் ஒருபோதும் களைத்துப்போகமுடியாது.
மனிதன் தன் வாயைத் திறந்துகொண்டு தன் காரியங்களை அதிகரித்துக்கொண்டால்
அவனை ஒருபோதும் காப்பாற்ற முடியாது....

குறள் 127 :
யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.
(பொருள் : எவற்றைக் காத்தவராயினும் தன் நாவைத் தவறாமல் காக்க வேண்டும்; காக்கத் தவறினால் சொற்குற்றத்தில் அகப்பட்டுத் துன்பம் அடைவர்)

குறள் 128 :
ஒன்றானுந் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்
நன்றாகா தாகி விடும்.
(பொருள் :

விளக்கம் : மனநிறைவில்லாமல் பேராசைகளுடன் இருப்பதே துன்பங்களுக்கு காரணமாக அமைகிறதென்று லாவோட்சுவும் வள்ளுவரும் கூறுகிறார்கள், திருக்குறளில் அவா அறுத்தல் எனும் அதிகாரம் முழுவதும் இதனையே எடுத்துரைக்கிறது.

தாவோ தே சிங் – உரைப்பா 56 :
தெரிந்தவன் பேசுவதில்லை. பேசுகிறவன் தெரிந்தவனில்லை.
எனவே, ஞானி வாயைத்திறப்பதில்லை. உணர்வுகளும் கதவைத் திறப்பதில்லை.
வாயை மூடிக்கொண்டு இருங்கள்.
உங்கள் புலன்களைக் காத்துக்கொள்ளுங்கள்....... (சில வரிகள் நீக்கப்பட்டுள்ளது)..
...... இந்தநிலையை அடைந்தவரிடம் அவமானம், பாராட்டு, நன்மை,தீமை, அணுகமுடியாது.
இப்படியாக உலகம் மதிப்பவராகிறார்.

குறள் 6 :
பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.
(பொருள் : ஐம்பொறி வழியாக எழுகின்ற ஆசைகளை அவித்தவனின் பொய்ம்மை இல்லாத ஒழுக்க நெறியில் நின்றவரே நிலையான வாழ்வினர் ஆவர்)

குறள் 126 :
ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து.
(பொருள் : ஒரு பிறப்பில், ஆமைபோல் ஐம்பொறிகளையும் அடக்கியாள வல்லவனானால், அஃது அவனுக்குப் பல பிறப்பிலும் காப்பாகும் சிறப்பு உடையது)

விளக்கம் : புலன்களை அடக்கத்தெரிந்தவனுக்கு உண்டாகும் நன்மையைப் பற்றி வள்ளுவரும் லாவோட்சு'வும் கூறுகின்றனர்.

தாவோ தே சிங் – உரைப்பா 67 :
..........அன்பின் அடிப்படையில் போராடுபவன் போரில் வெற்றிபெறுவான்;

அன்பின் அடிப்படையில் தன்னைக் காத்துக்கொள்பவன் பத்திரமாக இருப்பான்.
வானகம் அவனைக் காப்பாற்றும், வானகம் அவனை அன்புடன் பாதுகாக்குத்ம்.

குறள் 76 :
அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை.
(பொருள் : அறியாதவர், அறத்திற்கு மட்டுமே அன்பு துணையாகும் என்று கூறுவர்:ஆராய்ந்து பார்த்தால் வீரத்திற்க்கும் அதுவே துணையாக நிற்கின்றது)

விளக்கம் : அன்பின் அடிப்படையில் போரில் ஈடுபடும் வீரனும் வெற்றிபெறுவான், அவனை வானமும் பூமியும் அன்போடு பாதுகாக்கும் என்கிறது தாவோ தே ஜிங் அதையே திருக்குறளும் வெளிப்படுத்துகிறது அதாவது அறத்திற்கு மட்டும் அன்பு உறுதுணையாகஇருக்கும் என்பது முட்டாள்தனம் வீரத்துக்கும் உறுதுணையாக இருக்கும் என்று ஒரே சாரத்தை இவை இரண்டும் எடுத்துரைக்கின்றன.

தாவோ தே சிங் – உரைப்பா 75 :
மக்கள் பட்டினி கிடக்கிறார்கள்.
அவர்களிடம் கடுமையான வரிகளை அதிகாரிகள் வசூல் செய்கிறார்கள்.
எனவே, மக்கள் பட்டினி கிடக்கிறார்கள்.

மக்களை ஆள்வது கடினம்.
அவர்களின் விஷயங்களில் அனாவசியமாக அதிகாரிகள் தலையிடுகிறார்கள்.
எனவே, மக்களை ஆள்வது கடினம்.....
........

குறள் 552 :
வேலொடு நின்றான் இடுவென் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு.
(பொருள் : அரசன் குடிகளிடம் முறை கடந்து வரி கேட்பது, கையிலே வேலோடு நிற்கும் கள்வன், ‘எல்லாவற்றையும் கொடு’ என்று கேட்பதைப் போன்றதாகும்)

குறள் 555 :
அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.
(பொருள் : கொடுங்கோல் ஆட்சியால் அல்லல்பட்ட மக்கள், அதைப் பொறுக்கமாட்டாது அழுத கண்ணீரே, ஓர் அரசனின் செல்வத்தை அழிக்கும் படை ஆகும்)

விளக்கம் : அரசு, அரசனின் அதிகப்படியான வரி மற்றும் முறை தவறிய கொடுங்கோல் ஆட்சி ஆகியவற்றை பற்றிதான் மேலேயுள்ள உரைப்பாக்கள் பேசப்பட்டுள்ளன.

இதில் இருவரின் சிந்தனைகளும் அக்காலச் சூழலும் ஒன்றாக இருப்பதைக காட்டுகிறது, திருக்குறளில் கொடுங்கோன்மை எனும் அதிகாரம் முழுவதும் இப்படியாகவே காணப்படும்.

தாவோ தே  சிங் – உரைப்பா 78:
இந்த உலகத்தில் மிக மெல்லியது மிக வலியதை வெல்ல முடியும்.
வலுவின்மையிலும் நெகிழ்விலும் நீருக்கு ஒப்பாக எதையும் சொல்லமுடியாது;
என்றாலும், வலியத்தையும் கடினத்தையும் தாக்குவதில் நீருக்கு நிகராக எதுவுமில்லை.........
......

குறள் 13 :
விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து
உள்நின்று உடற்றும் பசி.
(பொருள் : மழை பெய்யாமல் பொய்படுமானால், கடல் சூழ்ந்த அகன்ற உலகமாக இருந்தும் பசி உள்ளே நிலைத்து நின்று உயிர்களை வருத்தும்.)

குறள் 20 :
நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வான்இன்று அமையாது ஒழுக்கு
(பொருள் :எப்படிப்பட்டவர்க்கும் நீர் இல்லாமல் உலக வாழ்க்கை நடைபெறாது என்றால், மழை இல்லையானால் ஒழுங்கு நிலைபெறாமல் போகும்.)

குறள் 16 :
விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண்பு அரிது.
(பொருள் :வானத்திலிருந்து மழைத்துளி வீழ்ந்தால் அல்லாமல், உலகத்தில் ஓரறிவுயிராகிய பசும்புல்லின் தலையையும் காண முடியாது)

விளக்கம் : மிகவும் வலிமையற்றதாக கருதப்படுவதும் வலிமையானதாக கருதப்படுவதை அழிக்கவோ அல்லது வெல்லவோ முடியும் என்பதனை நீருடன் ஒப்பிட்டு கூறப்பட்டுள்ளது. இதில் வள்ளுவரின் கூற்றும் லாவோட் சு'வின் கூற்றும் ஒன்றாகவே காணப்படுகிறது, வான்சிறப்பு எனும் அதிகாரத்தில் நீரின் முதன்மை பற்றி வள்ளுவர் விரிவாகவே கூறியுள்ளார்.

**நன்றி: எண்ணத்தின் குரல்-ஆகத்து 11-2019**

## தற்கொலைதான் வழியா?



வலையைப் பின்னும் வேளை தன்னில்
சிலந்தி  காட்டிடும் பொறுமை தெரியுமா?
அறுந்து விழுவதைக் கண்ட பின்னாலும்
மீண்டும் மீண்டும் வலை அறுந்தாலும்
வாகான இடத்தில் வாய்ப்பாய் வலையைப்
பின்னி நிறுத்தும் நேரம் வரைக்கும்
பொறுமை காத்துத் திறமை காட்டிடும்
சிலந்திப் பூச்சி வழங்கிடும் பாடம்
முயன்றால் வெற்றி என்பது தானே?
இரண்டு கைகளால் கோடரி பிடித்து
ஓங்கி  ஓங்கிப் பூமியைப் பிளந்து
ஆழமாய்க் குழிபல அகழ்ந்து பார்த்தாலும்
நீர்வரும் வாய்ப்பே இல்லை என்றே
நேரெதிர்ச் சூழல்  வருத்த மளிப்பினும்
நெஞ்சு நோகாமல் மீண்டும் மீண்டும்
கிணற்றைத் தோண்டும் முயற்சியில் முனையும்
படிப்பறி வில்லாப் பாமர உழவன்
தூக்குக் கயிற்றைத் தேடியதுண்டா?



பயிற்சி மையத்தில் பாடம் படித்து
ஆயத்தம் எல்லாம் சிறப்பாய்ச் செய்தும்
தேர்வில் தோல்வி அடைந்து விட்டோமே?
ஊரார் நம்மை இகழ்வார் என்றே
தூக்குக் கயிற்றை நாடிடல் முறையா?
தோல்வியை வெற்றியாய் மாற்றிடும் ஆற்றல்
உன்னுள் இருப்பதை நீ அறியாயா?
அன்னை தந்தை அகமகிழ்ந்திடவே
முன்னே றிடவே முனைந்து செயற்படு!
மருத்துவம் மட்டுமே வாழ்க்கை அல்ல!
கிட்டாதாயின் வெட்டென மறந்திடு!
ஆயிரம் வாய்ப்புகள் அகிலம் முழுதும்
வாசல் திறந்தே வரவேற்றிடுதே!
கொட்டிக் கிடக்குதே கோடிப் படிப்புகள்!
வேறொன்று தேர்ந்திடு!ஆர்வம் மேற்கொள்!
உழைப்பும் முயற்சியும் உன்னை உயர்த்துமே!
வாழிய வாழிய வையகம் போற்றவே!

**மறைமலை இலக்குவனார்**

# குறள்நெறி

மின்னிதழ்:67 "குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்" தி.வ.ஆ.2054 ஆவணி-15-- பொ.ஆ.-2023-செபுத்தம்பர்-1

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்




## தமிழ் உரிமைப்போராளி சி.இலக்குவனார்
## ஐம்பதாம் நினைவாண்டுச் சிறப்பிதழ்














யான் வேறு ; இலக்குவனார் வேறு இல்லை. அவர் செய்யும் பணிகளில் எல்லாம் எனக்கும் பொறுப்பும் பங்கும் உண்டு.

**- தன்மானத் தந்தை பெரியார் ஈ.வெ.இரா.**

நுண்மாண் நுழை புலமும் அஃகி அகன்ற அறிவுக் கூர்மையும் ஆய்வுத் திறனும் இணைந்த பேராற்றலைப் பெருமளவில் பெற்றிருக்கும் பேராசிரியர் இலக்குவனார், ஓர் அரிய ஆராய்ச்சியாளர்; அஞ்சா நெஞ்சுடை அருந்தமிழ்க் குரிசில்; நேர்மையின் நிலைக்களன். -

**பேரறிஞர் அண்ணா**

இந்நாளில் திருக்குறளுக்குப் புதுப் புது உரைகள் காணப்படுகின்றன. அவற்றுள் பொருந்தியன சிலவே. அச் சிலவற்றுள் ஒன்று தமிழ்ப் பேராசிரியர் சி. இலக்குவனார் உரை.

**தமிழ்த் தென்றல் திரு.வி.க.**

அவர் தயாரித்தவர்கள் எல்லாம் மாணவர்கள் என்று சொல்வதை விட அழுத்தம் திருத்தமான போர்வாள்களைத்தான் அவர் தயாரித்தார் என்று சொன்னால் மிகப் பொருத்தமாக இருக்கும். அவர் யாருக்கும் தலைவணங்காமலே வாழ்ந்தார். அவர் கனக விசயனை எதிர்த்து வெற்றி கண்ட சேரன் செங்குட்டுவனைப் போல் இருந்தார். எனக்குத் தன்மானத்தைக் கற்றுத் தந்தவர் அவர் -

**முத்தமிழறிஞர் கலைஞர்**

முத்தமிழும் முதுமொழிமரபும் எப்பாவலரும் ஏற்றற்காகும் முப்பால் தரும் மூதறிவும் நற்பாலவை விளக்கும் பொற்பின் தொல்காப்பியமும் கற்பவர்தம் சிந்தை நிறைக்கும் நற்றமிழ்ச் சங்கப்பாடல்களும் இலக்குவனாரின் இனிய நெஞ்சமாகும்.- **இனமானப் பேராசிரியர் க. அன்பழகன்**

எங்கும் எவர்க்கும் ஐயம் அகற்றித் தெளிவிக்கும் தேர்ந்த நடையிடும் பல்கலைக்கழகம் இலக்குவனார்.

**புலவர்மணி இரா.இளங்குமரனார்**

திருக்குறளில் தோய்ந்துள்ள பேராசிரியர் அவர்கள் குறளிலே ஆய்ந்துள்ள உயர்ந்த கருத்துகளை இனிய தமிழில், எளிய நடையில் விளக்கியிருப்பது பெரிதும் போற்றற்குரியது.-

**முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம்**

# தமிழ்ப் போராளி இலக்குவனார்



தகைசால் தமிழர்,முதுமுனைவர் கி.வீரமணி

நாளை (செப்டம்பர் 3-ந்தேதி) இலக்குவனார் நினைவு தினம். பேராசிரியர் சி.இலக்குவனார் தமிழறிஞர்கள் வரிசையில் தனித்தன்மையானவர். தான் படித்த படிப்பு, சம்பாத்தியம் குடும்ப வளமைக்கு மட்டுமே என்னும் கண்ணோட்டம் அவருக்கு இருந்திருந்தால் அவர் வாழ்க்கை என்பது இவ்வளவுத் தொடர் தொல்லைகளுக்கும், அலைச்சலுக்கும் ஆளாகி இருக்காது.

இலக்குவனார், தஞ்சாவூர் மாவட்டம் வாய் மேடு என்னும் கிராமத்தில் சிங்காரவேலர்-ரத்தினம் அம்மையார் ஆகியோரை பெற்றோராக கொண்டு எளிய குடும்பத்தில் 17-11-1910 அன்று பிறந்தார். உள்ளூர் தொடக்கப்பள்ளியில் படித்த அவர் பி.ஓ.எல். மற்றும் முதுகலை பட்டங்களையும் பெற்றார்.

தமிழ், ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளையும் கற்றுத்தேர்ந்தவர். 'தமிழர் தலைவர்' நூலை எழுதிய சாமி.சிதம்பரனாரின் மாணவர் ஆவார். தொல்காப்பியத்தை அவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார் என்பது அசாதாரணமானது. மறைந்த முன்னாள் முதல்-அமைச்சர் அண்ணா, போப் ஆண்டவரை சந்தித்த போதும், யேல் பல்கலைக்கழகத்துக்கு சென்ற போதும், அந்நூலை நினைவுப் பரிசாக அளித்தார்.

எழிலரசி உள்ளிட்ட கவிதை நூல்கள், தமிழ்க் கற்பிக்கும் முறை, அமைச்சர் யார், தொல்காப்பிய ஆராய்ச்சிகள், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், வள்ளுவர் வகுத்த அரசியல் உள்ளிட்ட ஆய்வு நூல்கள், என் வாழ்க்கைப்போர், கருமவீரர் காமராசர் எனும் வரலாற்று நூல்கள்.

திருக்குறள் எளிய பொழிப்புரை, தொல்காப்பிய விளக்கம், தொல்காப்பிய எழுத்ததிகாரம் உள்ளிட்ட உரை நூல்கள் மற்றும் தொல்காப்பியம் உள்ளிட்ட ஒன்பது ஆங்கில அரிய நூல்கள் வாழும்வரை, அவற்றை படைத்த பேராசிரியர் இலக்குவனாரும் நாட்டு மக்களின் இதயங்களில் கோலோச்சுவார். சங்க இலக்கியம், குறள் நெறி, திராவிடக் கூட்டரசு உள்ளிட்ட ஏடுகளின் ஆசிரியராக இருந்ததோடு, திராவிடன் பெடரேசன் என்ற ஆங்கில இதழையும் நடத்தியுள்ளார். இவற்றையெல்லாம் அவர் நடத்தினார் என்றாலும் பொருளாதாரக் கண்ணோட்டத்தில், தன் கையைச் சுட்டுக் கொண்டார் என்றே கூற வேண்டும். ஆனாலும் இனம், மொழி மேம்பாட்டுக்கான மேட்டிமை அவரை ஆட்கொண்டது. அவர் தமிழாசிரியராக, விரிவுரையாளராக, பேராசிரியராக, துறைத்தலைவராகப் பரிணமித்தவர். திருவாரூரில் தமிழாசிரியராக பணியாற்றிய போது அவரின் மாணவராக இருந்தவர்தான் மு.கருணாநிதி (பிற்காலத்தில் முதல்-அமைச்சர் கலைஞர்). 'தமிழ் உணர்வுடன் சுயமரியாதைப் பண்பையும் எனக்கு ஊட்டியவர் இலக்குவனார்' என்று 'நெஞ்சுக்கு நீதி' நூலில் கலைஞர் குறிப்பிட்டுள்ளார். திருவாரூரிலிருந்து தொடங்கி குலசேகரன்பட்டினம், நெல்லை ம.தி.தா.

இந்துக்கல்லூரி, விருதுநகர் செந்தில்குமார் நாடார் கல்லூரி, ஈரோடு மகாஜனக் கல்லூரி, மதுரை தியாகராயர் கல்லூரி, நாகர்கோவில், சென்னை மாநிலக் கல்லூரி, ஆந்திராவின் உஸ்மானிய பல்கலைக்கழகம் வரை (1936-1968 இடைவெளியில்) பந்தாடப்பட்டவர். அந்த வகையில் தமிழ்நாட்டின் மண்ணை அளந்த மணவாளர் அவர்! என்ன காரணம்? பணியில் தொய்வா? திறமைக் குறைவா? அல்ல அல்ல. சென்ற இடங்களில் எல்லாம் அவர் வகித்த துறையில் முத்திரை பதித்தவர். தமிழ் உணர்வோடு மாணவர்களை வார்த்தெடுத்தவர். அவருடைய மாணவர்களுள் ஒருவர்தான் ஆர்.நல்லக்கண்ணு; பின் ஏனிந்தப் பந்தாட்டம்? அவர் தமிழ் உணர்வாளர், இன உணர்வாளர், பெரியார் வழி சுயமரியாதைக்காரர். இவைதான் இவர் மீது ஏவப்பட்ட அம்புகள். ஒரு கல்லூரியில் இருந்து அவர் வெளியேற்றப்பட்டதற்கு சொல்லப்பட்ட காரணம் தெரியுமா? பெரியார் நடத்திய திருக்குறள் மாநாட்டிலும், இந்தி எதிர்ப்பு மாநாட்டிலும் பங்கு கொண்டார். இலக்குவனார் கருஞ்சட்டை இயக்கத்தில் தீவிர ஈடுபாடு காட்டி வருகிறார் என்று பொதுக்கல்வி இயக்குநர், ஆட்சிக்குழுவுக்கு தாக்கல் செய்தது. ஆட்சி மன்றக்குழுவின் கருத்து இதற்கு எதிராக இருந்தாலும் வேறு வழியின்றி இலக்குவனாரை வெளியேற்ற நேர்ந்தது. அந்த கல்லூரியில் அவருக்கு இழைத்த அநீதி கண்டு ‘துரத்தப்பட்டேன்’ என்று கவிதை வரிகளில் குமுறினார்! கல்லூரிப் பேராசிரியர்கள் சார்பாக சென்னைப் பல்கலைக்கழகத்தின் அகாடமிக் கவுன்சில் உறுப்பினராகவும், சென்னைப் பல்கலைக்கழக ஆசிரியர் குழுவின் துணைத் தலைவராகவும், தமிழகப் புலவர் குழு செயலாளராகவும் பொறுப்பேற்று செயப்பேரிகை கொட்டியவர். இந்தி எதிர்ப்புப் போராலும், தமிழ் உணர்வு பெரு நடைப் பயணத்தாலும் சிறைவாசமும் இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்கீழ் தனிமைச் சிறையும் பதவி இழப்பும் தான் அவர் பெற்ற பரிசுகள். தமிழ்நாட்டில் கல்லூரி முதல்வர்கள் குறைந்த அளவேனும் தமிழ்ப்புலமை பெற்றிருக்க வேண்டும். கல்லூரிப் பாடத்திட்டத்தில் தமிழே முதற்பாட மொழியாகவும் ஏனைய மொழிகள் இரண்டாம் பொது மொழியாகவும் இருக்க வேண்டும். தமிழ்ப் பாடத்தேர்வில் திருக்குறளுக்கென்றே தனித்தேர்வுத்தாள் இருக்க வேண்டும் என்பது இலக்குவனாரின் கல்விக் கொள்கை. பணியில் இருந்து ஓய்வுபெற்ற நிலையில் தி.மு.க. பிரிந்தபோது பெரியார் மேற்கொண்ட நீண்ட சுற்றுப்பயணம் முழுவதிலும் திராவிடர் கழக கூட்டங்களில் இலக்குவனாரும் அவருடன் பயணித்து உரையாற்றினார். புதுக்கோட்டையில் நடைபெற்ற திராவிடர் கழக மாநாட்டில் (9-4-1950) புலவர் இலக்குவனார் திருவள்ளுவர் படத்தை திறந்து வைத்து உரையாற்றினார். ‘ஆரியத்தை முதலாவது எதிர்த்த புரட்சிப் புலவர் திருவள்ளுவர். மக்களின் வாழ்வுக்கேற்ற அறம், பொருள், இல்லறம் பற்றித்தான் வள்ளுவர் எழுதினாரே ஒழிய, ஆரியக் கருத்துப்படி இருக்கும் வீட்டைப்பற்றி (மோட்சம்) பற்றி எழுதவில்லை’ என்று பேசினார். இலக்குவனார் பெயரில் அவர் பிறந்த வாய்மேடு உயர்நிலைப் பள்ளிக்கு அவர் பெயரே சூட்டப்பட்டுள்ளது. தன்மானப் புலவர் பேராசிரியர் இலக்குவனாருக்கு 6 மகன்களும், 5 மகள்களும் உண்டு. ‘தமிழகத்தின் உரிமை உணர்வுக்கும் தமிழ்மொழியின் உயர்வுக்கும் உழைப்பதே எனது உறு கடனாம் என்று உறுதி கொள்ளச்செய்தது; தமிழ்ப் போரே எனது வாழ்க்கைப் போர் என்னும் குறிக்கோளை வாழ்வின் உயிரென ஏற்றுக் கொண்டேன். புலவர் படிப்பால் பெற்ற பயன் இதுவேயாகும்’ என்பது இலக்குவனார் இலக்கு. அந்தத் தமிழ்ச்சிங்கம் 3-9-1973 அன்று கண் மூடிற்று. என்றாலும் வரலாற்றில் வாழுகிறது! –

## கி.வீரமணி, தலைவர், திராவிடர் கழகம்

[நன்றி:தினத்தந்தி-2/9/2018]

# தமிழ்உரிமைப்போராளி இலக்குவனார்

**கவிஞர்இன்குலாபு**

தமிழை இனிமை என்றனர் பாவலர்கள்
தமிழைப் புகழ் என்றனர் புலவர்கள்
தமிழைத் தன்மானம் என்றவர் இலக்குவனார் !
தமிழ் விழிப்புற்றது பாரதியால்
தமிழ் எழுச்சிபெற்றது பாரதிதாசனால்
தமிழ் போராடியது இலக்குவனாரால்

எந்த ஓர் அரசமஞ்சத்திலும் ஏறத் தகுந்தவர்
எந்த ஓர் அரசும் சாமரம் வீசுதற்குரியவர்
இருந்தும்
எல்லா அரசுகளும் இலக்குவனார்க்குச் சிறையையே
திறந்தன !
எல்லா அரசுகளும் இவர்மீது உறைவாளையே
உருவின !
நாமார்க்கும்குடியல்லோம்நமனைஅஞ்சோம்
என்று
தொன்று தமிழருக்கு
நிகழ்ந்தது அனைத்தும் உணர்ந்த
இந்தத் தொல்காப்பியருக்கு
சிறையும் உறைவாளும்
“மாசில் வீணையும் மாலை மதியமும்” !

சில முகவரிகள் தவறாக அமைகின்றன
பறவைக்குக் கூண்டு
காவிரிக்குக் கர்நாடகம்
தமிழ்நாட்டுக்குஇந்தியா !
ஆனால்
தமிழுக்கு வாய்த் த சரியான முகவரி
தியாகராசர் கல்லூரி
மதுரை.
ஒருபுறம்
ஆற்றுநீர்வற்றினாலும்
ஊற்றுநீர்வற்றாத
அழகியவைகைஅந்தமணலுக்கடியில்
எப்பொழுதும்தமிழ்ஈரம் !

இந்தி எதிர்ப்பு

## பேராசிரியர் இலக்குவனர் கைது

### மாணவர்களைத் தூண்டினராம்!

மதுரை, பிப். 2—

மதுரை தியாகராசர் கல்லூரி தமிழ்த் துறைத் தலைவரும் ‘குறள் நெறி’ ஆசிரியருமான பேராசிரியர் இலக்குவனர் நேற்று மாலை கைதுசெய்யப்பட்டார்.

நேற்று மாலை திருப்பரங்குன்றத்திலுள்ள அவரது அச்சகத்தில் இருந்த போது போலீசார் வந்து அவரது இல்லத்துக்கு அழைத்துச்சென்றனர்.

போராடும்படி மாணவர்களைத்தூண்டியதாக அவர் மீது போலீசார் குற்றம் சாட்டியுள்ளனர்.

‘தமிழ்த் தாயே சிறையில்!’



மதுரையில் பேராசிரியர் இலக்குவனர் கைதுசெய்யப்பட்டிருக்கிறர்.
(தலையங்கம் 2-ம்பக்கம்)

## அச்சத்தால் விளைந்த ஆதிக்க வெறி!

அரசுக்குத் தமிழ்த் தொண்டு செய்பவர்கள் மீது ஏன் ஐயுறவும் அச்சமும் ஏற்படுகிறது?

தமிழகத்தைச் சேர்ந்த தமிழர்களுக்குத் தமிழ்ப் பற்று இருப்பதிலேயும் அவர்கள் தமிழ்த் தொண்டாற்றுவதிலேயும் என்ன தவறு இருக்கிறது?

ஆதிக்கத்தை நிலைநாட்டிக் கொள்ள வேண்டும் என்று கருதுகின்ற அரசு எதுவாக இருந்தபோதிலும் அது எவரால் இயக்கப்படுவதாக இருப்பினும், எந்தக் கட்சி இயக்கிக் கொண்டிருந்தாலும் தங்கள் ஆதிக்கத்துக்கு தொல்லை ஏற்படும் என்று தெரிகின்றபோது அந்த அரசுக்கு அச்சமும் ஐயுறவும் ஏற்படத்தான் செய்யும்,

அச்சத்தால் பீடிக்கப்பெற்ற அரசினர், தங்கள் ஆதிக்கத்தைப் பாதுகாத்துக்கொள்ள பேராசிரியர் இலக்குவனரைக் கைது செய்து தொல்லைக் கொடுத்ததைப்போன்று வன்முறைச் செயல்களில் இறங்கத்தான் செய்வார்கள். அந்தகைய ஆதிக்க வெறிக்கு பலியானவர்களில் ஒருவர் தான் பேராசிரியர் இலக்குவனர் அவர்கள்.

**- அறிஞர் அண்ணா**

இலக்குவனர் பாராட்டு விழாவில் பேசியது.

மறுபுறம்
பச்சைஇலைகளுக்கு
நடுவில்
பளிங்குத்தாமரைப்பூப்போல
தெப்பக்குளமும்
மையமண்டபமும்
அதன்
பாசிபடிந்தபடிகளில்
நிலவு
வழுக்கிவிழும் !
நடுவில்காற்று,தமிழாய்வீச,
உயிர்த்துக்கொண்டு
நிற்கும்
தியாகராாசர்கல்லூரி
வைகைதாலாட்டும்
தமிழ்நாகரிகம் !
நாணல்களின்வெண்பஞ்சுப்பூக்களைத்
தலைக்குச்சூடும்
நாரைகள் !
நிலவுப்பாலில்நின்றுகுளிக்கும்
கீற்றுத்தென்னைகள்
கிளியோபாத்திராக்கள் !
கரையெல்லாம்பூக்கும்
கவிதைகள் !
எங்களைஅடைகாத்தகூடுகள் !
புறநானூற்றுவரிகலிலிருந்து
புரவிகள்பாயும் !
சிலம்புப்பரல்கள்
மிண்டும் தெறிக்கும் !
ஆண்டாள்பாசுரங்கலுக்கு
காதல்சுரக்கும் !
புரட்சிக்கவிஞன்நிலவைப்பாடுவான் !
வகுப்புகள்கவிதைகளின்
வாழ்ந்தஅனுபவம் !
தமிழ் தன்னை இனிதாய்க் கேட்ட்து
எங்கள் வகுப்பறைகளின்
வாசலில் நின்று !
தமிழ் தன்னைஅழகாக்கிக்கொண்ட்து
எங்கள் தோழமைவட்டத்தின்
கவிதைக்கண்ணாடிகளில் !



தமிழவேள் கோ.சாரங்கபாணி அவர்களுடன்



அறிஞர் அண்ணா, கலைத்தந்தை கருமுத்து தியாகராசர், ,இலக்குவனார்



பன்மொழிப் புலவர் கா.அப்பாத்துரை அவர்களுடன்

தமிழ் தன்னை விடுதலையாய் உணர்ந்தது
எங்கள் இலக்குவனாரின் சொல்லிலும் செயலிலும் !
எங்கள் பெருமை எதிலும் சிறந்தது
இலக்குவனாரின் மாணவர் என்பது !
அவர் நெஞ்சில் எரிந்த
விடுதலை நெருப்பின்
பொறிகளுள் ஒன்றைப்
பேனாவில் ஊற்றினேன் !
இன்னும் அணையாமல்
ஊறிக்கொண்டிருக்கிறது !
அந்த நடையின் திருப்பம் ஒன்றில்தான்
மனிதநடையின் துணிவைக் கற்றேன் !
அந்தப் பார்வையின் கூர்மை ஒன்றில்தான்
கேள்விகள் தொடங்கும்
நியாயம் தெரிந்தேன் !
அந்த மனிதனின் சொற்கள் அனைத்திலும்
உரிமை வாழ்வின் பொருளை உணர்ந்தேன்!
இலக்குவனார்க்குச் செய்வது இதுதான்
தமிழ்
தமிழர்
தமிழ்நாடு
ஆட்சியில்
உரிமையில்
விடுதலையில் !



முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ.அவர்களுடன்



அறிஞர் அண்ணா போப்பாண்டவர் அவர்களைச் சந்தித்தபோது இலக்குவனார் அவர்களின் தொல்காப்பிய ஆங்கில மொழியாக்கத்தை வழங்கினார்



இலக்குவனார் வேலூர்ச் சிறையிலிருந்து வந்தபின் மதுரை மாணவர்களும் மக்களும் நடத்திய பிறந்தநாள்விழாவில் அண்ணா



இலக்குவனார் பி.எச்.டி.பட்டம் பெற்றவேளையில் பாராட்டு விழா-சட்டப்பேரவைத் தலைவர் செல்லபாண்டியன் தலைமை

# இலக்குவனாரின் தொல்காப்பிய ஆராய்ச்சி

------முனைவர் க.இராமசாமி

(மேனாள் பொறுப்பு அலுவலர்,செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்)



செம்மொழித் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்திற்கு வலுவான கால்கோள் நிறுவிய அறிஞர் க.இராமசாமி அவர்கள் கலைஞர் செம்மொழித் தமிழ் விருது 2023 பெற்றமைக்கு 'குறள்நெறி' வாழ்த்துகிறது.

செம்மொழியாரின் இல்லத்தரசி திருவாட்டி மு.கல்யாணி கல்விப்பணியில் ஈடுபட்டவர். அரசு தொடக்கப் பள்ளித் தலைமையாசிரியராகப் பணியாற்றி விருப்பப் பணிநிறைவு பெற்றவர். நற்கல்வி பெற்ற நன்மக்கள் குடும்பத்திற்குப் பெருமை சேர்க்கின்றனர். மகன் திரு இரா.இனியன் ஐதராபாத்திலுள்ள அமேசான் பன்னாட்டு நிறுவனக்கிளையில் பொது மேலாளராகப் பணியாற்றிவருகிறார். மருமகள் திருமதி கீதாஞ்சலி தில்லி அரசுப் பள்ளி யொன்றில் ஆசிரியையாக உள்ளார். மகள் மருத்துவர் இரா.அன்புக்கனி, அரியலூர் அரசு மருத்துவமனையில் தோல் மருத்துவராகப் பணிபுரிகிறார். மருமகன் மருத்துவர் க.கொளஞ்சிநாதன் அங்கேயே கண் மருத்துவராகப் பணியில் உள்ளார். அனிகா இனியன்(மகன்வழிப் பெயர்த்தி), கவின், முகில் (மகள் வழிப் பெயரன்கள்) என நற்பெயர் தாங்கிய பேரப்பிள்ளைகள் உள்ளனர்.

மொழியியல் பேராசிரியர்களில் ஒரு சாரார் கொச்சை நடையை வாழும் மொழியாகக் கற்பித்து மொழிச்சிதைவிற்கு வழி வகுத்து வருகின்றனர். அவ்வாறில்லாமல் மொழியியல் அறிஞர் தொல்காப்பியர் வழிநின்று தமிழின் செம்மொழி மரபைக் காக்கத் துணை நிற்பவர் மொழியியலறிஞர் பேரா.க.இராமசாமி.

தமிழர்களின் தன்மான உணர்வைத் தட்டி எழுப்பத் தொண்டாற்றியவர் பெரியார் ஈ.வெ.இராமசாமி. தமிழ்மொழியின் செம்மொழித்தன்மையின் அறிந்தேற்பிற்குத் தொண்டாற்றிப் பரப்புதலுக்கும் தொண்டாற்றுபவர் செம்மொழி க.இராமசாமி.

செந்தமிழர் போற்றும் செம்மொழி இராமசாமி செந்தமிழ்போல் நீடு வாழ்க!

திருவள்ளுவன் இலக்குவனார்

தமிழினத் தொன்மையையும் தனித்தன்மையையும் நிறுவும் வகையில் நமக்குக் கிட்டியுள்ள சான்றுகள் மிகச் சிலவே. அவற்றுள் தலையாயது ஒல்காப் புகழ்த் தொல்காப்பியம். மொழி, இலக்கியம், வாழ்வியல் மூன்றனுக்கும் இலக்கணம் கூறும் பண்பாட்டுப் பெட்டகம். இதுபோன்றதோர் இலக்கண நூல் உலகில் எந்த மொழியிலும் தோன்றியது இல்லை. தமிழிலும்கூட இதற்கு நிகரானதோர் இலக்கண நூல் இதுவரை உருவாகவில்லை. தொல்காப்பியத்திற்கு முன்னர்ப் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் இலக்கண இலக்கிய வளம் மிக்கதாய் தமிழ் இருந்துவந்திருக்கவேண்டும் என்பதற்கு இதுவே நற்சான்றாய்த் திகழ்கிறது.

தமிழால் வாழ்ந்தோர் பலர். தமிழுக்காக வாழ்ந்தோர் மிகச்சிலர். அம் மிகச் சிலருள் ஒருவரான பேராசிரியர்சி.இலக்குவனார் நுண்மாண் நுழைபுலம் வாய்ந்த ஆராய்ச்சியாளர்,மாணவர்களால் பெரிதும் போற்றப்பட்ட பேராசிரியர், உணர்ச்சிக்கவிஞர் ,எழுச்சியூட்டும் இதழாளர், தமிழினப்போராளி எனப் பன்முக ஆளுமை வாய்ந்தவர் தமிழின் இரு கண்களாக இலங்கும் தொல்காப்பியத்தையும் திருக்குறளையும் நுட்பமாய் ஆய்வுசெய்து அறிவுலகிற்கு வழங்கியவர் இவர் ஆற்றிய பல்வேறு பணிகளுள் எக்காலத்தும் நிலைத்த புகழ் தருவதாய்த் தமிழின் மேன்மையை உலகிற்கு உணர்த்துவதாய் அமைந்தது அவரது தொல்காப்பிய ஆராய்ச்சியேயாகும். தொல்காப்பியத்தின் அருமைபெருமைகளைப் பிறமொழி அறிஞர்கள் உணரவேண்டுமென்கிற உயரிய நோக்குடன் அதை ஆங்கிலத்தில் செம்மையாக மொழியாக்கம் செய்திருப்பதுடன் மொழியியல் பார்வையில் ஆழமும் விரிவும் பொருந்தியதொரு திறனாய்வையும் வழங்கியிருப்பது அவரது விரிந்த நூலறிவையும் புலமைசார் ஆய்வு அணுகுமுறையையும் பல்லாண்டுக் கடும்□உழைப்பினையும் புலப்படுத்தி நிற்கின்றன.

தொல்காப்பிய ஆய்வு மேனாட்டு அறிஞரிடையே பரவுவதற்குச் சீரிய பணியாற்றிய முன்னோடிகள் என இலக்குவனாரால் குறிப்பிடப்படும் பேராசிரியர்கள் நாவலர் சோமசுந்தரபாரதியார்,பி.சா.சுப்பிரமணிய சாஸ்திரி

ஆகிய இருவருமாவர்..நாவலர் மேற்கொண்ட ஆய்வு தொல்காப்பியம் முழுமைக்குமாக அமையவில்லை. சாத்திரியாரின் ஆய்வு முழுமையானது; ஆனால் சமற்கிருதச் சார்பு மேலோங்கி நிற்பது.

நூலாசிரியரும் உரையாசிரியர்களும் வகுத்துத்தந்த அடித்தளத்தின்மீது நின்று ஆய்வு நேர்மையினின்று வழுவாது மொழித் திறத்தின் முட்டறுத்த நல்லோராய்த் திட்பமும் தெளிவும் நிறைந்த மொழிபெயர்ப்பினையும் புலமை நுட்பம் வாய்ந்த திறனாய்வினையும் ஆங்கிலத்தில் இலக்குவனார் தந்திருப்பது அறிஞர்களால் பெரிதும் பாராட்டத்தக்கதாக அமைந்துள்ளது.

தொல்காப்பிய நூற்பாக்களின் பொருள் சிதைவுபடாமல் எளிய தெளிவான தரமான ஆங்கில நடையில் படிப்போர் புரிந்துகொள்ளும்வண்ணம் துல்லியமாக மொழிபெயர்ப்புப் பணியை இலக்குவனார் நிறைவேற்றியிருப்பது வியந்து போற்றத்தக்கதாகும்.

நூற்பா அடிகளின் வரிசைமுறை பிறழாமல் மொழிபெயர்ப்பு அமைந்திருப்பது நோக்கத்தக்கது.

தமிழ் மூலத்தையும் உரோமன் எழுத்துப்பெயர்ப்பையும் இணைத்து இம்மொழிபெயர்ப்பு நூல் மறுபதிப்பாக உயர்தரத்தில் உருவாக்கப்பட்டு வெளிவருதல் நிறைவேற்றப்படவேண்டிய இன்றியமையாத பணியாகும்.

திருவள்ளுவரின் காலம் கி.மு.31 என அறிஞர் குழுவால் ஒருதலையாக அறுதி முடிவெடுத்துத் தமிழக அரசு அதை ஏற்குமாறு செய்ததுபோல் தொல்காப்பியருக்கும் கால வரையறை செய்யப்படவேண்டும். கி.மு.10000 முதல் கி.பி.1000 வரையிலான பல்வேறு காலக்கட்டங்கள் பலராலும் சுட்டப்படுகின்ற நிலையில் இலக்குவனார் தொல்காப்பியரின் காலம் கி.மு.600க்கு முற்பட்டதாகவும் கி.மு.1000த்திற்குப் பிற்பட்டதாகவும் இருக்கவேண்டுமென வரையறுக்கிறார். மொழி, இலக்கியம், வரலாறு தொடர்பான பல்வேறு சான்றுகளுடன் அவர் நிறுவியுள்ள இந்தக் கால வரையறையை ஆய்வாளர்கள் மனங்கொளல்வேண்டும். தமிழறிஞர்கள் உடனடியாக நிறைவேற்றவேண்டிய பணிகளுள் முதன்மையானது தொல்காப்பியரின் காலத்தை ஒருதலையாக அறுதிமுடிவெடுத்தலாகும்.

தமிழ் எழுத்தின் தோற்றம், வளர்ச்சி குறித்து வேறுபாடான கருத்துக்கள் நிலவுகின்றன. தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே எழுத்துக்கள் தோன்றி அவை காலப்போக்கில் மாற்றங்கள் அடைந்துவந்துள்ளன என்பது மறுக்கமுடியாத உண்மை.

*மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்*

(தொல். 15)

மெய் எழுத்துக்களின் மீது புள்ளிவைக்கவேண்டுமெனத் தொல்காப்பியர் கூறுகிறார். ஆய்தம் முப்புள்ளிகளால் ஆனது என்பதையும் குறிப்பிடுகிறார்.

*ஆய்தம் என்ற*
*முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன*

(தொல். 2)

பின்னால் தோன்றி வளர்ந்த பிராமி எழுத்துக்களும் கிரந்த எழுத்துக்களும் தமிழ் எழுத்துக்களிலிருந்து உருவாக்கப்பட்டவை என்றே கொள்ளவேண்டும் என்பது பேராசிரியர் இலக்குவனார் அவர்களின் துணிந்த முடிபாகும். சிந்துவெளி நாகரிகக் காலத்திலேயே தமிழர்களுக்கு எழுதும் பழக்கம் இருந்ததென்பது கருதத்தக்கது.

தொல்காப்பியத்தில் பயின்றுவரும் சொற்களுள் சமற்கிருதச் சொற்கள் எனப் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை சுட்டிக்காட்டியவற்றுள் ஒன்றிரண்டு தவிரப் பெரும்பான்மை மூலத்தில் தமிழ்ச் சொற்களே என இலக்குவனார், டாக்டர் கால்டுவெல் அவர்களின் சான்றுகளைத் துணைக்கொண்டு திறம்பட நிறுவியுள்ளார்.

வையாபுரிப் பிள்ளை அவர்கள் சமற்கிருதச் சொற்கள் எனச் சுட்டிக்காட்டிய ‘உவமம்’, ‘காலம்’, ‘காரம்’, ‘காயம்’, ‘திசை’, ‘ஆசிரியர்’, ‘இமை’ போன்ற சொற்களுக்குரிய வேர் சமற்கிருதத்தில் இல்லை, தமிழிலேயே உள்ளது என்பதை இலக்குவனார் உறுதிசெய்துள்ளார்.

பி.சா. சுப்பிரமணிய சாத்திரியார் ‘அந்தணர் மறை’, என்னும் சொற்றொடருக்கு ‘scriptures of the Brahmins’ எனப் பொருள்தரும் நிலையில் இலக்குவனார் அதை மறுத்து “Book of the learned” எனப் பொருள்கொள்வது கருதத்தக்கது.தொல்காப்பியர் சமற்கிருத இலக்கணங்களின் அடிப்படையில் தொல்காப்பியத்தைப் படைக்கவில்லை என்பதை உறுதிபடப் பல்வேறு சான்றுகளுடன் இலக்குவனார் நிறுவியுள்ளார்.

மொழிப் பொதுமைகள் (language universals) எனக்குறிப்பிடும்வகையில் தொல்காப்பியர் யாத்துள்ள சில நூற்பாக்களை இலக்குவனார் அடையாளங்காட்டியுள்ளமை அவரது நுட்பமான மொழியியல் அறிவிற்குச் சான்றாக நிற்கிறது.

*எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே*

(தொல்.640)

*பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்*

*சொல்லின் ஆகும் என்மனார் புலவர்*

(தொல்.641)

*வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது*

*நினையுங் காலைக் காலமொடு தோன்றும்*

(தொல்.683)

*பொருட்குப் பொருள் தெரியின் அதுவரம்பின்றே*

(தொல்.874)

*மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா*

(தொல்.**877)**

இலக்கணம் என்பது தொடரமைப்பை அடிப்படையாகக்கொண்டே உருபுகள், சொற்கள் தொடர்பான ஆய்வுகளை மேற்கொள்ளவேண்டும் என்பது இன்றைய மொழியியல் கொள்கைகளில் ஒன்றாகும். இதைத் தொல்காப்பியர் உணர்ந்து இலக்கணம் யாத்துள்ளமையை இலக்குவனார் நுண்ணிதின் ஆய்ந்து விளக்குகிறார்.

*வினையின் தோன்றும் பாலறி கிளவியும்*
*பெயரின் தோன்றும் பாலறி கிளவியும்*
*மயங்கல் கூடா தம்மர பினவே*

(தொல். 494)

என்னும் நூற்பாவில் எழுவாய்க்கும் பயனிலைக்குமிடையிலான பிணிப்பு **(concordance)** குறித்துப் பேசுவது ஓர் எடுத்துக்காட்டாகும்.

*பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே*

(தொல். 916)

என்னும் நூற்பாவும் தொடரியல் சார்ந்ததே.

பொருளதிகாரத்தில் இடம்பெறும் சில நூற்பாக்கள் இடைச்செருகல் என்பது இலக்குவனாரின் துணிபு.

*வண்டே இழையே வள்ளி பூவே*
*கண்ணே அலமரல் இமைப்பே அச்சமென்று*
*அன்னவை பிறவும் ஆங்கவ**ண்** நிகழ*
*நின்றவை களையுங் கருவி என்ப*

(தொல். 1041)

என்னும் நூற்பா அமைப்பிலும் பொருண்மையிலும் முன், பின் நூற்பாக்களுடன் பொருந்தவில்லை என வாதிடுகிறார்.

தொல்காப்பியத்தில் சில விடுபாடுகளைப்பற்றியும் இலக்குவனார் சுட்டிக்காட்டுகிறார். காலத்தை மூன்றாகப் பகுத்த தொல்காப்பியர் கால உருபுகளைப்பற்றி எதுவும் குறிப்பிடவில்லை என்பதும் வினாப் பொருளில் வரும் ‘யாது’, ‘எவன்’ சொற்களைக் குறிப்பிட்டவர் ‘யா’காரத்தையும் ‘எ’கரத்தை**யு**ம் வினா எழுத்துக்களாக எடுத்துக்கூறவில்லை என்பதும் எடுத்துக்காட்டுகள். இதுபோன்று தொல்காப்பிய நூற்பா மொழியில் இடம்பெறும் பல இலக்கணக் கூறுகள் நூற்பாக்களில் விளக்கப்படவில்லை என்பது கூர்ந்து ஆராயத்தக்கதாகும்.

எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும் ஒலி, எழுத்து, சொல்லுருபு, சொல், தொடர், பொருண்மை குறித்த இலக்கணவியல். பொருளதிகாரம் வாழ்வியலை உள்ளடக்கிய இலக்கியவியல் என்பது இலக்குவனாரின் கருத்தாகும். தொல்காப்பியத்தைக்கொண்டு ஈராயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகத்தின், தமிழரின், தமிழின் வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்ய இயலும் என்பது அவரது திறனாய்விலிருந்து புலப்படும் உண்மை. தொல்காப்பியத்தில் பொதிந்துள்ள இலக்கணவியல் இலக்கியவியல் கோட்பாடுகள் உலகிற்கே வழிகாட்டுவதாய் அமையும் என்பது அவரது உள்ளக்கிடக்கை. மேனாடுகளில் பிளாட்டோவும் அரிஸ்டாட்டிலும் பாடநூல்களில் இடம்பெறுவது**போல்** தொல்காப்பியரும் பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகப் பாடநூல்களில் இடம்பெறவேண்டுமென்பது இலக்குவனாரின் வேட்கை.

# தமிழறிஞர்களில் முதல்வர்

*முதன்முதலாகத் தொல்காப்பியர் விழா,திருவள்ளுவர் விழா,இளங்கோ விழா,ஔவையார் விழா,தமிழ் மறுமலர்ச்சி விழா என ஐந்து விழாக்களைத் தாம் பணியாற்றிவந்த கல்விநிறுவனங்களில் நட்த்தித் தமது மாணவர்களுக்கு மட்டுமன்றி அவர்தம் பெற்றோர்களுக்கும் தமிழுணர்வெழுச்சியை ஊட்டியவர் இலக்குவனார் அவர்களேயாவர்..

*தமிழ் வகுப்புகளில் மாணவர்கள் ஆங்கிலத்தில் வருகைப்பதிவு வழங்கிக் கொண்டிருந்த நிலையை மாற்றி”உளேன் ஐயா”என்று தமிழில் கூறும் வழக்கத்தைக் கொணர்ந்தவர் இலக்குவனாரே.

*மக்கள்மன்றத்தில் திருக்குறளை அறிமுகப்படுத்தும்வண்ணம் தந்தை பெரியார் எழுச்சியுடன் 1949-ஆம் ஆண்டு நடத்திய திருக்குறள் மாநாட்டுக்குப் பின் 1949-ஆம் ஆண்டு சிறப்புமிக்க திருக்குறள் மாநாட்டை நடத்தியவர் பேராசிரியர் சி.இலக்குவனார்.

*தாம் பணியாற்றிய இடங்களிலெல்லாம் அவரது தமிழ் எழுச்சியைத் தாங்கிக்கொல்ள இயலாத கல்லூரிப் பொறுப்பாளர்களால் பணிநீக்கம் செய்து “துரத்தப்பட்டவர்’பேராசிரியர் சி.இலக்குவனார்.

* எத்தகைய சூழலிலும் மனவுறுதியுடன் தமிழியக்கப்பணியே தமது தலையாய பணியெனக் கொண்டு தொண்டாற்றினார்.தாம் பணியாற்றச் சென்ற இடங்களிலெல்லாம் தமிழ் அமைப்புகளை நிறுவியும் இதழ்களை வெளியிட்டும் தமிழ்ப்பணியே தம் மூச்சாக்க் கொண்டு இயங்கினார்.

*அவர் நாகர்கோவில் தெ.தி.இந்துக் கல்லூரி முதல்வராக இருந்தபோது திருக்குறள் நூலை யானை மேலேற்றி யானையின் பின்னர்த் தேசிய மாணவர் படையை அணிவகுத்துவரச் செய்து அந்த அணிவகுப்பின் பின்னர் ஏனைய மாணவர்களையும் ஆசிரியர்களையும் நகரில் வாழும் பெருமக்கள் அனைவரையும் ஊர்வலமாக ‘நகர்வலம்’ வரச் செய்தார்.

* “தொல்காப்பியம்,திருக்குறள் இரண்டும் தமிழரின் இரு கண்களாகக் கருதிப் போற்றவேண்டும்’ என்னும் குறிக்கோளைப் பரப்பினார்.

*தொல்காப்பியம் முழுமையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துத் தமது ஆய்வுரையுடன் நூலாக வெளியிட்டார்.உலக அறிஞர்களின் கவனத்தைக் கவர்ந்த அம் மொழிபெயர்ப்பு தொல்காப்பியத்தை மட்டுமன்றிச் சங்க இலக்கியமரபுகளையும் அயல்நாட்டார் அறிந்துகொள்ளத் துணை புரிந்தது;துனையாக விளங்கிவருகிறது.

*தமிழின எழுச்சிக்குத் தந்தை பெரியாரையும் தமிழ்மறுமலர்ச்சிக்கு மறைமலையடிகளையும் தமது இருபெரும் தலைவர்களாகக் கருதி இயங்கியவர் இலக்குவனார்.



சென்னை மாநிலக் கல்லூரியில் பணியாற்றிய போது



துணை மேயராக இருந்த சிட்டிபாபு அவர்கள் பாராட்டுகிறார்.



மலேசியாவில்

# டாக்டர் இலக்குவனார் பொறுப்பில் விடுதலை

திருநகர், பிப். 8-

தடுப்புக் காவல் சட்டத்தின்கீழ் 1—2—65 அன்று கைது செய்யப்பட்ட டாக்டர் இலக்குவனார் 5-2-65 அன்று மூன்றாவது சப்-மாஜிஸ்ட்ரேட் முன்னர் கொண்டு விடப்பட்டார். பொறுப்பில் விடுதலை செய்யக் கோரி, இலக்குவனார் சார்பில் வழக்கறிஞர் தர்மராசு சந்தோஷம், ஏ. பி. எம். சுல்தான், ராமச்சந்திரன், ஆகியோர் வாதாடினார்கள். சர்க்கிள் இன்ஸ்பெக்டர் சச்சிதானந்தம் பொறுப்பில் விடுவதற்கு மறுப்பு தெரிவித்தார்.

நீதிபதி ஆவுடையப்பன் இருதரப்பினர் வாதத்தையும் கேட்டு, நிபந்தனையுடன் கூடிய பொறுப்பில், டாக்டர் இலக்குவனாரை விடுதலை செய்தார்.

திருநகரை விட்டு வெளியே செல்லக் கூடாதென்றும், 16ந் தேதியன்று இரண்டாவது சப் மாஜிஸ்ட்ரேட் முன் ஆசராக வேண்டுமென்றும், 16ந் தேதி வரை கல்லூரிக்கும் செல்லக் கூடாதென்றும் நிபந்தனை விதிக்கப்பட்டது.

# டாக்டர் இலக்குவனார் பரோலில் விடுதலை!

## திங்களன்று மதுரை வந்து சேருவார்

வேலூர், ஜூன் 19—

பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்யப்பட்டு, வேலூர் மத்தியச் சிறையிலிருந்த பண்டாரகர் இலக்குவனார் நேற்றிரவு 7 மணிக்கு பரோலில் விடுதலை செய்யப்பட்டார்.

கல்லூரிகளில் தமிழ் பாடமொழித் திட்டத்தை அமுல் நடத்த வேண்டுமென்பதை வலியுறுத்தி, பெருநடைப் பயணம மேற்கொள்ளவிருந்தார் பேராசிரியர் இலக்குவனார். அவரை அரசாங்கம் பாதுகாப்புச்சட்டப்படி கைது செய்து வேலூர் மத்திய சிறையில் வைக்கப்பட்டது நினைவிருக்கலாம்.

வயது முதிர்ந்த தனது அன்னையார் உடல் நலம் குன்றியிருப்பதால் அவரைப் பார்க்கவும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தேர்வாளர் கூட்டத்தில் கலந்துகொள்வதற்காகவும் பரோலில் பண்டாரகர் இலக்குவனார் விடுதலை செய்யப்பட்டுள்ளார்.

வேலூரிலிருந்து நேற்று இரவு 7 மணிக்கு அவர் விடுதலை செய்யப்பட்டார். அங்கிருந்து சென்னை வந்து சேர்ந்த இலக்குவனார் அவர்கள் உடன் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தேர்வாளர் கூட்டத்தில் கலந்துகொள்ள சிதம்பரம் சென்றார்.

தேர்வாளர் கூட்டத்தில் கலந்துகொண்டுவிட்டு, அங்கிருந்து ஜனதா எக்ஸ்பிரசில் புறப்பட்டு திங்களன்று மதுரை சென்றடைவார்.

மதுரை ரயில் நிலையத்தில் பேராசிரியர் இலக்குவனார் அவர்களை வரவேற்க கழகத் தோழர்களும், ஆதரவாளர்களும், பொதுமக்களும் பெருமளவு திரளாக வருகை தந்து வரவேற்பளிப்பார்கள்

**இந்தியாவிலேயே மொழிஉரிமை காக்க இருமுறை சிறைசென்ற தமிழ் உரிமைப் போராளி இலக்குவனார் அவர்களின் தியாக வரலாற்றைப் பதிவுசெய்யும் வகையில் நினைவுச் சின்னம் அமைக்கவேண்டாமா? அவர் மறைவுற்று ஐம்பதாண்டுகள் ஆகியும் இன்னும் ஏன் காலத்தாழ்வு?**




மின்னிதழ்:68 "குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்" தி.வ.ஆ.2054 ஆவணி--30-- பொ.ஆ.-2023-

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



# தந்தை பெரியார் – பேரறிஞர் அண்ணா சிறப்பிதழ்





### பெரியாரை வணங்கிடுவோம்

போதிமர வேர்நெய்த தாடி வானம்!
பொன்மழையாய்ப் பகுத்தறிவைப்பெய்த மேகம்!
சோதிதரும் பெண்ணுரிமை விளக்க மாகிச்
சொல்லரும்பில் வெடிக்கிடங்கை வைத்த தீரம்!
சாதிகொடும் சனாதனத்தின் கீழ றுக்கச்
சரித்திரத்தின் கீழடியாய் வந்த வேகம்!
நாதியற்றோர் நரம்புகளில் தன்மா னத்தின்
நாற்றுநட்ட பேருழவன் பெரியார்! நீதான்...

முப்போகம் விளைக்கின்ற வயலைச் செய்தாய்!
முத்தமிழால் வரப்பெடுத்து வேலி நட்டாய்!
தப்பாது திராவிடத்தின் தலைமை யேற்றுத்
தமிழகத்தில் ஆரியத்தின் களையெ டுத்தாய்!
எப்போதோ வீசியஉன் அரிவா ளுக்கு
இப்போதும் நடுங்குகின்றார்!இரவு நேரம்
குப்பையாக வந்துன்மேல் மோது கின்றார்!

குப்பென்று தீப்பிடிக்கக் கருகு கின்றார் !
உயிர்க்காற்றே நிகழ்காலம்! காற்றுப் போனால்
எதிர்காலம் என்பதுவும் இறந்த காலம்!
உயிர்க்காற்று நீயெமக்கு! காலந் தோறும்
**உயிர்த்துள்ளோம்! பயிர்க்காற்றாய்ப் பயன்கொடுப்போம்!**
உயிரெழுத்தே!தமிழ்நிலத்தின் உயிலெ ழுத்தே !
உனைத்தொட்ட விரல்நுனியில் சூரி யன்கள்!
உயிர்த்தெழுவே மந்திரச்சொல் பெரியார் என்னும்
உயிர்த்துள்ள அகநெருப்பின் ஊற்றே! வா! வா!

நாடற்றோர் ஒன்றிணைந்து சிதறி வந்தோர்
நம்வீட்டுத் திண்ணைநிழல் தேடி நின்றோர்
வீடற்ற வராய்நமையே மாற்றி வைத்து
வீறாப்புப் பேசுகின்றார்! நாடும் வீடும்
கேடர்களின் கூடாரம்ஆக்கி வைத்தார்!
கேட்டாலே தேசியத்தால் அடக்கு கின்றார்!
ஓடப்பர் உதையப்பர் ஆக வேண்டும்!
ஒருநாளுன் தடிகொடுநீ!அதுவே போதும்!
தடியால்நீ பூமியினைத் தட்டித் தட்டி
தமிழ்ப்பூமி ஆவதற்கோர் சிற்பி செய்தாய்!
பொடிமட்டைக் காரரொடு அவரின் பின்னால்
பொடிவைத்துப் பேசுகிற அவரின் தம்பி,
விடியலுக்குத் தளபதியாய் வரிசை கட்டி
வருகின்ற பரம்பரையின் ஆணி வேரே!
பொடிப்பயல்கள் சாணக்யப் புல்வ ளர்க்க
புலிக்கூட்டம் குளிர்காய இனிநாள் இல்லை!

பெண்டிர்க்கு வேலைவாய்ப்பில் முதலி டங்கள்!
பெண்டிர்க்குக் காசில்லாப் பயணத் திட்டம்!
உன்னுளத்தில் தைத்தமுட்கள் நீக்கு கின்றார்!
வெகுவிரைவில் நீட்டையுமே நீக்கி வைப்பார்!
மின்னணுவால் தொழில்நுட்பம்! தமிழ கத்தை
முன்வடிவ மாநிலமாய் ஆக்கு கின்றார்.!
பொன்கால முதல்வரென வடிவ மைத்த
போதிமர வேர்முகமே!வணங்கு கின்றோம்!

தமிழ்வாழ்த்து எழவைக்கும்!அரசின் ஆணை!
தமிழன்தான் கருவறைக்குத் தலைமை! ஆணை!
தமிழில்தான் வழிபாடு நடத்தும் ஆணை!
தமிழ்படித்தால் மட்டும்தான் அரசு வேலை!
தமிழ்நாடு தன்மான நாடாய் மாற
தளபதியுன் பேரன்தான் ஆணை செய்தான்!
தமிழால்நாம் ஒன்றுபட நீதான் மையம்!
தமிழகமுன் நினைவுநாளில் உறுதி செய்யும்!

அரிமாப் பாவலர் துரை.வசந்தராசன்

# தமிழும் அண்ணாவும்

தமிழ்மொழி பயிற்றுமொழியாக,ஆட்சிமொழியாக, வழக்குமன்ற மொழியாக, வழிபாட்டுமொழியாக வலிவுடன் அமைந்து பொலிவுபெறவேண்டும் என்பதே அண்ணாவின் குறிக்கோளாயமைந்து அவரது மொழிபற்றிய அணுகுமுறையின் சிறப்பையுரைக்கிறது.

உலக முதன்மொழியாள்
உயர்தனிச் செம்மொழியாள்
புலவர் புகழ்மொழியாள்
திகழ் செம்பொன்மொழியாள்
மிளிர்நன்மொழியாள்

எனத் தொடங்கும் அண்ணாவின் நெடிய கவிதை அவரது மொழிபோற்றும் மனப்பாங்குக்குச் சான்றாய் விளங்குகிறது. 'மொழியன்றோ ஓரினத்தின் விழி"எனவும் "இனத்தின் பண்பையும் நாட்டு வரலாற்றினையும் எடுத்துக்காட்டி வீரம் ஊட்டிடவல்ல தாய்" எனவும் தாய்மொழியை உருவகப்படுத்தும் அண்ணாவின் கருத்துகள் உலகத்தில் அமைந்துள்ள அனைத்து மொழிகளுக்கும் பொதுவான வரைவிலக்கணத்தை வழங்குகின்றன.

'தாய்மொழி மூலமே கல்வி கற்றுத் தரப்பட வேண்டும் ; கல்வி என்பது நம்நாட்டிலுள்ள வாழ்க்கை நிலைமைகளுடன் தொடர்பு உள்ளதாக இருக்க வேண்டும் ; மிகவும் ஏழையான இந்தியன் கூட மிகச் சிறந்த கல்வி பெறுவதற்கான நிலைமை தோற்றுவிக்கப்பட வேண்டும்' என்னும் அண்ணல் காந்தியடிகளின் கல்விச் சிந்தனையே அண்ணாவின் பயிற்றுமொழிக் கோட்பாட்டுக்கு முன்னோடியாய் அமைந்தது.

"தமிழைப் பாடமொழியாகவும் பயிற்சிமொழியாகவும் ஆக்கி,அதனால் ஆங்கில அறிவு குறையும் எனக் கருதினால்,ஆங்கில அறிவை அதிகப்படுத்த என்ன வழிகளை மேற்கொள்ளலாம் என்பதைப் பற்றி ஆராய்ந்து ஆங்கில அறிவும் கெடாமல்,தமிழ் உரிமையும் பாதுகாக்கப்படக் கூடிய அளவில் நம்முடைய கல்வித்திட்டம் திருத்தி அமைக்கப்படவேண்டுமென்பதையும் நான் இந்த நேரத்தில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்"எனச் சட்டமன்றத்தில் அன்றைய முதலமைச்சர் அண்ணா அவர்கள் குறிப்பிட்டார்.

தாய்மொழியைப் பேணும் அதேவேளையில் ஏனைய மொழியறிவும் மாணவர்களுக்குக் கிடைக்காமல் போய்விடக்கூடாது என்னும் அண்ண அவர்களின் முறைமையான கவலையை இந்தக் கூற்று புலப்படுத்துகிறதல்லவா?

தொன்மையான இலக்கியங்களை போற்றுவதுடன் புதுவதாகத் தோன்றும் இலக்கியங்களை வரவேற்று வாழ்த்தவேண்டிய கடப்பாடு நமக்கு இருப்பதை அண்ணா வலியுறுத்திக் கூறியுள்ளார்.

தொல்காப்பியம் நமக்கு இருககும்போது, நமக்கு வேறு என்ன வேண்டும்? என்றிருந்தால் அகநானூறும் சிலப்பதிகாரமும் கிடைத்திருக்க வழி உண்டா?சிலப்பதிகாரமே போதும் என்றிருந்தால் - கலிங்கத்துப்பரணி கிடைத்திருக்குமா?

கலிங்கத்துப் பரணியே போதும் என்றிருந்தால் - மனோன்மணீயம் தோன்றியிருக்க முடியுமா? மனோன்மணீயம் போதும் என்றிருந்தால் - பாரதியாரின் தேசிய கீதங்களைக் கேட்டிருக்க முடியுமா?

பாரதியாரின் தேசிய கீதங்களே போதும் என்றிருந்தால் தேசிகவிநாயகம் பிள்ளையின் தாயினும் இனிய அன்பு குழைந்தூட்டும் பாக்களைப் பார்த்திருக்க முடியாது.

தேசிகவிநாயகம் பிள்ளை போதும் என்றிருந்தால் - நாமக்கல்லாரின் (கவிஞர் வெ.இராமலிங்கம் பிள்ளை) கத்தியின்றி இரத்தமின்றி . . . என்னும் புது மாதிரியான சண்டைத் தத்துவப் பாடலைக் கண்டிருக்க முடியுமா?

அது போலத்தான் நாமக்கல்லாரே போதும் என்றிருந்தால் - கொலை வாளினை எட்டா - மிகு கொடியோர் செயல் அறவே!

என்னும் பாரதிதாசனின் உணர்ச்சி மிக்க புரட்சிகரமான பாடலைக் கேட்டிருக்க முடியாது!"

என்னும் அண்ணாவின் அடுக்குவினாக்கள் அவரது விரிந்துபரந்த இலக்கிய அறிவுக்குச் சான்றாயமைவதுடன் இலக்கியவளர்ச்சிக்குத் தேவையான ஆக்கவழி அணுகுமுறையை நயம்பட நவில்கின்றன.

தமிழின் இலக்கியவளம் நம்மைத் தலைநிமிர்ந்து செம்மாந்திருக்கச் செய்யும் தகைமை வாய்ந்தது என்பதில் யாருக்கும் இருவேறுபட்ட கருத்து இருக்கமுடியாது.

”உலகோர் முன் - அவர் எம்மொழியினராயினும் சரியே - எத்துணைக் கலையியல் வாய்ந்த எழுத்தாண்மைத் திறம் படைத்திட்ட நாட்டவரானும் சரியே - நாம் தலைநிமிர்ந்து கூறிடலாம் அவரிடம்:எம்மொழி தமிழ் மொழி. மிகச் செழுமையான மொழி. கலைப் பண்பார்ந்த ஏட்டுக் கருவூல வளம் - காலக் கூறுக்கு ஏற்ற இலக்கியப் பகுதி ஏராளம் உண்டு எம்மிடம் - எமது செந்தமிழில்! - என்று.”

என அண்ணா கூறுவதை நாமும் உவப்புடன் உலகுக்கு உரைக்கலாம்.

தமிழ்நாட்டில் வணிகநிறுவனங்கள் அனைத்தும் தாய்மொழியைப் புறக்கணித்து ஆங்கிலத்திலேயே பெயர்ப்பலகைகளை அமைத்திருத்தலைச் சுட்டிக் காட்டி அவை தமிழில் அமையவேண்டும் என அண்ணா அறிவுறுத்துகிறார்.

”வாணிகம் செய்வோரும் தமிழர், வாங்குவோரும் தமிழர்கள், இந்த நிலையில், இருசாராருக்கும் புறம்பான மற்றொரு மொழி எதற்காக?

தப்பித் தவறி, ஒரு சில வணிகர்கள் தமிழிலேயே விளம்பரப் பலகை தொங்கவிட்டிருந்தாலும், அந்தப் பலகையிலிருக்கும் தமிழ் வாக்கியங்கள் பரிதாபப்படக்கூடியவைகளாக இருக்கின்றன. ‘வல்லினம்’, ‘மெல்லினம்’ ‘இடையின’ வேற்றுமைகளைப் பொருட்படுத்தாத சமரச மனப்பான்மையில், அந்தப் பலகைகள் எழுதப்பட்டுவிடுகின்றன.

20,25 ஆண்டுகளுக்கு முன் ஜப்பான் நாட்டிலும் இதுபோன்ற நிலை இருந்தது. இலக்கணத்துக்கு மாறாக, தவறுடன் எழுதப்பட்டிருக்கும் பலகைகளைத் திருத்தி எழுதி மாட்ட வேண்டுமென்று, தங்கள் மொழியில் அக்கரை கொண்ட ஜப்பானிய இளைஞர்கள், ஒரு குறிப்பிட்ட காலவரையறையுடன் கூடிய அறிக்கையொன்றை வெளியிட்டனர். கால வரையறை கடந்தும் திருத்தப்படாத பலகைகளைத் தாங்களே எடுத்துக் கொண்டு போய்த் திருத்தி எழுதி வந்து மாட்டிவிட்டனர். ஜப்பானிய இளைஞர்களுக்கு ஏற்பட்டது போன்ற மொழி ஆர்வம் இங்குள்ள இளைஞர்களுக்கு ஏற்பட வேண்டும்”

என்று உலகத்தோடு ஒட்ட ஒழுகும் நெறியைக் கனிவுடன் இயம்புகிறார்.

## நட்பியல்சிந்தனைகள் -- அன்புசெயா, சிட்னி, ஆஸ்திரேலியா

(anbujaya2005@yahoo.com.au)

நட்பு என்பது ஒத்த மனப்பான்மை கொண்ட இருவர்க்கு இடையில் நிலவும் அன்பின் பிணைப்பு என்று கூறலாம். அது ஒருவர் நலன் மீது மற்றவர் காட்டுகின்ற அக்கறை, ஒருவருக்குத் துன்பம் நேர்கையில் அதைப் போக்குவதற்கு விரைந்து சென்று உதவுதல் போன்ற பல கூறுகளை உள்ளடக்கிய பண்பு.

ஔவையாருக்கும் அதியமானுக்கும் இடையே இருந்த நட்பையும், பிசிராந்தையாருக்கும் கோப்பெருஞ்சோழனுக்கும் இடையே இருந்த நட்பையும் நட்பின் உச்சகட்டமாகக்கருதுகின்ற வழக்கம் இன்றும் இருந்துவருவதைக் காணமுடிகிறது.

வள்ளுவப்பெருந்தகை நட்பியலின் கீழ் நட்பு, நட்பாராய்தல், பழைமை, தீநட்பு, கூடாநட்புஉள்ளிட்ட 17 அதிகாரங்களைப் படைத்துத் தந்துள்ளார். இதில் முதல் ஐந்து அதிகாரங்களை நட்பின் இயல்புகளையும், சமூகவாழ்வில் நாம் நோக்கவேண்டிய முக்கியமான விடயங்களையும் வரையறுத்துக் கூறியுள்ளார். ஒவ்வொரு அதிகாரத்திற்கும் 10 குறட்பாக்களையாத்துள்ளார். அவற்றில் சிலவற்றை மட்டும்உற்றுநோக்குவது இக்கட்டுரையின் நோக்கமாக அமைகின்றது.

நட்பு

நாம் உலகமெல்லாம் தேடி அலைந்தாலாவது பெறக்கூடியது நட்பைப் போன்று வேறு சிறந்த பொருள் எதுவுமில்லை என்று வள்ளுவப்பெருந்தகை நட்பு அதிகாரத்தை,

செயற்கரிய யாவுள நட்பினது போல்

வினைக்கரிய யாவுள காப்பு. (குறள்-781),

என்ற குறளுடன் துவக்கி, அப்படிப்பட்ட நட்பு அறிவாளிகளுடன் அமையுமானால்

அதுவளர்பிறை போல வளர்ந்து கொண்டே போகும்,

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்

பின்நீர பேதையார் நட்பு. (குறள்-782),

என அறிவில்லாதவருடன் அமையும் நட்பானது தேய்பிறை போல தேய்ந்து ஒருநாள் மறைந்து போகும் என்று யாரிடம் நாம் நட்பு வைத்துக்கொள்வது சிறப்பு என்று நமக்கு அறிவுறுத்துகின்றார்.

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்

பண்புடையாளர் தொடர்பு. (குறள்-783),

ஒருநூலைப் படிக்கப் படிக்க அதிலுள்ள நற்செய்திகள் விளங்குவதுபோல்,

பண்புடையாளர்களிடம் உண்டாகும் நட்பு அவர்களுடன் பழகப்பழக மகிழ்ச்சி தரும் என்று பண்புடைவர்கள் நட்பின் தன்மையை உணர்த்துகின்றார்.

எப்படிப்பட்டவருடன் நாம் நட்புவைத்துக் கொள்ளவேண்டுமென்று கூறிய வள்ளுவர்பெருமான்,

நட்பின் பயன் பற்றி,

நகுதற்பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்

மேற்சென்றிடித்தற் பொருட்டு. (குறள்-784),

என்று நண்பன் ஒருவன் தவறு செய்யும்போது அவனைத் தடுத்து நிறுத்தி அறிவுரை கூறுவதற்குப் பயன்படுமாறு அமையவேண்டும். அப்படியின்றி சிரித்து மகிழ்வதற்கு மட்டுமாக நட்பு அமைதல் கூடாது என்று ஒருவரைமுறையும் வகுத்து,

அழிவினவை நீக்கி ஆறுய்த்தழிவின் கண்

அல்லலுழப்பதாம் நட்பு. (குறள்-787),

என, ஒருவனை தீயவழியிலிருந்து தடுத்து, நல்வழியில் அவனைச் செலுத்தி, அவனுக்குத்

துன்பம் நேரும்பொழுது அவனுடனிருந்து அதைப் பகிர்ந்து கொள்வதும்,

உடுக்கையிழந்தவன் கைபோல ஆங்கே

இடுக்கண்களைவதாம் நட்பு. (குறள்-788),

என்று ஒரு சபை நடுவில் ஒருவனது உடையானது நழுவிவிழும்போது அவனுடைய கையானது எப்படி உடனே உதவிக்கு வருகின்றதோ அதைப் போல நண்பனுக்குத் துன்பம் வரும்போது தானாகச் சென்று உதவிபுரிவதுவே உண்மையான நட்பாகும் என்று நட்புக்கு இலக்கணம் வகுத்துள்ளார் நம் வள்ளுவர்பெருமான்.





தமிழ் உரிமைப் போரில் களம் கண்டு வேலைநீக்கமும் செய்யப்பெற்று வேலூர்ச்சிறையில் இரண்டரை மாதம் சிறைப்பட்டு வெளியே வந்த இலக்குவனார்க்குத் தமிழக மாணவர்கள் எடுத்த 55-ஆம் பிறந்தநாள்விழாவில் அண்ணா உரையாற்றுகிறார்..

குறள்நெறி ‘அலுவலகத்தில் பேராசிரியர் சி.இலக்குவனாரை அண்ணா காணவந்த தருணம்

வேலூர்ச் சிறையிலிருந்து பேராசிரியர் சி.இலக்குவனார் விடுதலை பெற்று வந்தபின்னர் அண்ணா மதுரைக்கு வந்தபோது இலக்குவனாரை அவரது குறள்நெறி அலுவலகத்துக்கு வந்து சந்தித்தார்.

பாதுகாப்புக் கைதியாகத் துன்புறுத்தப்பட்டும் அதற்கு மேலாகப் பணிநீகம் செய்யப்பட்டு வருவாய் இழந்து வாட்டமுறச் செய்தும் காங்கிரசு அரசு நிகழ்த்திய கொடுமைகளுக்கு ஆளாக்கப்பட்ட இலக்குவனாரைப் பரிவோடும் பாசத்தோடும் பார்க்கவந்த அண்ணாவின் நட்புணர்வை அன்றைய அரசு ஐயத்துடன் பார்த்தது.அலுவலகத்துக்கு வெளியே குற்றப்புலனாய்வு ஒற்றர்கள் பத்திரிகை செய்தியாளர்களைப் போல வேடந்தாங்கிக் காத்திருந்த கதை விரிக்கச் சுவையாக இருக்கும்.






மின்னிதழ்:69 **“குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்”** தி.வ.ஆ.2054 புரட்டாசி-14-- பொ.ஆ.-2023அக்குத்தோபர்-1

## நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



## வள்ளுவர் – வள்ளலார்-அம்பேத்கர் சமதருமச் சிறப்பிதழ்




**குறள் : 972**

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.





சாதி என்பது எண்ணம்; அந்த எண்ணப் போக்கிற்கு மதமே காரணம்.இந்திய நாட்டில் சமூகச் சீர்திருத்தத்திற்கான வழி சொர்க்கத்திற்குச் செல்லும் வழியைப் போலவே கரடுமுரடானது.சமூகச் சீர்திருத்தம் என்றால், இந்துக் குடும்பத்தைச் சீர்திருத்துவதா? அல்லது இந்து சமுதாயத்தைச் சீர்திருத்தி புத்தாக்கம் செய்வதா? என்னும் வகைப்படுத்தி இரண்டிற்கும் இடையேயுள்ள வேறுபாட்டினை முதலில் புரிந்து கொள்ள வேண்டும். முதலாவதாகக் கூறப்பட்டுள்ள சீர்திருத்தம் விதவை மறுமணம், குழந்தைத் திருமணம் ஆகியவற்றோடு தொடர்புடைய குடும்பச் சீர்திருத்தம் சார்ந்தது. இரண்டாவதாகக் கூறப்பட்ட சீர்திருத்தம் சாதி அமைப்பை ஒழிப்பது தொடர்புடைய சமூகச் சீர்திருத்தம் சார்ந்தது.

**அண்ணல் அம்பேத்கர்**



சாத்தி ரம்பல பேசுஞ் சழக்கர்காள்! கோத்தி
ரமுங் குலமுங்கொண்டென்செய்வீர்?
----திருநாவுக்கரசர்
ஒன்றே குலம் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின்”… திருமூலர்
சாதியிலே மதங்களிலே
சமய நெறிகளிலே
சாத்திரச் சந்தடிகளிலே
கோத்திரச் சண்டையிலே
ஆதியிலே அபிமானித்
தலைகின்ற உலகீர்
அலைந்த லைந்து வீணேநீர்
அழிதல் அழகலவே--வள்ளலார்
தகரென்று கொட்டு முரசே-பொய்ம்மைச்
சாதி வகுப்பினை யெல்லாம்
-மகாகவி பாரதியார்.
சாதி யொழித்திடல் ஒன்று-நல்ல
தமிழ் வளர்த்தல்மற் றொன்று!
பாதியை நாடு மறந்தால்-மற்ற
பாதி துலங்குவ தில்லை!
பாவேந்தர்

# வள்ளுவர் வகுத்தளித்த சமதருமநெறியும் வஞ்சனை புகுத்துகின்ற மனுதருமநெறியும்

***மறைமலை இலக்குவனார்***

மனிதர்களுள் ஒரு பிரிவினை 'சூத்திரன்' என்று இழிவுபடுத்தி மீளா அடிமைகளாக்கியும் ஒரு பிரிவினரை 'பிராமணர்' 'பூசுரர்' என தலைமை தாங்கும் தகைமை அளித்தும் இரு வேறுபட்ட நிலையைப் பேணி வரும் இந்த வருணாசிரக் கொடுமை இந்தியாவில் மட்டும் நிலவி வருவதற்குரிய காரணத்தைச் சமூக வரலாற்று வரலாற்று ஆய்வாளர் பலரால் கண்டுபிடிக்க முடியவில்லை. உலூயி தூமந்து என்னும் அறிஞர் "இந்தியர்கள் மனித இனத்தின் ஒரு தனிப்பட்ட பிரிவைச் சேர்ந்தவர்கள். சமூகப் படிநிலைகளை அடிப்படையாகக் கொண்டே தமது வாழ்வை அமைத்திடும் தனித்தன்மை பெற்றவர்கள்" எனக் குறிப்பிட்டார்.Homo hierarchicus என்னும் சொல்லால் இவர் இந்தியர்களைக் குறித்தார்.

> '' இந்து சமயம் பாகுபாட்டை அடிப்படையாகக் கொண்டது. சிலருக்குச் சில உரிமைகளை வழங்குவதும் பலருக்கு அவற்றை மறுப்பதும் இந்து சமயத்தின் அடிப்படைப் பண்பாக விளங்குகிறது இந்து சமயத்தைச் சார்ந்த ஒருவன், தான் மேற்கொள்ள விரும்பும் தொழிலை, தனது விருப்பத்தின் பேரில் தெரிவு செய்யும் உரிமை மறுக்கப்பட்டவனாகவே விளங்குகிறான். யார், யாருடன், அமர்ந்து உணவு உண்ணலாம் என்பதையும் சமயமே வரையறுக்கிறது" என்று சாதி

ஏற்றத்தாழ்வைப் பற்றிய தமது கருத்தை குரே(G.S.Ghurye:Caste and Race in India;Popular Prakashan,Bombay:1994) கூறியுள்ளார் திருவள்ளுவர் ''வள்ளுவர்'' என்னும் அட்டவணை வகுப்பை சேர்ந்தவர் என்று குறிப்பிடும் குரே காரைக்கால் அம்மையார் பறையர் குலத்தை சேர்ந்தவர் என்று கருதுகிறார்.(pp.361-363) இக்கருத்துக்கு எத்தகைய சான்றாதாரத்தையும் அவர் வழங்கவில்லை தமிழ்நாட்டில் சாதி மோதல் ஏற்பட்டதற்கு, மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சிக்காலக் கல்வெட்டுச் சான்று இருப்பதாக குறிப்பிடும் குரே வலங்கை-இடங்கை பிரிவினர்களிடையே நடந்த சாதி மோதலில் தஞ்சை பாபநாசம் வட்டத்தைச் சேர்ந்த இராசமகேந்திர சதுர்வேதிமங்கலம் என்னும் கிராமம் கொளுத்தப்பட்டது என்கிறார். மூன்றாம் குலோத்துங்கன் (1778-1216)) காலத்தைச் சேர்ந்த இந்த நிகழ்வு, தமிழர் இடையே, சாதிப்பூசல் நிலவி வந்ததற்குரிய வரலாற்றுச் சான்றாகும். வலங்கைப் பிரிவில் 60 சாதிகள் இருந்ததாகவும் இடங்கைப் பிரிவில் ஆறு சாதிகள் மட்டுமே இருந்ததாகவும் அவர் மேலும் தெரிவிக்கிறார்.

காசியப முனிவரின் யாகத்தைக் காப்பதற்கு அக்கினி குண்டத்தில் தோன்றியவர்கள் இடங்கைப் பிரிவினர் என்னும் ஒரு நம்பிக்கை நிலவி வந்தது. பிராமணர்களின் பாதுகைகளையும் குடைகளையும் ஏந்தி நிற்பவர்கள் இடங்கைப் பிரிவினர் என்றும் கருதப்பட்டு வந்தது

25- 6- 1809 ஆம் நாள் அன்று செங்கல்பட்டு மாவட்ட நடுவர் வழங்கிய தீர்ப்பு அந்நாளிலும் இடங்கை-வலங்கை மோதல் நிலவியமைக்குச் சான்று பகர்கிறது. கரிகால் சோழனிடம் முறையிடச் சென்றவர்களில் மன்னனுக்கு இடப்பக்கத்தில் நின்று முறையிட்டவர் இடங்கையினர் என்றும் வலப்பக்கத்தில் நின்று முறையிட்டவர் வலங்கையினர் என்றும் அழைக்கப்பட்டதாக நிலவிவரும் செவி வழிக் கதை இப்பிரிவை இன்னும் முற்பட்ட காலத்திற்குக் கொண்டு செல்கிறது; முதலாம் இராசராசனின் ''வலங்கை-வேளைக்காரப் படைகள்'' பற்றிய குறிப்பும் கவனிக்கத்தக்கது. காசியப முனிவரின் பல்லக்கிற்கு வலப்பக்கம் நின்றவர் வலங்கையினர் என்றும் இடப்பக்கம் நின்றவர் இடங்கையினர் என்றும், வலங்கையினர் சிவன் திருமால் ஆகிய தெய்வங்களை வழிபட்டனர், இடங்கையினர் பார்வதி காளிகை வழிபட்டனர் என்றும் கூறப்பட்டு வருகின்றது. வலங்கையினர் பெரும்பாலோர் ஆகவும் இடங்கையினர் சிறுபான்மையினராகவும் கூறப்படுவதும் இடங்கையினர் பதினோராம் நூற்றாண்டுக்கு பின் கன்னட தெலுங்கு பகுதிகளில் இருந்து வந்து குடியேறியவர் எனக் குறிப்பிடப்படுவதும் கருத்தில் கொள்ளத்தக்கன. வலங்கையினர், ஊர்வலங்களில் குதிரை இவர்ந்து செல்லும் உரிமை பெற்றிருந்தனர். திருமணப் பந்தலில் 12 தூண்கள் அமைத்துக் கொள்ளும் தகுதியும் இவர்களுக்கே உண்டு. இடங்கையினருக்கு இச்சலுகையில் இச்சலுகைகள் மறுக்கப்பட்டதுடன் மேலும் சில சடங்குகளுக்கு இசை வழங்கப்பட்டிலர் இத்தகைய துலக்கமான சாதிப்பிரிவுகள் சங்க காலத்தில் நிலவவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ''வட இந்தியப் பகுதியில் இருந்தது போல் தமிழகத்தில் சாதிமுறை வளர்ச்சி அடையவில்லை'' என்னும் வின்செண்ட் சுமித்து கூற்றும் ''வருண தர்மம் தமிழர் அறியாத ஒன்று'' என்னும் வி கனக சபையின் கூற்றும் மறுக்க இயலாதவையாகும். சங்க இலக்கியத்தில் கூறப்படும் 'குடி'கள் சாதி அமைப்புகள் அல்ல. குறவர் குடி, வேட்டுவர் குடி, கானவர் குடி, உழவர் குடி, பரதவர் குடி, எயினர் குடி, மறவர் குடி என்பவை நிலமும் தொழிலும் சார்ந்த பிரிவுகள் ஆகும் ''துடியன் பாணன் பறையன் கடம்பன் என்று இந்நான்கு அல்லதும் குடியும் இல்லை'' என்னும் மாங்குடி கிழாரின் கூற்றும் சாதிப் பிரிவுக்கு ஆதாரமாகக் கொள்ளத்தக்கது அல்ல;' ஒருவீர் தோற்பினும் தோற்பது நுங் குடியே' 'ஒரு குடிப் பிறந்த பல்லோருள்ளும்' என்னும் சங்க இலக்கியக் குறிப்புகள் 'குடி' எனக் குறிப்பது அற்றை நில உடமைச் சமூக அமைப்பில் நிலவி வந்த குடும்ப கூட்டமைப்பையே எனலாம். ஆவியர், ஓவியர்,மழவர் முதலியவை இனக்குழுக்களின் தொல் எச்சமே நீர்வாழ் சாதி என்னும் தொல்காப்பியக் குறிப்பும் (மரபியல் 588) பறவைச் சாதி என்னும் பெரும்பாணாற்றுப்படைக் குறிப்பும் தவிர 'சாதி' என்னும் பயன்பாடு அருகியே காணப்படுகிறது

'பிற' 'பிறப்பு' என்னும் பொருள் உடைய 'ஜா' என்னும் வடசொல்லிலிருந்து பிறந்த சொல்லே ஜாதி என்கிறார் தொ.பரமசிவன். (சங்க இலக்கியத்தில் சாதி அமைப்பின் மூலப் படிவங்கள்: 'சாதி மதங்களைப் பாரோம்- பொன்னீலன்& முப்பால் மணி, பேரா நா. வானமாமலை வெளியீட்டகம், கன்னியாகுமரி. 1999) அகமண முறை உடைய அதனால் பிறப்பு வழிப்பட்ட சாதியப் படிநிலைகளை -குறிப்பாகப் பார்ப்பன மேலாண்மையை- ஏற்றுக் கொள்கின்ற, குறிப்பிட்ட தொழிலோடும் நிலத்தோடும் பிணைக்கப்பட்ட, சடங்கு சாத்திர அடையாளங்களை உடைய ஒரு மக்கள் திரளையே நாம் இன்று சாதி என்னும் பெயரோடு அடையாளப்படுத்துகிறோம்'' என்கிறார் தொ.பரமசிவன்

சங்க காலத்தில் சாதி அமைப்பு முறையோ சாதிப் பாகுபாட்டு மறையோ சாதி பாகுபாட்டு முறையோ நிலவி வந்தமைக்கு சான்று காட்ட முடியாது .ஆனால் பார்ப்பனர் பரதவர் என்னும் இரு சங்கச் சொற்கள் இன்று நிலவும் இரு சாதிகளை குறிக்கிறது என்பதனை மறுத்தல் இயலாது. ''பொதுவாகச் சாதிமுறை முழுவதற்குமே அந்தணர் அச்சாணி ஆவர்'' என்னும் வரலாற்று அறிஞர் சுப்பிரமணியனின் கருத்து

(சங்க கால வாழ்வியல் :பக்கம் 314) இங்குக் குறிப்பிடத்தக்கது சங்க காலத்தில் சேரிகளில் வாழுமாறு ஒதுக்கப்பட்டிருந்த பார்ப்பனர் கேள்விகளில் மயக்கம் ஏற்படுத்தி தமிழ் வேந்தர்களுள் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதிகளும், இராச சூயம் வேட்ட பெறுநற் கிள்ளிகளும் பல்கிப் பெருக வழிவகுத்தனர். சங்க காலத்திற்குப் பின்னர் களப்பிரர் காலத்தில் ஒதுக்கவும் ஒடுக்கவும் பெற்றிருந்த பார்ப்பனர் ,பல்லவ அரசர்களால் பெருவாழ்வு பெற்றனர். பிற்காலச் சோழர்கள் காலத்தில் பார்ப்பனர்கள் அரசர்களுக்கு சமமான சிறப்பு அணி பெற்றிருந்தனர்.கூரம் செப்பேடுகள், இரண்டாம் மகேந்திரவர்மன் வருணாசிரம தருமத்தைக் கடைப்பிடித்து வந்தமையைத் தெளிவுறுத்துகின்றன. பல்லவர் காலத்திலேயே பிராமணர்கள் அரசியலில் ஊடுருவினர் என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் கிடைத்துள்ளன. அமைச்சர்கள், திருமந்திர ஓலை நாயகர், கணக்கர், கரணத்தார் என்னும் பொறுப்புகளைப் பிராமணர்கள் ஏற்று நடத்தினர் இதன் விளைவாக வருண தரும முறை பெருவழக்குப் பெற்றிருக்கும் என்பதும் சூத்திர இன இழிவு தமிழினத்தைச் சூழப்பெற்றிருக்கும் என்பதும் வெள்ளிடை மலை .பிராமணர்கள் அரசு அதிகாரிகள் வீற்றிருந்த அக் கால வேளைகளில் எத்துணை நந்தன்கள், பெற்றான்கள், சாம்பான்கள் ‘சோதியில் கலந்து’ இருப்பரோ? தமிழகத்தைப் பொறுத்தவரை எந்த மன்னனுமே சத்திரியர் என்று அழைக்கப்பட்டதாகக் கூற இயலாது. பாண்டியனும் சேரனும் சோழனும் சூத்திரன் என்னும் இழிநிலையைத் தாங்கியே பின்னர் உருவழிந்தும் போனார்கள் ஆனால் பிராமணர்களால் உருவாக்கப்பட்ட சாதி அமைப்பு சந்ததமும் தழைத்துச் செழித்துத் தமிழகத்தைப் பாழ்படுத்தி நிற்கிறது. “சாதி ஒழிய வேண்டுமானால் சாதி அமைப்பை உருவாக்கிய பிராமணர்களின் சதி ஒழிய வேண்டும். வருணாசிரம தருமம் தடை செய்யப்பட வேண்டும். அதனை நிலைநாட்டும் இந்து சமயக் கருத்துக்கள் தகர்க்கப்பட வேண்டும்.” என அம்பேத்கர் முழங்கினார்.( சாதி ஒழிப்பு-சமூக நீதிப் பதிப்பகம் திருப்பூர் 1992)

சாதி அமைப்பைப் பற்றிய அண்ணலார் அம்பேத்கர் கருத்தினை காண்போம்.

“ சாதி அமைப்பு தொழில்களை மட்டும் பிரிப்பதில்லை. தொழிலாளர்களையுமே பிரித்து விடுகிறது. அவ்வாறு பிரிக்கப்பட்ட தொழிலாளிகளை மேல் கீழ் என்று ஏற்றத்தாழ்வாகப் படிநிலை அமைப்பாக வகைப்படுத்தும் பணியைச் சாதி அமைப்பு செய்து வருகிறது இது தன் இயல்பான போக்கில் உருவானது அல்ல. ஒருவர் பெற்றுள்ள திறமையின் அடிப்படையில் அல்லாமல் அவரது பெற்றோரின் சமூக அந்தஸ்தின் அடிப்படையிலேயே அவரது வேலை நிச்சயிக்கப்படுகிறது தொழில்களை மாற்றிக்கொள்ள சாதி அனுமதிப்பதில்லை.”

எனச் சாதி அமைப்பை ஆழ்ந்து பகுத்தாய்ந்து அண்ணல் அம்பேத்கார் தமது ஆய்வு கருத்தினை வெளியிட்டார் அண்ணல் அம்பேத்கார். அம்பேத்கரின் கருத்துக்களையும், சாதி அமைப்பை ஒழிக்க வேண்டுமானால் இந்து சமயத்தை தகர்த்தெறிய வேண்டும் என்னும் அறைகூவலையும் அண்ணல் காந்தி அடிகளார் ஒட்டுமொத்தமாக மறுத்தார். அவரது ‘அரிஜன்’ இதழில் பின்வருமாறு எழுதினார்.

“ ஆன்மீக குருவாக இருப்பது என்னும் பிராமணனின் தொழிலும் தோட்டி ஒருவனின் தொழிலும் சமமானவையே. தத்தமக்குரிய கடமைகளை பிராமணனும் தோட்டியும் சரியாகச் செய்வது ஒரு காலத்தில் கடவுளின் கண்களுக்கு சமமான சிறப்பு உடையதாகவே காட்சி அளித்தது.”

> “ சைத்தன்யரும் ஜெயதேவனும் துக்காராமும் திருவள்ளுவரும்…. இன்னும் சுலபமாக பேர் சொல்லிவிடக் கூடிய ஏராளமானவரும் ஏற்றுக்கொண்ட ஒரு மதமானது டாக்டர் அம்பேத்கர் தம் உரையில் சித்தரித்துக் காட்டி உள்ளபடி முழுக்க முழுக்க தகுதி இழந்தது ஆகிவிட முடியுமா?” --அரிஜன் ஆகஸ்ட் 18 1936

அண்ணல் காந்தியடிகள் கூறியது போலத் திருவள்ளுவர் இந்து சமயக் கருத்துகளையும் வருண அமைப்பையும் ஏற்றுக் கொண்டவரா? சாதி ஒழிப்புக்குப் வள்ளுவர் பரிந்துரைக்கும் வழிமுறைகள் யாவை? இன்றைய தமிழகத்தை அலைக்கழிக்கும் சாதியும் என்னும் பெருநோய் ஒழிந்திட வள்ளுவர் வழங்கும் மொழியும் தீர்வுகள் யாவை என்பதை பற்றியே கட்டுரை ஆய விழைகிறது

“பிறப்பால் உயர்வும் பீடிலாத் தாழ்வும் மக்களுக்கு என்றும் மாறா நிலையில் சாதியில் விதிக்கும் தருமசாஸ்திரமும் சாதி என்னும் சொல்லும் கருத்தும் ஆரியர் மொழியும் வரவும் படைத்த அரும்பயிர் விளைவு; அதை அறவே மறுத்துப் ‘பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்’ என்று வழங்கும் வள்ளுவர் தமிழ்க் குறள் பிறப்பால் உரிமையும் சாதி நீதியும் பேசாதது மட்டுமல்ல; ‘பெருமைக்கும் ஏனை சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக்கல்” என்று தமிழ்க் கொள்கையை வரையறுக்கிறது. இருபிறப்பாளர் மூவகை மக்களும் ஒரு பிறப்புடைய இருகாற் பொதிவிலங்கு ஒருவகை மக்களும் தருமநூல் விதிக்கும் மாந்தர் வகை முறை. இவ்வருண தர்மம் குறளமறியாக் கொள்கையாகும்” என நாவலர் சோமசுந்தர பாரதியார்( திருவள்ளுவர்- நாவலர் புத்தக நிலையம் மதுரை. 1997) திருக்குறள் வருண தருமத்தை மறுத்துரைக்கும் நூல் என்பதைத் தெளிவுறுத்துகிறார்.

“ பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்” என்னும் குறள் வருணாசர தருமத்தினைத் தகர்த்தெறிய முனையும் பேரிடியாகும் என்பதனை நாவலர் நெடுஞ்செழியன் தமது திருக்குறள் தெளிவுரையில் அறுதியிட்டுரைக்கிறார். “பிராமணன் முதல் வருணத்தான் ஆனதாலும் பிரம்மாவின் முகமாகிய உயர்ந்த இடத்தில் பிறந்ததினாலும் எல்லா வருணத்தினுடைய பொருள்களையும் தானம் வாங்க தலைவனாகிறான்.” (அத்தியாயம் 1 சுலோகம் 100 -மனுதர்ம சாத்திரம்) என்றும், “சூத்திரன் பிராமணர்களைத் திட்டினால் அவன் தாழ்ந்த இடமான காலில் பிறந்தவனாகையால் அவன் நாக்கை அறுக்க வேண்டும்.” (அத்தியாயம் 8 சுலோகம் 270) என்றும் பிராமணனுக்கு மங்களத்தையும் சத்திரியனுக்கு வலுவையும் வைசியனுக்குப் பொருளையும் சூத்திரனுக்குத் தாழ்வையும் காட்டுகிற பெயரை இட வேண்டும்” என்றும் கூறுவது மனுவின் தர்மம் ஆகும்

பிறப்பினால் வேற்றுமை பாராது, செய்யும் செயலினால் ஒழுக்கத்தால் உயர்வு தாழ்வு காண்பது வள்ளுவர் அறம். உயர்ந்த ஒழுக்கம் உடையவன் பொருளாதாரப் படிநிலையில் கீழ் இருந்தாலும் அவன் மேலானவனே. பொருள்வளத்தில் மிக உயர்ந்த இடத்தில் இருந்தாலும் தவறான ஒழுக்கம் மேற்கொள்பவன் கீழானவனே என்பது வள்ளுவர் வகுக்கும் வாழ்க்கை நியதியாகும்.

“ மேலிருந்தும் மேல் அல்லார் மேல் அல்லார் கீழ் இருந்தும்
கீழல்லார் கீழல் லவர்” என்னும் குறள் வள்ளுவர் மக்களை மேல் கீழ் என்று பிரித்தற்குப் பண்பையே அடிப்படையாகக் கொண்டார் என்பதைத் தெளிவுபடுத்துகிறது “மனையும் மாடும் பொருளும் பூமியும் முதலியவற்றான் மேலாயினாருள் தன் குலமும் ஒழுக்கமும் குணமும் ஞானமும் முதலியவற்றால் மேம்பாடு உடையார் அல்லாதார் யாவர் அவர் விஞ்ஞானம் சிறியரே இனிமற்று அம்மனையும்

மாடும் முதலியவற்றால் கீழ்ப்பட்டிருந்தும் அக் குலமும் ஒழுக்கமும் முதலியவற்றால் சிறிதும் கீழ்மைப்பாடு உடைய வரலாறு யாவர்? அவர் எஞ்ஞான்றும் சிறியரே;இனி மற்றுஅம் மனையும் மாடும் முதலியவற்றால் கீழ்ப்பட்டிருந்தாலும் அக் குலமும் ஒழுக்கமும் முதலியவற்றால் சிறிதும் கீழ்மைப்பாடு உடையரல்லாதார் யாவர்;மற்று அவர் எஞ்ஞான்றும் கீழ் அல்லர்: எனவே அவரே சாலப் பெருமையர் என்பது பொருளாயிற்று." என்னும் காளிங்கரின் உரை இங்குக் குறிப்பிடத்தக்கது.

'அச்சமே கீழ்களது ஆச்சாரம்' என்று உரைக்கும் திருவள்ளுவர், கயவர்களையே கீழ்கள் என்று கூறினார்.

மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்

பிறப்பு ஒழுக்கம் கொண்ட கெடும் (1340 என்னும் குறள் திருவள்ளுவர் வருண பேதத்தினால் வரும் உயர்வு தாழ்வை மறுத்து வெறுத்து ஒதுக்கினார் என்பதைம் ஒழுக்கத்தைப் போற்றுதலை உயர்வானதாகவும் ஒழுக்கம் தவறுதலை இழிவானதாகவும் கருதினார் என்பதையும் ஒழுக்க நெறி நின்றாரை உயர்ந்தோராகப் போற்றி ஒழுக்கம் வழுவினாரை இழிந்தோர் எனக் கடிந்தார் என்பதையும் தெள்ளத் தெளிவாக மொழிகிறது. இக்குறளுக்குப் பரிமேலழர் எழுதிய உரையைக் காண்போம்.

"கற்ற வேதத்தினை மறந்தானாயினும் அவ்வருணம் கெடாமையில் பின்னும் அஃது ஓதிக் கொள்ளலாம்; அந்தணனது உயர்ந்த வருணம் தன்னொழுக்கம் குன்றக்கெடும்; மறந்த வழி இழிகுலத்தவனாம் ஆகலின் மறக்கலாகாது என்னும் கருத்தான் 'மறப்பினும்' என்றார். சிறப்புடை வருணத்திற்கு மொழிந்தமையின் இஃது ஏனைய வருணங்கட்கும் கொள்ளப்படும்." என்கிறார் பரிமேலழகர்.

பரிமேலழகர் கூறுவதைப் போலப் பார்ப்பான் உயர்ந்த வருணத்தினன் எனவோ அவன் வேதத்தை மறந்தவழி இழிகுலத்தான் ஆகிவிடுவான் என்றோ வள்ளுவர் யாண்டும் கூறினார் அல்லர். இக்குறளுக்குத் திருக்குறள் உரை ஆய்வுக் குழு வழங்கும் உரையினைக் காண்போம்:

" ஆரிய இனஞ் சார்ந்த பார்ப்பான் வேதத்தை மறந்தானாயினும் அதனை மீண்டும் படித்துக் கொள்ளலாம். அம் மறப்பினால் இழுக்கம் ஏதுமில்லை. அப் பார்ப்பானுடைய பிறப்பானது ஒழுக்கம் சிறிது குன்றினாலும் கெட்டுவிடும். அது இழிந்த பிறப்பாகிவிடும் என்பது கருத்து. இக்குறள், தமிழ்நாட்டில் நிலவிய ஒருவகை இனத்தாரின் கொள்கையை மறுத்து,தமிழர்க்குரிய ஒழுக்க நெறியை நிலை நிறுத்திய நிலை நிறுத்தியவாறாம். 'ஒழுக்கம் விழுப்பம் தரலான்' என்ற குறளை நினைவில் கொள்க" ( திருக்குறள் உரைவேற்றுமை-அண்ணாமலைப் பல்கலைக்கழகம் பக்கம் 230 235 )பார்ப்பார்க்கு வேதமோதுதலே மிக இன்றியமையாதது. அதனால் தான் அவர்கள் வேதியர், மறையவர் எனப் பெயர் பெற்றனர். "இன்னா ஓத்தில்லாப் பார்ப்பான்" (8) என இன்னா நாற்பதும் " அந்தணர் ஓத்துடைமை ஆற்ற மிக இனிதே" (8) என இனியவை நாற்பதும் கூறும். ஆகவே பரிமேலழகர் 'மறப்பினும் ஓத்துக்கொள்ளலாகும்' என்னும் தொடரில் மறப்பினும் என்பதற்குச் சிறப்புரை எழுதும் இடத்து "மறந்த வழி இழிகுலத்தான் ஆகலின் மறக்கலாகாது என்னும் கருத்தான் மறப்பினும் என்றார்" என்பர்.

ஆனால் வள்ளுவனார் பார்ப்பான் வேதம் ஓதுதலை மறக்கலாகாது என்னும் கருத்துக்குச் சிறப்ப ளிக்காமல் "அதனை மறந்தாலும் மீண்டும் கற்கலாம். ஆனால் அதனிலும் ஒழுக்கமே சிறப்படையது; அது கெட்டால் மக்கட் பிறப்பே கெடும்" என ஒழுக்கத்தின் விழுப்பத்தை இக்குறளில் வலியுறுத்திக் காட்டுவர்; வேதம் ஓதுதலினும் ஒழுக்க நெறி நிற்றல் விழுமியது என்பதனை வலியுறுத்துதலால் ஒருவகை இனத்தாரின் கொள்கையை மறுத்து தமிழர்க்குரிய ஒழுக்க நெறியை நாட்டியது என்று ஆய்வு குழு உரை கூறுகிறது.

பிராமண மேலாண்மையை மையமாகக் கொண்ட சமூக அமைப்பு மனுதரும சாத்திரம் முதலான வடமொழி நூல்களுள் வலியுறுத்தப்பட்டிருப்பினும் வள்ளுவர் காட்டும் சமூக அமைப்பு "மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' என்னும் தமிழ்நெறிக்கு ஏற்ப மன்னனை மையமாகக் கொண்டது. அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்

நின்றது மன்னவன் கோல்- 543

ஆபயன் குன்றும் அறு தொழிலோர் நூல் மறப்பர்

காவலன் காவான் எனின்.(560) என்னும் குறட்பாக்கள், வடநூல்களால் வானளாவப் போற்றப்படும் அந்தணராயினும், அரசன் சிறப்புற ஆட்சி புரிந்தால் மட்டுமே, செங்கோன்மை செழித்தால் மட்டுமே, தம் தொழிலைச் செய்ய முடியும் என, அரசனின் மேலாண்மையை வலியுறுத்தி நிற்கின்றன. பெரியாரைத் துணைக்கோட வேண்டுமென வள்ளுவர் வலியுறுத்தினார் பார்ப்பனரை துணைக்கோடல் வேண்டுமென ஓர் இடத்திலும் கூறிற்றிலர்.ஆயினும் வள்ளுவர் சொட்டும் பெரியார் 'புரோகிதரே' எனப் பரிமேலழகரும் மணக்குடவரும் பொருந்தா உரை வகுத்துள்ளமை பார்ப்பனச் சூழ்ச்சியே.

பெரியார் யார் என்பதனை வள்ளுவரே விளக்குகிறார் 'அறனறிந்து மூத்த அறிவுடையார்' 'உற்றநோய் நீக்கி உறாமை முற்காக்கும் பெற்றியார்' 'இடிக்கும் துணையார்' 'இடிப்பார்' என்னும் இப் பெற்றியரே வள்ளுவர் போற்றும் பெரியார். புரோகிதர்கள் எவருடைய ஆட்சிக்காலத்திலும் இவ்வாறு நடந்து கொண்டுள்ளனரா? அரசரிடம் பெரும் பொருள் பிடுங்கிப் பல உயிர்களைக் கொன்று யாகங்கள் நடத்தி இல்லாத உலகிற்குப் பொல்லாத வழிகாட்டிய புரோகிதரையே வள்ளுவர் பெரியார் எனச் சுட்டினார் என்று மணக்குடவரும் பரிமேலழகரும் கூறுதல் அடிப்படைப் பிழையாகும்.

''பிராமணர்களை காப்பது மன்னவன் கடமை'' என்று கண்ணன் கீதையில் உரைத்தார். ''பிராமணர்களை காப்பது மன்னனின் முதற்கடமை'' எனக் கிருஷ்ணதேவராயர் கருதினார். ( Saraswati.A.Rangaswamy—Political maxims of the Emperor-Poet Krishnadevaraya-Journal of Indian History4 [1-3]: 61-68)திருவள்ளுவர் இது போன்ற ஒரு கருத்தை எவ்விடத்தும் கூறினாரல்லர்.

ஓர்ந்து கண்ணோடாது இறைபுரிந்து யார் மட்டும்

தேர்ந்து செய்வஃதே முறை (541) எனும் குறள், 'குற்றம் என்னவென்று ஆராய்ந்து பார்த்து யார் பக்கமும் சாயாமல் நடுவுநிலைமை பொருந்துமாறு நின்று யாரிடத்திலும் குற்றத்திற்கான

தண்டனையை ஆராய்ந்து அதற்கு ஏற்றபடி நீதி வழங்குவதே அரசன் செங்கோல் முறையாகும்.ஆனால் மனுதரும சாத்திரம் ஒரு குலத்துக்கு ஒரு நீதியை உரைக்கிறது.

“ பிராமணன் பொருளை அபகரித்த சூத்திரனை சித்திரவதை செய்து கொல்க. ஆனால் பிராமணன் சூத்திரனுடைய பொருளை விருப்பப்படி கொள்ளையிடலாம். (அத்தியா 9 சுலோகம் 248) என்றும் “பிராமணன் எத்தகைய குற்றங்களைச் செய்தாலும் அவனை தூக்கில் போட வேண்டிய நிபந்தனை ஏற்பட்டால் அவன் தலையை மட்டும் மொட்டை அடிக்க வேண்டும் அதுவே அவனுக்குத் தூக்கு தண்டனைக்கு ஒப்பாகும். மற்றவருணத்தார்க்குக் கொலையே தண்டனை’’ (அத்தியாயம் 8 சுலோகம் 379) என்றும் வருணத்திற்கு ஒரு நீதியை வஞ்சனையுடன் ஒதுக்கும் மனுதர்மம் முறையற்ற நெறியை வலியுறுத்துவதைக் காணும் பொழுது வள்ளுவரின் பெருமை தெளிவாகப் புலப்படுகிறது.

“ இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல்’’ ( 229) என்பது குறள்.

’’ சூத்திரனுக்கு மிஞ்சிய சோற்றையும் ஓமம் பண்ணிய மிச்சத்தையும் கூட கொடுக்கலாகாது.’’ (அத்தியாயம் 4 சுலோகம்80) என்பது மனு தர்மம்.

’’ஆவிற்கு நீர் என்று இரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்தது இல்.’’ (1066) என்பது குறள்.

’’பிராமணர் நாள் தோறும் பிச்சைக்காக ஊருக்குள் புகுந்து சுற்றிவர வேண்டும்.’’ (அத்தியாயம் 6 சுலோகம் 43) என்பது மனு தர்மம்.

’’சுழன்றும் ஏர்ப் பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை (1031) என்பது குறள்.

’’ பயிர்த்தொழில் பெரியோர்களால் மிகவும் இகழப்பட்டதாகும்’’ (அத்தியாயம் 10 சுலோகம் 84)
என்பது மனுதர்மம்.

வருணாசிரம தருமத்தை ஏற்று, பிற்காலத் தமிழகத்தில், அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் பகுப்பு முறையும் படிநிலையும் அமைந்தது ஆனால் வள்ளுவர் இத்தகைய படிநிலைகளைக் கனவிலும் கருதினாரல்லர்.

சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு (குறள்- 31)

ஈத லிசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதிய மில்லை உயிர்க்கு (குறள் 231)

எண்ணென்ப ஏனை யெழுத்தென்ப இவ்விரண்டுங்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு- (குறள் 392)

என்று பொதுமை நெறிப்பட அறமுரைத்த வள்ளுவரின் தனித்திறன் ஒப்பற்றது எனலாம் ஒழுக்கத்தால் உயர்ந்தோரையும் செயல்களால் சிறந்தோரையுமே வள்ளுவர் போற்றினார் இந்நெறி இக் காலத்துக்கும் ஏன் எக்காலத்துக்கும் உரிய ஒன்றல்லவா? முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறை என்று போற்றினாலும் உழுவார் உலகத்தார்க்கு ஆணி என்பதனை உறுதிப்பட உரைக்கிறார் வள்ளுவர். தீண்டாமை (அஸ்பர்சியா) பற்றி முதன் முதலில் உரைக்கும் நூல் விஷ்ணு தர்மசூத்ரா(4-3 கிமு) ஆகும். சதபத பிராமணம் ’’சூத்திரன், நாய், காக்கை ஆகியன பொய்யொழுக்கம் நிறைந்தவை எனவும் அவற்றைப் பார்த்தலும் கூடாது’’ எனவும் உரைக்கிறது வள்ளுவரின் ‘குடிமை’ ‘குடிசெயல் வகை’ என்னும் அதிகாரங்கள் பண்பாட்டுச் சிறப்பால் உயர்ந்த குடிநிலை எய்தும் வழிவகையை உரைக்கின்றன நலம்

நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு (குறள் 960)

என ஆக்கவழி உரைத்தும்

நிலத்திற் கிடந்தமை கால்காட்டும் காட்டும்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல் (குறள் 959)

என எச்சரித்தும்

நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்
குலத்தின்கண் ஐயப் படும் (குறள் 958)

என அச்சுறுத்தியும் உயர் பண்புகளைப் பேணின் குலப்பெருமை எய்திச் சிறப்படையலாம் என அறிவுறுத்துகிறார் திருவள்ளுவர். ஒழுக்கம், வாய்மை, நாண், நகை, ஈகை, இன்சொல், இகழாமை என்னும் பண்புகளைப் போற்றிக் குடிச்சிறப்பு எய்த வழி வகுக்கும் வள்ளுவர் சாதி பேதமற்ற சமநிலைச் சமுதாயத்திற்கு வழிவகுக்கிறார்.

பிறப்பின் அடிப்படையில் குடிப்பெருமையும் குலச்சிறப்பும் கற்பிக்கும் மனுதருமம் முதலான நூல்கள் எஞ்சான்றும் மனிதரைப் பிளவுபடுத்தி நிற்கும் சாதிகள் நிலைத்திடவே வழியமைக்கின்றன மேல் கீழ் என்பன மனிதர்கள் பண்பின் அடிப்படையாகத் தோன்றும் நிலைகளே என்பது வள்ளுவர் தம் துணிபு. பிறப்பினால் எவரும் மேல் கீழ் என்னும் நிலை பெறுவதில்லை. பண்பை சிறந்தோரைச் சான்றோர் எனப் போற்றலும் இழிந்த பண்புடையோரைக் கயவர் என கடிந்து ஒதுக்குதலும் மானிட இனம் மாண்புறவே வழியமைக்கும். பண்பற்றோரைக் கண்டு வள்ளுவப் பெருந்தகை கொதித்துரைப்பதை பாருங்கள்

அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின் மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ். (குறள் 1074)

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல கொல்லப் பயன்படும் கீழ் (குறள் 1078)

உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல் வடுக்காண வற்றாகும் கீழ் (குறள் 1079)

இங்கே ‘கீழ்’ என ஒதுக்குவதற்குக் காரணமாக அமைவது அவன் பிரம்மாவின் பாதத்தில் பிறந்தவன் என்னும் கற்பனையின் அடிப்படை அன்று. அவன் கொண்டொழுகும் பண்பு நலன் மனித இனத்திற்கு எதிரானதாக வழங்குவதே எனல் புலனாகும்.

சூத்திரன் பக்கத்தில் இருக்கும் போது வேதம் ஓதக்கூடாது (மனுதருமம் அத்.1 சுலோ. 99) என்றும் ''வேதத்தைக் கேட்கிற சூத்திரனது காதுகளில் ஈயத்தையும் மெழுகையும் உருக்கி விட வேண்டும். வேதத்தைச் சொல்லுகிற சூத்திரனது நாக்கை அறுத்தெறிய வேண்டும். பொருளை உணர்ந்து வைத்திருக்கிற நெஞ்சைப் பிளக்க வேண்டும்'' என்றும் சாதி ஒடுக்கல் பேணப்பட்ட இந்தியாவில்

எண்ணென்ப ஏனை யெழுத்தென்ப இவ்விரண்டுங்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு- (குறள் 392)
யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு (குறள் 397)

என்று முதன்முதலாகக் கல்வியை உலகப் பொதுமை வாய்ந்ததாகக் குறிப்பிட்ட ஒப்பிலாச் சான்றோர் திருவள்ளுவரே ஆவர். கல்வியைப் போலவே காதலையும் உலகப் பொதுமை வாய்ந்ததாகக் காட்டிய முதற் பாவலர் வள்ளுவரே ஆவார். அன்பின் ஐந்திணை போற்றும் அழியாச் சிறப்படைய அகஇலக்கியங்களிலும் ஒரு படி மேலே சென்று விட்டார் வள்ளுவப் பெருந்தகை. 'யாயும் ஞாயும் யாராகியரோ? எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்' எனப் பொதுமை பேணும் சங்கப் பாடல்களில் நிலம் சார்ந்த பெயர்களாகிய ஊரன், குறவன், வெற்பன் முதலாயின பொதுமையறத்திற்கு முட்டுக்கட்டை விளைவிக்கின்றன. முதல் கரு இரண்டும் விலக்கி உரிப்பொருளையே உயர்வு செய்த வள்ளுவப் பெருந்தகை நாடு, மொழி, இனம் கடந்த உயரிய காதலுக்கு வழி வகுத்துள்ளார். காலங்கடந்து நிலைத்திருக்கும் கவிதைகள் சார்பிலாத் தன்மையைப் பெற்றிருக்கும் எனக் கூறிய டி.எச்ட். எலியட், இத்தகைய இலக்கியம் எங்கே படைக்கப்பட்டுள்ளது எனக் கூறிற்றிலர். அவர் வகுத்த கோட்பாடு ஆகிய 'கவிதையின் சார்பிலாப் பொதுப் பண்புக் கோட்பாடு Theory of Impersonaliy of Poetry) வள்ளுவர் வகுத்த காமத்துப்பாலின் குன்றாச் சுவை மிக்க குறளோவியங்களில் ஒளியுற மிளிர்கின்றது அன்றோ?இன்றைய சாதி விலக்குத் திருமணம் அல்லது சாதி மறுப்புத் திருமணம் காமத்துப்பால் காட்டும் காதல் வாழ்வு முன் களையிழந்து நிற்கிறது அல்லவா?

நெஞ்சில் துறவார் துறந்தார் போல் வஞ்சித்து வாழும் வன்கனாளரின் போலி துறவைக் கடிந்துரைக்கும் வள்ளுவர், புலித்தோல் போர்த்திய இத்தகைய பசுக்களை கண்டு ஏமாறக்கூடாது என நம்மை எச்சரிக்கிறார். இன்னின்ன சாதியைச் சார்ந்தவரே துறவு மேற்கொள்ள வேண்டும் என அவர் குறிப்பிட்டாரா?

உற்றநோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை அற்றே தவத்திற்கு உரு (261) என்பது வள்ளுவம். ஆனால் சம்புகன் என்னும் சூத்திரன் துறவு பூண்டொழுகினான் என்பதற்காகப் பிராமணர் புகன்ற பொறாமை மொழியைப் போற்றிச் 'சூத்திரன் தவம் செய்யக் கூடாது' என்று அவனைக் கொலை செய்தான் இராமன் என்பது வால்மீகியின் வாய்மொழி. பிறன் மனைநயந்த இராவணனைக் கொன்றதனால் தனக்குப் பிரம்மஹத்தி தோஷம் என்னும் பெருங்குற்றம் (பிராமணனைக் கொல்வதால் ஏற்படும் குற்றம்) ஏற்பட்டதாக வருந்தி இராமேச்சுரத்தில் நீராடிய இராமன் சம்புகனைக் கொன்றதற்காக துளியும் வருந்தியதாக தெரியவில்லை. பிறப்பினால் ஏற்பட்டதாகக் கருதப்படும் இச்சாதியைக் கொண்டு மனிதரை மதிப்பிடும் இழிநினை வடநூலார்க்கு உரிய தனிப் பண்பாகும். பிறப்பால் வரும் உயர்வு தாழ்வு சாதியால் வரும் ஏற்றத்தாழ்வு வள்ளுவத்தில் காணக் கிடைக்காத ஒன்று

தன்னுயிர் தானறப் பெற்றானை ஏனைய மன்னுயிரெல்லாந் தொழும்- குறள் 268:என்னும் வள்ளுவர் வாய்மொழி, சாதி, சமயம் கடந்த துறவு நிலையின் சிறப்பினை எடுத்துரைக்கிறது துறவு மேற்கொண்டவன் பிராமணனா சூத்திரனா என்று வள்ளுவர் வினவினாரா? இல்லவே இல்லை. வஞ்சமனத்தான் படிற்றொழுக்கத்தையே அவர் கடிந்துரைத்தார். இங்ஙனம் வாழ்வின் அனைத்துக் கூறுகளிலும் சாதி வருணம் எனும் வேண்டத்தகாத பிரிவுகளை மனத்துட்கருதாது மனித இனத்தை ஒரு குடும்பமாகக் கருதி, சாதி, சமய, இன, வேறுபாடு அற்ற, உலகைச் சமைக்கும் வகையில் நாம் அனைவரும் ஏற்றுப் போற்ற வேண்டிய ஏற்றமிகு வாழ்வியல் விழுமியங்களை எடுத்துரைத்து என்றென்றும் இன்பம் நின்று நிலவும் இனிய வாழ்வுக்கு வழிகாட்டியாகத் திகழும் வள்ளுவர் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத உயர்பேரறிஞர் என்பதில் ஐயமும் உண்டோ?

வள்ளுவர் காட்டும் வழி மனிதநேயம் மட்டுமன்று,உயிர்நேயம் என்பதனை வள்ளலார் வழிநின்று புரிந்துகொள்வோம்
அவர் உருவாக்க விழைந்த சமதருமச் சமுதாயத்தை அவர் காட்டிய வழிநின்று உருவாக்க முனைவோம்.புதியதோர் உலகம் செய்வோம்.அனைத்துயிர்க்கும் அன்புசெலுத்திப் பொற்காலம் சமைப்போம்..

## வள்ளலார் ஆய்வாளர் ப. சரவணன் கருத்து

வள்ளலார் சனாதன தர்மத்திற்கு முழுக்க முழுக்க எதிராக இருந்தவர். அதை முற்றிலுமாகப் புறக்கணித்தவர் என்கிறார் நவீன நோக்கில் வள்ளலார், அருட்பா - மருட்பா கண்டனத் திரட்டு ஆகிய நூல்களை எழுதிய வள்ளலார் ஆய்வாளர் ப. சரவணன்.

"பத்தாயிரம் ஆண்டுகால பாரம்பரியத்தைக் கொண்ட சனாதன தர்மத்தின் உச்ச நட்சத்திரம் வள்ளலார் என்று சொன்னால், அதில் அவர் வேறு யாரையும்விடத் தீவிரமாக இருந்தார் என்றுதானே பொருள்?

ஆனால், வள்ளலார் சனாதன தர்மத்தை ஏற்றவரில்லை. சனாதன தர்மம் என்றாலே அதில் மனிதர்களுக்குள் ஏற்றத் தாழ்வு உண்டு. வள்ளலார் அதற்கு முழுக்க முழுக்க எதிரானவர்.எல்லா உயிரையும் தன் உயிர்போலப் பார்க்க வேண்டும் என்பதைத்தான் வள்ளலார் திரும்பத் திரும்பச் சொன்னார்.

'நால்வருணம், ஆசிரமம், ஆசாரம் முதலான நவின்ற கலை சரிதமெல்லாம் பிள்ளை விளையாட்டே' என்கிறார் வள்ளலார். 'தோல் வருணம் கண்டு மேல் வருணம் அறிவாரில்லை' என்றும் சொல்கிறார்.

'மதித்த சமயமத வழக்கமெல்லாம் மாய்ந்தது வருணாசிரம் என்னும் மயக்கமும் சாய்ந்தது' என்கிறார். வருணாசிரம மயக்கம் சாய்ந்தது என்று சொல்பவர், எப்படி சனாதன தர்மத்தை ஏற்றவர் என்று கூற முடியும்?

வள்ளலார் ஒவ்வொருவரும் எப்படி வாழ வேண்டும் என்பதற்காக பேருபதேசம் என்ற நூலை எழுதியிருக்கிறார். அதில் ஒவ்வொருவருக்குமான நித்ய கர்ம ஒழுக்கம் வகுக்கப்பட்டிருக்கிறது. அதில் சொல்லப்படும் ஒழுக்கமும் சனாதன தர்மத்தை ஏற்றதாகச் சொல்பவர்களின் ஒழுக்கமும் ஒன்றா?

பிரம்ம சமாஜிகளுடன் விவாதம் நடக்கும்போது உருவ வழிபாட்டிலிருந்து அருவ வழிபாட்டிற்கு வாருங்கள் என்கிறார். வள்ளலார் சனாதன தர்மத்திற்கு முழுக்க முழுக்க எதிராக இருந்தவர். அதை முற்றிலுமாகப் புறக்கணித்தவர்," என்கிறார் ப. சரவணன்.

# தமிழ்ச்சமூக சீர்திருத்த இயக்கத்தின் தந்தை

கே.ஜி.பாச்கரன்

வள்ளலாரைப் பற்றி மகாகவி பாரதி, தமிழ் நாட்டின் சமூக சீர்திருத்த இயக்கத்தின் தந்தை என்ற ழைக்கிறார். சமூக சீர்திருத்தவாதி, சமரச ஞானி, மனிதாபிமானி என்றும் வள்ளலாரை பாரதி போற்றி புகழாரம் சூட்டுகிறார். ஆனால் இவை அனைத்தையும் மறைத்து சைவ சித்தாந்த சிறைக்குள் அடைத்து பூட்டி விட சிலர் முயற்சிக்கிறார்கள். கடலூர் மாவட்டம் சிதம்பரத்திற்கு அருகில் உள்ள மருதூர் கிராமத்தில் 1823 அக்டோபர் 5இல் வள்ளலார் என்றழைக்கப்படுகிற ராமலிங்க அடிகளார் பிறந்தார். ராமலிங்கர் இளம்வய திலேயே பக்தி மார்க்கத்தில் இறங்கினார். கவிதை புனையும் ஆற்றலை வளர்த்துக் கொண்டார். பக்திப் பாடல்களை எழுதிக் குவித்தார். பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த எந்தத் தமிழ் வித்வானுக்குக் குறைந்தவராக அவர் இல்லை என்பது மட்டும் நிச்சயம் என்கிறார் ஆய்வாளர் ராஜ்கௌதமன்.

சென்னையில் இருந்து வடலூர் நோக்கிய பயணம்

1858இல் சென்னையை விட்டு சிதம்பரத்திற்குப் புறப்பட்டார். சிதம்பரம் அருகில் உள்ள கருங்குழி யில் 1867 வரை தங்கினார். தனக்கென சில கொள்கை களை மெல்ல மெல்ல உருவாக்கினார். கருங்குழியில் 1965இல் சமரச சுத்த சன்மார்க்க சங்கத்தை நிறுவினார். 1867இல் வடலூரில் தரும சாலையை நிறுவி அன்ன தானப் பணியை துவக்கினார். 1872இல் ஞான சபையை துவக்கினார். உருவ வழிபாட்டை தவிர்த்து ஜோதி வழி பாட்டை செய்வித்தார். எந்த சாதிக்காரரும் வழிபடலாம் என அறிவித்தார். 1874இல் ஒரு அறைக்குள் தன்னைத் தானே அடைத்துக் கொண்டார். அதற்குப் பிறகு அவரையோ, அவரது உடலையோ யாரும் பார்க்கவில்லை.

என்ன நேர்ந்தது வள்ளலாருக்கு?

வள்ளலாரின் சாதி, சமய மறுப்புக் கொள்கையைக் கண்டு கொலைவெறி கொண்ட சாதி வெறியர்களால் எரியூட்டி கொல்லப்பட்டு இருக்கலாம் என்றும், அவர் கொலையே செய்யப்பட்டு இருந்தாலும் அது அதிர்ச்சி யூட்டும் சம்பவம் இல்லை என்றும், அவர் செய்த சாதி, சமயம் கெட்ட காரியத்துக்கு சாதி, சமய அதிகா ரத்துவ சக்திகள் அவருக்கு மரண தண்டனையை வழங்கியிருக்க கூடும் என்றும், அது தான் வரலாற்றில் காணப்படும் தருக்கம் என்றும் ஆய்வாளர் இராசுகௌதமன் கூறுகிறார். வள்ளலார் வரலாற்றை எழுதிய ஊரனடிகள், வள்ளலார் ஆண்டவரோடு கலந்து விட்டார் என்று குறிப்பிடுகிறார். வள்ளலார் உண்மையாகவே இறந்து விட்டார், அவரது சடலத்தில் எஞ்சியவை மண்பாண்டத்தில் இடப்பட்டு புதைக்கப் பட்டது என்கிறார் மறைமலையடிகள். எது எப்படி இருந்த போதிலும் அவரை தூற்றியவர்கள் எல்லாம் குப்பையில் கிடக்க, கண்மூடி வழக்கங்கள் எல்லாம் மண்மூடிப் போகச் சொன்ன வள்ளலாரின் இரக்க சிந்தனைகளும், பொதுமை எண்ணங்களும் இன்றளவும் நீடிக்கிறது.

வள்ளலாரின் கலகக்குரல்

வள்ளலாரின் 5818 பாடல்கள் ஆறு தொகுதிகளாகத் தொகுக்கப்பட்டு திருவருட்பா என்றழைக்கப் படுகிறது. சாதியிலே மதங்களிலே சமய நெறிகளிலே / சாத்திரச் சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே / ஆதியிலே அபிமானித் தலைகின்ற உலகீர் / அலைந்த லைந்து வீணேநீர் அழிதல் அழகலவே என்கிறார். வள்ளலார் கூறும் அருட்பெருஞ் ஜோதி தத்துவம் சாதி, சமயங்களைக் கடந்தது மட்டுமல்ல, அவைகளை பொய் என்று உரைப்பதாகும். சாதியும், மதமும், சமயமும் பொய்யென / ஆதியில் உணர்த்திய அருட் பெருஞ்ஜோதி உத்தமர்தம் உறவு வேண்டும் / உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் / உறவுகல வாமை வேண்டும் / பெருமைபெறு நினது புகழ் பேச வேண்டும் பொய்மை / பேசாதிருக்க வேண்டும் / பெருநெறி பிடித்தொழுக வேண்டும்மதமான பேய் / பிடியா திருக்க வேண்டும் என்ற வள்ளலார். பசி, பட்டினி, வறுமை குறித்து கவலையுற்றார். அனைவருக்கும் சோறிட வேண்டும் என்றார். வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் / வாடினேன் பசியால் இளைத்தே / வீடுதோறும் இரந்தும் பசியறாது அயர்ந்த / வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன் / நீடிய பிணியால் வருந்து கின்றோர் / என்நேர் உறக்கண்டு உளந்துடித்தேன் / ஈடின் மானிகளாய் ஏழைகளாய் / நெஞ்சிளைத்தவர் தமைக்கண்டே இளைத்தேன் மதித்த சமய வழக் கெல்லா மாய்ந்தது / வருணாச் சிரமம் எனும் மயக்கமும் சாய்ந்தது / கொதித்த லோகா சாரக் கொதிப் பெலாம் ஒழிந்தது / கொலையும் களவும் மற்றைப் புலையும் அழிந்தது என்று கூறி இத்தகைய உலகம் தோன்ற வேண்டுமென வள்ளலார் கனவு கண்டார்.

யார் இந்த வள்ளலார்?

சாதிய சமுதாயத்தில் இந்து மதம் உயர்வு தாழ்வு கற்பித்து வந்துள்ளது. அதன் இயக்கத்திற்கு இந்த ஏற்றத்தாழ்வு அவசியப்பட்டுள்ளது. தமிழ்நாட்டு சித்தர் மரபில் தான், ஒன்று என்ற உணர்ச்சியும். பொதுமை நிலையும், சமத்துவ சிந்தனையும் புரட்சிகரமாக முன்

வைக்கப்பட்டன. வள்ளலார் இந்த சாராம்சமான கொள்கையை வரவேற்று ஆரத்தழுவிக் கொண்டார். கோவில் பண்பாட்டையும், சாதிமத ஆசாரங்களையும் போற்றிய சைவ மதத்திற்கு எதிரான சித்தர் நெறியிலிருந்து இதனைப் பெற்றுக் கொண்டார். சாதி, மதம், சமயம், சாத்திரம், வருணம், ஆகமம், வேதம், புராணம், இதிகாசம், மூம்மூர்த்திகள், தேவர்கள் ஆகிய அனைத்தையும் பற்றி வள்ளலார் செய்துள்ள விமர்சனங்கள் சைவ சமயவாதிகளுக்கும், சனாதனி களுக்கும் எரிச்சலையும், வெறியையும் ஊட்டக்கூடி யதாக உள்ளன. அவர் எதற்காக சமத்துவத்தை விரும்பினார் என்றால், உயிர்க்கு இதம் புரிதல், ஆருயிர்கட்கெல்லாம் நான் அன்பு செயல் வேண்டும் என்ற லட்சியத்துக்கு அது ஏதுவாக இருந்தது என்பது தான். உயிர்களுக்கு இடையில் மனிதர்கள் செயற்கை யாக சாதி, மதம், சமயம் காரணமாக ஏற்படுத்திய ஏற்றத்தாழ்வுகள் தடையற்ற அன்பு இயக்கத்திற்கு பாதகமாக இருந்ததால் தான், வள்ளலார் இவற்றை வேண்டாம் என்றார். சாதி, மத, சமய சாத்திர வரலாறு எல்லாமே சிறுபிள்ளைகளின் விளையாட்டு என்றார். வேதம், ஆகமம், புராணம், இதிகாசம் அனைத்தும் பொய் என்றார்.

பின் ஏன் ரவி, வள்ளலாரை சனாதன உச்சநட்சத்திரம் என்றார். ஏனெனில் அவர்கள் பொய்களின் மூலம் ஒரு வரலாற்றை எழுத நினைக்கிறார்கள். நாராயண குரு, வள்ளலார் போன்றோர்களை சுவீகரிக்க முயலு கிறார்கள். எங்கு எதைப் பேசினால் வியாபாரம் ஆகுமோ, அங்கு அதைப் பேசுவார்கள். வள்ளுவரையும் பேசுவார்கள். சீர்திருத்த இயக்கங்களுக்கும், முற்போக்கு இயக்கங்களுக்கும் பாரிய வரலாறு இம் மண்ணுக்கு உண்டு என்பதை மட்டும் இப்போதைக்கு ரவிக்குப் பறைசாற்றுவோம். இரண்டாயிரம் ஆண்டு களுக்கு பின்னோக்கி இழுத்துச் செல்லும் பாசிச பழம்பெருச்சாளிகளுக்கு இம்மண்ணில் இடமில்லை என உரக்க கூறுவோம்.

கட்டுரையாளர்: சிபிஐ(எம்) மாநிலக் குழு உறுப்பினர் நன்றி:தீக்கதிர்

## அண்ணல் அம்பேத்கர் வழங்கிய சாதியை ஒழிக்கும் வழி

சாதியை ஒழிக்கும் வழி (Annihilation of Caste) எனும் நூலானது 1936 ஆம் ஆண்டில் நடக்கவிருந்த ஜாத்-பட்-தோடக் மண்டல் எனும் மாநாட்டிற்காக அண்ணல் அம்பேத்கர் அவர் தலைமை உரையாற்றுவதற்காக ''தீண்டாமை'' எனும் தலைப்பில் தயார் செய்து வைத்திருந்த பேச்சின் உரையின் தொகுப்பாகும். அந்த மாநாடு நடைபெறாததால் அவரே இதனை நூலாக வெளியிட்டார்.

நூல் உருவான வரலாறு

டிசம்பர் 12, 1935 தேதியிட்ட கடிதத்தில் ஜாத்-பட்-தோடக் மண்டலின் (சாதி அமைப்பை அகற்றுவதற்கான சங்கம்) செயலாளர் இந்த அமைப்பின் ஆண்டுக் கூட்டத்தில் (1936) உரைநிகழ்த்த வருமாறு அண்ணல் அம்பேத்கரை அழைத்தனர் .லாகூரில் உள்ள இந்த அமைப்பானது சாதியினை எதிர்க்கும் இந்து சீர்திருத்தக் குழுவாகும். அண்ணல் அம்பேதகர் சாதியை ஒழிக்கும் வழி எனும் தலைப்பில் கட்டுரை ஒன்றினை எழுதி நிகழ்ச்சியின் ஒருங்கிணைப்பாளர்களுக்கு அனுப்பி வைத்தார். அதில் இந்து சமயம் பற்றி பல நச்சுச்சுரப்புள்ள கருத்துகள் இருந்ததாக அவர்கள் கருதினார்கள். பின் பொறுத்துக்கொள்ள இயலாத வகையில் உள்ள மொழி மரபுகளும், சொற்களும் இதில் அண்ணல் அம்பேத்கர் பயன்படுத்தியிருப்பதாக கருதினர். இந்த உரையில் பொறுத்துக்கொள்ள இயலாத வகையில் கலகமூட்டும் வார்த்தைகள் உள்ளன. எனவே, அவற்றைத் திருத்தி எழுதும்படி அம்பேத்கருக்கு மீண்டும் ஒரு கடிதத்தை நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர்கள் எழுதினார்கள். ஆனால் அண்ணல் அம்பேத்கர் ஒரு காற்புள்ளியைக் கூட நான் திருத்தம் செய்ய மாட்டேன் எனத் தெரிவித்து விட்டார். பின் நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர்களின் பல ஆழ்ந்தாராய்வுக்குப் பிறகு வருடாந்திரக் கூட்டத்தினையே நடத்த வேண்டாம் என்று முடிவு செய்தனர். ஏனெனில் அண்ணல் அம்பேத்கருக்கு அழைப்பு விடுத்து பின் அதனை திரும்பப் பெற்றுக் கொண்டால் அண்ணல் அம்பேத்கரின் ஆதரவாளர்களால் நிகழ்ச்சி நடக்கும் இடங்களில் வன்முறை ஏற்பட வாய்ப்புள்ளதாகக் கருதினர். பின் அண்ணல் அம்பேத்கர் அவர்கள் இந்த உரையின் தொகுப்பினை ஆயிரத்து ஐநூறு பிரதிகளை நூலாக மே 15, 1936 இல் வெளியிட்டார்.

இந்தக் கட்டுரையில் அண்ணல் அம்பேத்கர் இந்து சமயம், அதன் சாதி அமைப்பு மற்றும் அதன் மத நூல்களைப் பற்றி விமர்சித்திருந்தார். மேலும் அவர் சமமாக உணவு அருந்துவது மற்றும் சாதி மறுப்புத் திருமணம் போன்றவைகள் சாதி அமைப்பை ஒழிப்பதற்குப் போதுமானதாக இல்லை எனவும் அவர் வாதிடுகிறார். மேலும் அவர் சாதியை ஒழிக்க வேண்டும் என்றால் சாதியை அடிப்படையாகக் கொண்டுள்ள மதக் கருத்துகளை ஒழிப்பது மட்டுமே வழியாகும் எனக் கூறியுள்ளார்.

காந்தியடிகளாரின் திறனாய்வு

சூலை, 1936 ஆம் ஆண்டில் ஹரிஜன் வார இதழில் சாதியின் உரிமையை நிறுவுதல் ( எ விண்டிகேசன் ஆஃப் கேஸ்ட்) எனும் தலைப்பில் அண்ணல் அம்பேத்கரின் உரைக்கு தன்னுடைய கருத்தை பின்வருமாறு தெரிவித்திருந்தார்.

> லாகூரில் உள்ள ஜாத்-பட்-தோடக் மண்டலின் வருடாந்திர மாநாட்டிற்கு (மே மாதம்) தலைமை தாங்குவதற்கு அண்ணல் அம்பேத்கர் அவர்கள் அழைக்கப்பட்டதை அனவைரும் அறிவர். ஆனால் நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர்கள் அம்பேத்கரின் கருத்து ஏற்கத்தகுந்த வகையில் இல்லை எனக் கூறி அந்த மாநாட்டையே நிறுத்தியுள்ளார்கள் . இதனை அந்த ஒருங்கிணைப்பாளர்கள் எந்த வகையில் நியாயப்படுத்த முடியும். ஏனெனில் தலைமை தாங்குவதற்காக அழைக்கப்பட்டவர் தங்களின் விருப்பதற்குத் தான் பேச வேண்டும் எனக் கருதுவது எவ்வகையில் நியாயம். மேலும் அவரின் கருத்து நிராகரிக்கப்படுவதோ அல்லது கேள்விக்குறியதாகவோ இருக்கலாம். அண்ணல் அம்பேத்கரின் கருத்து நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர்களின் இந்து சமயக் கருத்திற்கு எதிரானது என்றும் அவரின் தலைமை உரையும் எதிர்க்கருத்து கொண்டதாகத் தான் இருக்கும் என்பதையும் அறிந்தே அவர்கள் அண்ணல் அம்பேத்கரை அழைத்தனர். இந்தச் சமுதாயத்தில் தன்னைத் தானே செதுக்கி சமூகத்தில் ஒரு உயர்ந்த நிலையில் இருக்கும் ஒரு மனிதனின் சுய பார்வைகளை பொதுமக்கள்

அறிவதற்கான அவர்களின் வாய்ப்பினை இந்த ஒருங்கிணைப்பாளர்கள் இழகக்ச் செய்துள்ளதாகவே நான் கருதுகிறேன். எனக் காந்தியடிகள் தெரிவித்துள்ளார்.

நூல் வெளியீடு

முதல் பதிப்பு

சாதியை ஒழிக்கும் வழி என்ற நூல் 1936 ஆம் ஆண்டு லாகூரில் நடக்க இருந்த ஜாத்-பட்-தோடக் மண்டல் மாநாட்டுக்காக அம்பேத்கரால் எழுதப்பட்டது. உரையின் கருத்துக்களோடு மண்டலுக்கு சில முரண்பாடுகள் இருந்ததால் இந்த மாநாடு நடத்தப்படவில்லை. பின் அண்ணல் அம்பேதகர் அவர்கள் இந்த உரையின் தொகுப்பினை ஆயிரத்து ஐநூறு பிரதிகளை நூலாக மே 15, 1936 இல் வெளியிட்டார்.அடுத்த ஆண்டே இப்புத்தகத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு பெரியாரின் முயற்சியால் குடியரசு இதழில் தொடர்ச்சியாக வெளியிடப்பட்டது.தலித் முரசு இதழில் முழு உரையும் வெளியிடப்பட்டது.

இரண்டாம் பதிப்பு

இதன் இரண்டாம் பதிப்பில் காந்திக்கான பதிலுரையுடன் வெளியிட்டிருப்பார். இந்தப் பதிப்பு 1937 ஆம் ஆண்டில் சாதியை ஒழிக்கும் வழி : மகாத்மா காந்திக்கான பதிலுரையுடன் எனும் பெயரில் வெளியிட்டார்.

மூன்றாம் பதிப்பு

1944 ஆம் ஆண்டில் இதன் மூன்றாவது பதிப்பு வெளியானது. இதில் இந்தியாவில் சாதி அமைப்பு: அவர்களின் வழிமுறை, தோற்றமும் வளர்ச்சியும் எனும் கட்டுரையுடன் வெளிவந்தது. இது 1916 ஆம் ஆண்டில் நியூயார்க் நகரத்தில் நடந்த கருத்தரங்கத்தின் பொழிவுரை ஆகும்.

இந்நூலிலிருந்து சில குறிப்புகள்…

1.சாதி என்பது எண்ணம்; அந்த எண்ணப் போக்கிற்கு மதமே காரணம்.

2.இந்திய நாட்டில் சமூகச் சீர்திருத்தத்திற்கான வழி சொர்க்கத்திற்குச் செல்லும் வழியைப் போலவே கரடுமுரடானது.

3.சமூகச் சீர்திருத்தம் என்றால், இந்துக் குடும்பத்தைச் சீர்திருத்துவதா? அல்லது இந்து சமுதாயத்தைச் சீர்திருத்தி புத்தாக்கம் செய்வதா? என்னும் வகைப்படுத்தி இரண்டிற்கும் இடையேயுள்ள வேறுபாட்டினை முதலில் புரிந்து கொள்ள வேண்டும். முதலாவதாகக் கூறப்பட்டுள்ள சீர்திருத்தம் விதவை மறுமணம், குழந்தைத் திருமணம் ஆகியவற்றோடு தொடர்புடைய குடும்பச் சீர்திருத்தம் சார்ந்தது. இரண்டாவதாகக் கூறப்பட்ட சீர்திருத்தம் சாதி அமைப்பை ஒழிப்பது தொடர்புடைய சமூகச் சீர்திருத்தம் சார்ந்தது.

4.அரசியல் அமைப்பு சமூக அமைப்பைப் பொறுத்தே அமைய வேண்டும்.

5.இந்திய சமூக அமைப்பைத் திருத்தி அமைக்க வேண்டுமானால் அரசியல் சீர்திருத்தத்துக்கு முன் சமூகச் சீர்திருத்தம் ஏற்பட்டாக வேண்டும்.

6. அரசியல் சீர்திருத்தவாதிகள் அவர்கள் விரும்பும் எந்த வழியில் சென்றாலும் சரி, அரசியல் அமைப்பு ஒன்றினை உருவாக்கும் போது தம் நாட்டில் நிலவும் சமுதாய அமைப்பிலிருந்து எழுகின்ற பிரச்சினையைப் புறக்கணித்துவிட்டு அரசியல் அமைப்பை உருவாக்கிவிட முடியாது.

7. பொதுவாக அரசியல் புரட்சிகளுக்கு முன்பே சமூக, மத சம்பந்தமான புரட்சிகள் ஏற்படுகின்றன என்பதற்கு வரலாற்று ஆதாரங்கள் உள்ளன.

8.மதம் என்பது அதிகாரத்திற்கு ஆதாரம் என்பதை இந்திய வரலாறு புலனாக்குகிறது.

9.சுதந்திரம் என்பதுதான் மனித வாழ்வின் குறிக்கோள் என்றால், ‘ஒரு மனிதன் இன்னொரு மனிதனின் மேல் ஆதிக்கம் செலுத்துவதை ஒழிப்பதே சுதந்திரத்தின் பொருள்’.

10. ஒரு சமுதாயத்தில் ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் அதிகாரத்திற்கும், ஆதிக்கத்திற்கும், மதமும் சமுதாயமும் அடிப்படைகளாக இருந்தால் அந்தக் கட்டத்தில் மேற்கொள்ள வேண்டிய அவசியமான சீர்திருத்தம், மதசீர்திருத்தமும் சமுதாய சீர்திருத்தமுமே ஆகும்.

11. நீங்கள் எந்த திக்கில் திரும்பினாலும் சாதி அரக்கன் உங்களை வழிமறிப்பான். அந்த அரக்கனைக் கொன்றொழித்தாலன்றி அரசியல் சீர்திருத்தமோ, பொருளாதாரச் சீர்திருத்தமோ பெற முடியாது.

12.தனி மனிதனின் இயற்கையான ஆற்றல்களுக்கும், இயல்பான விருப்பங்களுக்கும் எதிராகச் சமூக விதிகள் என்ற பெயரால் கட்டாயத்துள்ளாக்குவதே சாதியின் தன்மை.

13.சாதி, இந்துக்களை முற்றிலுமாகச் சிதைத்துச் சீரழித்து சின்னாபின்னமாக்கியுள்ளது.

14.இந்து சமூகம் என்ற ஒன்று இல்லை; இருப்பதெல்லாம் பல சாதிகளின் தொகுப்பே ஆகும்.

15. இந்து முசுலீம் கலவரம் ஏற்படும் சமயங்கள் தவிர்த்த பிற சமயங்களில் பிற சாதிகளோடு தம் சாதிக்கு உறவு உண்டு என்று எந்த சாதியினரும் உணர்வதில்லை. மற்ற சமயங்களில் ஒவ்வொரு சாதியும் பிற சாதிகளிடமிருந்து தம்மைத் தனிமைப் படுத்திக் கொள்ளவும், வேறுபடுத்திக் காட்டிக் கொள்ளவுமே முயல்கின்றன.

16.சமூகவியலாளர்கள் கூறும் ‘குழு உணர்வு’ இந்துக்களிடம் அறவே இல்லாத ஒன்றாகும். நாம் அனைவரும் இந்துக்கள் என்ற உணர்வு அவர்களிடம் இல்லை. ஒவ்வொரு இந்துவிடத்திலும் இருக்கும் உணர்வு தன் சாதி உணர்வு மட்டும் தான்.

17. மக்கள் ஒருவரோடு ஒருவர் கலந்து உறவாடுவதால் மட்டுமே தமக்குள் பொதுவானவற்றைப் பெறுகிறார்கள். அதாவது சமூகம், மக்கள் கலந்து உறவாடுவதால் மட்டுமே சமூகமாகிறது.

18. நாடுகள் எவ்வாறு தம் தன்னலம் கருதித் தனித்திருக்க முற்படுகின்றனவோ அவ்வாறே பல்வேறு சாதிகளும் தன்னலங்கருதிப் பிறரோடு உறவின்றித் தனித்து வாழ முற்படுகின்றன. இந்தத் தன்மைதான் சாதிகளிடம் உள்ள சமூக விரோத மனப்பான்மையாக வெளிப்படுகிறது.

19.ஒரு தனிமனிதன் தனது சொந்தக் கருத்துகளையும் நம்பிக்கைகளையும் தனது சொந்த சுதந்திரத்தையும் நலனையும், தான் சார்ந்துள்ள குழுவின் நெறி வரையறைகளையும் குழு அதிகாரத்தையும், குழு நலன்களையும் மீறி வலியுறுத்துவதுதான் எல்லாச் சீர்திருத்தங்களுக்கும் தொடக்கமாகும்.

20.பொதுநல உணர்வையே சாதி கொன்றுவிட்டது. ஒரு இந்துவுக்குப் பொதுமக்கள் என்பதே அவரது சாதிதான்.

21.சாதி கூடாது என்றால், உங்களுடைய இலட்சியச் சமூகம் எப்படிப்பட்டது என்ற கேள்வி நிச்சயமாக எழும். என்னுடைய லட்சிய சமூகம் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டது.

22.சனநாயகத்தின் மறுபெயர் தான் சகோதரத்துவம். ஜனநாயகம் என்பது ஒரு ஆட்சிமுறை மட்டுமல்ல. முதன்மையாக அது ஒரு கூட்டு வாழ்க்கை முறை; கூட்டாக ஒருவருக்கொருவர் தமது அனுபவங்களைத் தெரியப்படுத்திக் கொண்டு வாழும் முறை. ஒவ்வொரு மனிதரும் மற்ற மனிதர்களிடம் மதிப்பும் மரியாதையும் வைத்து நடப்பதே அதன் சாராம்சம்.

23.சட்டப்படி ஒருவரைத் தமக்கு ஆட்பட்டு இருப்பவராக வைப்பது மட்டுமே அடிமை முறை அல்ல. சமூகத்தில் சில மனிதர்கள் தங்களுடைய செயல்களின் நோக்கம் என்னவாக இருக்க வேண்டும் என்பதைப் பிறர் தீர்மானிக்கவும் தாங்கள் அதை ஏற்றுக் கொள்ளவுமாக உள்ள நிலையும் அடிமை முறையே.

24.சமூகத்தில் உள்ள ஒவ்வொருவரிடமிருந்தும் மிக உயர்ந்த பலனைப் பெறுவது சமூகத்துக்கு நல்லது என்றால், ஆரம்பத்திலேயே எல்லோரும் முடிந்த அளவு சமமாக இருக்கச் செய்வதுதான் அவ்வாறு உயர்ந்த பலனைப் பெறுவதற்கு வழியாகும். இந்தக் காரணத்தினால் சமத்துவம் தவிர்க்க முடியாததாகிறது.

25.உலகின் மற்ற நாடுகளில் சமூகப் புரட்சிகள் நடந்துள்ளன. இந்தியாவில் ஏன் அப்படி நடக்கவில்லை என்பது பற்றி நான் மிகவும் சிந்தித்திருக்கிறேன். கொடுமைகள் நிறைந்த சதுர்வர்ண அமைப்பு, கீழ் வகுப்புகளைச் சேர்ந்த இந்துக்களை நேரடி நடவடிக்கையில் இறங்குவதற்கு முற்றிலும் சக்தியற்றவர்களாகச் செய்துவிட்டது என்பதுதான் இந்தக் கேள்விக்கு கிடைக்கும் ஒரே விடை.

26.சதுர்வர்ண முறையை விட அதிகமாக மனிதனை இழிவுபடுத்தும் சமூக அமைப்பு எதுவும் இருக்க முடியாது.

27. இந்திய வரலாற்றிலேயே சுதந்திரமும் பெருமையும் புகழும் மிகுந்து விளங்கிய ஒரே காலம் மௌரியப் பேரரசின் காலம்தான். மற்ற எல்லாக் காலங்களிலும் நாடு தோல்வியிலும் இருளிலும் தவித்தது. மௌரியர் காலத்தில் சதுர்வர்ணம் முற்றிலுமாக அழிக்கப்பட்டது.

28.செயல் உலகில் தனி மனிதன் ஒரு எல்லையிலும் சமூகம் மறு எல்லையிலும் இருக்கிறது. இந்த இரண்டு எல்லைகளுக்கும் இடையே சிறியதும் பெரியதுமாக எத்தனையோ விதமான கூட்டு அமைப்புகள், குடும்பங்கள், நட்புறவுகள், கூட்டுறவுச் சங்கங்கள், வர்த்தக கூட்டமைப்புகள், அரசியல் கட்சிகள், திருடர் கும்பல்கள், கொள்ளைக் கூட்டங்கள் அமைந்திருக்கின்றன.

29. ஒரு சமுதாயம் வாழ்கிறதா, இறக்கிறதா என்பது இங்கு சிக்கல் அல்ல என்பது என் கருத்து. என்ன நிலையில் வாழ்கிறது என்பதே முக்கியம்.

30. உங்களுடைய சமூக அமைப்பை மாற்றாமல் நீங்கள் சிறிதுகூட முன்னேற்றம் காண முடியாது. தற்காப்புக்கோ அல்லது போர் தொடுப்பதற்கோ மக்களை ஒன்று திரட்ட முடியாது. சாதியை அடிப்படையாக வைத்து நீங்கள் எதையும் உருவாக்க முடியாது. தேசிய இனத்தை உருவாக்க முடியாது. ஒரு ஒழுக்கப் பண்பை உருவாக்க முடியாது. சாதியை அடிப்படையாக வைத்து நீங்கள் எதை உருவாக்கினாலும் அது உடைந்து சிதறி உருப்படாமற் போகும்.

31.சாதி என்பது ஒரு எண்ணம். ஒரு நிலை. எனவே சாதியை ஒழிப்பது ஒரு பௌதிகத் தடையை அழிக்கும் செயல் அல்ல; மக்களின் எண்ணத்தில் மாற்றத்தை ஏற்படுத்தும் செயல்.

32.சாதி புனிதமானது என்ற எண்ணத்தை மக்கள் மனதில் பதிய வைத்திருக்கும் மதம்தான் எல்லாக் கேடுகளுக்கும் மூலகாரணம்.

33. சாத்திரங்கள், வேதங்கள் ஆகியவற்றின் அதிகாரத்தை அழிக்க வேண்டும்.

34. பிராமணர்கள் அரசியல் சீர்திருத்த இயக்கங்களிலும் சில சமயம் பொருளாதாரச் சீர்திருத்தத்திலும் முண்ணனியில் நிற்கிறார்கள். ஆனால் சாதித் தடைகளை உடைக்கப் புறப்பட்டிருக்கும் படையில் கடைசி இடத்தில் கூட அவர்கள் காணப்படவில்லை.

35.சாதி பகுத்தறிவுக்கு முரணானது.

36. சாதி, வருணம் என்ற விடயங்களில் ஒரு இந்து தனது பகுத்தறிவைப் பயன்படுத்துவதை சாத்திரங்கள் அனுமதிக்கவில்லை.

37. சீர்திருத்தக்காரருக்குப் பகுத்தறிவும் ஒழுக்கமும் இரண்டு ஆற்றல் மிக்க ஆயுதங்களாகும்.

38. சாதிக் கோட்டையில் உடைப்பு ஏற்படுத்த வேண்டுமென்றால் , நீங்கள் வேதங்களையும் சாஸ்திரங்களையுமே வெடி வைத்து தகர்க்க வேண்டும்.

39. இந்து மதத்தைக் கெடுத்த நஞ்சு பிராமணியம். பிராமணியத்தை ஒழித்தால்தான் இந்து மதத்தை நீங்கள் காப்பாற்ற முடியும்.

40.இந்து சமூகம் சாதியற்ற சமூகமாக மாறினால்தான் அது தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்கு வேண்டிய பலத்தைப் பெற முடியும். இவ்வாறு சாதி ஒழிப்புக்கு எதிரான பல்வேறு கருத்துக்களை உள்ளடக்கி அறிவாயுதமாக உள்ள இந்நூலை சமத்துவ சாதியற்ற சமூகம் அமைக்க விரும்பும் அனைவரும் படித்துப் பாருங்களேன்!

# குறள்நெறி

மின்னிதழ்:70 **“குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்”** தி.வ.ஆ.2054 புரட்டாசி-29- பொ.ஆ.-2023அக்குத்தோபர்-16

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



## தமிழியக்கம் ஆறாம் ஆண்டுத் தொடக்கவிழாச் சிறப்பிதழ்




**குறள் : 972**

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.













## தமிழை யாராலும் அழித்துவிட முடியாது:

தமிழியக்க ஆண்டு விழாவில்

அமைச்சர் துரைமுருகன் உறுதி

சென்னை: தமிழர் என்ற உணர்வு இருக்கும் வரை தமிழை யாராலும் அழித்துவிட முடியாது என அமைச்சர் துரைமுருகன் கருத்து தெரிவித்துள்ளார்.

தமிழியக்கத்தின் 6-ம் ஆண்டு தொடக்க விழா சென்னை சைதாப்பேட்டை தமிழ்நாடு திறந்தநிலை பல்கலைக்கழகத்தில் நேற்று நடந்தது. இந்த விழாவுக்கு தமிழியக்க நிறுவனர் - தலைவரும், விஐடி பல்கலைக்கழகத்தின் வேந்தருமான கோ.விஸ்வநாதன் தலைமை தாங்கினார். இதில் அமைச்சர் துரைமுருகன், திராவிடக் கழக தலைவர் கி.வீரமணி, மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக முன்னாள் துணை வேந்தர் வேதகிரி சண்முகசுந்தரம், உலக திருக்குறள் இணையக் கல்விக் கழகத்தின் இயக்குநர் மறைமலை இலக்குவனார், திரைப்பட பாடலாசிரியர் வைரமுத்து, பன்னாட்டுத் தமிழுறவு மன்றத்தின் உலக அமைப்பாளர் வா.மு.சேதுராமன், விஜிபி உலக தமிழ் சங்க நிறுவனத் தலைவர் வி.ஜி.சந்தோசம், நல்லி குப்புசாமி உள்ளிட்டோர் கலந்து கொண்டனர். நிகழ்ச்சியில் கோ.விஸ்வநாதன் பேசியதாவது:

மத்திய அரசை பொறுத்தவரை அனைத்தையும் இந்தியிலே கொண்டு வர வேண்டும் என விரும்புகிறார்கள். உலகிலேயே அதிகமான ‘ரெமிட்டன்ஸ் (வெளிநாடுகளில் சம்பாதித்து இந்தியாவுக்கு பணம் அனுப்புதல்)’ வருகிற நாடு இந்தியா தான். கடந்த ஆண்டு ஒன்பரை லட்சம் கோடி ரூபாய் ரெமிட்டன்ஸ் வந்துள்ளது. அவரவர் தாய்மொழியுடன் உலகளாவிய தொடர்பு மொழியில் புலமை இருந்ததால்தான், இந்தளவு ரெமிட்டன்ஸ் இந்தியாவுக்கு கிடைத்திருக்கிறது. மொழி பிரச்சினையை பொறுத்தவரை இந்தியாவில் நிதானம் தேவை. 2023-ல் இந்தியாவில் தனி நபர் வருமானம் 2,600 டாலர். மொத்த உற்பத்தில் 5-வது இடத்தில் இருக்கும் இந்தியா, தனிநபர் வருமானத்தில், 140-வது இடத்தில் இருக்கிறது.

2000-ம் ஆண்டில் இந்தியாவில் பெருங்கோடீஸ்வரர்கள் 9 பேர் தான் இருந்தார்கள். 2022-ம் ஆண்டு இது 166 பேராக உயர்ந்துள்ளது. கோடீஸ்வரர்கள் வளர்ச்சியில் இந்தியா தான் முதலிடத்தில் உள்ளது. அதேநேரத்தில் 23 கோடி மக்கள் வறுமை கோட்டுக்கு கீழ் வாழ்கிறார்கள்.

எனவே, வசதியானவர்களிடம் வரிவசூல் செய்து, ஏழைகளுக்கு செலவு செய்யும் நிலை இந்தியாவில் வர வேண்டும். அப்போது தான் ஏழை மக்களும் இந்நாட்டில் உயர முடியும். அனைவருக்கும் உயர் கல்வியை கொடுக்க வேண்டும். உயர் கல்வி கொடுப்பதில் தமிழகம் முதலிடத்துக்கு வர வேண்டும். உயர் கல்வி கொடுத்துவிட்டால், பொருளாதாரத்தில் உயர்ந்து வந்துவிடலாம். இவ்வாறு அவர் பேசினார்.

அமைச்சர் துரைமுருகன் பேசும்போது, ‘நாம் எல்லோரும் தமிழர்கள், நம் மொழி தமிழ் என்ற உணர்வு உள்ளத்தில் இருக்கும்போது, தமிழை யாராலும் அழித்துவிட முடியாது. உலகில் அழிந்து போன மொழிகள் எல்லாம், பாரம்பரிய மொழி என இருக்கும் போது, வாழும் மொழியான தமிழுக்கு ஏன் செம்மொழி அந்தஸ்து இல்லை என கேட்டவர் மனோன்மணியம் சுந்தரம்பிள்ளை. அதன்பிறகு கேட்டவர் கருணாநிதி. கேட்டது மட்டுமில்லாமல், செம்மொழி அந்தஸ்தை பெற்றும் கொடுத்திருக்கிறார்,’ என்றார்.

இந்த நிகழ்ச்சியில், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மாநிலச் செயலாளர் கே.பாலகிருஷ்ணன், பாமக தலைவர் அன்புமணி, தமாகா தலைவர் ஜி.கே.வாசன், இந்திய யூனியன் முஸ்லீம் லீக் தேசிய தலைவர் கே.எம்.காதர் மொய்தீன், புதிய நீதிக் கட்சி தலைவர் ஏ.சி.சண்முகம் முன்னாள் அமைச்சர்கள் டி.ஜெயக்குமார், சி.பொன்னையன், தமிழக வாழ்வுரிமைக் கட்சி தலைவர் தி.வேல்முருகன், தமிழ்நாடு தன்னுரிமைக் கழக தலைவர் பழ கருப்பையா, தமிழியக்கத்தின் பொதுச் செயலாளர் அப்துல்காதர், திராவிட இயக்க தமிழர் பேரவை பொதுச் செயலாளர் சுப.வீரபாண்டியன், நாஞ்சில் சம்பத், மே 17 இயக்க ஒருங்கிணைப்பாளர் திருமுருகன் காந்தி உட்பட பல்வேறு அரசியல் தலைவர்கள் கலந்து கொண்டனர்

நன்றி: இந்து தமிழ் திசை 16/10/2023

# வாக்குக்கு பணம் கொடுக்கும் நிலை மாற வேண்டும்

## விஐடி வேந்தர் விசுவநாதன்



சென்னை சைதாப்பேட்டையில் ஞாயிற்றுக்கிழமை நடைபெற்ற தமிழியக்க அமைப்பின் 6-ஆம் ஆண்டு தொடக்க விழாவில் பேசிய தமிழக நீர்வளத் துறை அமைச்சர் துரைமுருகன். உடன் கவிஞர் வைரமுத்து, தி.க. தலைவர் கி.வீரமணி, விஐடி வேந்தர் கோ.விசுவநாதன், தொழிலதிபர்கள் நல்லி குப்புசாமி, வி.ஜி.சந்தோசம், முன்னாள் துணைவேந்தர் சண்முகசுந்தரம், தமிழறிஞர்கள் மறைமலை இலக்குவனார், வா.மு.சேதுராமன், தமிழியக்க அமைப்பின் பொருளாளர் வே.பதுமனார்.

**சென்னை, அக். 15:** உண்மையான மக்களாட்சி மலர, தேர்தலில் வாக்குக்குப் பணம் பெறுவது, கொடுப்பது போன்ற செயல்கள் அறவே மாற வேண்டும் என வேலூர் விஐடி பல்கலைக்கழக வேந்தர் கோ.விசுவநாதன் தெரிவித்தார்.

சென்னை சைதாப்பேட்டையில் ஞாயிற்றுக்கிழமை நடைபெற்ற தமிழியக்கம் அமைப்பின் 6-ஆம் ஆண்டு தொடக்க விழாவில் அவர் பேசியது:

இந்தியாவை முழுமையான மக்களாட்சியாக மாற்றுவதற்கு தமிழகம் முக்கியப் பங்காற்ற வேண்டும். அரசியல் தலைவர்கள் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பது மக்களாட்சியில் மிக முக்கியம். தேர்தலில் வென்றவர்கள் ஒரு சார்பாக இயங்காமல் வாக்களிக்காதவருக்கும் பணியாற்ற வேண்டும்.

பல நேரங்களில் கட்சிக் கூட்டமும், அரசு நிகழ்ச்சிகளும் வேறுபாடின்றி நடத்தப்படுகின்றன. இது மக்களாட்சியை பலப்படுத்த உதவாது.

ஆளும்கட்சிக்கு அனைவரையும் அரவணைத்துச் செல்லும் பெருந்தன்மை வேண்டும். மக்களுக்கு நன்மை தரும் திட்டங்களை எதிர்க்கட்சிகள் ஆதரிக்க வேண்டும். எத்தனை ஆண்டுகளுக்கு மக்களுக்கு இலவச வேஷ்டி சேலைகளை கொடுத்துக்கொண்டே இருக்கப் போகிறோம். இது மாற வேண்டுமானால் மக்களுக்கு பொருளாதார வளர்ச்சி தேவை. உண்மையான மக்களாட்சி மலர வேண்டுமானால் வாக்குக்கு பணம் கொடுப்பது, பெறுவது போன்ற செயல்கள் மாற வேண்டும் என்றார் அவர்.

**மாணவர்களுக்குப் பரிசு:** விஐடி போபால் பல்கலைக்கழகம், தமிழியக்கம் இணைந்து நடத்திய திருக்குறள் ஒப்பித்தல் போட்டியில் வெற்றி பெற்ற மாணவ, மாணவிகளுக்கு விஐடி வேந்தர் கோ.விசுவநாதன், விஐடி துணைத் தலைவர் சங்கர் விசுவநாதன், விஐடி போபால் அறங்காவலர் ரமணி பாலசுந்தரம் ஆகியோர் பரிசுகளை வழங்கிப் பாராட்டினர்.

10 மாவட்ட அளவில் நடைபெற்ற இந்தப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு மாவட்ட வாரியாக முதல் பரிசாக ரூ.15,000, 2-ஆம் பரிசாக ரூ.10,000, 3-ஆம் பரிசாக ரூ.5,000 வழங்கப்பட்டன.

முன்னதாக, கவிஞர் தாமரைக்கு கவிஞர் விருது, எழுத்தாளர் பானுமதி தருமராசனுக்கு எழுத்தாளர் விருது, முனைவர் சிவாவுக்கு ஆய்வாளர் விருது, முனைவர் அரங்க. இராமலிங்கத்துக்கு இலக்கியப் பொழிவாளர் விருதை விஐடி வேந்தர் கோ.விசுவநாதன், பல்கலைக்கழக துணைத் தலைவர் ஜி.வி.செல்வம் ஆகியோர் வழங்கினர்.

இந்த நிகழ்வில், நீர்வளத் துறை அமைச்சர் துரைமுருகன், முன்னாள் அமைச்சர்கள் சி.பொன்னையன், டி.ஜெயக்குமார், பாமக தலைவர் அன்புமணி ராமதாஸ் எம்.பி., புதிய நீதிக் கட்சித் தலைவர் ஏ.சி.சண்முகம், தமிழ்நாடு தன்னுரிமைக் கழகத் தலைவர் பழ.கருப்பையா, இந்திய குடியரசுக் கட்சித் தலைவர் செ.கு.தமிழரசன், சட்ட பஞ்சாயத்து இயக்க பொதுச் செயலர் அருண் முருக இன்பன், தமாகா தலைவர் ஜி.கே. வாசன் எம்.பி., இந்திய யூனியன் முஸ்லிம் லீக் தேசியத் தலைவர் காதர் மொகிதீன், தமிழக வாழ்வுரிமைக் கட்சித் தலைவர் தி.வேல்முருகன் எம்எல்ஏ, தமிழக மக்கள் முன்னணி ஒருங்கிணைப்பாளர் பொழிலன், மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் சண்முகசுந்தரம், தமிழறிஞர்கள் மறைமலை இலக்குவனார், வா.மு.சேதுராமன், ஜெயா கல்விக் குழும நிறுவனர் கனகராஜ், தி.க. தலைவர் கி.வீரமணி, கவிஞர் வைரமுத்து, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் மாநிலச் செயலர் கோ.பாலகிருஷ்ணன், மே 17 இயக்க ஒருங்கிணைப்பாளர் திருமுருகன் காந்தி, தொழிலதிபர்கள் வி.ஜி.சந்தோசம், நல்லி குப்புசாமி, கவிஞர் ஈரோடு தமிழன்பன், அனைத்துக் கேரளத் தமிழ்ப்பேரவை பொதுச் செயலர் மு.முத்துராமன், தமிழியக்கம் துணை ஒருங்கிணைப்பாளர் ஜெயந்தி மாலா சுரேஷ், தமிழியக்க துணைத் தலைவர் சிவாலயம் ஜெ.மோகன், பொதுச் செயலர் அப்துல் காதர், துணைச் செயலர் சாரதா நம்பி ஆரூரன், மாநிலச் செயலர் மு.சுகுமார், வடதமிழக ஒருங்கிணைப்பாளர் வணங்காமுடி, பொருளாளர் வே.பதுமனார், வேலூர் மண்டலச் செயலர் சு.மோகன் குமார், ஊடக ஒருங்கிணைப்பாளர் செ. அருள்செல்வன் உள்ளிட்ட பலர் பங்கேற்றனர்.






தமிழியக்கத்தின் 6-ம் ஆண்டு தொடக்க விழா சென்னையில் அதன் நிறுவனர், விஐடி பல்கலைக் கழகத்தின் வேந்தர் கோ.விஸ்வநாதன் தலைமையில் நேற்று நடந்தது. அமைச்சர் துரைமுருகன், திராவிடர் கழக தலைவர் கி.வீரமணி, முன்னாள் துணைவேந்தர் வேதகிரி சண்முகசுந்தரம், உலக திருக்குறள் இணையக் கல்விக்கழக இயக்குநர் மறைமலை இலக்குவனார், பன்னாட்டுத் தமிழுறவு மன்ற உலக அமைப்பாளர் வா.மு.சேதுராமன், விஜிபி உலக தமிழ் சங்க நிறுவனர் வி.ஜி.சந்தோசம், நல்லி குப்புசாமி, அப்துல்காதர் பங்கேற்றனர். நன்றி-படம்: எஸ்.சத்தியசீலன் இந்து தமிழ் திசை 16/10/2023



தமிழ்நாட்டின் பல்வேறு மாவட்டங்களிலிருந்தும் திரண்டு வந்துள்ள அவையினர்

விடுதலை
திங்கள் 16.10.2023
Registrar News Paper of India No. 1412/57 Postal Registration No.TN/CCN/440/2021-2023 and WPP Licence No.TN/PMG(CCR)/WPP-426/2021-2023


# தன்மானத்தை விட தமிழ் மானத்தைக் காக்க போராட்டக் களத்திற்கு வாருங்கள்!

## தமிழியக்க ஆறாம் ஆண்டு தொடக்க விழாவில் தமிழர் தலைவர் ஆசிரியர் அழைப்பு!

சென்னை, அக். 16, தமிழியக்கம் ஆறாம் ஆண்டு தொடக்க விழாவில் தமிழர் தலைவர் ஆசிரியர் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றினார். நிகழ்ச்சியில் பல்வேறு முக்கிய ஆளுமைகளும் பங்கேற்றனர்.

சென்னை சைதாப்பேட்டையில் உள்ள தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகம் அரங்கின் 5 ஆம் தளத்தில், 15.10.2023 அன்று காலை 10:30 மணியளவில் தமிழியக்கம் ஆறாம் ஆண்டு தொடக்க நிகழ்வு நடைபெற்றது.

முதலில் தமிழ்த்தாய் வாழ்த்து பாடப்பட்டது. நிகழ்ச்சிக்கு தமிழியக்கம் நிறுவனர் தலைவர் வி.அய்டி வேந்தர் முனைவர் கோ.விசுவநாதன் தலைமையேற்றார். அந்த அமைப்பின் மாநிலச் செயலாளர் சுகுமாரன் அனைவரையும் வரவேற்று உரையாற்றினார். முனைவர் வேதகிரி சண்முகசுந்தரம், மறைமலை இலக்குவனார், பேராசிரியர் சுப. வீரபாண்டியன், நாஞ்சில் சம்பத், கவிப் பேரரசு வைரமுத்து, நல்லி குப்புசாமி, விஜிசந்தோஷம், திருமுருகன் காந்தி ஆகியோர் முன்னிலை வகித்து சிறப்பித்தனர்.




### மூடநம்பிக்கை ஒழிப்புச் சட்டம் தேவை!

தொடர்ந்து, ஹிந்தி திணிப்புக் கூடாது, உயர் கல்வியில் முன்னேற்றம் - மகளிர் உரிமைத் தொகை - காலைச் சிற்றுண்டி ஆகிய புரட்சிகரமான திட்டங்களுக்கு தமிழ்நாடு அரசுக்கு பாராட்டு, தமிழ்நாட்டின் ஆறுகளை இணைக்க வேண்டுகோள், மூடநம்பிக்கை ஒழிப்புச் சட்டம் கொண்டு வரவேண்டும், நீதிபதிகள் அவரவர் தாய்மொழியில் ஒப்பமிட சட்டத் திருத்தம் தேவை, வானூர்தி நிலையங்களில் அறிவிப்புகள் தமிழில் இருக்க வேண்டும் உள்ளிட்ட 10 தீர்மானங்கள் அமைப்பின் நிர்வாகிகளால் வாசிக்கப்பட்டு அனைவராலும் ஒப்புதல் அளிக்கப்பட்டது. மேடையில் வீற்றிருந்த முக்கிய பிரமுகர்கள் அனைவருக்கும் வி.அய்டி. வேந்தரும், அந்த அமைப்பின் பொதுச்செயலாளரும் இணைந்து ஆடையணிவித்து புத்தகம் நினைவுப் பரிசாக வழங்கினர். தலைமை உரையில் உயர் கல்வியில் தமிழ்நாடு சிறப்பான இடம் பெற வேண்டும் என்று வி.அய்டி வேந்தர் வேண்டுகோள் விடுத்தார்.




தமிழியக்கம் சார்பில் தமிழர் தலைவருக்கு பயனாடை அணிவித்து நினைவு பரிசு வழங்கினர். விழாவில் நீர்வளத்துறை அமைச்சர் துரை.முருகன், கவிப்பேரரசு வைரமுத்து மற்றும் முக்கியப் பிரமுகர்கள் உரையாற்றினர்

### தன் மானமா? மொழி மானமா?

தொடர்ந்து வாழ்த்தரங்கம் நடைபெற்றது. புலவர் வா.மு.சேதுராமன், தமிழ்நாடு அரசின் நீர்வளத் துறை அமைச்சர் துரைமுருகன் சுருக்கமாக உரையாற்றினர். அதன் பின்னர் தமிழர் தலைவர் ஆசிரியர் பேசினார். அவர் தனது உரையில்:

நிறைவேற்றப்பட்ட 10 தீர்மானங்களும் பாராட்டத் தக்கவை என்றார். தீர்மானங்களை நிறைவேற்றியதோடு, அவை செயலுக்கு வர களத்திற்கு வர வேண்டும் என்று எதிரில் இருந்தவர்களுக்கு அழைப்பு விடுத்தார். தமிழுக்கு திராவிடம் என்ன செய்தது? என்று இன்றைக்கும் சில அரைவேக்காடுகள் கேட்டுக் கொண்டிருக்கின்றன என்று சீற்றத்தோடு பேசியவர், 1918 ஆம் ஆண்டு திராவிட இயக்கத்தின் தொடக்கத்தில் நடைபெற்ற மாநாட்டில் தமிழ் மொழியை செம்மொழி ஆக்க வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்ற வேண்டும் என்று சான்றுகளுடன் சுட்டிக்காட்டினார். பிறகு 2004 ஆம் ஆண்டு முத்தமிழ் அறிஞர் கலைஞர் முயற்சியால் தமிழ் செம்மொழி ஆக்கப்பட்டதை எடுத்துரைத்தார்.



அந்தக் காலத்தில் வெள்ளைக்காரன் கூட, தமிழ் மொழியை நீஷ பாஷை என்று சொன்னதில்லை. மொழி ஒரு போர்க்கருவி என்று பெரியார் சொன்னதை சுட்டிக்காட்டி, தமிழ் மொழி தெரியாத கடவுளுக்கு இங்கு என்ன வேலை? என்று மொழியை பெரியார் போர்க் கருவி ஆக்கிக் கொண்டதையும் சேர்த்துச் சொல்லி விட்டு, ஆகவே தன்மானத்தை விட்டு மொழி மானம் காக்க போராட்டக் களத்திற்கு வாருங்கள் என்று அழைப்பு விடுத்து தமது உரையை நிறைவு செய்தார்.

### கலந்து கொண்டு சிறப்பித்தோர்!

நிகழ்ச்சியில் மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக் கழக வேந்தர் முனைவர் வேதகிரி சண்முகசுந்தரம், ஏ.சி. சண்முகம், நல்லி குப்புசாமி, மறைமலை இலக்குவனார் போன்றோர் உரையாற்றினர். இந்நிகழ்ச்சியில் தென் சென்னை மாவட்டத் தலைவர் இரா.வில்வநாதன், செயலாளர் செ.ர.பார்த்தசாரதி, செல்வ மீனாட்சி சுந்தரம், வழக்குரைஞர் துரை அருண், சிவக்குமார், உடுமலை வடிவேல், கமலேஷ் மற்றும் ஏராளமான தமிழ் ஆர்வலர்கள், தமிழியக்கம் உறுப்பினர்கள், பொறுப்பாளர்கள், நிர்வாகிகள் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

தமிழர் தலைவர் ஆசிரியர் கி.வீரமணி அவர்கள் திராவிட இயக்கம் தமிழுக்குச் செய்த அருஞ்செயல்களைப் பட்டியலிட்டுச் சிறந்த விளக்கவுரையாற்றினார்.1918-ஆம் ஆண்டிலேயே பார்ப்பனரல்லாதார் மாநாட்டில் தமிழுக்குச் செம்மொழித் தகுநிலை வழங்கப்பெறவேண்டுமென்று அன்றைய ஆங்கில அரசை வேண்டித் தீர்மானம் இயற்றிய வரலாற்றுச் செய்தியை ஆவணப்படுத்தினார். தமிழறிஞர்களின் நெடுங்காலக் கனவை நனவாக்கிச் செம்மொழித் தகுநிலை பெற்றுத் தந்த கலைஞருக்குப் புகழ்வணக்கம் செலுத்தி நன்றி தெரிவித்தார்.

அவையினர் சிந்தனையைத் தூண்டி எழுச்சியும் கிளர்ச்சியும் ஊட்டிய அவரது உரை விழாவுக்கு மேலும் பொலிவூட்டியது.



பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன்

பன்னாட்டுத் தமிழுறவு மன்றத்தின் உலக அமைப்பாளரும் தமிழறிஞருமாகிய பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன் அவர்கள் கல்விக்கோ அவர்களின் கொடையுள்ளத்தையும் தமிழ்ப்பற்றையும் சிறப்பாகப் பாராட்டினார்.அவருடைய தலைமையில் தமிழுக்குப் பல ஆக்கங்கள் நிகழும் எனவும் அனைவரும் ஒன்றிணைந்து அவர் தலைமையில்  உழைத்தால் தமிழ் மொழி,இலக்கியம்,கல்வி ஆகியவை பெரும் வளர்ச்சியைக் காணும் எனவும் அறுதியிட்டுரைத்தார்.

இன்று தமிழ்க்கல்வி பெற்றுள்ள இடையூறுகளைப் பட்டியலிட்டு ஒன்றுபட்டு  வினையாற்ற அனைவரையும் அன்புடன் அழைத்தார்.
மாண்புமிகு தளபதியார் ஆட்சியில் நாம் அடையமுடியாமல் போனால் வேறெப்போதும் அடையமுடியாது எனவும் தமிழுக்கு ஆக்கமாக அமைந்துள்ள மாநில ஆட்சியைத் தக்காங்கு பயன்படுத்திக்கொள்ள வேண்டுமெனவும் அறிவுறுத்தினார்.

ஆட்சிமொழி,பயிற்சிமொழி,வழக்குமன்ற மொழி,வழிபாட்டுமொழி எனப்  பல முனைகளில் தமிழின் தலைமையை நிறுவத் தமிழியக்கத்தின் மூலம் ஒன்றுபட்டு உழைப்பொம் என அனைவரையும் அழைத்தார்.




கவிப்பேரரசு வைரமுத்து

கருத்துச்செறிவும் கலகலப்பும் நிறைந்த கவிப்பேரரசு வைரமுத்து அவர்களின் பொழிவு அவையினர்க்குப் பெரிதும் உணர்வூட்டும் பொழிவாக விளங்கியது.எழுத்தும் பேச்சுமே ஒரு மொழியின் உயிர்நாடியாக விளங்குபவை எனவும் தமிழிலே பேசவேண்டும் தமிழிலேயே எழுத வேண்டும் எனத் தமிழர் உறுதிகொண்டு கலப்பற்ற தூயதமிழை நாள்தோறும் பயன்படுத்தினால் தமிழ் மறுமலர்ச்சி எய்தும் எனவும் அவர் கூறியது முற்றிலும் உண்மை மட்டுமல்ல;இக் காலத்துக்குத் தேவையான அறிவுரையும் கூட.

முத்தமிழறிஞர் கலஞரிடம் நாள்தோறும் தூயதமிழில் பேசும் நல்வாய்ப்பைத் தாம் பெற்றிருந்ததாகவும் அவர் மறைவால் அவ் வாய்ப்பு பறிபோயிற்று எனவும் அவர் வருத்தத்தோடு கூறினார்.

கம்பராமாயணம் முதலான காப்பியங்களைப் பிறமொழியிலிருந்து பெற்றதாகக் கூறும்போது ஓரளவு பொறுத்துக்கொள்ளமுடிந்தது எனவும் இப்போது திருக்குறளையே நாம் வடமொழியிலிருந்து பெற்றதாகக் கூறுவது தகாது தருமமுமாகாது எனக் கடிந்துரைக்கவேண்டியுள்ளது எனவும் அவர் தெரிவித்தார்.

நாளுக்கு நாள் அறிவியல் விரைந்து வளர்ந்து செயற்கை நுண்ணறிவியலும் எந்திரனும் பெருகும் சூழலில் தமிழ்வளர்ச்சியில் கருத்துச் செலுத்தவேண்டியது காலத்தின் கட்டாயம் எனவும் அவர்,தமிழ்நாட்டின் கல்வியாளர்களுக்கும் அறிஞர்களுக்கும் வேண்டுகோள் விடுத்தார்.



புதிய நீதிக்கட்சியின் தலைவரும் எம்.ஜி.ஆர்.கல்விநிறுவனங்களின் தலைவருமாகிய திரு ஏ.சி.சண்முகம் அவர்கள் தமது பொழிவில் இரு முக்கிய அறிவிப்புகளைச் செய்தார்.

1) தமிழியக்க உறுப்பினர்களுள் பொருளியல் நலிவுற்றோர்க்குத் தமது எம்.ஜி.ஆர்.மருத்துவமனையில் எவ்விதக் கட்டணமுமின்றி அனைத்து மருத்துவ உதவிகளும் வழங்கப்படும்.பொருட்செலவு மிக்க இதயமாற்று அறுவைப் பண்டுவமாக இருந்தாலும் தாம் மருத்துவ உதவி வழங்க ஆயத்தமாக இருப்பதாக்க் கூறினார்.
2) புலவர்களுக்கு 25,000 ரூபா விருதுகள் பத்து வழங்க ஆயத்தமாக இருப்பதாகக் கூறினார்.அடுத்த ஆண்டுமுதல் தமிழியக்கம் தம் பொருளுதவியை ஏற்றுக்கொண்டு தக்கார்க்கு இவ் விருதுகளை வழங்கலாம் எனவும் தெரிவித்துள்ளார்.

திரு ஏ.சி.சண்முகம் அவர்களின் இந்த அறிவிப்புகள் அவர் கொடையுள்ளத்தைப் புலப்படுத்துகின்றன.அவையினர் அனைவரும் பாராட்டினர்.



தமிழியக்கம் என்னும் சிறந்த அமைப்பு மேலும் சிறப்படைய அதன் மாநிலச் செயலாளர், திரு. மு. சுகுமார் அவர்களின் சுறுசுறுப்பும் பொறுப்புணர்வும் ஒரு காரணம் எனலாம்.இவர் தமது வரவேற்புரையில் தமிழியக்கத்தின் கடந்த ஐந்தாண்டுப் பணிகளை நிரல்படுத்தி உரைத்தார்.




## காந்தக் கவர்ச்சி மிக்க கவி அருவி காதர்

தமிழியக்கத்தின் பொதுச் செயலாளராகப் பொலிந்து வேந்தருக்கு உறுதுணை புரிந்துவரும் பேராசிரியர் காதர் அவர்களைப் பற்றி ஒரு காப்பியமே பாடலாம். அனைத்துத் துறையினரையும் அன்பால் ஈர்த்துத் தமிழியக்கத்தைப் பொலிவுறச் செய்வதில் இவருக்கு நிகர் இவரே.




அனைத்துக் கட்சித் தலைவர்களையும்

அகங்கனிந்து வணங்குகின்றோம்.

அரசியல் வேறுபாடுகளை மறந்து தமிழால்

இணையும் பெருந்தன்மை போற்றி

விழாவுக்கு வந்திருந்து வாழ்த்துரை நல்கிய
தலைவர்களுக்கும் வர இயலாமையைத்
தெரிவித்து வாழ்த்து அனுப்பிய
தலைவர்களுக்கும்

மனங்கனிந்த நன்றியைத்
தெரிவித்துக்கொள்கிறோம்.

இனி அடுத்துத் தமிழர் திருநாளிலும்

திருவள்ளுவர் திருநாளிலும் இதுபோன்ற

ஒன்றுகூடல்கள் நிகழவேண்டும் எனக்
குறள்நெறி அன்பர்கள் சார்பில் வேண்டுகிறோம்.









# வெல்க தமிழியக்கம்

மறைமலை இலக்குவனார்

“ ஒண்டமிழ்த்தாய் சிலம்படியின் முன்னேற்றம் ஒவ்வொன்றும் உன்முன் னேற்றம்!
கண்டறிவாய்! எழுந்திரு நீ! இளந்தமிழா, கண்விழிப்பாய்! இறந்தொழிந்த
பண்டை நலம் புதுப்புலமை பழம்பெருமை அனைத்தையும்நீ படைப்பாய்! இந்நாள்
தொண்டுசெய்வாய்! தமிழுக்குத் துறைதோறும் துறைதோறும் துடித்தெழுந்தே!”

என்னும் பாவேந்தரின் ஆணையை ஏற்றுத் தமிழ்நலன் காக்க, துறைதோறும் தமிழ் வளர்ச்சி மேம்பட,எங்கும் தமிழ்,என்றும் தமிழ் எனத் தமிழ் மறுமலர்ச்சியைக் கிளர்ந்தெழச் செய்யத் தமிழியக்கம் அணிதிரண்டு ஐந்தாண்டுகள் ஆகிவிட்டன.ஆறாம் ஆண்டின் நுழைவாயிலில் நாம்!

மலர்ந்த முகமும்,கனிந்த மொழியும்,தொலைநோக்குச் சிந்தனையும்,வழிகாட்டும் திறமும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற நம் தமிழியக்கத் தலைவர் கல்விக்கோ அவர்கள் கண்ணில் மின்னும் கனவுகள் யாவும் அன்னைத்தமிழின் முன்னைப் பெருமையை மீட்டெடுத்து ஆட்சியில்,கல்வியில்,நீதிமன்றில் தனக்குரிய இடத்தைப் பெறச் செய்வதே.

ஆசீவகச் சமணர் தமிழகத்துக்குள் நுழைந்த அக் காலத்திலேயே அர்த்த மாகதியும் சௌரசேனியும் கலப்புநடை ஏற்படுத்திவிடக் கூடாது என எச்சரித்த தொல்காப்பியரே முதல் தமிழியக்கக் களப் போராளி.அவர் வகுத்த விதி பிற்காலத்தில் சமற்கிருதம் தந்திரமாக,மந்திரமாக நுழையப் பார்த்த வேளையில் நம் தமிழின் தனித்தன்மையைக் காக்க உதவியதன்றோ?

தமிழ்வீரத்தைப் பழித்த காவாநாவிற் கனகவிசயரைக் களத்தில் வென்று தளைப்படுத்திய சேரன்செங்குட்டுவனும் ஆரியம் நன்று,தமிழ் தீது எனவுரைத்த வேட்கோக்குயக்கொண்டானை அறம் சேர்க சுவாகா எனக கடிந்து வீழ்த்திய நக்கீரரும் தமிழியக்கக்களப் போராளிகளே!

சுருங்கச் சொன்னால் “கெடல் எங்கே தமிழின் நலம்?அங்கெல்லாம் தலையிட்டுக் கிளர்ச்சி செய்க!” என்பதனைக் கட்டளை வாசகமாக ஏற்றுக் களம் கண்ட அனைவரும் தமிழியக்கக் களப்போராளிகளே!

இன்று நமக்குக் காத்திருக்கும் களப்பணிகள் ஓராயிரம் எனலாம்.

ஒன்றிய அரசு,மாநில அரசு,ஆட்சித் துறைகள்,சட்டம்-நீதித் துறைகள், கல்வித்துறை, கலைத்துறைகள், மருத்துவம், பொறியியல்,தொழில்நுட்பவியல் துறைகள்,விண்ணியல்,கணினியியல்,செயற்கை நுண்ணறிவியல் துறைகள் எனத்

துறைதோறும் தமிழை அறிமுகப்படுத்துவதுடன் திறம்படச் செயற்படுத்தவேண்டிய கடமைகள் காத்திருக்கின்றன.

அரங்கங்களில் ஆர்ப்பாட்டப் போர்ப்பாட்டு முழங்குவதே தமிழ்ப்பணி எனத் தவறாக எண்ணிக் கடமையை மறந்துவிடக் கூடாது.மனிதனுக்குப் போட்டியாக எந்திரன் உருவாகிவருகிறான்.தமிழ், அறிவுத்துறைகளில் பின் தங்குமேயானால் நமக்கான எந்திரன் வேற்று மொழியாளனாகப் போய்விடுவான். இதன் விளைவாகப் பிந்தைய தலைமுறையினர் அறிவுவளர்ச்சி பெரிதும் தடைப்பட்டுவிடும்.துறைதோறும் தமிழ் வளர்ப்போம். அறிவியற்புனைவுகளும்,புதிய கண்டுபிடிப்புகளும் நுழையும்போதே நம் தமிழ்விளக்கத்துடன் அறிமுகமாகும்படிச் செய்வோம்.புதிய தலைமுறைக்கேற்ற அறிவியல் ஊடகமாய்த் தமிழை மேம்படுத்துவோம்.அதுவே நம் தமிழ்த்தாய்க்கு உரிய அரியணையாய் விளங்கிப் பெருமை கொள்ளச் செய்யும்!

எதுசெய்ய நாட்டுக்கே எனத்துடித்த சிங்கமே! இன்றே, இன்னே,
புதுநாளை உண்டாக்கு! தமிழ்காப்பாய் புத்துணர்வைக் கொணர்வாய் இங்கே
அதிர்ந்தெழுக! தமிழுக்குத் துறைதோறும் துறைதோறும் அழகு காப்பாய்
இதுதான் நீ செயத்தக்க எப்பணிக்கும் முதற்பணியாம் எழுக நன்றே.(பாவேந்தர் பாரதிதாசன்)

## வள்ளுவரும் வள்ளலாரும்



அன்பு எனும் உணர்வுக்குத் தாயாக விளங்குவது அருள். நமது நாடு அருள் உணர்வு கொண்ட மெய்ஞானிகள் வாழ்ந்த நாடு. திருவருட்பிரகாச வள்ளலார் அருள் உணர்வின் சின்னமாகவே வாழ்ந்தார். பசியால் துன்புற்று உழலும் மக்களுக்குப் பசிப்பிணி போக்குவதே தனது தலையாய அறப்பணி எனக்கொண்டு 25.5.1867-இல் சத்திய தரும சாலையைத் தோற்றுவித்துப் பசிப்பிணி நீக்கும் மருத்துவராக விளங்கினார். அவரது திருக்கரத்தால் துவக்கப்பட்ட அறச்சாலை எந்தத் தொய்வும் இன்றி இன்றுவரை செவ்வனே நடைபெற்று, வருகிறது.

வள்ளற்பெருமான் திருவள்ளுவரிடம் பெருமதிப்புக் கொண்டிருந்தார். திருக்குறளைப் பொருள் உணர்ந்து பயின்று அதன் வழிநின்று வாழத்தலைப்பட்டால் மரணம் இல்லாப் பெருவாழ்வு வாழலாம் என்பது பெருமானின் கருத்து. திருஅருட்பாவில் "நெஞ்சறிவுறுத்தல்' என்னும் பகுதியில் திருக்குறளின் சிறப்புகளை தமது நெஞ்சுக்குக் கீழ்க்கண்டவாறு எடுத்துக் கூறுகிறார்.

""கூத்தாட் டவைசேர் குழாம்விளித்தாற் போலுமென்ற
சீர்த்தாட் குறள்மொழியுந் தேர்ந்திலையே"
""செல்லா விடத்து சினந்தீது செல்லிடத்தும்
இல்லதனிற் தீயதென்ற தெண்ணிலையே"
"தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க என்றதனைப்
பொன்னைப்போற் போற்றிப் புகழ்ந்திலையே"
""அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல வென்னுந்
திகழ்வாய் மையுநீ தெளியாய்"
""உறங்குவது போலுமென்ற வொண்குறளின் வாய்மை
மறங்கருதி யந்தோ மறந்தாய்!"
""நெருந லுளனொருன் என்னு நெடுஞ்சொன்
மருவுங் குறட்பா மறந்தாய்!"
"அக்குறட்பாவில் கூறிய நெறிகளை நெஞ்சமே நீ
கைக்கொள்ளவில்லையே!'

எனத் தமக்குத் தாமே கூறி வேதனையுறுகிறார். அவை பெருமான் தனக்குத்தானே கூறிய அறிவுரைகளா? அவருக்கு எதற்கு அறிவுரைகள்? நமக்குக் கூறுவதற்காகத் தனக்குக் கூறியதாகக் கூறிக்கொள்ளும் அறிவுரைகள் நமது நெஞ்சுக்கன்றோ கூறியவை.

எப்பொழுதும் தன்னைத் தாழ்த்திக்கொண்டு தனக்குத் தானே அறிவுரையாக கூறிக்கொள்வதுதான் வள்ளலாரின் தன்னடக்கக் கோட்பாடு. திருவருட்பாவில் ஒரு பாடலில்,
""விளக்கெரியா இருட்டறையில் கிடந்துகவிழ்ந்து அழுது
விம்முகின்ற குழவியினும் மிகப்பெரிதும் சிறியேன்" என்பார்.
எனவே, வள்ளுவரை நினைக்கும் தோறும் வள்ளற்பெருமானையும், வள்ளற்பெருமானை நினைக்கும் தோறும் வள்ளுவரையும் நினைவிற் போற்றி அவர்கள் கூறிய நன்னெறிகளை நெஞ்சில் நிறுத்தி நல்வாழ்வு வாழ்வோமாக.-
-நன்றி-- புலவர் ப.சோமசுந்தர வேலாயுதம்,தினமணி.

# குறள் நெறி

மின்னிதழ்:71 **“குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்”** தி.வ.ஆ.2054 ஐப்பசி-15- பொ.ஆ.-2023 நவம்பர்-1

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்




## சென்னைப் பல்கலைக்கழகத் திருக்குறள் ஆய்வு மையம் & உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகம் இணைந்து நடத்திய பேராசிரியர் சி.இலக்குவனார் ஐம்பதாம் நினைவாண்டுச் சிறப்புக் கருத்தரங்க மலர்







27/10/23 அன்று காலை பத்து மணிக்கு செந்தமிழ் அரிமா சி.இலக்குவனார் திருவுருவப் படத்துக்கு மலர்வணக்கம் செலுத்தியபின் கருத்தரங்கம் தொடங்கியது.






# இளைஞர்கள் எழுச்சி பெற்றுத் தமிழ்ப்பணியாற்றவேண்டும்

## தமிழறிஞர் பொற்கோ அவர்களின் வேண்டுகோள்

பேராசிரியர் சி.இலக்குவனார் ஐம்பதாம் நினைவாண்டுச் சிறப்புக் கருத்தரங்கத்தை 27/10/2023 முற்பகல் தொடங்கிவைத்துச் சென்னைப் பல்கலைக்கழகத்தின் முன்னைத் துணைவேந்தர் டாக்டர் பொன்.கோதண்டராமன் அவர்கள் வீறுணர்வு மிக்க பொழிவு நிகழ்த்தினார்.

"அரங்கில் இளைஞர் கூட்டம் பெருமளவில் காணப்படுவது மிகப் பெரும் மகிழ்ச்சியை அளிக்கிறது.பேராசிரியர் சி.இலக்குவனாரின் தமிழ்ப்பணியும் குறள்நெறித் தொண்டும் வருங்காலத்திலும் மறவாது போற்றப்படுதற்கு இது வழிவகுக்கும். இப்போதெல்லாம் பெரும்பான்மையான இலக்கிய நிகழ்வுகளில் அறுபது அகவைக்கு மேற்பட்டோரையே காணமுடிகிறது.ஆனால் இன்று இங்குத் திரண்டு வந்துள்ள இளைஞர் கூட்டம் எதிர்காலம் குறித்த நம்பிக்கையை வழங்குகிறது.. "என அவர் குறிப்பிட்டார்.

இலக்குவனாரைப் போலவே போர்க்கோலம் பூண்டு கிளர்ந்தெழுந்து தமிழுக்குத் தொண்டாற்றியோர் மிகச் சிலரே. தமிழ்மறவர் பொன்னம்பலனாரும் இலக்குவனாரும் நாம் என்றும் நினைந்து போற்றத்தக்கவகையில் தமிழ்ப்பகை தகர்த்துத் தமிழுணர்வு ஓங்குதற்கு ஓயாது உழைத்தவர்கள்.

முன்னாளில் இருந்ததுபோன்று இப்போது தமிழுணர்வும் தமிழ்ப்பற்றும் இன்றில்லையே என்னும் கவலை அவ்வப்போது ஏற்பட்டுவருகிறது.

இன உணர்வும் மொழி உணர்வும் தமிழ்நாட்டில் ஊன்றிப் பதிந்திட அரும்பணியாற்றியவர் தந்தை பெரியார்.அவர் வழி உழைத்த இலக்குவனார் அதற்காகப் பல அல்ல்ல்பட்டார். எம்.ஓ.எல்.பட்டமும் பின்னர் பி.எச்.டி.பட்டமும் அவருக்குக் கிடைக்கவிடாமல் சூழ்ச்சிகள் பல செய்தனர்.எனினும் தடைகளை எதிர்த்து வெற்றி கண்டவர் இலக்குவனார்.

தொல்காப்பியமும் திருக்குறளும் தமிழரின் இரு கண்கள் என அவர் குறிப்பிட்டார்.அவற்றைப் பரப்புதற்கும் சங்க இலக்கியத்தைப் பரப்புதற்கும் முன்னோடியான பணிகளை ஆற்றியவர் இலக்குவனார்..

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திற்கு அவர் வந்தபோது அவரைக் காணும் வாய்ப்புப் பெற்றேன்.அவர் இயற்றிய தொல்காப்பிய ஆராய்ச்சி நுலை அவரிடம் வாங்கும் நல்வாய்ப்புப் பெற்றேன்.
இலக்குவனார்,பொன்னம்பலனார்,பாவாணர்,சிதம்பரநாதன் செட்டியார்,இராசமாணிக்கனார் என்னும் தமிழ் மறுமலர்ச்சி பெற உழைத்த சான்றோர்களீன் உழைப்பின் பயனை இன்று உலகம் துய்த்துவருகிறது.அறிஞர் அண்ணா நிறுவிய உலகத்தமிழ்மாநாட்டையொட்டி திருக்குறள் ஆய்வுமையங்கள் இன்று பொருளியல்நிலையில் நலிந்துள்ளன.அரசு உடனடிக் கவனம் செலுத்தவேண்டும்.தமிழ்க் கல்விக்கு முதன்மை வழங்கவேண்டும்.இங்கே பேராசிரியர்.திருமதி.வாணி அறிவாளன் அவர்களின் உழைப்பால் திருக்குறள் ஆய்வுமையம் துடிப்புடன் செயலாற்றிவருவது மகிழ்ச்சியளிக்கிறது. "துறை தோறும் குறள் " என்னும் தலைப்பில் பல்வேறு துறைக் கோட்பாடுகளும் திருக்குறளில் காணப்படும் திறத்தைப் பல்வேறு துறைவல்லுநர்கள் ஆய்வுசெய்து உரை வழங்கவிருக்கிறார்கள்.மாணவர்களுக்குப் பயனளிக்க வல்ல இக் கருத்தரங்கு திருக்குறள் நெறி பரவக் காலமெல்லாம் உழைத்த செந்தமிழ்க்காவலர் சி.இலக்குவனார் நினைவுக்குப் புகழ்வணக்கம் செலுத்துவதாக அமையும். " இவ்வாறு அவர் பேசினார்.



## “அஞ்சா நெஞ்சுடன் தமிழ்ப் பகை வென்ற தமிழ்ப்போராளி இலக்குவனார் “

அறிஞர் இ.சுந்தரமூர்த்தி பாராட்டு

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் மேனாள் துணைவேந்தரும் செம்மொழித் தமிழ் மத்திய ஆய்வுநிறுவனத்தின் துணைத்தலைவராக விளங்குபவருமாகிய அறிஞர் இ.சுந்தரமூர்த்தி ஆய்வரங்கத்தைத் தொடக்கிவைத்து உரையாற்றினார்.

“நான் பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்களை ஒரேஒருமுறை பார்த்துள்ளேன்.கோவையில் அறுபது ஆண்டுகளுக்கு முன்னர் நிகழ்ந்த தமிழாசிரியர் மாநில மாநாட்டில் அவர் நிகழ்த்திய வீர உரையைக் கேட்டுள்ளேன்.ஆங்கிலத்தின் இடத்தைத் தமிழ் பெறுதற்கு ஐம்பது ஆண்டுகள் ஆகும் என்று கூறிய அமைச்சரின் கருத்தை உடனடியாக மறுத்து அவர் உரைநிகழ்த்திய அந்தத் தருணத்தை அவருடைய வீறுணர்வு பொங்கும் ஆளுமையின் வெளிப்பாடாக என்றும் என் நினைவில் போற்றுவேன். “ என்று தமது உரையைத் தொடங்கிய அறிஞர் இ.சுந்தரமூர்த்தி தமிழுக்கு நாம் ஆற்றவேண்டிய பணிகளைத் தொகுத்துரைத்து ஓர் அரிய ஆய்வுரை வழங்கினார்.


















மருத்துவப் பணியை நல்லறமாய்ப் போற்றும்

மருத்துவமாமணி மு.குமரேசன்

கடந்த அரை நூற்றாண்டுக்கும் மேலாக மருத்துவப்பணியாற்றிவரும் மருத்துவமாமணி மு.குமரேசன் அவர்கள் பல்வேறு அருஞ்செயல்கள் ஆற்றிவரும் புகழ்மிக்க ஆளுமையாவார்.காது,மூக்கு,தொண்டை மருத்துவ வல்லுநராகப் பல பிணியாளர்களின் துன்பம் நீக்கிய இத் தூயவர் ‘மருத்துவ அறிவியல் மலர் ‘என்னும் இதழ் மூலம் மருத்துவத் தமிழ் வளர்த்துவருகிறார். மெய்ம்மை மருத்துவம் என்னும் நிகர்நிலை மருத்துவத்துறைக்குக் கால்கோள் நிறுவிய முன்னொடியாய்த் திகழ்கிறார்.தமது “உளதாயிரு “ என்னும் தன்னம்பிக்கை எழுச்சியூட்டும் நூலைத் தமிழ் மாணவர்கள் அனைவருக்கும் அன்பளிப்பாக வழங்கியதுடன் கருத்தரங்கக் கோப்புறையாக நெகிழிப்பையும் வழங்கி மாணவர்களை மகிழ்வித்தார். பெண்மைக்குரல் என்னும் கீச்சுக்குரலால் துன்புறும் இளைஞர்களின் மகரக்கட்டு போக்கும் மகரக்கட்டு மருத்துவம் என்னும் ஒப்பற்ற பிணிநீக்குமுறையைக் கண்டறிந்து இதுவரை இரண்டாயிரம் இளைஞர்களின் பெண்குரல் நீக்கிச் சிம்மக்குரல் வழங்கியுள்ளார்.தமது இந்த மருத்துவக் கண்டுபிடிப்புக்குத் தொல்காப்பியமும் திருக்குறளுமே அடித்தளமாக விளங்குகின்றன என இவர் ஆய்வுரை வழங்கித் தமிழ்கூறு நல்லுலகையே பெருமிதம் கொள்ளச் செய்தார்.

“சங்க இலக்கியத்தில் மகரக்கட்டு மருத்துவம் வயது வந்த ஆண்களில் குரல் உடையாமல் ஒலிக்கும் குரல் மகரக்கட்டுக்குரல் எனப்படும். இது ஆண்களில் பெண்மைத் தன்மை உடைய குரல் கீச்சுக்குரல் ஆகும். அக்கீச்சுக்குரல் பருவ வயதான ஆண் பாலினத்திற்கு் பொருத்தமற்றதாக இருக்கும். இதன் விளைவாக உருவான குரல் சக்தி அற்றதாக இருக்கும்.ஆண்களின் கம்பீரத்தை எடுத்துக் கூறுவதாக இருக்காது. பிறர் கேலிசெய்ததால் ஒரு மாணவன் தற்கொலை செய்து கொண்டான். சக்தி அற்ற குரலை வெல்லக்கூடிய மற்றொரு சொல்லை உருவாக்கும் ஆய்வில் ஈடுபட்டேன். அனைத்து ஆங்கில மருத்துவப் புத்தகங்களும் குரல் நாணின் செயல்பாட்டுக் குறை என்று அறுவை சிகிச்சை கூறப்பட்டுள்ளது. செயல்பாட்டுக் குறையைப் போக்க நாங்கள் குரல் நாணில் அறுவை சிகிச்சை செய்து எங்களால் முழுப் பயன் பெற முடியவில்லை. திருவள்ளுவர் நாலடியார், ஔவையார், தொல்காப்பியர் ஆகியோரின் வழிகாட்டுதலின் படி நாங்கள்குரல் பயிற்சியை உருவாக்கியுள்ளோம்.” எனத் தமது ஆய்வுநெறியையும் மருத்துவமுறையையும் படவிளக்கப் பொழிவு மூலம் சிறப்பாக எடுத்துரைத்தார்.திருக்குறள் ஆய்வுகளுள் முத்திரை பதித்த வித்தக விளக்கமாக இவர் உரை விளங்கியது எனல் உண்மை;வெறும் புகழ்ச்சியன்று.




டாக்டர் மு. குமரேசன் எழுதிய நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | நோயற்ற வாழ்வு | ரூ.40.00 |
| 2. | பாலியல் மெய்யும் பொய்யும் | ரூ.70.00 |
| 3. | மங்கையர் மருத்துவம் | ரூ.40.00 |
| 4. | பாலியல் சந்தேகங்கள் தொகுதி-1 | ரூ.40.00 |
| 5. | பாலியல் சந்தேகங்கள் தொகுதி-2 | ரூ.40.00 |
| 6. | நோய்களும் தடுப்பு முறைகளும் | ரூ.45.00 |
| 7. | நோய்கள் அ முதல் ஃ வரை | ரூ.50.00 |
| 8. | தலைசுற்றல் மயக்கம் | ரூ.35.00 |
| 9. | பீனிசம் | ரூ.38.00 |
| 10. | செவிச்செல்வம் | ரூ.18.00 |
| 11. | உடல் நலம் உங்கள் கையில் | ரூ.40.00 |
| 12. | பேச்சுப் பயிற்சி | ரூ.60.00 |
| 13. | ஹோலிஸ்டிக் மருத்துவம் | ரூ.40.00 |
| 14. | இயற்கை வழியில் இனிய வாழ்வு | ரூ.50.00 |
| 15. | TEXT BOOK OF AUDIOLOGY | ரூ.75.00 |
| 16. | TEXT BOOK OF SPEECH PATHOLOGY | ரூ.75.00 |
| 17. | காது மூக்கு தொண்டை மருத்துவம் | ரூ.150.00 |
| 18. | நோய் முதல் நொடி வரை | ரூ.40.00 |
| 19. | உணவே மருந்து மருந்தே உணவு | ரூ.40.00 |
| 20. | 50 வயதுக்கு மேல் உடல் நலம் | ரூ.30.00 |
| 21. | மருத்துவ பதில்கள் | ரூ.50.00 |
| 22. | காது மூக்கு தொண்டை கேள்வி பதில் | ரூ.35.00 |
| 23. | ஒரு டாக்டரின் மருத்துவ சிந்தனைகள் | ரூ.30.00 |

மேற்படி நூல்கள் வேண்டுவோர்
பணவிடை, கேட்போலை, (எம்.ஓ./டி.டி.) அனுப்பவும்
மருத்துவ அறிவியல் மலர்
பு.எண்.136, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை,
திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.
தொலைபேசி : 2854 6086




மேடையில் : ( இ-வ) மருத்துவமாமணி மு.குமரேசன், அறிஞர் இ.சு.,அறிஞர் பொற்கோ,முனைவர் மறைமலை இலக்குவனார்,முனைவர் ய.மணிகண்டன்



" திருக்குறள் பரப்புரை முன்னோடியாகிய பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்களின் ஐம்பதாம் நினைவாண்டு அவர் புகழ் போற்றும் பணியைக் கொண்டாட ஏற்ற தருணம்"

சென்னைப் பல்கலைக்கழகத் திருக்குறள் ஆய்வுமையப் பொறுப்பாளர் பேராசிரியர்(திருமதி) வாணி அறிவாளன் வரவேற்புரை

சிறப்புக் கருத்தரங்கத்திற்கு வந்திருந்த அனைவரையும் வரவேற்றுப் பேராசிரியர்(திருமதி) வாணி அறிவாளன் உரை நிகழ்த்தினார்.அவர் தமது உரையில் திருக்குறள் ஆய்வுமையத்தின் தோற்ற வரலாற்றை விளக்கினார். 'உலக இலக்கியங்களும் திருக்குறளும் ' என்னும் பொதுப்பொருண்மையில் பல்வேறு உலக இலக்கியங்களுடன் ஒப்பாய்வுநோக்கில் திருக்குறளை ஆய்வுசெய்து உரை வழங்கும்வகையில் பல அறிஞர்களின் உரைகளை ஏற்பாடு செய்ததாகக் கூறினார். " இந்த ஆண்டில் திருக்குறள் பரவுதற்குத் தொண்டாற்றிய அறிஞர்களைப் பற்றிய உரைகளுக்குத் திட்டமிட்டோம்.கடந்த திங்கள் கலைஞரைப் பற்றிய கருத்தரங்கம் நட்த்தப்பட்டது.இப்போது பேராசிரியர் சி.இலக்குவனாரின் ஐம்பதாம் நினைவாண்டு குறித்த இந்தச் சிறப்புக் கருத்தரங்கம் நிகழ்தல் சாலவும் சிறப்பு. "

















கருத்தரங்கக் கட்டுரைத் தொகுதி நூல் வெளியீடு

கருத்தரங்கில் பல்வேறு துறை அறிஞர்களும் வழங்கிய கட்டுரைகளின் தொகுதி நூலாக்கம் பெற்று விரைவில் வெளிவரவுள்ளது.தரமான நூல்களை வெளியிட்டுத் தமிழாய்வு தழைக்க உதவிவரும் மணிவாசகர் பதிப்பகத்தார் இம் முயற்சியில் மனமுவந்து ஈடுபட்டுள்ளனர்.இதன் ஒளியச்சுப்படி நூலாக இக் கருத்தரங்கில் வெளியிடப்பெற்றது.சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத் துறைத்தலைவர் முனைவர் ய.மணிகண்டன் அவர்கள் இந் நூலை வெளியிட்டார்.மெரினா வளாக இயக்குநர் முனைவர் கோ.பழனி நூலைப் பெற்றுக்கொண்டார்.

"தமிழ் மானம் காக்க இளைஞர்கள் விழிப்புணர்வு கொள்க"

தமிழறிஞர் ம.இராசேந்திரன் கருத்தரங்க நிறைவுரையில் எழுச்சி முழக்கம்

பிற்பகல் அமர்வில் ஆய்வுரைகள் வழங்கியபின்னர் மேனாள் தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக்கழகத் துணைவேந்தரும் கணையாழி ஆசிரியருமாகிய தமிழறிஞர் ம.இராசேந்திரன் சிறப்பான நிறைவுரை வழங்கினார்.

"திருவள்ளுவர் தேர்ந்தெடுத்த இலக்கிய வடிவமாகிய குறள் வெண்பா குறுகிய வெண்பா எனப் பொருள்படும் பாவடிவம் ஆகும்.வெண்பா நான்கடி என்றால் குறள் ஒன்றேமுக்கால் அடி.வெண்பா பதினைந்து சீர்களைக் கொண்டது.குறள் ஏழு சீர்களில் இயன்றது. வடிவங்களில் ஒரு மாற்றுத் திறனாளி வடிவமாகிய குறள் யாப்பு வள்ளுவரால் தேர்ந்தெடுக்கப்பட்டது.ஆனால் ஏனைய எல்லா இலக்கியங்களுக்கும் இல்லாத திரு என்னும் சிறப்பு அடைமொழி குறளுக்கே உரியது.ஒரு நூலைப் பாராட்டி இன்னொரு நூல் எழுந்தது எனில் அந்தப் பெருமையும் குறளுக்கே உரியது.அந்த நூலாகிய வள்ளுவமாலைக்கும் திரு என்னும் அடை வழங்கப்பட்டு வருகிறது.கருத்தால் புரட்சி விளைவித்த திருவள்ளுவர் தமது நூலின் யாப்பு வடிவிலும் புரட்சி செய்துள்ளார். " இது போன்ற பல புதிய கருத்துகளை வழங்கிய அறிஞர் ம.ரா.தமிழ் பயிலும் மாணவர்களை ஊக்கப்படுத்தும் பல கருத்துக்களைச் சுவையுடன் தொடுத்துரைத்துக் கலகலப்பும் கவர்ச்சியும் மிக்க பொழிவை வழங்கினார்.

தனித்தன்மையும் ஒப்பற்ற சிறப்பும் கொண்ட திருக்குறள் வேறொரு மொழிநூலைத் தழுவி இயற்றப்பெற்றதாகத் திட்டமிட்டுப் பொய்யுரை கூறிப் பொல்லாங்கு விளைக்கும் சிலரின் கூற்றுகளின் பொருந்தாமையை அம்பலப்படுத்தும்வகையில் தமது ஆய்வுநெறியை முடுக்கிவிட்டுத் தமிழ்மானம் காக்க எழுச்சி கொள்ளுமாறு மாணவர்களுக்கு அவர் வேண்டுகோள் விடுத்தார்.

முனைவர் பட்ட ஆய்வாளர் செல்வன் க.செயபால் நன்றியுரைக்குப் பின் விழா நிறைவுற்றது.











தமிழ்ச்செம்மல் சோம.வீரப்பன் அவர்கள்




"திருக்குறளில் மேலாண்மைக் கோட்பாடுகள் "



அரியானா எசு.ஆர்.எம்.பல்கலைக்கழக மேனாள் துணைவேந்தர் முதுமுனைவர் இராசராசன் சாமிநாதன் அவர்களுக்குத் தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக்கழகத் துணைவேந்தர் சிறப்புச் செய்தல்



வி.ஐ.டி.பல்கலைக்கழகப் பேராசிரியர் ச.சிவக்குமார் அவர்களின் உரை

"திருக்குறளும் செயற்கை நுண்ணறிவும்



பேராசிரியர் ச.சிவக்குமார் அவர்கள் சிறப்பிக்கப்படுகிறார்.



சென்னை அண்ணா பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் தமிழியலன் அவர்கள்

" திருக்குறளும் நீர்மேலாண்மையும் "



செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின்  மேனாள் பதிவாளர் முனைவர் மு.முத்துவேலு அவர்கள் சிறப்பிக்கப்படுகிறார்.

மேற்கூறிய பெருந்தகைகளை உவகையுடன் உள்ளன்பு மேலிடப் பொன்னாடை போர்த்துச் சிறப்பித்தவர் நம் அன்புக்குரிய தஞ்சைப் பல்கலைக்கழக மேனாள் திணைவேந்தர் முனைவர் ம.இராசேந்திரன் அவர்கள்.

சிறப்புக் கருத்தரங்கையொட்டி மாணவர்களுக்கு "உள்ளம் வென்ற ஒரு குறள் " என்னும் தலைப்பில் நடத்தப்பெற்ற பேச்சுப்போட்டியில் பரிசு பெற்றோர் விவரம்







முதல் பரிசு:
செல்வி.த.கங்கா

இரண்டாம் பரிசு:
க.சதீசுகுமார்

மூன்றாம் பரிசு:
ஐ.தமிழன்

"குறளின் குரல் " என்னும் தலைப்பில் நிகழ்ந்த கவிதைப் போட்டியில் பரிசு பெற்றோர் விவரம் :







முதல் பரிசு:
அ.பிரசன்னராஜா

இரண்டாம் பரிசு:
மு.பசுபதி

மூன்றாம் பரிசு:
ச.திவாகர்[அவர் சார்பாகப் பரிசு பெற்றுக் கொண்டவர் ஜா.ஜெர்லின் ரூபியா]

போட்டிகளில் கலந்துகொண்டு பரிசு பெற்றவர்களுக்கும் பரிசு பெறும் வாய்ப்பை இழந்தவர்களுக்கும் எமது வாழ்த்துக்கள்.

போட்டியில் கலந்துகொள்வதே முதன்மை.பரிசு இப்போது இல்லாவிட்டாலும் பின்னர் உறுதியாகக் கிடைக்கும்.

உடையர் எனப்படுவ தூக்கமஃ தில்லார்
உடைய துடையரோ மற்று
உள்ள முடைமை உடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்
ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்க முடையா னுழை
என்னும் வள்ளுவப் பெருந்தகையின் வாய்மொழிகளையே ஊக்கவுரைகளாக ஏற்று எல்லா நிலைகளிலும் எதிர்வரும் அறைகூவல்களை வென்று வாகை சூட வாழ்த்துகிறோம்.





சென்னைப் பல்கலைக்கழகத் திருக்குறள் ஆய்வு மையம் -

- உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகம்

இணைந்து நடத்தும்

பேராசிரியர் சி.இலக்குவனார் ஐம்பதாம் நினைவாண்டுச் சிறப்புக் கருத்தரங்கம்

27/10/2023

## துறை தோறும் குறள்-ஆய்வரங்கம்

தலைமையுரை: டாக்டர் பொன்.கோதண்டராமன்

(சென்னைப் பல்கலைக்கழகத்தின் முன்னைத் துணைவேந்தர்)

தொடக்கவுரை: டாக்டர் இ.சுந்தரமூர்த்தி

(துணைத்தலைவர்,செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்)

நிறைவுரை: முனைவர்ம.இராசேந்திரன்(முன்னைத் துணைவேந்தர், தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக்கழகம்)

ஆய்வுரையாளர்கள்:

டாக்டர் மு.குமரேசன்

முதுமுனைவர்.இராசராசன் சுவாமிநாதன்

முனைவர் மு.முத்துவேலு

முனைவர் தமிழியலன்

முனைவர் ச.சிவக்குமார்

தமிழ்ச்செம்மல் சோம.வீரப்பன்

## உள்ளடக்கம்





# குறள்நெறி

-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-



*மின்னிதழ்:72 ஐப்பசி-30--தி.பி.2054 நவம்பர்-16- பொ.ஆ.2023*

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

## செந்தமிழ் அரிமா சி.இலக்குவனார் 114-ஆம் பிறந்தநாள் சிறப்பிதழ்



“அவர் யாருக்கும் தலைவணங்காமலே வாழ்ந்தார். அவர் கனக விசயனை எதிர்த்து வெற்றி கண்ட சேரன் செங்குட்டுவனைப் போல் இருந்தார். எனக்குத் தன்மானத்தைக் கற்றுத் தந்தவர் அவர்” - முத்தமிழறிஞர் கலைஞர்

## தொல்காப்பிய ஆங்கில மொழிபெயர்ப்பிற்குப் பேரறிஞர் அண்ணா அணிந்துரை

தமிழாக்கம்:பேராசிரியர் வீ.முத்துச்சாமி

இன்றமிழ்ப் புலமைமிகு இலக்குவனாரின் இவ் வாராய்ச்சி நூலை நோக்கியவுடனே விழுமம் எனும் எழிற்றமிழ்ச் சொல்லே எவருடைய உள்ளத்திலும் இயல்பாக எழும். வினைநயங் கெழுமிய இவ்வாராய்ச்சி வியப்பூட்டுகின்ற ஓர் இலக்கியக் கருவூலம் எனினும் மிகையன்று. பன்னூற் புலமையுடைய பண்டாரகர் இலக்குவனார்க்கு இஃதோர் எளிய வெற்றியேயாம்.

இஃது அறப்பழமையும், அழியா அழகும் நனி உயர்வும் பொலியும் நற்றமிழ் இலக்கணப் பேழையாகிய ஒல்காப் புகழ்த் தொல்காப்பியத்தின் மொழி பெயர்ப்பு மட்டுமன்று; பண்டாரகர் இலக்குவனார் அவர்கள் இப்பைந்தமிழ் ஆராய்ச்சி மூலம் பழந்தமிழ் நாட்டின் உண்மை நிலையினை ஒரு சொல்லோவியமாகவே தீட்டிக் காட்டியுள்ளார் எனலே சாலும்.

தமிழ்ப் பழங்குடி மக்களாகிய நமக்கு நம் மொழியின் இலக்கியப் பரப்பை உள்ளிய அளவிலேயே பெருமகிழ்ச்சி கொள்வதற்கு எல்லாவித உரிமையும் உண்டு. அத்தகு பேரிலக்கியங்களின் அடிக்கல்லே தொல்காப்பியமெனும பழந்தமிழ் இலக்கணமாம்.

மொழியின் அடிப்படைக் கூறுகள் பொதுளிய தொல்காப்பியம் போன்ற இலக்கண நூலை மொழிபெயர்ப்பது என்பது எளிய செயலாமோ, அரிதினும் அரிதே, நுண்மாண் நுழைபுலமும், அஃகி அகன்ற அறிவுக் கூர்மையும், ஆய்வுத் திறலும் பெற்றவராலன்றோ இத்தகு பெருஞ் செயலை ஆற்றவொல்லும், அத்தகைய பேராற்றலைப் பெருமளவில் பெற்றிருக்கின்ற பெற்றியைப் பேராசிரியர் இலக்குவனார் அவர்கள் இவ்வாராய்ச்சிக் கருவூலம் மூலம் தெற்றெனக்காட்டியுள்ளார்.

பண்டாரகர் இலக்குவனார் அவர்களைத் தமிழுலகம் ஏற்கெனவே நன்கறியும். அவர் ஓர் அரிய ஆராய்ச்சியாளர்; அஞ்சா நெஞ்சுடை அருந்தமிழ்க் குரிசில்; நேர்மையின் நிலைக்களன். இந்நூல் அன்னாரது பல்லாண்டுக் கல்விச் செறிவையும் இலக்கியத்திறனாய்வின் தெளிவையும் ஒப்பு நோக்கும் கருத்தோட்டத்தையும் தெளிவுறக்காட்டும் நல் ஆடியாகவே மிளிர்கிறது.

அருந்தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தை ஆங்கில மொழியில் அளிப்பதன் தலைக்கீடாகப் பேராசிரியர் இலக்குவனார் அவர்கள் பெருந்தொண்டாற்றி யிருக்கிறார் என்றே கூறல் வேண்டும். ஆங்கிலம் அறிந்த மக்கள் பழந்தமிழ்நாட்டின் உயர்வினை உள்ளபடி உணர்தற்கும், உணர்ந்த வழி பாராட்டற்கும் இந்நூல் பெரிதும் துணைபுரியும் என்பது வெள்ளிடை மலை.



தொல்தமிழ் இலக்கணப்பெட்டகமாம் தொல்காப்பியத்தை எண்ணிப் பெருமையும் சிறப்பும் பெறுகின்ற பெரும் பேற்றினைத் தமிழ் மக்கள்; பெற்றிருக்கிறார்கள். இவ்வுலகில் எண்ணற்ற நாடுகள் அவற்றின் மொழிகளைச் செம்மைப்படுத்த முனையுங் காலத்திற்கும் பன்னூறாண்டுகட்கு முன்னரே பைந்தமிழ் மக்கள் எத்தகு கால உச்சியை எய்தியிருந்தார்கள் என்பதை அறுதியிட்டுத் தெற்றெனப் புலப்படுத்தும் ஆற்றலினை ஆங்கிலப் பேரறிஞர்கட்கு இவ்வாராய்ச்சி நூல் நல்கி ஆன்ற துணை நிற்கும் என்பது தெள்ளிது.

பொதுவாக இலக்கிய மாணவர்களும் குறிப்பாகத் தமிழ் மக்களும், தண்டமிழ்ப் புலவர் பெருந்தகையாகிய இலக்குவனார்க்கு நன்றி செலுத்தப்பெரிதும் கடப்பாடுடையர் என்பதை உரைக்க வேண்டுவதின்று.

இலக்குவனார் வேலூர்ச் சிறையிலிருந்து வந்தபின் மதுரை மாணவர்களும் மக்களும் நடத்திய  பிறந்தநாள்விழாவில் அண்ணா

இவ்வாராய்ச்சி நூற்கண் காணக் கிடக்கின்ற பல்வேறு கருத்துகளை நிரல் படுத்துகின்ற ஆற்றல் என்பால்இன்று. உள்ளத்தே எழுகின்ற பாராட்டுணர்ச்சிகளை மிகச் சுருக்கமாகப் பாங்குற வெளிக்காட்டும் வழியினையும் அறியேன். இப்பெரும் ஆராய்ச்சி, தமிழ்ப் பெருமக்களுக்குப் பெருமை நல்கும் ஒரு பெருஞ்செயல் என்று உரைப்பதிலே நான் நிறைவெய்துகிறேன். இன்றைய தமிழின் மறுமலர்ச்சியாராய்ச்சி கண்டு பாராட்டும் பண்புடையோர், இவ்விலக்கியப் பெருநூலின் நற்பயனை நனிமுறையில் எய்துவர் என்றே நான் நம்புகிறேன். தொல்தமிழ் இலக்கணமாம் தொல்காப்பியத்தை ஆங்கில மொழியில் வழங்கியுள்ளமைக்காக, வண்டமிழ்ப் புலவராம் பேராசிரியர் இலக்குவனார்க்கு என் உளமார்ந்த நன்றியைக் கூறிக் கொள்கிறேன்.



அறிஞர் அண்ணா போப்பாண்டவர் அவர்களைச் சந்தித்தபோது இலக்குவனார் அவர்களின் தொல்காப்பிய ஆங்கில மொழியாக்கத்தை வழங்கினார்

# தமிழ் உரிமைப் ’**போராசிரியர்**’ இலக்குவனார்

எண்ணற்ற பேராசிரியர்கள் தமிழுக்குத் தொண்டாற்றியுள்ளனர்..தமது ஆய்வுநூல்களின் வழியாகவும் உரைகளின் மூலமும் சொற்பொழிவுகளின் வாயிலாகவும் தமிழ் இலக்கிய இலக்கணங்களின் பெருமையை எடுத்தியம்பியுள்ளனர்.ஆனால் தமிழுக்குத் தீங்கென்று உரைக்கக் கேட்ட மாத்திரத்திலே நரம்பெல்லாம் இரும்பாக்கி நனவெல்லாம் உணர்வாக்கிக் கிளர்ந்தெழுந்து உரிமைப் போர்க்களம் புகுந்த போராளியாகத் திகழ்ந்த ஒரே பேராசிரியர் இலக்குவனார் மட்டுமேயாவர்.தமிழ் வளர்த்த பேராசிரியராக மட்டுமின்றித் தமிழ் உரிமைப் போராசிரியராகவும் அவர் திகழ்ந்தமையாலேயே தமிழ் வரலாற்றில் அவர் நிலைத்த இடம் பெற்றுள்ளார்.

“கெடல் எங்கே தமிழின் நலம்?—அங்கெல்லாம்

தலையிட்டுக் கிளர்ச்சி செய்க”என்னும் பாரதிதாசனின் வேண்டுகோள் தம்மை முன்னிறுத்தியதாகவே அவர் எஞ்ஞான்றும் கருதிச் செயற்பட்டார்.

தோளிலே வில்லைத் தாங்கி நெஞ்சிலே வீரம் தேக்கிக் கண்களில் சீற்றத்துடனும் விழிப்புணர்வுடனும் இராமனுக்கு யாராலே எப்போது தீங்கு வந்துவிடுமோ என்று போர்க்கோலம் பூண்ட இராமாயண இலக்குவனைக் காட்டிலும் மிகுந்த முனைப்பும் வீறுணர்வும் கொண்ட தமிழ் உரிமைப் போராளி என்பதே அவரைப் பற்றிய சரியான மதிப்பீடு எனலாம்.

தமது பள்ளிப்பருவத்திலே தம்முடைய தமிழாசிரியர் சாமி.சிதம்பரனார் ஊட்டிய தனித்தமிழுணர்வும் சுயமரியாதை வீறுணர்ச்சியும் பசுமரத்தாணியாக அவர் உள்ளத்தைப் பற்றிக்கொண்டன.திருவையாறு அரசர் கல்லூரியில் அவர் புலவர் வகுப்பு மாணாக்கராகப் பயின்றபொழுது அவருடையா ஆசிரியராகப் பாடம் நடத்தவந்த பி.சா.சுப்பிரமணிய சாத்திரியாரிடமே அவர் தமிழுரிமைப் போர் தொடக்கம் பெற்றது.சாத்திரியார் தமிழிலும் சமற்கிருத மொழியிலும் புலமைபெற்றவர்.தமிழின்மேல் அவருக்கு வெறுப்பு இல்லையெனினும் சமற்கிருதத்தின் மேல் அளவிறந்த ஈடுபாடும் சமற்கிருதத்தின் வாயிலாகவே தமிழ் தழைத்தது என்னும் எண்ணமும் மிக்கிருந்தது. இதன் விளைவாகத் தொல்காப்பியப் பாடம் நடத்தவந்த சாத்திரியார் வடமொழி இலக்கணங்களின் வழிநின்றே தொல்காப்பியம் இயற்றப்பெற்றது எனக் கூறினார்.மாணாக்கர் இலக்குவனார் எழுந்துநின்று மறுப்புரைத்தார்;சாத்திரியார் அவருடைய ஆசிரியர் மட்டுமல்லர் அக் கல்லூரியின் முதல்வருமாவார்.ஆனால் சிங்கக்குருளை அச்சமறியுமா?தொல்காப்பியத்தைப் பாணினியத்தின் வழிநூல் என ஆசிரியர் கூறியதை ஏற்கமறுத்து எதிர்வாதம் புரிந்தார் இலக்குவனார்.

இந்த நிகழ்வு தொல்காப்பியத்தை ஆழ்ந்து கற்கவும் உரையாசிரியர்களை ஊன்றிப் பயிலவும் கால்டுவெல் இயற்றிய “திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்”என்னும் ஆங்கில நூலைக் ’கரைத்துக்

குடிக்கவும்'இலக்குவனாரைத் தூண்டியது என்கிறார் அப்போது விடுதியில் அவருடைய அறைத்தோழராக உடனுறைந்த மேசர் அ.கிருட்டிணமூர்த்தி.



சாத்திரியார் தொல்காப்பியத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து நூலாக வெளியிட்டதறிந்து அவரது ஓரவஞ்சனை நிறைந்த கூற்றுகளை மறுத்துத் தொல்காப்பியத்தின் தனிச்சிறப்பை உணர்த்தும்வகையில் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து அகிலமெங்கும் தமிழின் பெருமையைப் பரப்பத் திட்டமிட்டார் இலக்குவனார்.

<<<<<<< திருவையாறு அரசர் கல்லூரி

நாட்டாண்மைக் கழக உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராகப் பொறுப்பேற்ற நாள்முதல் தொல்காப்பியம்,திருக்குறள்,சங்க இலக்கியம்,சிலப்பதிகாரம் இவற்றை மாணவர் நெஞ்சில் ஊன்றவும் மக்கள்மன்றத்தில் பரப்பவும் ஓய்வறியாது உழைத்தார் இலக்குவனார்.

தொல்காப்பியர் விழா,திருவள்ளுவர் விழா,ஔவையார் விழா,இளங்கோவடிகள் விழா,தமிழ் மறுமலர்ச்சி விழா எனத் தாம் பணியாற்றிய பள்ளிகளில் அவர் நடத்திய விழாக்கள் மாணவர்களுக்கு எழுச்சியூட்டவும் பெற்றோர் உள்ளத்தில் தமிழின் சிறப்பைப் பதியவும் வழிவகுத்தது.ஆனால் இவையெல்லாம் அவர் சார்ந்திருந்த திராவிடர் கழகத்தின் வெளிப்பாடே எனச் சிலர் பிறழ உணர்ந்து அவருக்குத் தொல்லையளிக்க முனைந்தனர்.இத்தகைய தொல்லைகள் அவருடைய வாழ்நாள் முழுமையும் அவருக்குத் தொடர்ந்தன.

அவர் நடத்திய விழாக்களிலோ ஆற்றிய பொழிவுகளிலோ குறைகாண முடியாதவர்கள் அவர் ''நடத்தாத விழாக்கள்'' எனப் பட்டியலிட்டுக் குறைகூறமுற்பட்டனர்.ஏன் கம்பருக்கு விழா இல்லை?பாரதியாருக்கு ஏன் விழா எடுக்கவில்லை எனக் கேள்வி எழுப்பினர்.அரசியல் வேறுபாடு மறந்து அன்னைத்தமிழைப் போற்ற அனைவரும் ஒன்றுபடவேண்டுமென முழங்கிய இலக்குவனாரை அழுக்காறு கொண்டோர் அரசியல்சாயத்தை அவருக்குப் பூசிப் பழிகூறினர்.

இலக்குவனார் தமது போர்முறையைத் தெளிவாக வரையறுத்துக்கொண்டார்.

1)தமிழிலும் ஆங்கிலத்திலும், நூல்கள் இயற்றி ஆய்வுலகத்தில் கருத்துப் போர் புரிதல்

2)ஏடுகள் நடத்தியும் மன்றங்கள் அமைத்தும் மக்கள் மன்றத்தில் மொழிஉரிமையுணர்ப்வைப் பரப்பல்

3)ஊர்வலங்கள்,கூட்டங்களின் மூலம் மக்களை நேரடியாகத் தொடர்பு கொள்ளல்

4)மாணாக்கர்கள் உள்ளத்தில் தனித்தமிழுணர்வை ஆழப் பதியச்செய்தல்

சுருக்கமாகச் சொன்னால்"**எழுதுதற்கு ஏடும் பேசுதற்கு மேடையும் எப்போதும் வேண்டும் தமிழ்பரப்ப"**என்னும் இலக்குவனாரின் முழக்கமே அவர்தம் செயல்திட்டத்தை விளக்கப் போதும் எனலாம்.

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் சங்க இலக்கியம் என்பது புலவர்க்கே உரிய கருவூலமாக விளங்கியது. ஓரளவு கல்வி பெற்றோரும் சங்க இலக்கியத்தைப் புரிந்துகொள்ளும் வகையில், பேராசிரியர் சி.இலக்குவனார் 'சங்க இலக்கியம்' என்னும் தலைப்பில் (.1944 முதல் 1947 வரை) ஒரு வார இதழ் நடத்தினார்.சங்கப் பாடல்கள் சிறுகதை வடிவிலும் ஓரங்க நாடக வடிவிலும் எளிய தமிழில் புனையப்பெற்று மக்கள்மன்றத்தில் அறிமுகம் பெறுதற்கு இந்த இதழ் வழிவகுத்தது.


சங்க

இலக்கியம்.

வெளியீடு 4

சங்கத்தமிழ் பாடி தமிழர் புகழ் வளர்ப்போம்

(மாமூலனர் பாடல்கள்)

(விளக்கவுரை, பதவுரை, ஆராய்ச்சிக்குறிப்பு)

ரு. விழுச்சீர் வேங்கடம் பெறினும் - ?

புலவர்
சி. இலக்குவன், M. O. L.
தமிழ் விரிவுரையாளர்,
சாலைத்தெரு, சிந்துபூந்துறை, திருநெல்வேலி.

விலை: 0—1—0

குடி அரசு

எமது தீர்ப்பு

இலக்கியம்

(திங்கள் இருமுறை)
ஆசிரியர். சி. இலக்குவன்.
திருநெல்வேலி.

[புல்ஸ்கேப் 1/8 42 பக்கங்கள் தனி இதழ் 0-4-0 ஆண்டுக் கட்டணம் 4-0-0]

தமிழ் மக்களின் பழமைக்கும் பெருமைக்குமுரிய இலக்கியங்களை— தமிழ்ப் பொதுமக்களை நீண்ட நாளாக அச்சுறுத்திக் கொண்டு வந்த இலக்கியங்களை — தமிழ் மக்கள் சுவைக்க வேண்டும்; தமிழர் தம் தனி நாகரிகம், பண்பு முதலியவற்றை யுணர்ந்து இக் காலப் போலி மயக்கிலிருந்து விடுபட வேண்டும் என்ற சிறந்த நோக்கத்தோடு, இவ்விலக்கியம் தோன்றியிருக்க வேண்டும் என மலர் 14, 15. அறிவிக்கின்றது.

தாமரையில் தவழும் புலி, வில், கயல் அரசியல் கட்சியைத் தழுவியதா? என்பது இதிலிருந்து அறிய முடியவில்லை.

இலக்கியத்திற்கு அடிப்படையான மக்கள் வாழ்வு வளர, இலக்கியம் வளர்வதாக! என மனமுவந்து கூறுகின்றோம். திராவிடர்கள் — சிறப்பாகத் திராவிட மாணவர்கள் தவறாது படித்துப் பயனடைய வேண்டும்.

இந்தச் செயல்திட்டம் மட்டுமல்ல, இன்னும் சிறப்பாக, அரசியல் தலைவர்களாயினும் ஆட்சிப்பொறுப்பில் உள்ளவர்கள் என்றாலும் ‘நெற்றிக்கண் காட்டினாலும் குற்றம் குற்றமே”என அஞ்சாது இடித்துரைத்த நக்கீரப் பண்பே அவரின் தலையாய ஆளுமையாக விளங்கியது.

சிரீ பிரகாசா என்பவர் தமிழ்நாட்டு ஆளுநராக இருந்தவேளையில் தமிழ்ப்பெண்களைப் பற்றிய தரங்குறைந்த மதிப்பீடு ஒன்றினை வெளியிட்டார். இலக்குவனார் தாம் நடத்திவந்த “திராவிடக்கூட்டரசு”என்னும் இதழில் ஆளுநரின் அடாத செயலை வன்மையாக்க் கடிந்துரைத்தார்.

# திராவிடக் கூட்டரசு.

வெள்ளிக்கிழமை தோறும் வெளிவரும் வாரஇதழ். கரந்தை, தஞ்சை.

ஆசிரியர்: சி. இலக்குவனார், எம் ஏ., எம். ஓ. எல்.



மலர் 1 | 31-10-52 | இதழ் 7

ஸ்ரீபிரகாசாவின் பிதற்றலும் பெண்கள் உளக் குமுறலும்

## ”உங்கள் தீர்ப்பு என்ன?

சென்னை கவர்னர் திரு. ஸ்ரீபிரகாசா, சென்னை நகராட்சிப்பெருமன்ற விளையாடுமிடத்தில் (Corporation Stadium) புதிய மண்டபத்தைத்திறந்துவைக்கையில், “ஆடவர்கள் வெறித்துப் பார்ப்பதை ஆட்சேபிக்கும் ஒரு ஸ்திரீயைக் கூட நான் இதுவரை சந்தித்ததில்லை” என்று கூறினார். பந்தயம் பார்க்கவும், பதக்கங்கள் வழங்கவும், கட்டிடத்திறப்பு விழாக்களில் கலந்து கொள்வதற்கும், அடிப்படைக் கல் நாட்டவும் தவறாது சென்று வருவதுதான் கவர்னர் அவர்களுக்குரிய கடமையா? பட்டத்துக்கும் பதவிக்கும் ஆசைப்பட்டு, உல்லாச புரியிலே உலவும் நேரத்தில், தமிழ் நாட்டுப் பெண்களின் தன்மான உணர்ச்சியை மறந்தா, அவர் இவ்வாறு உளறினார்? கற்பை உயிரென ஓம்பும் வேறெந்த நாட்டிலுமில்லாத நம் தமிழ் பண்பாட்டை அவர் அறிந்திலர்போலும்! வேற்று ஆடவர் வெறித்துப் பார்ப்பதை வடநாட்டுப் பெண்கள் சிலர் ஒரு வேளை விரும்பி வரவேற்கலாம். ஆனால், தம் தலைவனையன்றிப் பிறரை ஏறெடுத்தும் நோக்கியறியாத பெண்கள் இன்றும் எண்ணிறந்தவர் இருக்கின்றனர் என்பதை திரு. ஸ்ரீபிரகாசா உணராதது விந்தைதான். அவரது அறுபத்திரண்டு வயது அனுபவத்தில், உலகிலுள்ள எல்லாப் பெண்களின் உள்ள நிலையையும் தாம் ஆராய்ந்து அறிந்து கொண்டிருப்பதாக அவர் எண்ணிக்கொண்டிருக்கின்றார். “தங்களுக்கு அக்கறையுள்ள பெண்களை வேறு ஆடவர்கள் வெறித்துப்பார்ப்பதை ஆண்கள் நான் அறிமதிப்பதில்லை” என்று அவர் கூறிப்பிட்டார். அதேபோல் தங்களிடம் அக்கறை காட்ட வேண்டியவரன்றி, அந்நிய ஆடவர்கள் தங்களை வெறித்துப் பார்ப்பதை அரிவையரும் அறவே வெறுக்கின்றனர் என்பதையும், அவர் ஏனோ சிந்திக்கத் தவறிவிட்டார்!

ஆரியப் பரம்பரையில் வளர்ந்து, ஆரியச் சூழலிலேயே பழகிப் பழுத்துப் போயிருக்கும் திரு. ஸ்ரீபிரகாசா, அவர்களது குண இயல்புகளைத் தானே பறைசாற்றுவார்? அதற்காக அவர் இந்திய நாட்டு எல்லாப் பெண்களையுமே ஏன் இழிவு படுத்த வேண்டும்?

தனி இதழ் விலை அணா 1 ★ ஆண்டுக்கட்டணம் ரூபாய் 4




செட்டிநாட்டரசர் முத்தையாச் செட்டியார் தமிழ் எம்.ஏ.படித்தவர்கள் வேலையின்றித் திண்டாடுவதால் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் எம்.ஏ.வகுப்பை நீக்கிவிடப் போவதாக அறிவித்திருந்தார்.1959-ஆம் ஆண்டில் புதுக்கோட்டை அண்ணலார் பு.அ.சுப்பிரமணியனாரின் மணிவிழாவுக்குச் செட்டிநாட்டரசர் வந்தபோது,இலக்குவனார் தமது பொழிவில் இக் கருத்தை மறுத்து, தமிழ் எம்.ஏ.வகுப்பை நீக்கப்போவதில்லை என அந்தக் கூட்டத்திலேயே அறிவிக்கவேண்டுமென வலியுறுத்தினார்.தம்மை எதிர்த்துப் பேசப் பலரும் அஞ்சும் சூழலில் இலக்குவனார் காட்டிய அஞ்சாமையைப் பாராட்டிய செட்டிநாட்டரசர் அந்தக் கூட்டத்திலேயே அந்த உறுதிமொழியை வழங்கினார்.

இவ்வுலக வாழ்க்கை சிறந்தோங்க வழிகாட்டும் திருக்குறள்,மேலுலகு பற்றிய ஆய்வை முன்னிறுத்தும் வேதங்களையும் உபநிடதங்களையும் விடச் சிறந்தது எனப் பாராட்டிய மெய்யியல் அறிஞர் ஆல்பர்ட்டு சுவைட்சரின் புத்தகத்திற்குத் தடை விதிக்கக் காரணமாக இருந்த முனைவர்.இராதாகிருட்டிணன் அவர்களின் போக்கைச் சுட்டிக்காட்டி அவரின் ஓரவஞ்சனையை இலக்குவனார் கண்டித்த தறுகண்மை காவியச்சிறப்பு வாய்ந்தது.அப்போது குடியரசுத்தலைவராகத் திகழ்ந்த அவரைக்கொண்டு இலக்குவனாரின் தொல்காப்பிய ஆங்கில நூலை வெளியிடுதற்கு அவரது நண்பர்கள் ஏற்பாடு செய்திருந்தனர்.பெரும்பதவியில் இருப்பவரேயாயினும் தமிழுக்குக் கேடு சூழ்வோரால் தமக்கு எத்தகைய சிறப்பும் தேவையில்லை எனக் கூறி இலக்குவனார் விழாவை நிறுத்திவிட்டார்.

‘சென்னை மாகாணம்’ தமிழ்நாடு எனப் பெயர் மாற்றம் பெறவேண்டும் எனத் தமிழர்கள் அனைவரும் விழைந்தனர்.சங்கரலிங்கனார் இவ் வேண்டுகோளை முன்னிறுத்தி உண்ணாநோன்பு மேற்கொண்டு தமது இன்னுயிரை நீத்தார்.

இத்தகைய சூழலில் தமிழ்நாடு என்னும் பெயர் தமிழ் இலக்கியங்களில் பயன்படுத்தப்படவில்லை என அப்போது கல்வியமைச்சராயிருந்த சி.சுப்பிரமணியனார் கூறினார்.இலக்குவனார் தமிழ் இலக்கியச் சான்றுகளுடன் அமைச்சர் கூற்றை மறுத்தார்.அமைச்சருக்கும் இலக்குவனாருக்கும் இடையே அறிக்கைப் போர் ஒருவார காலம் நீடித்தது.

“செந்தமிழ்நாடு என்னும் போதினிலே-இன்பத்

தேன்வந்து பாயுது காதினிலே”என்னும் பாரதியாரின் வாக்கிற்கிணங்கத் தமிழர் செவிகளில் இன்பத்தேன் பாய்ச்சக்கூடாதா’’ என்னும் இலக்குவனாரின் வினாவுடன் அறிக்கைப்போர் முடிவுக்கு வந்தது.

“தமிழ்இலக்கியங்களில்பெரிதும்பரப்பப்படவேண்டியஒரேநீதிநூல்,அறநூல்,அறிவுநூல்திருக்குறள்தான் எனத்தந்தைபெரியார்கருதியேஅதனை1949-இல்(15,16/01/1949--இருநாள்கள்) தனிமாநாடு நடத்தி, மிகப்பெரும்தமிழறிஞர்களானநாவலர்ச.சோமசுந்தரபாரதியார்,தமிழ்த்தென்றல்திரு.வி.க.,பன்மொழிப் புலவர்தெ.பொ.மீனாட்சிசுந்தரனார்,கா.அப்பாதுரையார்,ஏ.சக்கரவர்த்திநயினார்,கந்தசாமிப்புலவர்,திருக்குறள்வி.முனுசாமிபோன்றஅறிஞர்பெருமக்களைஅழைத்துஇருநாட்கள்சென்னையில்குறள்மழை பொழியச்செய்தபின்பேதிருக்குறள்புலவர்கள்வீட்டுப்புத்தகஅலமாரிக்குள்ளேஇருந்துபொதுமக்கள்மன் றத்தைஅடைந்து,குறள்கருத்துப்பரவிஒளிவீசத்தொடங்கியது.”(பெரியார்களஞ்சியம்-தொகுதி-37 பக்.iv)என்னும்கருத்துஇங்குக்குறிப்பிடத்தக்கது.இந்த மாநாட்டில் பேராசிரியர்சி.இலக்குவனார் அவர்களும் பங்கேற்றார்.அடுத்த மாநாட்டை விருதுநகரில் நடத்தவேண்டும் எனக் கேட்டுக்கொண்டு மிகச் சிறப்பாக விருதுநகரில் நடத்தினார்.

விருதை குறள் மாநாடு:
தலைவர்கள் வருகை

★

விருதுநகரில் 3—4—49 அன்று குறள் மாநாடுசீருஞ்சிறப்புடன்நடை பெற்றது. தலைவர்கள் தோழர் எம். எஸ். பி. செந்திக்குமார நாடார் இல் லத்திலிருந்து மாநாட்டுப் பந்தலுக்கு கோச்வண்டியில் ஊர்வலமாக அழைத்து வரப்பட்டனர். தலைவர் பெரியாரவர்களையும், மாநாட்டுத் தலைவர் நாவலர் பாரதியார், திறப்பாளர் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், வரவேற்புக் கழகத் தலைவர் இலக்குவனார் ஆகியோரையும் படத்தில் காணலாம்.

நாகர்கோவிலில் தெ.தி.இந்துக்கல்லூரியில் முதல்வராகப் பொறுப்பு ஏற்றிருந்தபோது. 1957-ஆம்ஆண்டு திருவள்ளுவர் திருநாளைத் தமிழுலகு பாராட்டும் வண்ணம் சிறப்பாக நடத்தினார். யானையின் மேல் திருக்குறள் நூலை இருத்தி முன்னே தேசிய மாணவர் படை அணிவகுத்து வரவும் யனையின் பின்னே நகர்ச்சான்றோர்கள், பேராசிரியர்கள், மாணவர்கள் தொடர்ந்து செல்லவும் சென்ற அந்த ஊர்வலம் தமிழ்நாட்டு வரலாற்றில் இன்றுவரை காண இயலா வண்ணம் தனித்தன்மை கொண்டதாகும்.







நாகர்கோவிலில் இலக்குவனார்



கல்லூரி விழாவுக்கு வந்த எம்.ஜி.ஆர்.அவர்களுடன்



ஔவை டி.கே.சண்முகம்,பகவதி ஆகியோருடன்

தி.மு.க.ஆட்சிக்கு வந்த புதிதில் தமிழில் அறிவியல்நூல்கள் இல்லையென்பதால் தமிழ் பயிற்றுமொழியாக வெற்றிபெற இன்னும் ஒரு தலைமுறை பொறுத்திருக்கவேண்டும் எனக் கல்வியமைச்சர் நாவலர் கூறியுள்ளார்.

"தமிழ் நாவலர் என எங்களால் போற்றப்படும் கல்வியமைச்சர் ஆங்கிலக் காவலராக முயலலாமா?" என்னும் நயத்தக்க நாகரிகமிக்க இலக்குவனாரின் வினா,அமைச்சரைத் தவிர, அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது

இலக்குவனாரின் தமிழ் உரிமைப் போர்குறித்து ஒரு காப்பியமே இயற்றலாம்.

சுருங்கச் சொல்வதானால் அவர் மறைவுக்குப் பின் உரைவேந்தர் ஔவை.சு.துரைசாமி அவர்கள் கூறிய கருத்தைக் கூறிக் கட்டுரையை நிறைவுசெய்யலாம்.





"நாம் அனைவரும் தமிழைத் தாயென்று போற்றிக் கொண்டாடுகிறோம்.மூவர் இப் போக்கிற்கு விதிவிலக்கானவர்; மறைமலையடிகள், பாரதிதாசன் ,இலக்குவனார் எனும் மூவரும் தமிழைத் தாய் எனக் கருதவேயில்லை.அவர்கள் தமிழைத் தமது குழந்தையாகக் கருதினார்கள்.தன் பிள்ளைக்குச் சாலையில் செல்லும் ஊர்திகளாலோ,முரடர்களாலோ, நோய்களாலோ, இனப் பகைவராலோ தீங்கு வந்துவிடக்கூடாதே என்னும் பதைபதைப்புடன் ஒரு தாய் தன் பிள்ளையை அரணிட்டுக் காப்பது போலவே இலக்குவனார் எந்நேரமும் தமிழைக் கண்ணும் கருத்துமாகக் காக்கும் பொறுப்பை மேற்கொண்டார். ஆய்வுலகிலோ, ஆட்சியிலோ, மக்கள்மன்றத்திலோ எங்கேனும் தமிழுக்குத் தீங்கு வந்துவிடக் கூடாது என்னும் விழிப்புணர்வுடன் தீங்குற்ற நேரத்தில் முந்திச்சென்று தமிழ்நலன் காக்கும் பணியிலும் ஈடுபடுவதே தம் பணியெனக் கருதி வாழ்ந்தவர் இலக்குவனார்.நமக்குத் தமிழ் தாய்; இலக்குவனார் தமிழின் தாய்"என உணர்வுபொங்கப் பெரும்புலவர் ஔவை துரைசாமி அவர்கள் கூறியது முற்றிலும் பொருந்தும்.

தியாகராசர் கல்லூரிக்கு (1963)அண்ணா வந்தபோது

தமிழ்த்துறையினருடனும் கலைத்தந்தை கருமுத்து தியாகராசனாருடனும்

## இருபதாம் நூற்றாண்டின் முதல் குறுங்காப்பியம் படைத்த இலக்குவனார்

1933-ஆம் ஆண்டில் இருபதாம் நூற்றாண்டின் முதல் குறுங்காப்பியமாகிய "எழிலரசி "செந்தமிழ் அரிமா சி.இலக்குவனார் தமிழன்னைக்குச் சூட்டிய அணிகலன் எனக் குறிப்பிடத்தக்கது.கவிதைப் படைப்பாற்றல் இலக்குவனார்க்குக் கருவிலே அமைந்த திருவாக விளங்கியது.

அவர் தமது பள்ளிப் பருவத்திலேயே கவிதைகள் இயற்றித் தமது ஆசிரியர்களால் பாராட்டப்பட்டார் என்பதனை அவரது தன்வரலாற்று நூலாகிய "என் வாழ்க்கைப் போர்" மூலம் அறிகிறோம். உரத்ததாடு உயர்நிலைப் பள்ளியில் பயின்று கொண்டிருந்தபோது அங்கு மாற்றலாகி வரும் ஆசிரியர்களுக்கு வரவேற்பு வழங்கவும் அங்கிருந்து மாற்றலாகிச் செல்வோர்க்குப் பிரிவுரை வழங்கவும் வாய்ப்புக் கிட்டும்போதெல்லாம் கவிதைகளை இயற்றிப் படித்ததாகவும் கவிதைகளைத் தமது ஆசிரியர்கள் பாராட்டியதாகவும் குறிப்பிடுகிறார். எட்டாம் வகுப்பில் பயிலும் காலத்திலேயே தொடங்கிய பாப்புனையும் ஆற்றல் புலவர் கல்லூரியில் பயிலும்போது குறுங்காப்பியம் படைக்குமளவு வளர்ச்சி பெற்றது.

அப்போது புதுக்கோட்டை தனி அரசாக(சமத்தானமாக) விளங்கிய காலத்தில்புதுக்கோட்டை அரசர் ஒன்பான் இரவு (நவராத்திரி) விழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாடுவது வழக்கம்.புலவர் வகுப்பு மாணவர் இலக்குவனார் அரசவைக்குச் சென்று அஞ்சாநெஞ்சுடன் கவிதைப்போட்டியில் கலந்துகொண்டு அகவைமூத்த கவிஞர்களையும் வென்று புலமைப்பரிசில் பெற்றுவந்துள்ளார்.

"எழிலரசி அல்லது காதலின் வெற்றி' என்னும் இக்குறுங்காப்பியம் இலக்குவனாரின் சுவிதையாற்றலுக்கு மட்டுமின்றி அவரது ஆங்கிலப் புலமைக்கும் திராவிட இயக்கத்தில் கொண்ட ஈடுபாட்டுக்கும் சான்றாக விளங்குகிறது எனலாம். இலக்குவனார் தாம் புலவர் வகுப்பின் முதலாமாண்டில் படித்துக் கொண்டிருந்தபோது, தமது இருபத்து மூன்றாம் வயதில் இக்காப்பியத்தை இயற்றியுள்ளார்.

ஆங்கிலக் கவிஞர் கீட்சு இயற்றிய "இசபெல்லா" என்னும் கதைபொதி பாடலைப் படித்துச் சுவைத்த இலக்குவனார் அதனைத் தமிழ்நாட்டுச் சூழலுக்கும் பண்பாட்டுக்கும் இயையும் வகையில் மாற்றியமைத்து அதன் தழுவலாக இக்குறுங்காப்பியத்தைப் படைத்து வழங்கியுள்ளார்.

" கீட்சு (Keats) தம் கவிதை நூலுக்குத் துன்பியல் முடிவு கொடுத்துள்ளார். இலக்குவனார் அம்முடிவை மாற்றி துன்பியலும் இன்பியலும் கலந்த முடிபாக அமைத்துள்ளார்

(த.வ.இ.ப. பக்.37) என்னும் முனைவர் கா.மாரிமுத்துவின் கூற்று இங்குக் குறிப்பிடத்தக்கது

**கதைச் சுருக்கம்**

இக்குறுங்காப்பியத்தின் கதைச் சுருக்கத்தைக் காண்போம். இதன் தலைவி எழிலரசி பெருஞ்செல்வமிக்க வணிகனின் மகள். அவளது தந்தை அவளது இளமைப் பருவத்தில் இறந்துவிடுகிறான். தந்தையின் சொத்தில் மகளுக்கும் பங்கு உண்டு என்பதால் அவளுக்குத் திருமணம் செய்து வைத்தால் அவளுக்குரிய பங்கினைக் கொடுக்க வேண்டிவரும். பொருளாசை கொண்ட அவளது மூன்று தமையன்மாரும் அவளது பங்கைக் கொடுக்காமல் ஏமாற்றத்

திட்டமிடுகிறார்கள். அவளுக்குத் திருமணம் முடிக்கும்  எண்ணத்தைக் கைவிட்டு அவளை வீட்டிலேயே சிறைவைத்துவிடுகின்றனர். இந்நிலையில் அவர்களின் கணக்கனாக அலுவல் பார்க்கும் ஆடலன் என்னும் கலைஞன் மீது காதல் கொண்டு களவொழுக்கத்தில் ஈடுபடுகிறாள்.
இதனை அவளது மூத்த தமையன் அறியநேரிடுகிறது. அவன் ஏனையோரிடம் இதனைத் தெரிவித்தவுடன் ஆடலனைக் கொன்றுவிடலாம் என அவர்கள் முடிவெடுக்கின்றனர். அவனை வேட்டைக்கு அழைத்துச் சென்று காட்டில் யாருமறியாமல் கொன்றுவிடலாம் என்பது அவர்கள் வகுத்த திட்டம். ஆடலன் மீது அவர்கள்..எறிந்த கத்தி ஆடலனின் தோழன் மீது பாய்ந்து அவன் தலையைத் துண்டித்துவிடுகிறது. ஆடலன் தப்பி ஓடிவிடுகிறான். காட்டிலிருந்து திரும்பிய தனது தமையன்மாரிடம் எழிலரசி கேட்கும்போதெல்லாம் அலுவலின் பொருட்டு அவனை வெளியூர் அனுப்பியுள்ளதாக அவர்கள் கூறிவிடுகின்றனர். நீண்டநாளாகியும் அவன் திரும்பிவராமையால் ஐயமுற்ற எழிலரசி தன் தோழியின் துணையுடன் காட்டிற்குச் சென்று ஆடலனைத் தேடுகிறாள். அங்கே குருதி தோய்ந்த கைக்குட்டை ஒன்று இருந்ததைப் பார்த்தவள் அது ஆடலனுக்குத் தன்னால் வழங்கப் பெற்ற கைக்குட்டையாக இருப்பதனால் அங்கு இருக்கும் எலும்புக்கூடு ஆடலனுடையதேதே எனக் கருதி நீதிமன்றம் சென்று முறையிடுகிறாள். தன். தமையன்மார். தன்னுடைய காதலன் ஆடலனைக். கொன் றுவிட்டார்கள் எனத் தொடுத்த அவளது வழக்கை ஏற்ற. நடுவர் அவளது தமையன்மாரைத் தளைப்படுத்தி (கைது செய்து) அழைத்து வருமாறு. அலுவலர்களை அனுப்புகிறார். அந்த அலுவலர்களுச்குக் கையூட்டு வழங்கித்  தாங்கள் இறந்துவிட்டதாகக் கூறுமாறு கேட்டுக்கொள்ளும் எழிலரசியின் தமையன்மார்கள் கப்பலில் ஏறி வெளிநாடு சென்று விடுகிறார்கள். கையூட்டுப் பெற்றுக்கொண்ட அலுவலர்களும் நடுவரிடம் அவ்வாறே கூறிவிடுகின்றனர். அவளது தமையன்மார் இறந்துவிட்டதால் அவள் தம்மைக் கணவராக ஏற்றுக்கொள்ள வேண்டும் என நடுவர் வற்புறுத்துகிறார். எப்படியோ இந்தத் தொல்லையிலிருந்து மீண்டுவரும் எழிலரசி இத்தனைத் துன்பத்திற்கும் காரணமாகத் திகழ்ந்தது தன் தந்தை சேர்த்து வைத்த பெரும்பொருளே என்பதால் அப்பொருளால் முதியோர், உடற் குறையுடையோர், பொருள்வளமற்றோர் ஆகியோர் பயன்படும் வகையில் ஒரு திட்டம் உருவாக்கி நடைமுறைப்படுத்தி வருகிறாள்.
இதற்கிடையில், காட்டில் உயிர்பிழைத்தோடிய ஆடலன் மீண்டும் எழிலரசியின் தமையன்மாரிடம் அகப்பட்டுக்கொள்ளாத வகையில் பெண் வேடம் தாங்கி யாழ் ஒன்றினை மீட்டியவாறே பல்வேறு இடங்களுக்கும் அலைந்து எழிலரசியின் இல்லத்தையும் அடைந்து விடுகிறான். தன்னால் யாழ் மீட்டப் பயிற்றுவிக்கப்பட்ட ஆடலன் தான் கற்றுக் கொடுத்த பண்ணைப் பாடியவாறு தன் இல்லத்திற்குப் பெண்ணுருத் தாங்கி வந்துள்ளான் என்பதை அறிந்து கொண்ட எழிலரசி அவனோடு சேர்கிறாள். எனினும் ஆடலன்  தனது பெண்ணுருவை அகற்றாமல் அவளுடைய தோழி என ஊரார் கருதும் வகையிலே இறுதிவரை தோழியாகவே வாழ்வதாக முடிவு மேற்கொண்டு அவ்வாறே வாழ்வதாகக் கதை முடிகிறது.

**இலக்குவனார் செய்த புதுமைகள்**

இக்குறுங்காப்பியத்தில் இலக்குவனார் பல புதுமைகளைப் புகுத்தியுள்ளார் எனலாம். இந்நூலில் தலைவியே முதன்மை வாய்ந்த பாத்திரப்படைப்பாக விளங்குவது ஒரு புதுமை. வீட்டுச் சிறையில் வைக்கப்பட்டாலும் தன் கருத்துக்கியைந்த காதலனைத் தேர்ந்து அண்ணன்மார்களின் கொடுமையிலிருந்து தப்பித்துக் கொள்ளும் வழியறிந்து காதலிக்கிறாள். தனது காதலனைக் காட்டுக்கு அழைத்துச் சென்று கொன்றுவிட்டார்கள் என அறிந்ததும் வழக்குமன்றம் செல்கிறான். அவளது தமையன்மார் இறந்துவிட்டதாக வழக்குமன்ற ஊழியர்கள் வந்து கூறியதும் நடுவர் தம்மைத் திருமணம் செய்துகொள்ளுமாறு வற்புறுததும்போது அவரிடமிருந்தும் திறமையாகத் தப்பிவிடுகிறான்; இத்தனைத் துன்பங்களுக்கும் தன் தந்தை சேர்த்துவைத்த  பெரும்பொருளே காரணம் என்பதை அறிந்து அப்பொருளை வறியோர்க்கும் உடல்நலிவுற்றோர்க்கும் பயன்படும் வகையில் திட்டம் வகுக்கிறாள். இறுதியில் காதலன் வந்துவிட்டான் என்னும் நிலையிலும் பெண்ணுருத் தாங்கிய அவனை அவ்வேடத்திலேயே வாழுமாறு செய்து தனது தோழியாகவே உடன் ஏற்றுக்கொண்டு வாழ்கிறாள்.

காப்பியத் தலைவியின் ஆளுமையில் கண்ணகி, மணிமேகலை இருவரின் பண்புநலனும் கலந்துவிளங்குவது இங்குக் குறிப்பிடத்தக்கது. கீட்சின் இசபெல்லாவைத் தழுவிப் படைக்கப் பட்டதாயினும் மூலத்திலிருந்து சற்று விலகிச் செல்லும் இக்குறுங்காப்பியத்தில் கிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்களில் இலக்குவனாருக்கிருந்த ஈடுபாடே தெளிவுற அமைந்துள்ளது எனலாம்.

**புதினமா? குறுங்காப்பியமா?**

இக்குறுங்காப்பியம் படைக்கப்பட்ட காலத்தில் (1933) புதினங்கள் தமிழிலக்கியத்தின் புதுவரவாகப் புகுந்து செல்வாக்குச் செலுத்திக் கொண்டிருந்தன. இத்தகைய சூழலில் இலக்குவனார் உரைநடையில் புதினம் எழுத முற்படாது குறுங்காப்பியம் செய்யப் புகுந்தது எதனால் என்பதனை இந்நூலுக்கு முன்னுரை வழங்கிய எம்.எம்.தாவூது பின்வருமாறு விளக்குகிறார்.

“எளிய உரைநடையை விரும்பும் இக்காலத்தில் எழிலரசி எனும் இச்சிறுகதையைச் செய்யுள் நடையில் திருவையாறு அரசர் கல்லூரி வித்துவான் ஆரம்ப வகுப்பு மாணவர், திரு.சி.இலக்குவன் இயற்றி வெளியிட முன்வந்தது சிலருக்கு வியப்பைத் தரக்கூடும். எனினும் ஒருவர் சென்ற வழியே பிறரும் சென்று உரைநடை எழுதுவதிலேயே எல்லோரும் முயற்சிப்பார்களானால், இன்னும் சில ஆண்டுகளுக்குள், தமிழிற் செய்யுள்நடை கற்பாரின்றி மறைபடவுங்கூடும். செய்யுளே ஒரு நாட்டு மக்களின் உயிர் என்று கூறுகின்றார் ஒரு ஆங்கிலப் புலவர்.”

ஆற்றொழுக்காக அமைந்த அகவல் நடை இலக்குவனாரின் கவிதைப் படைப்பில் பெரும் பங்கு வகிப்பது எனலாம்.1933இல். தொடங்கிய இப்படைப்பு தெறி 1973ஆம் ஆண்டு அவர்  மறையும்வரை பல்வேறு காலச்சூழலில். இயற்றிய கவிதைப் படைப்புகளில் மேலாண்மை பெற்று விளங்குகிறது.

**பெண்ணுரிமை**

பெண்களுக்குச் சொத்துரிமை என்பது நம் நாட்டில் மக்களாட்சி மலர்ந்து நெடுநாட்களுக்குப் பின்னரே வாய்த்த ஒன்று, எனினும் இலக்குவனார் தமது குறுங்காப்பியத்தில்

பெண்களுக்குச் சொத்துரிமை வழங்கியுள்ளார்.
“பெற்றோ ரீட்டிப் பேணிய பொருளை
மைந்தரைப் போலவே மகளிர் தமக்கும்
உரிமை யாக்கும் ஒருவிதி” (வரி.7-9)

இலக்குவனார் காலச் சூழலில் இல்லாத விதி.அவர்தம் தொலைநோக்குணர்வால் புதுவதாகப் படைத்த சமுதாயத்தில் நிலவியுள்ளதாகக் காட்டுகிறார். அவரது இலக்கியப் பணியின் தொடக்க நிலைக் காலத்திலேயே பெண்ணுரிமையில் நாட்டமும், தொலைநோக்கான சிந்தனையும், இலக்குவனாரிடம் சிறப்புற அமைந்து விளங்குவதற்குக்காரணம், பள்ளிப் பருவத்திலிருந்தே அவர் பெரியாரின் தன்மதிப்பு இயக்கத்தில் கொண்ட ஈடுபாடு எனலாம். பொருளாதார ஏற்றத்தாழ்வு, சாதி வேறுபாடு ஆகியவற்றை அழித்தொழிக்கும் ஆற்றல் படைத்தது காதல் என்பதனையும், பொருள்மேல் கொள்ளும் ஆசை பல தீய எண்ணங்களுக்கு ஆட்படுத்தும் என்பதனையும் இத்நூலின் மூலம் ஆசிரியர் தெளிவுற விளக்குகிறார்.

**திருமூலர் - மணிமேகலை - எழிலரசி**

“ஆசிரியர் படைத்துக் காட்டிய புதுமைப் பெண்ணாகிய எழிலரசி, சாத்தனார் மணிமேகலையில் படைத்துக் காட்டிய காப்பியத் தலைவி மணிமேகலையைப் போலப் பயன்பட வாழ்ந்து பிறரும் வாழ எண்ணிய பாங்கில் தமையன்மார் எடுத்துச் சென்றதுபோக எஞ்சிய செல்வத்தை முழுவதும் ஈந்து தனக்கெனச் சிறிதும் கொள்ளாமல் பசிப்பிணி போக்கி மக்களை வாழ வைத்த மானஉணர்வு பாராட்டற்குரியது" என்கிறார் ஆய்வாளர் கா.மாரிமுத்து. (தமிழ் வளச்சியில் டாக்டர் சி.இலக்குவனாரின் பங்களிப்பு - பக்.77.)

பசித் துயரத்தைக் களைதல் பேரறம் எனத் திருமூலரும் மணிமேகலையும் கூறும் அறிவுரைகளை எடுத்துக்காட்டும் ஆய்வாளர் அவர்களைக் காட்டிலும் ஒரு முன்னேற்றத்தை எழிலரசி பெற்றிருப்பதாகக் கூறுதல் இங்குக் குறிப்பிடத்தக்கது.

“திருமூலர் அவர் இவர் என்னாமல் வழங்கிடக் கூறுகிறார். மணிமேகலையும் பசித் துயருறுவோர் யாவரும் வருகவென அழைக்கிறாள். ஆனால் எழிலரசியோ'வேலையற்று வீணராய்த் திரிவோர் குறையிருப்பினும், அவர்க்கேற்றவாறு உழைத்தல் வேண்டும். பசி நீங்கின் அங்ஙனம் உழைத்தல் கூடும்' எனக் கருதுகிறாள். அதனால், தன் செல்வம் முழுவதையும் வறியோரைக் காக்கும் உடைமையாக்கிச் 'சேர்ந்து உழைப்போம்” எனவும்,
“உழைப்பின் பயனையும் ஒருங்கே துய்த்து
எஞ்சிய பகுதியை எய்ப்பில் வைப்பாகக்
கொண்டு வாழக் கூடுவீராக"

என்று “எல்லோர்க்கும் எல்லாம்" என்ற பொதுவுடைமைக் கருத்தோடு உழைத்து வாழ வேண்டும் என்ற கடமை உணர்வினையும் பிற்காலத்துக்குச் சேமிப்பு வேண்டுமென்ற பொருளியல் கருத்தினையும் விளக்கிடும் முறைமை அறியத்தக்கது. பொதுவுடைமைத் தொண்டுள்ளம் கொண்ட பாத்திரமாக எழிலரசியை ஆசிரியர் படைத்துக் காட்டுவதன் மூலம் நாட்டின் வளர்ச்சியிலும் சமுதாய முன்னேற்றத்திலும் உழைப்பின் உயர்விலும் உள்ள மிகுந்த ஈடுபாடுடைமை

தெளிவாகப் புலப்படுகிறது.” (த.வ.இ.ப.பக்.19-20).

**இலக்குவனாரின் தொலைநோக்கு**

வறியோர்க்கு உணவு, முதியோர்க்கு உணவு, கோயிலில் உணவு என்று பல்வேறு இலவச உணவுத் திட்டங்கள் இன்று நடைமுறைப் படுத்தப்படுகின்றன. இவையனைத்தும் பெரும் நிதியையும் கரைக்கும் செலவினங்களாகவே அமைந்துள்ளன. ஆனால் இலக்குவனார் கனவு காணும் திட்டத்தின் மூலம் உணவைப் பெறுவோர் உடல் ஊனமுற்றோரேயாயினும் தம்மால் இயன்ற அளவு உழைக்க வேண்டும். இங்ஙனம் உழைத்துப் பெற்ற விளைவினால் கிடைக்கும் வருவாய் மீண்டும் இத்திட்டத்திலேயே முதலீடு செய்யப்படும். இதன் விளைவாக, செலவினம் ஒருவழிப் போக்குவரத்தாக அமையாமல், வருவாய் வழங்கி, இத்திட்டம் தொடர்ந்து நடைமுறைப் படுத்த வழிவகுக்கிறது இன்றைய சூழலில் நடைமுறைப்படுத்தக்கூடிய திட்டங்களுக்கு வழிகாட்டும் வகையில் இலக்குவனாரின் தொலைநோக்கு அமைத்துள்ளதன்றோ?

1933இல் பெண்கள் கல்வி கற்கும் வாய்ப்பு மிகமிக அரிதாக இருந்த காலச்சூழலில் இலக்குவனார் படைத்துக் காட்டும் காப்பியத் தலைவி ஆறிவுத்திறம் வாய்ந்தவளாகவும் வீட்டுக்குள்ளே பூட்டி வைக்கும் தமையன்மார்களின் கொடுஞ்செயல்களைத் திறமையோடு எதிர்கொள்ளும் துணிவு கொண்டவளாகவும் அமைந்துள்ளாள். கண்ணகி, மாதவி, மணிமேகலை ஆகியோரின் படிமுறை வளர்ச்சிநிலையாக (பரிணாம வளர்ச்சிநிலையாக) எழிலரசி திகழ்தல் குறிப்பிடத்தக்கது. பெண்ணுரிமை, பெண்விடுதலை ஆகிய முற்போக்குச் சிந்தனைகளை முப்பதுகளின் தொடக்கத்திலேயே தமது காப்பியத் தலைவி மூலம் முன்மொழிந்த இலக்குவனார், பெரியார் சிந்தனைகளை ஏற்று இலக்கியங்களின் மூலம் பரப்பிய திராவிட இயக்கக் கவிஞர்களுள் ஒரு முன்னோடிக் சுவிஞர் என்று போற்றப்பட வேண்டியவர்.

**தனித்தமிழ்ப் படைப்பு**

மறைமலையடிகளாரின் தனித்தமிழியக்கத்தில் ஈடுபாடு கொண்டு, 1928-ஆம் ஆண்டு, பள்ளிப் பருவத்திலேயே தமது பெயரைத் தமிழ்ப்படுத்தி அமைத்த இலக்குவனார் தூய தமிழிலேயே தமது காப்பியத்தைப் படைத்துள்ளார்.

இக்காப்பியத்தின் இனிய எளிய தமிழ்நடைக்கு ஓர் எடுத்துக்காட்டாகக் காப்பியத் தலைவி காதலனைப் பிரிந்து வருந்தும்போது சோலையில் நின்று மாமரத்தையும் மாவிலைகளையும் கொக்குகளையும் குயில்களையும் தனக்குத் தூது செல்லுமாறு கூறும் கூற்றைக் காண்போம்.

நிலையாய் நிற்கும் மாந்தருவேயோ
நீ போய்க் கடிதிற் கூறாயேயோ
அலையும் நெஞ்சை அமையும் இலைகாள்
அருளென் தனிமை யறியீரேயோ
இணைந்து நிற்பீர் என்றும் குருகீர்
என்னிலை கண்டு நொடியும் உருகீர்
குலவுங் கிளிகாள் கூவும் குயில்காள்

கூடிச் சென்று கூடச் சொல்வீர்

எனப்பல புகன்று ஏங்கினள் மிகவும் (வரிகள் 303-311)

வடமொழிச் சொல்லாட்சி மிகுதியும் கொண்டு கவிதைகள் படைக்கப்பட்ட அக்காலத்தில் சங்க இலக்கியங்களையும் சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகியவற்றையும் மட்டுமே தமக்கு முன்னோடியாகக் கொண்டு இலக்குவனார் இக்குறுங்காப்பியத்தைப் படைத்துள்ளமை தெளிவுறப் புலனாகின்றது. தனித்தமிழில் கவிதைப் படைப்பு நெறியை அமைத்துக் கொண்டு இவ்வகையிலும் திராவிட இயக்கக் கவிஞர்களுக்கு முன்னோடியாக அமைந்த இலக்குவனார், மறைமலையடிகள், நாவலர் சோமசுந்தர பாரதியார் ஆகியோரைத் தமது படைப்பு நெறிக்கு முன்னோடியாகக் கொண்டுள்ளமை வெளிப்படை. அவர்களைப் போலவே மொழித்தூய்மையைப் போற்றியவர், அதேநேரத்தில் புலமைநடையைத் தவிர்த்து எளிமை வாய்ந்த இனிய தமிழ்நடையைப் பயன்படுத்தியுள்ளார்.

**சமூகச் சிக்கல்களுக்கு முனறயான தீர்வுகள்**

முற்றிலும் கற்பனையாக ஓர் இலக்கியப் புனைவை வழங்கிவிடாமல், தமது காலச் சமூகச் சிக்கல்களாகிய பெண்ணடிமை, குடும்ப அமைப்பில் ஆண்களின் மேலாண்மை, பெண்கள் தமக்குரிய துணைவரைத் தமது விருப்பம்போல் தேர்ந்து கொள்ளும் உரிமையின்றி வருந்துதல், அண்களின் அளவுகடந்த பொருளாசை, சாதி ,பொருள்நிலை அகியவற்றால் அமைந்த ஏற்றத்தாழ்வு, அதிகாரத்தைப் பயன்படுத்திப் பெண்களை அடிமையாக்கிக் கொள்ள முயலுதல், கையட்டுப் பெற்றுக்கொண்டு தமது கடமையிலிருந்து பிறழ்ந்து செல்லும் அலுவலர்கள், அதனால் மக்கள் துன்புறல் போன்ற தமது காலச் சிக்கல்களைக் கதைமாந்தர் வாயிலாகவும் கதை நிகழ்ச்சிகளின் மூலமும் எடுத்துக்காட்டி. அவற்றிற்குரிய தீர்வுகளையும் இக்குறுங் காப்பியத்தின் வழி நமது சிந்தனைக்கு விருத்தாக்கியுள்ளார்.

**சூழலுக்கேற்ற பழமொழிகள்**

காப்பியத்திற்குச் சுவை கூட்டும் வகையில் பல்வேறு இடங்களில் சூழலுக்கேற்பப் பல பழமொழிகளைப் பொருத்தத்துடன் பயன்படுத்தியுள்ளார்.

வெள்ளப் பெருக்கை மெல்லிய நாணற்

புதர்கள் தடுக்கல் பொருந்திய வாறு (அடிகள் 44-45)

பெரும்புயற் காற்றினில் பொருந்திய பஞ்சுபோல் (அடி 91)

இரும்பினைக் கொண்டேயிரும்பை

வெட்டும் தன்மைபோல் (அடி 101)

நோதல் செய்தலும் நொய்யோர் மாட்டே (அடி 409)

பிணத்தைக் கண்ட பெருங்கழுகினம் (அடி 445)

பணமெனிற் பிணமும் பல்லைக் காட்டும் (அடி 489)

கெடுவான் கேடு நினைப்பான் (அடி 520)

இங்ஙனம் பொருட்சுவையும் கருத்துவளமும் மிக்க குறுங்காப்பியத்தை 1933இல் வழங்கிய இலக்குவனாரின் கவிதைப்பணி அவரது வாழ்வில் அடுத்தடுத்து நிகழ்ந்த பல்வேறு சிக்கல்களால் தடைப்பட்டது என்றே கூற வேண்டும்.

எனினும் தமது வாழ்நாளெல்லாம் இலக்கிய இதழ்கள் நடத்திவந்த சூழலில் பொங்கல் வாழ்த்துக் கவிதைகள்,சான்றோரை வாழ்த்தும் கவிதைகள்,அரசியல் மாறுபாடுகளால் நேரிடும் சிக்கல்களை உணர்த்தும் அங்கதக் கவிதைகள் ஆகியவற்றைப் படைத்தளித்துக்கொண்டிருந்தார்.அவை முறையாகத் தொகுக்கப்பெறவில்லை.அவரும் முனைந்து கவிதைநூல் வழங்கும் பணியில் ஈடுபடவில்லை.அங்ஙனம் அவர் கவிதைப் படைப்பில் கவனம் செலுத்தியிருந்தால் "தமிழுக்கு இரண்டு பாரதிதாசன்கள் கிடைத்திருப்பார்கள் "என உவமைக்கவிஞர் சுரதா குறிப்பிட்டுள்ளார்.

அ.வ.அ.கல்லூரி ஆட்சிக்குழுவும் பொறுப்பாளர்களும் தமிழ்த்துறையினரும் பெரிதும் பாராட்டப்படவேண்டியவர்கள்.நாட்டைக் காக்கப் போராடிய கட்டபொம்மனையும் கப்பலோட்டிய தமிழனையும் போன்றே மொழியைக் காக்க வாழ்நாளெல்லாம் போராடிச் சிறைவாழ்வையும்,பொருளியல் இழப்பையும்,பணிநீக்கத்தையும் அன்றாட வழமைகளாகக் கருதித் தொடர்ந்து தமிழ்க்காப்புப்பணியில் ஈடுபட்ட ஒரு மொழிப்போராளியின் வீறுமிக்க ஆளுமையை அவரது சிறப்புவாய்ந்த படைப்பின்மூலம் அறிமுகப்படுத்தும் வகையில் 'எழிலரசி' ' மாணக்கர்க்குப் பாடநூலாகத் தெரிவுசெய்யப்பெற்ற இச் செயல் தமிழ்கூறு நல்லுலகின் மனமார்ந்த பாராட்டைப் பெறுமென்பதில் ஐயமில்லை.மயிலாடுதுறை அ.வ.அ.கல்லூரியைப் பின்பற்றி ஏனைய கல்லூரிகளும் பல்கலைக்கழகங்களும் செயலாற்றுமென்பதில் ஐயமில்லை.

அங்ஙனம் தமிழ்கூறுநல்லுலகெங்கும் மீண்டும் உலாவரவிருக்கும் இக் குறுங்காப்பியத்திற்கு உரையும் விளக்கமும் வழங்கி நூலாக வெளியிடும் பேராசிரியர்கள் சு.தமிழ்வேலு,ஆ.சத்தியமூர்த்தி நம் போற்றுதலுக்கு உரியவர்கள்.

மாணாக்கர் இந் நூலின் பயன் துய்ப்பதுடன் நில்லாமல், கவிதைப்படைப்பில் ஈடுபட்டு, உயரிய விழுமியங்களைத் தாங்கி மன்பதையை முற்போக்குநெறியில் செலுத்தும் கவிதைப்படைப்புகளை யாத்தளிக்கவேண்டுகிறேன்.அதுவே தமிழ்ப்போராளி சி.இலக்குவனார் அவர்களுக்குச் செலுத்தும் தக்க புகழ்வணக்கமாகப் பொலிவுறும்.





## தமிழ்ச் சான்றோர் திரள் 1970




தமிழ்ச் சான்றோர்கள் தெ.பொ.மீனாட்சி சுந்தரனார், மு.வரத்ராசனார், சி.இலக்குவனார், துரை அரங்கனார் ,வ.சுப மாணிக்கனார், தா.ஏ ஞானமூர்த்தி, ந.சுப்புரெட்டியாார், இரா.நாகசாமி, முத்துசண்முகம், ச.அகத்தியலிங்கம், க.வெள்ளைவாரணர் உள்ளிட்ட பல மூத்த தமிழறிஞர்கள் இந்த நிழற்படத்தில் காணப்படுகின்றனர் . இந்தியப்பல்கலைக்கழக தமிழாசிரியர் மன்றத்தின் இரண்டாவது தேசிய அளவிலான ஆய்வரங்கத்தில் ஆய்வுக்கட்டுரைகள் அளிப்பதற்காக- திருச்சி தூசையப்பர் கல்லூரியில் இந்த மாநாடு நடைபெற்றது இந்த அமைப்பின் தலைவர் தெ.பொ.மீனாட்சிசுந்தரனார்–செயலாளர் தா.ஏ ஞானமூர்த்தி– இந்த ஆய்வரங்கில் –புதுக்கவிதைகள் பற்றிய ஆய்வுக்கட்டுரையை தமிழாசிரியர் களத்தில் முல்லை ஆதவன் பரபரப்பான மறுப்பு விவாதங்களுக்கிடையே படித்தளித்தார்

அமர்ந்திருப்போர் முதல் வரிசையில் இடமிருந்து ஆறாவதாக இருப்பவர் அறிஞர் வ.சுப.;ஏழாமவர் மு.வ.;எட்டாமவர் தெ,பொ.மீ.; ஒன்பதாமவர் துரை அரங்கனார்; பத்தாமவர் சி.இலக்குவனார் அவர்கள்



# பேராசிரியர் இலக்குவனர் பதவியிலிருந்து விலக்கப்பட்டார்

### அரசாங்கத்தின் பழிவாங்கும் படலம் ஆரம்பம்

மதுரை, தூன் 26-கல்லூரிகளில் தமிழைப் பாடமொழியாக்க வேண்டுமென்டும்-என்று அரசினரை வலியுறுத்தி பெருநடைப் பயணம் மேற்கொள்ள விருந்த பேராசிரியர் இலக்குவனர் மதுரை தியாகராசர் கல்லூரியில் இருந்கு விலக்கப்பட்டார். அரசாங்கம் பழிவாங்கும் நடவடிக்கையாக இவ்வாறு விலக்கப்பட்டதாகத் தெரியவருகிறது.

இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சிக்குப் பிறகு தமிழக அரசு, தற்போது பலர் மீது பழிவாங்கும் நடவடிக்கையை மேற்கொண்டிருக்கிறது. அதன் எதிரொலியாக மதுரை தியாகராசர் கல்லூரி தமிழ்ப்பேராசிரியர் பதவியை விட்டு இலக்குவனரை விலக்கியுள்ளனர்.

கல்லூரிகளில் தமிழ் பாடமொழித் திட்டத்தை அமுல் படுத்தக் கோரி அவர் பெருநடைப் பயணம் மேற்கொள்ளவிருந்ததை ஒட்டி அரசாங்கம் அவரை பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்து காவலில் வைத்தது. அண்மையில்தான் அவரது அன்னையார் உடல்நலம் குன்றியிருப்பதால் அவர் களைக் காண பரோலில் விடுதலை செய்யப்பட்டார்.

விடுதலையாகி வெளிவந்த பின்னர், இப்போது கல்லூரி நிர்வாகம் வேலையை விட்டு நீக்கி உத்தரவு பிறப்பித்துள்ளது.

அரசாங்க உதவி பெறும் கல்லூரிகளில் வேலை செய்வோர், அரசியலில் ஈடுபடக்கூடாது என்றும், ஆனால் இலக்குவனர் அரசியலில் ஈடுபட்டதாகவும் 3 மாத [illegible]த்துடன் வேலை நீக்கம் செய்வதாகவும் உத்தரவில் குறிப்பிட்டுள்ளனர்.

தாய்மொழித் தமிழ் கல்லூரிகளில் பாடமொழியாக வேண்டுமென்பதற்காகவும், இந்தியால் தமிழ் கெடும்; இந்தித் திணிப்புக் கூடாதென்று கூறிவந்ததற்காகவும் முதல் பலியானவர் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் இலக்குவனர் அவர்கள் ஆவார்.

# குறள்  நெறி




கட்சிச்சார்பற்ற அரசியல் இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் இயக்க வெளியீடு

ஆசிரியர்: டாக்டர் சி. இலக்குவனார், எம்.ஏ., எம்.ஓ.எல்., பிஎச்.டி.

மலர் 2 | திருவள்ளுவராண்டு 1996 பங்குனித் திங்கள் 19ஆம் நாள் 1—4—65 | இதழ் 6


உயர்தனிச் செம்மொழியான தமிழ்மொழி என்னுடைய! தாய்மொழி என்ற பெருமிதம் எனக்கிருக்கிறது. நீண்ட வரலாற்றையும் புகழ்மிக்க பொற்காலங்களையும் உடைய மொழி, கவிஞர்கள் பூத்த மொழி, கவிதைகள் கொஞ்சும் மொழி, காலத்தாலும் கவினுறு வளத்தாலும் கடலெனப் பரந்து கிடக்கும் மொழி, எங்கள் உயிருடன் வாழ்வுடன் கலந்த மொழி, அந்தத் தமிழ் மொழி மற்றெதற்கும் தாழாத வகையில் மைய ஆட்சிமொழி என்ற தகுதி தரப்படும் வரை, நான்,

ஓய மாட்டேன்!

உள நிறைவு அடையமாட்டேன்!

— மாநிலங்களவையில் அண்ணா (4—5—'63)

## உள்ளே





விலை 25 காசு

**தமிழர்க்குத் தேசியமொழி தமிழேயாகும்**

## வேர்கள் பூப்பதில்லை

-------பொன்.செல்வகணபதி

இயற்பெயரிலேயே
இலக்கு உடைய
எஃகுத் தமிழர்
இலக்குவனார் !
அன்னைத் தமிழ்மீது
ஆசை வைத்தவர்
அதைக் காப்பதற்கென்றே
மீசைவைத்தார் !
பாவின் திறத்தாலே
பைந்தமிழ் காத்தவர்
பாவேந்தர் !
இவரோ
நாவின் திறத்தாலே
நற்றமிழ் காத்த
நாவேந்தர் !
பிழைக்கத் தமிழ் படித்தோர்
உண்டு தமிழ் படித்துப்
பிழைப்பவரும் உண்டு !
இவரோ
தமிழ் தழைக்கத்
தமிழ் படித்த தமிழர் !
தமிழ் தழைக்கவே
தலை நிமிர்ந்த தலைவர் !
வேலை செய்யாமலிருக்க
வேலை தேடுவோர் உண்டு !
இவரோ
வேலை செய்வதற்காகத்
தம் வேலை விட்டவர் !
தமிழ் வேலை செய்யத்
தம்வேலை விட்டவர் !
தமிழைச் சிறை மீட்கத்
தாம் சிறை புகுந்தவர் !
காதலித்தால் கூட
தமிழ்உணர்வை
நிபந்தனையாக்கும்
காதலர் அவர் !
நலம் உசாவினால் கூட
தமிழ் உணர்வோடு
இருக்கிறீரா? என்றே
நலம் கேட்பவர் அவர் !
ஆதரித்தால் கூட
தமிழ் உணர்வை மட்டுமே
ஆதரிக்க அடம் பிடிப்பவர்
அவர் !
தாகம் தீர்வதற்குள்
தண்ணீர் தீர்ந்துவிடுகிறது !
மோகம் தீர்வதற்குள்
மூச்சு தீர்ந்துவிடுகிறது !
சோகம் தீர்வதற்குள்
சொந்தம் தீர்ந்துவிடுகிறது !
ஆக மொத்தம் இங்கே
அனைத்தும் தீர்ந்துவிடுகிறது !
ஒன்றுமில்லை என்பதைத்
தெரிந்து கொள்ளவே
ஒரு வாழ்க்கை
தேவைப்படுகிறது !
அந்த
ஒன்றுமில்லையில் தான்
ஒரு வாழ்க்கை இருக்கிறது
என்பதைத் தெரிந்துகொள்ள
இன்னொரு வாழ்க்கைக்கு
எங்கே போவது?
இங்கு
தியாகங்கள் செய்து
தியாகி ஆனவர் உண்டு
நாமோ
தியாகிகளைத்
தியாகம் செய்தே
தியாகி ஆனவர்கள் !
விதவிதமாய் வழுக்கும்
விலாங்குகளுக்கு
மீன்களிடமும்
மேடை !
பாம்புகளிடமும்
பலன் !
கடவுள்கள் கடத்தப்படுவதும்
பூசாரிகள் பூசிக்கப்படுவதும்
ஒன்றும் புதுவதல்ல !
உலகத்தியற்கை !
விசிறியும் இல்லாத
வாழையும் இல்லாத
விநோதப் பிறவிக்கு
விசிறிவாழை என்று பெயர் !
அந்த விசிறி வாழையோ
வீட்டு முகப்பில் !
குலை தள்ளும் வாழையோ
கொல்லைப்புறத்தில் !
கல்யாணக் காலங்களில்
காட்சிக்கு வரும் !
கல்யாணம் முடிந்தபின்னே
தோலுரிக்கப்படும் !
ஆனால் விசிறிவாழை
எப்போதும்
வீட்டுமுகப்பில் !
இது
ஒன்றும் புதுவதல்ல !
உலகத்தியற்கை !
வேர்கள் பூப்பதில்லை
ஆனால்
வேர்களின்றிப் பூவில்லை !
வேர்கள் முரடுதான்
கொஞ்சம் விகாரம் கூட !
ஆனால்
மரங்களுக்குப் பூச்சூட்டி
மகிழ்வது வேர்கள்தான் !
அடித்தளங்களுக்கு ஏது
அடையாள வாரம்?
ஆனால் அனைத்துக்கும் ஓர்
அடையாளம் வழங்குவது
அடித்தளங்கள்தானே?
மறுக்கப்பட்டு விட்டாலும்
காதல்
மறக்கப்படுவதில்லை;
நினைக்கப்படாவிட்டாலும்

தியாகம்
நிராகரிக்கப்படுவதில்லை
மரணம் நம்
மடிமீதே கிடக்கிறது;
மரணத்தின் மடியில்தான்
மனிதன் மயங்கிக்கிடக்கிறான்;
மரணமில்லாதது மரணம்;
மற்றொன்று
புகழ் !
அந்த மாயாத புகழால்
மரணத்தை வென்று
இன்றும் இருக்கிறார்
இலக்குவனார்
என்றும் இருப்பார்
இலக்குவனார் !

# அச்சத்தால் விளைந்த ஆதிக்க வெறி!

அரசுக்குத் தமிழ்த் தொண்டு செய்பவர்கள் மீது ஏன் ஐயுறவும் அச்சமும் ஏற்படுகிறது?

தமிழகத்தைச் சேர்ந்த தமிழர்களுக்குத் தமிழ்ப் பற்று இருப்பதிலேயும் அவர்கள் தமிழ்த் தொண்டாற்றுவதிலேயும் என்ன தவறு இருக்கிறது?

ஆதிக்கத்தை நிலைநாட்டிக் கொள்ள வேண்டும் என்று கருதுகின்ற அரசு எதுவாக இருந்தபோதிலும் அது எவரால் இயக்கப்படுவதாக இருப்பினும், எந்தக் கட்சி இயக்கிக் கொண்டிருந்தாலும் தங்கள் ஆதிக்கத்துக்கு தொல்லை ஏற்படும் என்று தெரிகின்றபோது அந்த அரசுக்கு அச்சமும் ஐயுறவும் ஏற்படத்தான் செய்யும்,

அச்சத்தால் பீடிக்கப்பெற்ற அரசினர், தங்கள் ஆதிக்கத்தைப் பாதுகாத்துக்கொள்ள பேராசிரியர் இலக்குவனாரைக் கைது செய்து தொல்லைக் கொடுத்ததைப்போன்று வன்முறைச் செயல்களில் இறங்கத்தான் செய்வார்கள். அந்தகைய ஆதிக்க வெறிக்கு பலியானவர்களில் ஒருவர் தான் பேராசிரியர் இலக்குவனார் அவர்கள்.

**- அறிஞர் அண்ணா**

இலக்குவனார் பாராட்டு விழாவில் பேசியது.

## டாக்டர் இலக்குவனார் பொறுப்பில் விடுதலை

திருநகர், பிப். 8-

தடுப்புக் காவல் சட்டத்தின்கீழ் 1-2-66 அன்று கைது செய்யப்பட்ட டாக்டர் இலக்குவனார் 5-2-65 அன்று மூன்றாவது சப்-மாஜிஸ்ட்ரேட் முன்னர் கொண்டு விடப்பட்டார். பொறுப்பில் விடுதலை செய்யக்கோரி, இலக்குவனார் சார்பில் வழக்கறிஞர் தர்மராஜ சந்தோஷம், ஏ. பி. எம். சுல்தான், ராமச்சந்திரன், ஆகியோர் வாதாடினார்கள். சர்க்கிள் இன்ஸ்பெக்டர் சச்சிதானந்தம் பொறுப்பில் விடுவதற்கு மறுப்பு தெரிவித்தார்.

நீதிபதி ஆவுடையப்பன் இருதரப்பினர் வாதத்தையும் கேட்டு, நிபந்தனையுடன் கூடிய பொறுப்பில், டாக்டர் இலக்குவனாரை விடுதலை செய்தார்.

திருநகரை விட்டு வெளியே செல்லக் கூடாதென்றும், 16ம் தேதியன்று இரண்டாவது சப் மாஜிஸ்டரேட் முன் ஆசராக வேண்டுமென்றும், 16ம் தேதி வரை கல்லூரிக்கும் செல்லக் கூடாதென்றும் நிபந்தனை விதிக்கப்பட்டது.

# குறள்நெறி

**-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-**

*மின்னிதழ்:73     கார்த்திகை-15--தி.பி.2054     திசம்பர்-1-- பொ.ஆ.2023*

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்





பல்லாண்டு பல்லாண்டு
கல்விவேந்தருக்குப் பல்லாண்டு
எண்பத்தைந்தாம் அகவை காணும்
முதுமுனைவர் கோ.விசுவநாதன்
(8/12/1938)
அவர்களுக்குக்
'குறள்நெறி'யின் அன்பு வாழ்த்துகள்.

சான்றோர் குழுமிய அவைக்களம்தனிலே
முந்தியிருக்கச் செய்யும் தந்தையாய்
அண்ணா காட்டிய ஒப்பிலா அன்பு
நாடாளு மன்றில் புகழ்பெறச் செய்தது;
சட்டக் கல்லூரி தந்த நுண்மதி
சட்ட மன்றத்திற்கே மாண்பு சேர்த்தது;
அணைக்கட்டும் ஆற்காடும் வளர்ச்சி பெற்றன;
நாடாளுமன்ற நல்லுறுப்பினராய்
மாநிலம் பயனுற நல்லமைச்சராய்
திட்பமும் நுட்பமும் மிளிர்ந்திடும் வண்ணம்
பல்வேறு துறைகளில் பயனுறு பணிகளை
ஆற்றிய திறமை சாற்றிட இயலுமோ?
இரவும் பகலும் உறங்கா(து) உழைத்தே
தரணி புகழ்ந்திடும் பல்கலைக்கழகம்
விஐடி என்றே வியனுலகு வியந்திட
விஐடி பல்கலைக்கழக வேந்தர் ஆனார்.
பொறியியல் கல்வித் தலைநகராகவே
வேலூரை மாற்றினார்!பெரியோர் போற்றவே!
ஆலமரத்தின் விழுதுகள் போன்றே
வேலூர் சென்னை போபால் அமராவதி
நகர்கள் பயனுற அறிவை வளர்க்கும்
உலகத் தரமிகு உயர்தொழில்நுட்பம்
வழங்கிடும் மையங்கள் நிறுவிய
கனிவுறு கல்வித் தந்தை வாழ்கவே!
கல்வியால் இவர் தகுதி பெற்றதும்
இவரால் கல்வி உயர்வு பெற்றதும்
பாடிப் பரவவோர் கம்பன் தேவை!
சென்றிடுவீர் எட்டுத் திக்கும் கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு
சேர்ப்பீர் என்ற பாரதியார் எண்ணம்
நனவாக்கி மகிழும் நல்லவர் வாழ்கவே!
அன்பும் அருளும் பண்பும் மாண்பும்
ஒருங்கே அமைந்த உயர்குணச் செம்மலே!
சிற்றூர் ஏழைக்கும் கல்வி சேர்ந்திடக்
குறிப்பறிந்(து) உதவும் வள்ளலே வாழ்க!
தமிழ் வளர்த்திடவே தமிழியக்கம் நிறுவியும்
புலவர் குழுவின் தலைமை ஏற்றும்
தமிழும் கல்வியும் தம்மிரு கண்களாய்ப்
போற்றிடும் செம்மல் நோக்கம் வெல்கவே!
கல்வி வேந்தர் விசுவ நாதன்
வல்லமை திகழப் பல்லாண்டு வாழ்க

# குறள் நெறியில் குடியாட்சி

## கவியரசி இந்திரா சவகர்

-- (முனைவர் இரா.இந்திராபாய்,பெங்களூர்.)



இக் கட்டுரையாளர் வீரசிவாசி வழியில் தஞ்சையை ஆண்டுவந்த மராட்டிய மரபினர்;தாய்மொழி மராட்டியம் எனினும் முறையாகத் தமிழ் பயின்று முனைவர் பட்டமும் பெற்று தமிழ்,ஆங்கிலம்,இந்தி ஆகிய மும்மொழிகளிலும் புலமை பெற்றவர்.கவிஞர் பொன்னடியார் அவர்களிடம் கவிதை இயற்றும் பயிற்சி பெற்றவர். ஆய்வாளர்; மொழிபெயர்ப்பாளர்; குடும்பப்பாங்கான வாழ்வுக்கு ஆற்றுப்படுத்தும் சிறந்த புதினங்களை இயற்றிப் புகழ்பெற்ற புதினப் படைப்பாளர்;பாவலர்; நாவீறு மிக்க நாவுக்கரசி;நூலாசிரியர்;சென்னைக் கோடம்பாக்கம் மாநகராட்சி மேனிலைப்பள்ளித் தலைமையாசிரியையாகப் பணியாற்றிச் சிறந்த தலைமையாசிரியர் எனப் பாராட்டுப் பெற்ற கல்வியாளர்.

முன்னுரை:

கன்னித்தமிழ் எனும் நனிச் சிறப்புக்குரிய கனித் தமிழை கற்றறிந்த அனைவராலும் அறியப்பட்டிருக்கும் பெருமைக்குரியவர்களில் முதன்மையானவர் திருவள்ளுவர். உலகிற்கு அறம் உரைத்த பெருமைக்குரியவர். அரசியல் மூலம் வாழ்வியல் நெறிகளை உணர்த்துகின்றார். அன்பின் அடித்தளத்தில் அரசியலைக் காண்கின்றார். ஒரு நாடு எவ்வாறு இருக்க வேண்டும் என்பதையும், ஓர் அரசனுக்கு அமைய வேண்டிய அரசியலறிவு குறித்தும் பேசுகின்றார். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே முடியாட்சி காலத்தில் திருக்குறள் தோன்றியிருந்தாலும் கருத்துகள் அனைத்தும் இன்றும் குடியாட்சி காலத்தில் பொருந்துவனவாக உள்ளன. புதுக்கருத்துகளைத் தரக்கூடிய அளவில் அமைந்துள்ள இரண்டடி குறட்பாக்களை ஆய்வுக் கண்ணோட்டத்துடன் காணும் போது வியப்பு மேலிடுகிறது.

அரசனுக்குரிய நற்பண்புகள்:

அரசனுக்குரிய நற்குணங்களாக அஞ்சாமை, துணிவுடைமை, ஊக்கம், தூங்காமை, மறனிழுக்காமை, (மானம்), அறிவு, கல்வி, ஈகை, கொடை, அளி, காட்சிக்கு எளிமை, கடுஞ்சொல்லன் அல்லாமை, இன்சொல் கூறல், செவி கைப்பட சொற்பொறுத்தல், அறவழி நிற்றல், முறை செய்து காப்பாற்றுதல், செங்கோல் செலுத்துதல், குடியோம்பல் முதலியவற்றை குறிப்பிடுகிறார்.

"அறன்இழுக்காது அல்லவை நீக்கி மறன்இழுக்கா
மானம் உடையது அரசு" [திருக்குறள்: அதிகாரம் - இறைமாட்சி - குறட்பா: 4.]
அறத்திலிருந்து தவறாது நடந்து, அறம் அல்லாதவைகளை நீக்கி, வீரத்திலிருந்து தவறாத மானம் உடையவனே அரசன் ஆவான் என்று தெளிவுபட இக்குறட்பா மூலம் விளக்குகிறார்.
ஆட்சி சிறப்பு:
நாட்டை ஆளுவதற்கான விதிமுறைகளைக் கணக்கிடுகின்றார் வள்ளுவர்!
"இயற்றலும், ஈட்டலும், காத்தலும் காத்த
வகுத்தலும் வல்லதரசு" [திருக்குறள்: அதிகாரம் - இறைமாட்சி - குறட்பா: 5]
இக்குறட்பாவில் பொருள் வரும் வழிகளான இயற்றல், வந்த பொருளைச் சேர்த்தல், காத்தல், காத்ததை வகுத்துச் செலவு செய்தலின் வல்லவன் தான் அரசன்" என்று அரசனின் பணிமிகச் சுருக்கமாக உரைக்கப்பட்டுள்ளது.
"சாங்கியம், யோகம், உலகாயுதம்" இம்மூன்றும் அரசியலை ஆய்வதற்குரிய காரணங்கள் ஆகும். இது குறித்து தருக்க நூல்கள் இயம்புகின்றன.
மறைநூலுக்கும், அறத்திற்கும் அடிப்படையாக அமைவது அரசனுடைய நல்லாட்சியே, குற்றம் ஆய்ந்து நடுவு நிலைமையோடு நடப்பதே நீதியாகும். ஒரு நாட்டில் நல்லாட்சி இருப்பின் பருவமழை பொய்க்காது. பருவ மழையும், விளைச்சலும் பெருகும். அரசனுக்கு வெற்றி தருவது வேல் அன்று, கோணாத செங்கோல், இக்கருத்தை,
"வேல்அன்றி வென்றி தருவது, மன்னவன்
கோல்: அதூஉம் கோடாது எனின்" [திருக்குறள்: அதிகாரம் – செங்கோன்மை - குறள்: 6]
என்ற இக்குறட்பா மூலம் விளக்குகிறார்.
நீதிமுறை கெடாத அரசு அரசனைக் காப்பாற்றும்.
நீதிமுறை கெடின் அரசன் தானே கெடுவான் என்று அரசனை எச்சரிப்பதாக இக்குறள் அமைகிறது.
"எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தான் தானே கெடும்" [திருக்குறள்: அதிகாரம் – செங்கோன்மை - குறள்: 8]
என்ற வகையில் "அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும்" என்ற சிலப்பதிகாரச் செய்யுள் ஒப்புமைப் படுத்தப்படுகிறது.
குடிகளைக் காத்து குற்றங்களைக் களைதல் அரசனுக்குரிய தொழிலாகும் என்பதை
குடி புறங் காத்து ஓம்பிக் குற்றம் கடிதல்
வடு அன்று: வேந்தன் தொழில்" [திருக்குறள்: அதிகாரம் - செங்கோன்மை – குறள்: 9]
அதாவது தண்ட நீதி எனும் அரசநீதியை வெகு அழகாக எடுத்துரைக்கிறார். அரசன் கொடியவரைத் தண்டித்து நல்லவரைக் காப்பாற்றுவது உழவன் பயிர்களைக் காப்பாற்றக் களையைக் களைவதற்கு நிகராகும் என்று அறிந்த சான்றுகள் மூலம் எளிமையாக நவில்கின்றார். இதே கருத்தை அர்த்த சாத்திரம் எடுத்தியம்புகிறது.

அரசன் கற்க வேண்டியவை:

பேரரசனாயினும் ஆன்றோர் நூல்களுக்கு மாறுபடாத ஒழுக்கமும், பொறியடக்கமும் இல்லையாயின் விரைந்து கெடுவான் என்பதை,

"கதம்காத்துக் கற்று அடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து" [திருக்குறள்: அதிகாரம் - அடக்கம் உடைமை - குறள்: 10]

என்ற குறட்பா தெளிவுபடுத்துகிறது.

அரசனின் இருகண்களாக ஒற்றரும், புகழ் அமைந்த நீதி நூலும் இருத்தல் வேண்டும் என்பதை,

"ஒற்;றும் உரைசான்ற நூலும் இவையிரண்டும்
தெற்றென்க மன்னவன் கண்" [திருக்குறள்: அதிகாரம் - ஒற்றாடல் - குறள்: 1]

என்ற குறட்பாவில் அறிவுறுத்துகின்றார்.

அரசியல் தக்க துணையின்றி நடைபெறாது. ஆதலால் அரசன் அறிவிற்சிறந்த அறிஞர்களை நியமித்து ஆட்சி செலுத்த வேண்டுமாதலால் அத்தகையோரை ஆராய்ந்து நட்பு கொள்ளுதல் வேண்டும்.

மீண்டும் குற்றம் செய்யாதபடி குற்றத்திற்குரியதாகத் தண்டிப்பவனே அரசன் எனப்படுவான்.

நூலறிவும், ஒழுக்கமும், தூய மனதும், நன்கு பயின்ற வித்தைகளும் ஓர் அரசனுக்கு ஏற்றத்தை கொடுக்கும். இத்தகைய சிறப்பியல்புகளைப் பெற்ற அரசன் குடிமக்களை ஆளும் திறன்பெற்று எல்லா உயிர்கட்கும் நன்மைகள் புரிந்து நிலத்தைக் காத்து சிறப்பெய்துவான். இவ்வாறு ஆட்சி செய்தால் இம்மையிலும், மறுமையிலும் இன்ப மெய்துவான் என்று அர்த்த சாத்திரம் நூலும் பகர்கின்றது.

அரசனுக்குப் புகழ் சேர்ப்பவை:

அரசர்க்குப் புகழ்சேர்ப்பவை கொடை, அருள், செங்கோன்முறை, தளர்ந்த குடிகளைக் காத்தல் இந்நான்கும் உடைய அரசன் அரசர்க்கெல்லாம் விளக்கு போன்றவன் என இக்குறட்பா விளக்குகிறது.

"கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க்கு ஓளி" [திருக்குறள்: அதிகாரம் - இறைமாட்சி – குறட்பா:10]

இக்குறட்பாவின் அடிப்படையில் "ஓதல், வேட்டல், ஈதல், படைக்கலம் பயிற்றல், உயிர்களைக் காத்தல் ஆகிய ஐந்தும் அரசர்க்குரிய தர்மங்கள் என கூறும் திரையீயின் கூற்றும் ஒப்பு நோக்கத்தக்கதாகும்"

"குடிதழீஇக் கோல் ஓச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு" [திருக்குறள்: அதிகாரம் - செங்கோன்மை – குறட்பா:4]

என்ற குறட்பா குடி மக்களை அனணத்து, செங்கோல் செலுத்தும் மன்னன் அடியை உலகத்தார் பொருந்தி நிற்பர் என்ற கருத்தின்படியும் அரசனின் அரசாட்சி எதனை மையமாக வைத்து நடைபெற வேண்டுமென்பதையும் திறம்பட எடுத்தியம்புகிறது.

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறை என்று வைக்கப்படும்" [திருக்குறள்: அதிகாரம் - இறைமாட்சி - குறட்பா:8]

என்ற குறட்பாவில் முறைப்படி ஆட்சி செய்தால், அந்நாட்டு மக்கள் அரசனை தெய்வம் என்று போற்றுவார்கள் என்று இறைத்தன்மையை செவ்வனே உரைக்கின்றார்.

தளர்ந்த குடி மக்களைக் காப்பாற்றும் அரசன், அரசர்க்கெல்லாம் விளக்கு போன்றவன் என்பதிலிருந்து அக இருளைப் போக்குபவன் இறைவன், புற இருளைப் போக்குபவன் அரசன் என்று உணர முடிகிறது. ஆயினும் குடிமக்களைக் காக்கும் அரசன் தெய்வத்திற்குச் சமம் என்ற உயர்ந்த நிலையை வள்ளுவர் உரைத்திருப்பது போற்றுதற்குரியதாகும்.

தனி மனித ஒழுக்கம்:

நாட்டிற்கு அழகு நோயின்மை, செல்வம், வினளதல், இன்ப வாழ்க்கை, காவல் ஆகிய ஐந்தும் நாட்டிற்கு அழகு என்று கூறுகின்றார். வள்ளுவர் கூறும் கருத்துக்கள் முக்கூடற்பள்ளு பாடலில் தென்படுகிறது. நல்ல அரசருக்குரிய இலக்கணத்தையும் இயம்பியுள்ளார். மேலும் நெடுநல் வாடையில் கூறப்பட்டிருக்கும் “ஓடையொடு”……எனத்தொடங்கும் பாடல் கோடையில் பெய்து குளிர்விக்கும் மழையைப் போல போர்க்களத்தில் நாட்டின் வெற்றிக்காகப் போராடிய வீரர்களின் பெருமையைப் பேசும் மன்னரின் வீரமும், விவேகத்தையும் பாராட்டும் வரிகள் குறட்பாக்களோடு இணைந்து செல்கின்றன.

"ஓடையொடு பொலிந்த வினை நவில் யானை……
என்று தொடங்கும் பாடலாகும்." [. நெடுநல்வாடை]

வள்ளுவரின் வரிகளில் ஆளுமைப்பண்புகள் நிறைந்து காணப்படுகின்றன.

ஆசாரக்கோவையின் நல்லொழுக்க வித்துகளின் கருத்துகளை இவ்வாளுமைப் பண்புகளில் காணமுடிகிறது.

ஆளுமைப் பண்புகளின் மூலம் வள்ளுவர் தனி மனித ஒழுக்கத்தை நிலை நாட்டுகிறார் என்றால் மிகையாகாது!

"தோன்றின் புகழொடு தோன்றுக: அஃதுஇலார்
தோன்றலின் தோன்றாமை நன்று" [திருக்குறள் – அதிகாரம் – புகழ் – குறட்பா:6]

இக்குறட்பா ஒருவர் மனிதராக மட்டும் வாழ்ந்தால் போதாது அவர் நற்பண்புகள் நிறைந்தவராக, அருஞ்செயல்கள் செய்பவராக இருத்தல் வேண்டும்.

அக்குணங்கள் இல்லாதார் பிறக்காமல் இருப்பது நல்லது என்று வள்ளுவரின் வாக்காக ஒலிக்கிறது! இக்குறளில் வெளிப்படும் தனி மனித ஒழுக்கம் அரசனுக்கு மட்டுமல்லாமல் மனிதர்களுக்கும் பொருந்துவதாகவும், வலியுறுத்தக் கூடியதாகவும் உள்ளது.

முடிவுரை:

சாதி, மதம், மொழி, என்ற குறுகிய எண்ணங்களுக்கு இடம் தராமல் அனைவருக்கும் ஒரு பொதுவான நூலைப் படைத்திருப்பது வியப்பிற்குரியது! எனவே தான் உலகப்பொதுமறை என்றழைக்கப்படுகிறது. எந்த அறநூலிலும் காணப்பெறாத உடன்பாட்டுக் கொள்கையும், உயர்ந்த எண்ணங்களும் அமைந்திருப்பது சிறப்புக்குரியது ஆகும். சான்றாக, மற்றவர்களின் உணர்வுகளைப் புரிந்து கொள்ளுதல், நாட்டை நெறிப்படுத்தும் முகமாக அரசாட்சி அமைதல் வேண்டும் என்று கூறுதல், மக்களின் அடிப்படை உரிமைகள் பாதிக்கப்படாத வகையில் அரசு அமைதல், சமுதாய சார்பற்ற (சமயச்சார்பு) அரசாக அமைதல் போன்றவற்றில் பொதுவுடைமையைக் காண்பதில் வள்ளுவர் உயர்ந்து நிற்கிறார். ஆள்வோரும், மக்களும் அன்பால், ஒன்றிணைந்து செல்வதால் அரசியலில் இல்லறவியலும் ஒளிர்கின்றது! அனைத்து குறட்பாக்களில் உள்ள கருத்துகளும் இன்று நாடாளும் மன்னனுக்கும் மக்களுக்கும் பொருந்துகின்றன! நல்ல அரசாட்சி அமைய வேண்டுமாயின் வள்ளுவரின் குறட்பாக்கள் பாலமாக அமையும் என்பதில் ஐயமில்லை.

பார்வை நூல்கள் : அர்த்த சாத்திரம்; ஆசாரக்கோவை; சிலப்பதிகாரம்; திரையீ (வேதம்); நெடுநல் வாடை; முக்கூடற்பள்ளு

# முத்தமிழ், செந்தமிழ் காவலர்கள் பிறந்தநாள் விழா

**தமிழறிஞர்கள் பங்கேற்பு**




▶ சென்னை விஐடி பல்கலைக்கழக வளாகத்தில் நடைபெற்ற முத்தமிழ், செந்தமிழ் காவலர்கள் பிறந்தநாள் விழாவில் வேந்தர் கோ.விசுவநாதன் தலைமை தாங்கி பேசுகிறார்.

திருப்போரூர், நவ. 21: சென்னை விஐடியில் தமிழியக்கமும், சென்னை விஐடி வாளக அறிஞர் அண்ணா மன்றமும் இணைந்து, முத்தமிழ் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் 125வது பிறந்த நாள் மற்றும் செந்தமிழ் காவலர் சி.இலக்குவனார் 115வது பிறந்தநாள் விழா சென்னை விஐடி பல்கலைக்கழக வளாகத்தில் நேற்று நடைபெற்றது. விழாவுக்கு, விஐடி பல்கலைக்கழக வேந்தர் மற்றும் நிறுவனர், தமிழியக்கத்தின் தலைவருமான கோ.விசுவநாதன் தலைமை தாங்கினார்.

விழாவில், தமிழியக்கத்தின் மாநில செயலாளர் மு.சுகுமார் அனைவரையும் வரவேற்றார். தமிழியக்கத்தின் வட தமிழக ஒருங்கிணைப்பாளர் வணங்காமுடி, வேலூர் மண்டல செயலாளர் மோகன்குமார் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். பொதுச்செயலாளர் அப்துல்காதர் விழா உரை நிகழ்த்தினார். இதில் வேந்தர் விசுவநாதன் பேசியதாவது: நாம் அனைவரும் தமிழ் குடும்பத்தை சார்ந்தவர்கள்தான். ஆசிரியர்களால்தான் பல மாற்றங்களை செய்ய முடியும். பெற்றோர்களுக்கு அடுத்து ஆசிரியர்கள் தான். கி.ஆ.பெ.விசுவநாதம், இலக்குவனார் இருவரும் தமிழர்களுக்காக தங்கள் வாழ்நாள் முழுவதும் அர்ப்பணித்தனர். உலகத்தில் 3 ஆயிரம் ஆண்டுகளை கடந்த மொழி 7 மொழிகளாகும். அவற்றில் இந்தியாவைச் சேர்ந்த மொழிகள் தமிழ், சமஸ்கிருதம். அவற்றில் 140 கோடிக்கு மேல் மக்கள் வசிக்கும் இந்தியாவில் வெறும் 22 ஆயிரம் பேர் மட்டுமே சமஸ்கிருதத்தை பயன்படுத்துகின்றனர்.

இன்று உலகளவில் பல்வேறு நாடுகளில் தமிழ் மொழி பயன்படுத்தப்பட்டு வருகிறது. இன்றைய மாணவர்கள் நாளைய தலைவர்களாக வரப்போகிறவர்கள். எனவே, அடுத்த தலைமுறைக்கு தமிழ் மொழியின் சிறப்புகளை எடுத்துரைக்க வேண்டும். வருங்கால சந்ததியினர் தமிழ் பெயர்களை சூட்ட வேண்டும் என்பது என்னுடைய எதிர்பார்ப்பாக உள்ளது. இவ்வாறு பேசினார்.

விழாப்பேருரையில் தமிழ் பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணை வேந்தர் இ.சுந்தரமூர்த்தி பேசுகையில் "மறைந்த முதல்வர் எம்ஜிஆரிடம் தமிழ் பல்கலைக்கழகத்தை நிறுவ வலியுறுத்திய கி.ஆ.பெ. விசுவநாதம், அதே தமிழ் பல்கலைக்கழகம் முன்பு தமிழ் அகராதியில் வட சொற்கள் கலைப்பை எதிர்த்து போராடினார். இது அவருடைய தமிழ் உணர்வை வெளிப்படுத்துறது. இலக்குவனார் போராட்ட குணம் மற்றும் நேர்மையாளராக திகழ்ந்தது மட்டுமின்றி, தன்னுடைய மாணவர்களை தமிழ் போராளிகளாக உருவாக்கினார்" என்றார்.

இதில் உலக திருக்குறள் இணைய கல்வி கழகத்தின் இயக்குநர் மறைமலை இலக்குவனார், கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்களின் பெயர்த்தி மனநல அறிவுரைஞர் வெற்றிசெல்வி ஆகியோர் நெகிழ்வுரை நிகழ்த்தினர்.

விழாவின் நிறைவாக தமிழியக்கத்தின் காஞ்சிபுரம் மாவட்ட ஒருங்கிணைப்பாளர் ம.சுந்தரமூர்த்தி நன்றியுரை நிகழ்த்தினார். விழாவில், விஐடியின் துணை வேந்தர் (பொறுப்பு) வி.எஸ்.காஞ்சனா பாஸ்கரன், வேந்தரின் ஆலோசகர் தியாகராஜன் மற்றும் சென்னை விஐடியின் கூடுதல் பதிவாளர் மனோகரன், தமிழ் ஆர்வலர்கள், மாணவர்கள், பேராசிரியர்கள் உள்பட ஏராளமானோர் கலந்துகொண்டனர்.

**தினகரன் (21.112023)**

**முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம் & செந்தமிழ்க்காவலர் சி.இலக்குவனார் பிறந்தநாள் விழாச் செய்தி**

## சென்னையில் கி.ஆ.பெ.விசுவநாதம், சி.இலக்குவனார் பிறந்தநாள் விழா

# தமிழின் சிறப்புகளை மாணவர்களுக்கு சொல்ல வேண்டும்

## ● விஜடி பல்கலை. வேந்தர் கோ.விசுவநாதன் வலியுறுத்தல்

● வண்டலூர்

தமிழ் மொழியின் சிறப்புகளை அடுத்த தலைமுறைக்கு எடுத்துச் சொல்ல வேண்டும் என்று விஐடி பல்கலைக்கழகத்தின் வேந்தரும், தமிழியக்கத்தின் நிறுவனருமான கோ.விசுவநாதன் வலியுறுத்தி யுள்ளார்.

தமிழியக்கமும், வி.ஐ.டி சென்னை வளாக அறிஞர் அண்ணா தமிழ் மன்றமும் இணைந்துநடத்திய கி.ஆ.பெ. விசுவநாதத்தின் 125-வது பிறந்த நாள் மற்றும் சி.இலக்குவனா ரின் 115-வது பிறந்த நாள் விழா வி.ஐ.டி சென்னை வளாகத்தில் நேற்று நடைபெற்றது.

விழாவுக்கு, வி.ஐ.டி பல்கலைக் கழகத்தின் வேந்தர் மற்றும் நிறு வனரும் தமிழியக்கத்தின் நிறுவனர் மற்றும் தலைவருமான கோ. விசுவ நாதன் தலைமை தாங்கினார். விழா வில், தமிழியக்கத்தின் மாநில செய லாளர் மு.சுகுமார் வரவேற்புரை நிகழ்த்தினார். தமிழியக்கத்தின் வட தமிழக ஒருங்கிணைப்பாளர் கு.வணங்காமுடி, வேலூர் மண்டல செயலாளர் புலவர் சு.மோகன்குமார் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். பொதுச் செயலாளர் கவியருவி அப்துல்காதர் விழா சிறப்புரை நிகழ்த்தினார்.

தமிழியக்கத்தின் நிறுவன தலை வர் கோ. விசுவநாதன் தலைமை யுரையில்பேசியதாவது: நாம் அனை வரும் தமிழ் குடும்பத்தை சார்ந்த வர்கள்தான். ஆசிரியர்களால்தான் நாம் பகுத்தறிவு பெற்றோம். ஆசிரி யர்களால்தான் பல மாற்றங்களை செய்ய முடியும். பெற்றோருக்கு அடுத்து ஆசிரியர்கள்தான். கி.ஆ.பெ. விசுவநாதம், இலக்குவ னார் இருவரும் தமிழர்களுக்காக தங்கள் வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணித்தனர்.

உலகத்தில் 3 ஆயிரம் ஆண்டு களை கடந்த மொழிகள் 7 ஆகும். அவற்றில் இந்தியாவை சேர்ந்த மொழிகள் தமிழ், சம்ஸ்கிருதம். 140 கோடிக்கு மேல் மக்கள் வசிக்கும் இந்தியாவில் வெறும் 22 ஆயிரம் பேர் மட்டுமே சம்ஸ்கிருதத்தை பயன்படுத்து கின்றனர். இன்று உலக அளவில்பல் வேறு நாடுகளில் தமிழ் மொழி பயன் படுத்தப்பட்டு வருகிறது. இன்றைய மாணவர்கள் நாளைய தலைவர் களாக வர போகிறவர்கள். எனவே, அடுத்த தலைமுறைக்கு தமிழ் மொழியின் சிறப்புகளை எடுத்துச் சொல்ல வேண்டும். வருங்கால சந்ததியினர் தமிழ் பெயர்களை சூட்ட வேண்டும் என்பது என்னுடைய எதிர்பார்ப்பாக உள்ளது.

இவ்வாறு அவர் பேசினார்.

தமிழ் பல்கலைக்கழகத்தின் முன் னாள் துணை வேந்தர் இ.சுந்தர மூர்த்தி பேசும்போது, "மறைந்த முதல்வர் எம்ஜிஆரிடம் தமிழ் பல் கலைக்கழகத்தை நிறுவ வலியுறுத் திய கி.ஆ.பெ அதே தமிழ் பல் கலைக்கழகம் முன்பு தமிழ் அகராதி யில் வட சொற்கள் கலப்பை எதிர்த்து போராடினார். இது அவ ருடைய தமிழ் உணர்வை வெளிப் படுத்துகிறது. இலக்குவனார் போராட்ட குணத்துடன் இருந்தார். நேர்மையாளராக திகழ்ந்தது மட்டு மின்றி, தன்னுடைய மாணவர்களை தமிழ் போராளிகளாக உருவாக் கினார்" என்றார்.

உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகத்தின் இயக்குநர் மறை மலை இலக்குவனார், கி.ஆ.பெ. விசுவநாதத்தின் பெயர்த்தி வெற்றி செல்வி ஆகியோர் பங்கேற்று பேசி னர். விழாவின் நிறைவாக தமிழியக் கத்தின் காஞ்சிபுரம் மாவட்ட ஒருங் கிணைப்பாளர் ம.சுந்தரமூர்த்தி நன்றியுரை நிகழ்த்தினார்.

இந்த விழாவில், விஜடியின் துணை வேந்தர்(பொறுப்பு) வி.எஸ். காஞ்சனா பாஸ்கரன், வேந்தரின் ஆலோசகர் எஸ்.பி.தியாகராஜன் மற்றும் விஜடி சென்னையின் கூடுதல் பதிவாளர் பி.கே.மனோகரன், தமிழ் ஆர்வலர்கள், மாணவர்கள், பேராசிரியர்கள் உட்பட ஏராள மானோர் கலந்துகொண்டனர்.



↑ சென்னை விஜடி வளாகத்தில் நடைபெற்ற கி.ஆ.பெ.விசுவநாதம், சி.இலக்குவனார் பிறந்தநாள் விழாவில், விஜடி பல்கலை. வேந்தர் கோ.விசுவநாதன் உரையாற்றினார். உடன் தமிழியக்கத்தின் பொது செயலாளர் கவியருவி அப்துல்காதர் உள்ளிட்டோர்.

**இந்து தமிழ் (21.11.2023)**

ஆண்டுதோறும் தமிழ் மறுமலர்ச்சி முன்னோடிகளின் பிறந்தநாள் விழாக்களை மறவாது கொண்டாடி மக்கள் நெஞ்சில் அவர்கள் நினைவுகளைப் பதியச்செய்யும் "தமிழியக்கம்" போற்றுதற்குரியது.அதன் நிறுவுநர் கல்விக்கோ விசுவநாதன் அவர்களையும் அவருக்குத் துணைநின்று தொண்டாற்றி வரும் ஏனைய பொறுப்பாளர்களையும் குறள்நெறி மனமாரப் பாராட்டுகிறது.

பிறந்த நாள் விழா...




சென்னை விஜடியின் தமிழியக்கமும், அறிஞர் அண்ணா தமிழ் மன்றமும் இணைந்து திங்கள்கிழமை நடத்திய முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் 125-ஆவது பிறந்த நாள் மற்றும் செந்தமிழ்க் காவலர் சி.இலக்குவனாரின் 115-ஆவது பிறந்த நாள் விழாவில் உரையாற்றிய விஜடி வேந்தர் கோ. விசுவநாதன். உடன், உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகத்தின் இயக்குநர் மறைமலை இலக்குவனார், மத்திய செம்மொழி தமிழாய்வு நிறுவனத்தின் துணைத் தலைவர் இ.சுந்தரமூர்த்தி, கி.ஆ.பெ. விசுவநாதம் பேத்தி மனநல அறிவுரைஞர் வெற்றிச் செல்வி, பொதுச் செயலர் கவியருவி அப்துல்காதர் உள்ளிட்டோர்.

**தினமணி (21.11.2023)**

செந்தமிழ்க் காவலர் சி.இலக்குவனார் பற்றி முத்தமிழ்க் காவலர்

பணி புரிந்து கொண்டிருக்கும்போதே ஒரு தமிழ் வார இதழை நடத்திய புலவர் இவர். பணிபுரிந்து கொண்டே அரசாங்கத்தின் போக்கைக் கண்டித்த புலவர் இவர். பணிபுரிந்து கொண்டிருக்கும் பொழுதே அமைச்சர்களின் கருத்தை மறுத்துப் பேசிய புலவர் இவர். இவரது அஞ்சா நெஞ்சமும், அழுத்தமான சொல்லும், துணிவான செயலும் பழங்காலப் புலவர் பெருமகனை நமக்கு நினைவூட்டுவன.

---முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம்

இலக்குவனாரது பல்கலைத்துறை ஆராய்ச்சித்திறமும், புலமைசான்ற நுண்ணறிவும், வரலாற்றுப் புலமையும், இலக்கண இலக்கியங்களில் மிக நுட்பமான அறிவுத்திறமையும் குறிப்பிடத்தக்கன. முன்னைய ஆய்வாளர்களின் மாறுபட்ட கருத்துகளைத் தக்க நூல்களின் சான்றுகளுடன் மறுத்துரைத்துத் தன் கருத்தை நிறுவிடும் நெறியும் இலக்குவனார் நூலுள் பலவிடங்களிலும் காணமுடிகிறது.

- மொழிநூலறிஞர் எம்.எசு. பூர்ணலிங்கம் பிள்ளை

முத்தமிழும் முதுமொழிமரபும் எப்பாவலரும் ஏற்றற்காகும் முப்பால் தரும் மூதறிவும் நற்பாலவை விளக்கும் பொற்பின் தொல்காப்பியமும் கற்பவர்தம் சிந்தை நிறைக்கும் நற்றமிழ்ச் சங்கப்பாடல்களும் இலக்குவனாரின் இனிய நெஞ்சமாகும்.

- இனமானப் பேராசிரியர் க. அன்பழகன்

# குறள்நெறி

-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-

*மின்னிதழ்:74 கார்த்திகை-30--தி.பி.2054 திசம்பர்-16-- பொ.ஆ.2023*

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்




## திருக்குறள் ஐரிசு (கேலிக்) மொழியாக்க நூல் வெளியீடு

**அயர்லாந்து தமிழ்க் கல்விக் கழகத்தின் முயற்சியையும்** மொழியாக்கம் செய்த **கவிஞர் திரு. கேப்ரியல் ரோசன்ஸ்டாக் அவர்களையும் பாராட்டுகிறோம்.**



# திருக்குறள் ஐரிசு (கேலிக்) மொழியாக்க நூல் வெளியீடு



மொழியாக்கம் செய்த கவிஞர், நூலை இந்தியத் தூதரக முதன்மைச் செயலர் திருமிகு. முருகராஜ் தாமோதரன் அவர்களிடம் வழங்குகிறார்.

அயர்லாந்து தலைநகர் டப்ளினில் உள்ள புகழ்பெற்ற டிரினிட்டி கல்லூரியில் திசம்பர் பத்தாம் நாள்(2023) திருக்குறள் ஐரிஷ் மொழியாக்க நூல் வெளியீட்டு விழா மிகவும் சிறப்புற நடந்தேறியது.

அயர்லாந்தின் பல பகுதிகளிலிருந்து வந்திருந்த தமிழர்கள் மகிழ்வுடன் பங்கேற்ற இவ்விழா அயர்லாந்தின் மரபு இசை மற்றும் தமிழர்களின் மரபு இசை முழங்க இனிதே தொடங்கியது. டிரினிட்டி கல்லூரியின் மொழித்துறைத் தலைவர் பேராசிரியர் முனைவர் திருமிகு. ஓன் மெக்கார்த்தி அவர்கள் அனைவரையும் வரவேற்று வரவேற்புரை நல்கினார். அயர்லாந்து தமிழ்க் கல்விக்கழக முதல்வர் திருமிகு. இராசகுமார் சம்பந்தம் அவர்கள் தொடக்க உரையுடன், நிகழ்வின் சிறப்பு விருந்தினர்களுக்கு அயர்லாந்து தமிழ்க் கல்விக்கழக நிருவாகக் குழுவினர் பொன்னாடையும் நினைவுப் பரிசும் வழங்கிச் சிறப்பித்தனர். தமிழ்ப் பேராசான் திருவள்ளுவர் தந்திட்ட உலகப் பொதுமறை திருக்குறள் ஐரிஷ் மொழியாக்க நூலைச் சீரிய முறையில் மொழியாக்கம் செய்திட்ட கவிஞர் திரு. கேப்ரியல் ரோசன்ஸ்டாக் அவர்கள் திருக்குறள் ஐரிஷ் நூலை டிரினிட்டி மொழித்துறைப் பேராசிரியர் திருமிகு. மைக்கேல் குரோனின் முன்னிலையில் வழங்க, அயர்லாந்து இந்தியத் தூதரக முதன்மைச் செயலர் திருமிகு. முருகராஜ் தாமோதரன் அவர்கள் பெற்றுக் கொண்டு நூலை வெளியிட்டார்.

நிகழ்வில் இந்தியத் தூதரக முதன்மைச் செயலர் திருமிகு.முருகராஜ் தாமோதரன், டிரினிட்டி மொழித்துறைப் பேராசிரியர் திருமிகு.மைக்கேல் குரோனின் மற்றும் தமிழ்நாட்டிலிருந்து வருகை தந்த தமிழ்ப் பேராசிரியர் திருமிகு. மணலி சோமசுந்தரம் சம்பந்தம் ஆகியோர் சிறப்புரை நல்கி, மொழியாக்கப் பணியைப் பெரிதும் பாராட்டி மகிழ்ந்தனர்.

நிகழ்வில் பங்குபெற்ற தமிழர்கள் தமிழில் திருக்குறள் சொல்ல, அதற்கு கவிஞர் திருமிகு. கேப்ரியல் ரோசன்ஸ்டாக் அவர்கள் அக்குறட்பாக்களை ஐரிஷ் மொழியில் அழகாகக் கவிதை நடையில் வாசித்தார்.அடுத்த நிகழ்வாக, அயர்லாந்து தமிழ்க் கல்விக்கழகத் திருக்குறள் மொழிபெயர்ப்புக்

குழுவினர் திருமிகு. இராசகுமார் சம்பந்தம், திருமிகு. சரவணன் இராமமூர்த்தி, திருமிகு. சரண்யா இரமேஷ், திருமிகு. குறள் இனியன் சிவஞானம், திருமிகு. முத்துராம்பிரகாஷ் தங்கவேல்சாமி, திருமிகு. தனலட்சுமி முருகேசன் ஆகிய அனைவருக்கும் பேராசிரியர் திருமிகு. ஓன் மெக்கார்த்தி மற்றும் இந்தியத் தூதரக முதன்மைச் செயலர் திருமிகு. முருகராஜ் தாமோதரன் அவர்களால் பாராட்டு நினைவுப் பரிசு வழங்கப்பட்டது.




அயர்லாந்து தமிழ்க் கல்விக்கழகத்தினரும் ஐரிசு அறிஞர்களும்

நிகழ்வின் இறுதியாகத் திருக்குறள் ஐரிஷ் மொழியாக்கத்திற்கு முதுகெலும்பாக விளங்கிய முனைவர் பேராசிரியர் திரு. ஓன் மெக்கார்த்தி அவர்களுக்கும், மிகவும் சீரிய முறையில் மொழியாக்கம் செய்திட்ட கவிஞர் திரு. கேப்ரியல் ரோசன்ஸ்டாக் அவர்களுக்கும் அயர்லாந்து தமிழ்க் கல்விக்கழகத்தினர் பாராட்டுச் சான்றிதழும், பேராசான் திருவள்ளுவர் திருவுருவச் சிலையும் வழங்கிச் சிறப்பித்தனர். பேராசிரியர் முனைவர் திருமிகு. ஓன் மெக்கார்த்தி நன்றியுரை நல்க, வரலாற்றுச் சிறப்பு மிக்க நிகழ்ச்சி மிகச் சிறப்பாக நடந்தேறியது.

# திருக்குறள் காட்டும் தலைமைப் பண்புகள்


## பாவலர் தமிழ்மைந்தன் ஜான் ரிச்சர்டு

எழுத்தாளர் -தமிழ்ஆர்வலர்,அயர்லாந்து.




ஏறத்தாழ ஈராயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்ட ஒரு நூல், இன்றைய சூழலின் வாழ்வியலுக்கும் ஏற்ற நெறிமுறைகளை வகுத்துத் தருகிறது என்பதை நோக்கும்போது நமக்குள் ஏற்படும் வியப்பு மிகப் பெரிது. அதுவும் ஈரடிவெண்பாக்களாக எழுதப்பட்டு, அதை உள்வாங்குவோருக்கு அறச்சிந்தனைகளையும், வாழ்வியல் நெறிக்காட்டும் சிந்தனைகளையும் வழங்கும் திருக்குறள் தமிழருக்குக் கிடைத்த மாபெரும் சிந்தனைப்புதையல், வாழ்வியல் வழிகாட்டி என்பதில் தமிழராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் பெருமைகொள்ளலாம்.

அறம், பொருள், இன்பம் எனும் மூன்று பிரிவுகளில் 133 அதிகாரங்களைக் கொண்டு, 1330 குறட்பாக்களின் வழி வள்ளுவர் காட்டும் வாழ்வியல்நெறிமுறைகள் மனிதராய்ப் பிறந்த ஒவ்வொருவருக்கும், வாழ்க்கையை அறச்சிந்தனைகளோடு, ஒழுக்கநெறிகளோடு, கல்விவளத்தோடு, தலைமைப்பண்போடு, ஆளுமைமிக்க திறத்தோடு வாழ வழிகாட்டும்.
"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என ஓங்கி ஒலிக்கும் சமூகச்சமநிலைச் சிந்தனையை, சமூக மேலாண்மைக்கூறுகளைத் தனக்குள் ஏந்தி, வாழ்வியலின் அறநெறிக்கருத்துகள் அத்துணையையும் இவ்வுலகிற்கு வழங்கும், உலகப் பொதும(மு)றைதிருக்குறள் – இன்றைய நவீன உலகிற்கான தலைமைப் பண்புக்கூறுகளையும் தன்னுள்ளே பொதிந்து நமக்கெல்லாம் – தலைமைப் பண்புநுட்பத்தில் ஒரு களஞ்சியமாகத் திகழ்கிறது என்றால் அது மிகையாகாது.

ஒருவரோ, ஒரு குழுவோ, ஒரு அமைப்போ, அல்லது ஒருநிறுவனமோ தான் எடுத்துக்கொண்ட திட்டத்தை, பணியைத் திட்டமிட்டுச் செயல்படுத்துவது இன்றியமையாதது. நவீன தொழில் வரைமுறைகளில் தலைமைப் பண்புகள் தவிர்க்கஇயலாதாகிவிட்டன.

திருக்குறளை வாழ்வியல்வழிகாட்டியாக எழுதிவைத்துள்ள தமிழ்ப்பேராசான் திருவள்ளுவர், ஆட்சியை வழிநடத்தும் மன்னருக்குத் தேவையான குணநலன்களையும், திறன்களையும் பட்டியலிட்டுள்ளார். இதையும் கடந்து, நவீனகாலத்திற்குத் தேவையான தலைமைப் பண்புச்சிந்தனைகளை ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வரையறுத்துச்சென்றுள்ளார்.

தலைமைப் பண்பு:

எத்தகைய திட்டமாயினும், செயல்பாடாயினும் அதனை வழிநடத்தும் பொறுப்பாளர் திறமைமிக்கவராய் அமைந்துவிட்டால், அவை வெற்றிகரமாகச் செயல்படுத்தப்பட்டுவிடும். எல்லாத் தொழில்நிறுவனங்களும், தமது திட்டங்களைச் செயல்படுத்த, திட்டக்கூறுகளுக்கான பொருத்தமான தலைமைப்பொறுப்பாளர்களை நியமிக்கசிரத்தையெடுக்கும்.

இதையே, திருவள்ளுவர்,

இதனைஇதனால்இவன்முடிக்கும்என்றாய்ந்து
அதனைஅவன்கண்விடல்.

என்றுரைக்கிறார்.

மேலும், தலைவராய் இருப்பவர் தான் எடுக்கும் செயல்திட்டங்களை உறுதியான மனவலிமையோடு, திட்டமிடலுடன் தொடங்கிச் செயல்படுத்தித் தொடங்கவேண்டும் என்றும், திட்டத்தைச் செயல்படுத்தத் தொடங்கியபின்னால் திட்டமிடுவது தவறு என்பதை,

எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு.

எனும்குறளின்வழியாகத்தெளிவுபடுத்துகிறார்.

அதேபோல, சிறந்த தலைவர்கள் உயர்ந்த சிந்தனையுடையோராய் இருப்பின், தாம் எடுத்துள்ள பொறுப்புகளையும், தமக்குக் கொடுத்த பொறுப்புகளையும் சிறந்தமுறையில் செயல்படுத்த முடியும் என்பதை

உள்ளுவது எல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து

என்று உயர்ந்த நோக்கத்தைக் கொண்டிருத்தல் குறித்து அறிவுறுத்துகிறார் வள்ளுவர்.

அவ்வாறே, உயர்ந்த சிந்தனையுடைய ஒருவரை பணிக்கான தலைவராக நியமித்துவிடுவதோடு நின்றுவிடாது, அவர் தம் பணியைச் செம்மையாக ஆற்றுகிறாரா எனக் கண்காணித்தலும் இன்றியமையாதது என்பதை

நாடோறும் நாடுக மன்னன் வினைசெய்வான்

கோடாமை கோடாது உலகு.

என்ற குறட்பாவின் வழி நாம் உணரலாம்.

அதேபோல, எந்தவொரு திட்டத்தையும் செயல்படுத்தும்போது, திட்டமிட்டுச் செயல்படும் பண்பு, தாம் எடுத்துக்கொண்ட பணியை வெற்றிகரமாக முடிப்பதற்குத் தேவையான ஒன்றாகும். திட்டமிடலின்றிச் செயல்படுத்தப்படும் எந்தவொரு செயலும் வெற்றிபெறாது என்பதை, "ஆற்றின் வருந்தா வருத்தம் பலர் நின்று

போற்றினும் பொத்துப் படும்."

எனும் குறட்பாவின் வாயிலாக, ஒரு செயலை எவ்வாறு முடிக்கவேண்டும் என்ற திட்டமிடலின்றி தொடங்கும் முயற்சி, துணையாகப் பலர்நின்று உழைத்தாலும் பழுதாகிநிற்கும் என்று விளக்குகிறார்.

தலைவர்களுக்கு இன்றியமையாத பண்புகளாக காலம்தாழ்த்தாமல் செயல்படுதல், ஊக்கத்துடன் செயல்படுதல், தான் பெற்ற கல்வியறிவின் வழியாய்ச் செயலாற்றுதல் என்பதை "தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்

நீங்கா நிலனாள்பவர்க்கு

என்பதன் ஊடாக விளக்குகிறார். இதைத் தவிர்த்து எண்ணற்ற குறட்பாக்கள், தலைமைப்பண்புகளைக் குறித்து நிறையச் செய்திகளை நமக்கு வழங்குகின்றன. எனவே, குறட்பாக்களை உளமேற்று, சிறந்த தலைமைப்பண்பு மிக்கவராய் நாமும் செயல்பட, குறட்பாக்கள்காட்டும் பாதையில் நாளும் பயணிப்போம்.

வாழ்க வள்ளுவம், வளர்க தமிழர் தம் வாழ்வியல்கோட்பாடுகள்!



திருக்குறளை ஐரிசு மொழியில் மொழிபெயர்த்துத் தம் நாட்டினர் குறள் கற்க அடித்தளம் அமைத்த ஐரிசுக்கவிஞர்
திரு. கேப்ரியல் ரோசன்ஸ்டாக் அவர்களை வணங்கிப் போற்றுகிறோம்.
அந் நாட்டிலுள்ள கல்விக்கூடங்களில் குறள் கற்பிக்க ஆவன செய்யுமாறு அயர்லாந்துவாழ் தமிழ்ப் பெருமக்களை வேண்டுகிறோம்.

# நாவலர் கணக்காயர் சோமசுந்தர பாரதியார்

27-7-1879 --14-12-1959


சோமசுந்தர பாரதியார்
(1879 – 1959)

**மொழி உரிமைப் போராளி:**

1937 ஆம் ஆண்டின் காங்கிரசுக் கட்சி சட்டமன்றத் தேர்தல்களுக்கு நின்று, ஏழு மாநிலங்களில் வெற்றி பெற்று ஆட்சியை அமைத்தது. சென்னை மாநிலத்தின் முதலமைச்சராகப் பதவியேற்ற இராசகோபாலாச்சாரியார் தனது பதவிக் காலத்தில் உயர்நிலைப்பள்ளியில் முதல் மூன்று படிவம் பயிலும் மாணவர் அனைவரும் கட்டாயம் இந்தி பயில வேண்டும் என்ற திட்டத்தைக் கொண்டு வந்தார். இதன் விளைவாகக் கட்டாய இந்தித் திணிப்பை எதிர்த்து மாநில மெங்கும் கிளர்ச்சி யெழுந்தது. காங்கிரஸ் கட்சியில் தமிழ் மொழிப் பற்றுத் தலைதூக்கி நின்ற சிலரும் இத்திட்டத்தை முழு மூச்சாக எதிர்த்தனர். அவ்வாறு எதிர்த்தவர்களுள் தலைமையேற்று நின்றவரும், தகவுடன் போரிட்டுப் பின்னாளில் வென்றவரும் நம் நாவலர் ஆவர். 5, 6-9-1937 இல் சென்னை மாநகரில் ஒரு மாபெரும் இந்தி எதிர்ப்பு மாநாடு நிகழ்ந்தது. முதல்நாள் மாநாட்டுக் கூட்டத்திற்கு நாவலர் தலைமை தாங்கிச் சாதி, சமய, கட்சி வேறுபாடு இன்றித் தமிழர் அனைவரும் கட்டாய இந்தியை எதிர்ப்பது கடமையாகும் என்றார். அடுத்து

4-10-1937இல் சென்னை கோகலே மண்டபத்தில் மறைமலையடிகளார் தலைமையில் தமிழ்ப் பாதுகாப்புக் கழகச் சார்பில் நடைபெற்ற கூட்டத்திலும் வீறுடன் பேசினார். 20-11-1937இல் கருவூரில் அறிவுதயக் கழகச் சார்பில் நடைபெற்ற இந்தி எதிர்ப்புக் கூட்டத்திலும் பேசினார். 25-10-1937இல் முதலமைச்சர் இராஜகோபாலாச்சாரியாருக்கு இந்தித் திணிப்பைக் கண்டித்து ஒரு ‘வெளிப்படைக் கடிதம்’ (An open letter) எழுதினார். நாவலர் விடுத்த இக்கடிதத்தினாலும் நாடெங். கிலும் எழுந்த காட்டுத் தீ போன்ற இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியினாலும் அரசு கட்டாய இந்தித் திணிப்புத் திட்டத்தைக் கைவிட்டனர். ஆனால் மீண்டும் 1948 ஆம் ஆண்டில், சென்னை மாநிலக் கல்வி அமைச்சராக இருந்த அவினாசி லிங்கம் செட்டியார் இந்தியைப் புகுத்த முற்பட்டார். அவருக்கும் 27-6-1948இல் ஒரு கடிதம் எழுதினார். மேலும் திருச்சி தமிழறிஞர் முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் கண்ட தமிழர் கழகத்தின் தலைவரா னார். 14-2-1948இல் சென்னையில் கூடிய அகிலத் தமிழர் மாநாட்டின் தலைமையை நாவலர் ஏற்றார். பின்னாளில் தொடங்கப்பெற்ற தமிழகப் புலவர் குழுவின் முதல் தலைவராகவும் திகழ்ந்தார்.

**அண்ணாமலைப் பல்கலைக்கழக அரும்பணி**

அண்ணாமலைப் பல்கலைக்கழகங்கண்ட செட்டிநாட்டு வள்ளல் அண்ணாமலை அரசர் அழைப்பின் பேரில் திங்கள் ஒன்றுக்கு ஈராயிரம் ரூபாய்க்குக் குறையாமல் வருமானம் வந்து கொண்டிருந்த வழக்கறிஞர் பணியை விடுத்துக் குறைந்த வருவாயே கிட்டும் எனத் தெரிந்தும் 1933ஆம் ஆண்டில் இரண்டு நிபந்தனைகளின் பேரில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைமைப் பொறுப்பினை ஏற்றுக் கொண்டார். அவர் விதித்த இரு நிபந்தனைகள் வருமாறு:(1) தமது நிர்வாகத்தில் எவரும் குறுக்கீடு செய்தல் கூடாது.(2) பல்கலைக்கழகத்தில் பணியாற்றும் பிற பேராசிரியர்களைவிட உயர்ந்த ஊதியம் தருதல் வேண்டும்.

தமிழ்ப் பணி

மாணவர்க்கு இலக்கணமாயினும், இலக்கியமாயினும், இலக்கியத் திறனாய்வாயினும் பாங்குற ஐயந்திரி பிற்கிட மின்றி மாணவர் மனத்திற் பசுமரத்தாணியெனப் பதியும் வண்ணம் பாடஞ்சொல்லுதலில் நாவலர் வல்லவராயிருந்தார். மாணவர்களைத் தம் நண்பர்கள் போற் கருதி, நடத்தினார். இயற்றமிழ்ப் பேராசிரியராக இருந்து கொண்டே இசைத் தமிழ்த் தொண்டும் ஆற்றினார். தேவார திருப்புகழ் வகுப்புகளை அங்கு இசைக்கல்லூரியில் தொடங்குவித்தார். இவ்வாறு மாட்சியுடன் தமிழ்ப்பணி புரிந்த நாவலர் 1938ஆம் ஆண்டு அப்பணியிலிருந்து ஓய்வு பெற்றார். இவரிடம் கல்வி பயின்றோரிற் குறிப்பிடத் தக்கவர்கள் டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார், திருவாளர்கள் அ. ச. ஞானசம்பந்தன், க. வெள்ளைவாரணனார், பூ.ஆலாலசுந்தரஞ்செட்டியார், சி. ஆறுமுக முதலியார், இராசரத்தினம் அம்மையார், இராசமணி அம்மையார்,அ. மு. பரமசிவானந்தம், ப. சோதிமுத்து, ஆ, முத்துசிவன், எஸ், உருத்திரபதி, பி. ஆர் மீனாட்சிசுந்தரம் முதலியோர் ஆவர்.

சுப்பிரமணிய பாரதியார் தொடர்பு

கவிஞர் பாரதியாரும் நாவலர் பாரதியாரும் பல வகைகளில் ஒற்றுமைப்பாடு உடையவர்கள், இருவரும் எட்டையபுரத்தினர்; இருவரும் கவிஞர்கள்; பாரதி பட்டம் பெற்றவர்கள்; ஒத்த வயதினர்; இளமையில் மணம் முடித்தவர்கள்: நாட்டுத் தொண்டில் திளைத்தவர்கள்; உணர்ச்சி மிக எழுதுவ திலும் பேசுவதிலும் வல்லவர்கள்; அஞ்சாமையும் வீறும் உடையவர்கள்; தமிழாசிரியர் பணி புரிந்தவர்கள். பாரதியார் கவிதையைப் பண்டிதர்கள் எள்ளி நகையாடிய காலத்தில் பாரதியார் கவிதையின் நயத்தை மேடை, கட்டுரை, செய்தித்தாள்கள் வாயிலாகப் பாமரரும் புரிந்து கொண்டு பாராட்டவைத்த தனிப்பெருமை நம் நாவலரையே சேரும்.

“பாரதியார் பாக்கள், கருத்துக்களை வருத்தமின்றி விளக்கும், பண்டைப் பாவலர் பளிங்கு நடை பயின்று, இளகி ஒளிரும் வெண்பொன் ஒழுக்கும், இனிய ஓசையும், திட்டமும் சுவையும் உடையன, இப்புலவரின் நூல்களைப் படிப்பவருக்கு நிகண்டு, அகராதிகள் வேண்டா. கள்ளமற்ற உள்ளமும், ஊன்றிய கவனமும், தமிழில் ஆர்வமும் உடையார்க்கு இப்புலவர் இதயம் வெள்ளிடை மலையாம். எளிய இனிய இவர் கவிநடை நீரொழுக்கு உடையதேனும், வயிரத்தின் திண்மையும் ஒளியும் பெற்று நிற்கும். பாப்பாப் பாட்டு. முரசு கவிகளால் முழன்று, பள்ளும் கிளிப்பாட்டும் பயின்று விடுதலை, தாய்நாடு பாடி, பாஞ்சாலி சபதம் கூறி, கண்ணன் பாட்டு சிவன் முக்திகளில் வீறிய இவர் கவிதை நலம்

பண்ணேறி விண்ணுயர்ந்து உலவுவதாகும். எனைத்தானும் தற்காலத் தமிழுலகில் இவர் ஒத்தாரைக் காண்பதரிது. மிக்கார் இலராவர்,”

என்பதே நாவலர் மதிப்பீடாகும்.

தமிழ்த் தொண்டு

1942இல் மதுரையில் நடைபெற்ற முத்தமிழ் மாநாட்டு வரவேற்புக் குழுவின் துணைத் தலைவராயிருந்து அம் மாநாட்டைத் திறம்பட நடத்தினார். அடுத்து 1950இல் கோவையில் நடைபெற்ற முத்தமிழ் மாநாட்டைத் தொடங்கி வைத்தார். 1954இல் அண்ணாமலை நகரில் தமிழாசிரியர் மாநாடடிற்குத் தலைமை தாங்கினார். 1956ஆம் ஆண்டு மதுரையில் நடைபெற்ற மதுரைத் தமிழ்ச் சங்கப் பொன் விழாவில் ஐந்தாம் நாள் விழாவில் இயலரங்குத் தலைவராக இருந்து சீரிய கருத்துக்களைச் சிறக்க வெளியிட்டார். 1930, 1936, 1944 ஆகிய மூன்று ஆண்டுகளில் ஈழநாடு சென்று சொற்பொழிவுகள் ஆற்றி நாவலர்' என்ற பட்டம் பெற்றார். மதுரைத் திருவள்ளுவர் கழகத்தார் 11-1-1954இல் ‘கணக்காயர்’ பட்டம் வழங்கி இவரைச் சிறப்பித்தனர். 1955இல் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வெள்ளி விழா கொண் டாடியபொழுது, இவருக்கு ‘டாக்டர்’ பட்டம் வழங்கிப் பாராட்டியது. 1957இல் சென்னையில் தமிழ் எழுத்தாளர் சங்கம் நாவலரின் நற்றமிழ்த் தொண்டைப் பாராட்டிக் கேடயம் வழங்கியது.

**நாவலர் வழங்கிய கருவூலங்கள்:**

**தயரதன் குறையும் கைகேயி நிறையும்**

நாவலர் பெரிதும் ஈடுபாடு கொண்ட காப்பியம் கம்பராமாயணமாகும். தாம் பன்முறை ஆழ்ந்து ஆழ்ந்து அக் காப்பியத்தைப் பயின்றபோது தோன்றிய கருத்துகளை நண்பர்களிடம் எடுத்துரைத்தார். பின்னர் மேடைகளில் அக்கருத்துக்களை குறிப்பிடத் தொடங்கினார். பின்னர் அக் கருத்துகளுக்கு நூல் வடிவு தந்தார். அந்த நூலே ‘தயரதன் குறையும் கைகேயி நிறையும்’ என்பதாகும்.

தயரதன் அறம் திறம்பா நெஞ்சினன் என்றும், கைகேயி மாகயத்தி என்றும் இராமாயணம் படிப்போர் இயல்பாகக் கருதி நிற்க, நாவலர், தயரதன் கன்யா சுல்கமாகப் பரதனுக்குத் தரவேண்டிய நாட்டை இராமனுக்களிக்க முன்வந்தது தவறென்றும், பரதனைக் கேகய நாட்டிற்கனுப்பி வைத்தது தவறென்றும், இராமன் முடிசூடுதலைக் கேகய நாட்டுறைந்த பரதனுக்குத் தெரிவிக்காமற் போனது தவறென்றும், எடுத்துக்காட்டி, கல்கச் சூளறம் பொய்த்துப் பழிவெள்ளத்து நீந்தாது தயரதனுக்கு அக் கல்கச் சூளறத்தை நினைவுறுத்தி அவனை அப் பெரும் பழியினின்றும் மீட்டது கைகேயியின் கற்பு மேம்பாட்டுடன் கூடிய நிறையென்றும் எடுத்துக் காட்டிய பெருமை நாவலரைச் சாரும்.

திருவள்ளுவர்

தமிழ்நாடு செய்தவப் பயனாய்த் தோன்றிய திருவள்ளுவர் குறித்து வழங்கும் கதைகள் பலப்பல, அவை அனைத்தும் ஒருவகையில் திருவள்ளுவர் புகழை மாசுபடுத்துவதாகவே உள்ளன. பல்வேறு இலக்கியங்களை ஆராய்ந்து திருவள்ளுவர் பற்றிய திட்டவட்டமான கருத்தினை முதற்கண் வெளியிட்ட பெருமை நாவலரைச் சாரும். அவருடைய ஆராய்ச்சி முடிவுகள் வருமாறு:

“வள்ளுவர் கடைச்சங்ககாலத்திற்கு மிகவும் முற்பட்டவர். திருக்குறளே தமிழின்கண் தோன்றிய தனிமுதல் அற நூல் திருவள்ளுவர் புலைச்சியின் புதல்வரல்லர். ஏலேல சிங்கனின் கொடையால்

உயிர்த்த பிறவியல்லர். தமிழ் முடி மன்னரிடத்து உட்படு கருமத் தலைவராய்த் தம் ஆற்றலும் அறிவும் வாய்ந்தவர்."

முதன் முதலாக இவ்வாராய்ச்சிச் சொற்பொழிவினை 25-1-1929ஆம் ஆண்டில் மதுரைத் தமிழ்ச் சங்கம், கிறித்தவ இளைஞர் சங்கம் இவற்றின் ஆதரவில், மறைத்திரு. எச்.ஏ. பாப்லி துரை தலைமையில் நிகழ்த்தினார். பின்னர்ச் சென்னைப் பல்கலைக் கழகத்தின் சார்பில் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் அறிஞர் பெருமக்கள் பலர் குழுமியிருந்த அவையில் வெளியிட்டார். அங்குக் கூடியிருந்த பெரு மக்களில் குறிக்கத்தக்கவர் டாக்டர் உ. வே. சாமிநாதையர், மு. இராகவையங்கார், எஸ். வையாபுரிப்பிள்ளை முதலியோ ராவர். இந்நூலைப் படித்து டாக்டர் உ. வே. சா. அவர்கள் கருதிய கருத்து, நாவலர் ஆழமான ஆராய்ச்சி அறிவு நுட்பம் வாய்ந்தவர் என்பதாகும்.

**சேரர் பேரூர்**

முடியுடை மூவேந்தரில் முதலாமவரான சேர மன்னரின் கோநகரமாம் வஞ்சி யாண்டுளது என்பது குறித்து:ஆராய்ச்சி கள் பல எழுந்தன. சிலப்பதிகார உரையாசிரியராம் அடியார்க்கு நல்லாரும், டாக்டர் உ. வே. சாமிநாதையரும் மேற்கடற்கரையிலுள்ள பேராற்றின் கரைக்கண்ணது வஞ்சி என்பர். அறிஞர் வி கனகசபைப் பிள்ளை மேற்கு மலைத் தொடரின் அடிவாரத்தில் பேரியாற்றங்கரையில் ஒரு பாழுருக் குத்திருக்கரூர் என்னும் பெயர் வழங்குவது கொண்டு அப்பா மூரையே வஞ்சி என்று கொண்டனர். 'சேரன் செங்குட்டுவன்' என்ற ஆராய்ச்சி நூலையளித்த பேராசிரியர் மு இராகவை யங்கார், வஞ்சியென்பது திருச்சிக்கு மேற்கே ஆம்பிராவதி ஆற்றின் மேலதாக அமைந்திருக்கும் கருவூரானிலை அல்லது கருரே வஞ்சியென்பர். 'தமிழ் வரலாறு' எனும் அரிய ஆராய்ச்சி நூலைத் தந்த தஞ்சை அறிஞர் கே. சீனிவாசப் பிள்ளை, இச்சிக்கலைத் தீர்க்குமாறு நாவலரை வேண்டிக் கொள்ள, நாவலர் இப்பொருள் குறித்து விரிவாக ஆராய்ந்து 'சேரர் பேரூர்' என்னும் நூலைத் தமிழுலகிற்குத் தந்தார். "வஞ்சியெனப்படும் சேரர் கோநகரம், மலைநாட்டில் மேற்குக் கடற்கரையில் டோரியாற்றின் கழிமுகத்தில் அமைந்த பழம் பட்டினமேயன்றிப் பிறிது உள்நாட்டு ஊரேதுமாகாது" என்று அவர் ஆராய்ந்து முடிந்த முடிபாகக் கருத்து வெளியிட்டார்.

இந்நூற் கருத்துகளுடன், தாம் ஆராய்ந்த வேறு சில கருத்துகளையும் சேர்த்து 'பண்டைச் சேரரைப் பற்றிய சில ஆராய்ச்சிகள்'(Some Studies about the Cheras of yore) என்னும் தலைப்பிட்டு ஆங்கில நூல் ஒன்றும் எழுதி நாவலர் பாரதியார் வெளியிட்டார்.

**சேரர் தாய முறை**

சேரர் தலைநகரான வஞ்சி குறித்துத் தமிழறிஞர் பெரு மக்களிடையே கருத்து வேறுபாடுகள் நிலவுவன போன்றே, சேரர் தாய முறை குறித்தும் கருத்து வேறுபாடுகள் நிலவி வந்தன.

இன்றைய கேரள மாநிலமாம் அந்நாளைய சேர நாட்டில் ஆண் மக்கள் தம் தந்தையர்க்குப் புதல்வராக அமைந்தாலும், அவருக்கன்றி, அத் தந்தையாரின் உடன் பிறந்தாள் புதல்வர்க்கே அச்சொத்து உரிமையுடையதாகும் இதுவே 'மருமக்கள் தாய முறை' என இப்பொழுது வழங்கப்படுகிறது. இவ்வழக்கு இடைக்காலத்தது என்பர். ஆனால் நாவலர் பாரதியார் அவர்கள் இதனை நன்காராய்ந்து

சேர நாட்டில் முற்காலத்தில் வழக்கிலிருந்தது மருமக்கள் தாய முறையே என்றும், பழந்தமிழக முழுவதும் அக்காலத்தே இததாய முறையே வழிவழி மரபிலிருந்தது என்றும் ஆராய்ந்து கண்டு 'சேரர் தாய முறை' என்னும் நூலை எழுதினார்.

'system of Succession in the Chera Kingdom' என்ற தலைப்பில் ஆங்கிலத்திலும் நூலை யாத்தார்.

**மாரி வாயில்**

நாவலர் சோமசுந்தர பாரதியாரின் நற்றமிழ்க் கவிப் புலமைக்கு எடுத்துக்காட்டாய் இலங்குவது 'மாரி வாயில்' என்னும் கவிதை நூலாகும். வடமொழியில் காளிதாசர் இயற்றிய 'மேக சந்தேசம்' என்னும் நூலைப் போன்றது இந்நூல். பஞ்சபாண்டவருள் நடுப் பிறந்த பார்த்தனான அருச்சுனனுக்கு அவன் தமிழ் மனைவியான பாண்டியன் மகள் மாரியைத் தூது அனுப்பியதாகக் கற்பித்துக் கூறும் கவின் மிகு நூலாகும் இது. இந்நூல் கற்பனை வளம் மிக்கது: காதலறத்தை விளக்குவது; பழந்தமிழ் இலக்கணமாகிய நூலிற்கு இலக்கியமாகத் திகழ்வது; இருநூற்றிருபத்திரண்டு பாக்களைக் கொண்டு கழிபேரின்பம் பயப்பது; பெரும் புலவர் அருணாசலக் கவிராயரால் "சென்ற இரண்டு மூன்று நூற்றாண்டுகளுக்குள் இயற்றப் பெற்ற தமிழ்ப் பிரபந்தங் களுள் இம் 'மாரி வாயில்' பொருள்வளம் சொல்லின்பங்களில் சிறந்து விளங்குவது" என்று பாராட்டப்பட்டுள்ளது.

**மங்கலங் குறிச்சிப் பொங்கல் நிகழ்ச்சி**

இந்நூல் காதல், வீரம் ஆகிய இரு பெற்றியினையும் ஒருங்கே கூறுவதாகும். மங்கலங்குறிச்சி என்னும் சிற்றூர் பொதியமலை அடிவாரத்தில் உளது. தைத்திங்கள் தலை நாளில் நீராட வைகுறு விடியலில் ஆற்றுக்குச் சென்று தலைவி கால் தடுக்கிச் சுருட்டும் சுழியில் விழுந்தாள். வெள்ளம் இழுத்த அவளை அவ்வழியே வந்த தலைவன் காப்பாற்றிக் கரை சேர்த்தான். அன்று மாலையில் அவ்வூரில் நடந்த விலையர் போட்டியில் வெற்றி கண்டான் தலைவன். வேங்கைப் புலியை வீழ்த்திய கையோடு தலைவி கூந்தலிற் செருகி அழகு பார்க்க முல்லைக் கொத்தொன்றையும் வில்லாற் கொய்தான். இந்நிலையில் வீடு சென்ற தலைவியை மாமி பழித்தாள், மகளுக்காகப் பரிந்து வந்தாள் சித்தி. அதற்கிடையில் வெற்றி ஊர்வலம் வந்த தலைவனை அக்காட்சி பொறாத கெடுமதியாளன் ஒருவன் குத்தி விட்டான். குத்தியவனை இளைஞர் படை சிறைக்கூடம் சேர்த்தது. புண்பட்ட தலைவன் மருத்துவம் செய்யப் பெறும்போது தலைவியின் பெயரைத் தன்னை மறந்த நிலையில் உச்சரித்தான். செய்தியறிந்த தலைவி ஓடிச்சென்று தன் இனிய உரைகளால் உயிர்ப்பித்தாள்; அவனும் புண் தெளிந்து எழுந்தான். இருவரும் மணம் செய்து கொண்டு மனையறம் காத்தனர்.

**தொல்காப்பியப் பொருட்படலமும் புதிய உரையும்**

தொல்காப்பியத்துக்கு உரை எழுதியோர் பலர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் மாணாக்கர்க்குத் தொல்காப்பியப் பாடம் சொல்லி வருங்கால் சிற்சில இடங்களில் உரையாசிரியர்கள் தமிழ் மரபுக்கும் தொல்காப்பியர் கருத்துக்கும் மாறுபட்டு உரை எழுதியிருப்பதைக் கண்டார். இலக்கணக் கடல் சோழவந்தான் அரசஞ் சண்முகனாரோடும், இருமொழிப் புலமைப் பெருமழைப் புலவர் பண்டிதமணியுடனும் தம் கருத்துகளைக் கலந்து பேசி இறுதியாக தொல் காப்பியம் - பொருட்படலமும் புதிய உரையும்' எனும் நூல் எழுதினார். இந்நூலில்

அகத்திணையியல், புறத்தினையியல், மெய்ப்பாட்டியல் என்னும் மூன்றியல்களின் ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது.

இப் புதியவுரையின் சிறப்பினைப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள், "நாவலர் இப்புத்துரை செய்ததன் வாயிலாகத் தமிழுக்கும் தமிழர்க்கும் எத்தனையோ நன்மைகள் செய்துள்ளார். தக்க மேற்கோளுடன் எவரும் மறுக்க முடியாத வகையில் பொருள் கூறித் தமிழர் பெருமையைக் காத்துள்ளார். அப் புத்துரையைப் பாராட்டி மக்களனை வரும் அதையே படிக்க வேண்டும்" என்று குறிப்பிட்டுள்ளார்.

**மேலும் சில நூல்கள்**

மேற்கண்ட நூல்களைத் தவிர, இவர் அவ்வப்போது இதழ்களுக்கு எழுதிய கட்டுரைகளும், வானொலியில் ஆற்றிய சொற்பொழிவுகளும் நூல் வடிவம் பெற்றன. அவ்வாறு வெளிவத்த நூல்கள் 'நற்றமிழ்', 'பழந்தமிழ் நாடு' என்பனவாகும். இவர்தம் ஆங்கிலக் கட்டுரைகள் 'தமிழ் இலக்கியங்களும் தமிழகமும்' (Tamil Classic and Tamīlaham)பெயரில் நூலாக அமைந்தது. மேலும் இவர் கரிகாலனும் திருமாவளவனும் ஒருவரே என்ற கருத்தை மறுத்தும், பட்டினப்பாலையின் தலைவன் கரிகாலனல்லன் திருமாவளவனே என்றும், இத்திருமாவளவன் கரிகாலனுக்கு மகன் என்றும் ஆராய்ந்து கூறியுள்ளார்.

சீத்தலைச் சாத்தனாரும், மதுரைக் கூலவாணிகன் சாத்தனாரும் வெவ்வேறு புலவர் என்றும், மணிமேகலை பாடிய புலவர் மதுரைக் கூலவாணிகன் சாத்தனார் ஆவர் என்றும், இவரின் வேறான-புரவலரைப் போற்றி அவரால் பேணப்பட்டு வாழ்ந்தவரே சங்ககாலச் சித்தலைச் சாத்தனா ரென்றும் முடிவு கட்டினார்.

மெய்கண்டார் இயற்றிய சிவஞான போதம் மொழி பெயர்ப்பு நூலன்று, அது செந்தமிழில் எழுந்த முதல் நூல் என்றும், உருத்திரனும், சிவனும் ஒருவரல்லர், வெவ்வேறானவர் என்றும், உருத்திரன் அழிக்கும் கடவுள், தமிழரின் சிவன் எல்லாம் வல்ல இறைவன் என்றும் தக்க ஏதுக்கள் காட்டி எடுத்துரைத்தார்.

இவ்வாறாக டாக்டர் நாவலர் கணக்காயர் சோமசுந்தர பாரதியார் இலக்கிய எழுஞாயிறாய் - இருபதாம் நூற்றாண்டு நக்கீரராய் இலங்கினார். நாட்டுப்பற்றில் வேர் ஊன்றி, தமிழ்ப்பற்றில் கிளைவிட்டுப் படர்ந்து, தமிழன மேம்பாட்டிற்குச் செழித்து விளங்கியது நாவலர் என்னும் நற்பயன் மரம் என்று கூறலாம்.

[ நன்றி:சான்றோர் தமிழ்-- ஆசிரியர் முனைவர் சி. பாலசுப்பிரமணியன்]



தமிழ்நாடே திரும்பிப் பார்த்த தலைசிறந்த விழா!

தமிழறிஞர் சிலம்பொலி செல்லப்பனார்
சிலை திறப்பு விழா

சிலம்பொலி செல்லப்பனார் பிறந்தநாள் சிறப்பிதழ்

## மாண்புமிகு தமிழ்நாட்டு முதல்வர் தளபதியார் காணொளி வழித் திறந்து சிலம்பொலி செல்லப்பனார்க்குப் புகழாரம் சூட்டினார்

*அனைத்துத் தமிழ்த் தொலைக்காட்சி நிறுவனங்களும் சிறப்பாக ஒளிபரப்பின.*

மாண்புமிகு தமிழ்நாட்டு முதல்வர் அவர்கள் சிலம்பொலி செல்லப்பனாரின் சிலை திறந்து ஆற்றிய பொழிவையும் பொதிகை தொலைக்காட்சியும் ஏனைய அனைத்துத்தொலைக்காட்சி நிறுவனங்களும் சிறபாக ஒளிபரப்பின. கலைஞர் தொலைக்காட்சி நிறுவனம் நாமக்கல் நகருக்கே தனது சார்பாளரை அனுப்பிப் பதிவேற்றி உடனுக்குடன் ஒளிபரப்பியம குறிப்பிட்த் தக்கது.

அனைத்து நாளிதழ்களும் முகப்புச் செய்தி வெளியிட்டன

### நாமக்கல்லில் சிலம்பொலி சு.செல்லப்பன் முழு உருவ வெண்கலச் சிலை திறப்பு

**காணொலிக் காட்சி மூலம் முதல்வர் பங்கேற்பு**

நாமக்கல், செப். 23: நாமக்கல்லில் தமிழறிஞர் சிலம்பொலி சு.செல்லப்பன் முழு உருவ வெண்கலச் சிலை திறப்பு விழா சனிக்கிழமை நடைபெற்றது. காணொலிக் காட்சி மூலம் முதல்வர் மு.க.ஸ்டாலின் இந்நிகழ்வில் பங்கேற்று, சிலையைத் திறந்து வைத்தார்.

நாமக்கல் மாவட்டம், சிவியாம்பாளையத்தைச் சேர்ந்தவர் தமிழறிஞர் சிலம்பொலி சு.செல்லப்பன். 1924-இல் பிறந்த இவர், 2019 ஏப். 6-ஆம் தேதி தனது 91-ஆவது வயதில் காலமானார். அவரது நினைவாக நாமக்கல் – சேந்தமங்கலம் சாலையில், கொண்டம்பட்டிமேடு பகுதியில், சிலம்பொலி செல்லப்பன் சிலப்பதிகார அறக்கட்டளை சார்பில், 12 அடி உயர முழு உருவ வெண்கலச் சிலை மற்றும் அறிவகம் அமைக்கும் பணி கடந்த 2 ஆண்டுகளுக்கும் மேலாக நடைபெற்று வந்தது.

அதன் திறப்பு விழா சனிக்கிழமை காலை 10 மணியளவில் நடைபெற்றது.





நாமக்கல் அருகே சிவியாம்பாளையத்தில் நிறுவப்பட்டுள்ள தமிழறிஞர் சிலம்பொலி சு.செல்லப்பன் முழு உருவ வெண்கலச் சிலையை சனிக்கிழமை காணொலி முறையில் திறந்து வைத்த முதல்வர் மு.க.ஸ்டாலின்.

**தமிழை விளைவித்த தமிழ் உழவர் சிலம்பொலியார்: முதல்வர் புகழாரம்**

நாமக்கல், செப். 23: தமிழை விளைவித்த, தமிழ் உழவர் சிலம்பொலி செல்லப்பனார் என தமிழக முதல்வர் மு.க.ஸ்டாலின் புகழாரம் சூட்டினார்.

Sun, 24 September 2023



மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு. மு.க. ஸ்டாலின் அவர்கள் இன்று (23.9.2023) முகாம் அலுவலகத்திலிருந்து காணொலிக் காட்சி வாயிலாக நாமக்கல், சேந்தமங்கலம் சாலை, கொண்டம்பட்டிமேடு, சிலம்பொலியார் நகரில் சிலம்பொலி செல்லப்பன் சிலப்பதிகார அறக்கட்டளையின் சார்பில் அமைக்கப்பட்டுள்ள மூத்த தமிழறிஞர் சிலம்பொலி செல்லப்பன் அவர்களின் திருவுருவச்சிலை மற்றும் அறிவகம் ஆகியவற்றை திறந்து வைத்தார். இவ்விழாவில், மாண்புமிகு வனத்துறை அமைச்சர் மரு. மா. மதிவேந்தன், நாடாளுமன்ற உறுப்பினர் திரு.கே.ஆர்.என். ராஜேஷ்குமார், சட்டமன்ற உறுப்பினர்கள் திரு.பி. இராமலிங்கம், திரு.கு. பொன்னுசாமி, கொங்குநாடு மக்கள் தேசியக் கட்சியின் தலைவரும், சட்டமன்ற உறுப்பினருமான திரு.ஈ.ஆர். ஈஸ்வரன், பிஜிபி குழுமத்தின் தலைவர் டாக்டர் பழனி ஜி. பெரியசாமி, புலவர் தமிழமுதன், தமிழ்ப் பல்கலைக்கழக முன்னாள் துணை வேந்தர் முனைவர் இராசேந்திரன், தமிழறிஞர் முனைவர் மறைமலை இலக்குவனார், திரு.எஸ்.எம்.மதுரா செந்தில், சிலம்பொலி செல்லப்பன் சிலப்பதிகார அறக்கட்டளை தலைவர் திரு.செ. கொங்குவேள், அறக்கட்டளையின் நிர்வாகிகள், தமிழறிஞர் சிலம்பொலி செல்லப்பன் அவர்களின் குடும்பத்தினர்கள் கலந்து கொண்டனர்.










**சிலை திறப்புடன் இணைந்த சிலம்பொலி செல்லப்பனார் அறிவகம் திறப்பு விழா**

தமிழறிஞர் சிலம்பொலி செல்லப்பனார் அவர்களின் தமிழ்த்தொண்டு தமிழர் நெஞ்சமெல்லாம் காலாகாலத்துக்கும் நிலைத்து நிற்கும்.அவர் சொற்பொழிவுகளில் சொக்கிப்போகாத எவரேனும் இருக்க முடியுமெனில் , அவர் செவித்திறன் அற்றவராகத்தான் இருக்க முடியும். அ த்தகைய சிறப்பு வாய்ந்த இந்தத் தமிழறிஞருக்கு 'சிலம்பொலி செல்லப்பன் சிலப்பதிகார அறக்கட்டளை ' மூலம் அவரின் மாணவர்கள் , தமிழன்பர்கள், பல்வேறு தமிழ் அமைப்புகள் எல்லாம் இணைந்து நாமக்கல் மாவட்டம் சேந்தமங்கலம் சாலையில் சிலம்பொலியார் நகர் , சிவியாம்பாளையம், கொண்டாம்பட்டிமேடு என்னுமிடத்தில் ஏழடி உயரம் கொண்ட அவரின் வெண்கலச் சிலை நிறுவி அதனுடன் மானுட வாழ்வின் பரிசான புத்தகம் வாசித்தலின் மூலதனம் நூலகம் என்ற உண்மையை உரக்கச் சொல்லும் விதமாய் அவர் பயன்படுத்திய ஏழாயிரத்திற்கும் அதிகமான நூல்களுடன் கூடிய அறிவகம் ஒன்றை எதிர்காலத் தலைமுறையின் பிள்ளைகளுக்காக உருவாக்கியுள்ளனர். தமிழறிஞர் சிலம்பொலி செல்லப்பன் திருவுருவச்சிலை மற்றும் அறிவகத்தினை

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் உயர்திரு மு.க.ஸ்டாலின் அவர்களின்

திருக்கரங்களில் காணொலி வாயிலாகத் திறந்து வைத்து சிலம்பொலியார் பற்றி

அற்புதமான பல கருத்துக்களைப் பதிவு செய்தார்.



## சிலம்பொலி நினைவுகள்- முன்மாதிரியைக் கொண்டாடுவோம்.

-ம.இராசேந்திரன்,மேனாள் துணைவேந்தர்,

தமிழ்ப்பல்கலைக்கழகம்,தஞ்சை.

இது தமிழர்களுக்கு மட்டும் இல்லை. ; தமிழுக்கும் பொற்காலம்: தமிழறிஞர்களுக்கும் பொற்காலம். இந்தப் பொற்கால ஆட்சியைத் தந்து கொண்டிருக்கிறார் தமிழ்நாடு முதலமைச்சர் மாண்புமிகு மு.க. ஸ்டாலின் அவர்கள். வெறுமனே பேச்சுக்காக நான் சொல்லவில்லை. ஆதாரங்களோடு சொல்கிறேன். காரணங்களோடு சொல்கிறேன். இந்தியா விடுதலை பெற்று இவ்வளவு ஆண்டுகள் ஆகியிருக்கின்றன. ஆனால் ஒரு தமிழ் அறிஞர் அல்லது தமிழ்

எழுத்தாளர் மறைவுக்கு அரசு மரியாதை செய்து அவரது பணியைப் பாராட்ட ஆணை வந்திருப்பது நமது முதலமைச்சர் ஆட்சியில்தான்.
எழுத்தாளர் கி.ரா. மறைவுக்கும் தமிழறிஞர் அவ்வை மறைவுக்கும் அரசு மரியாதை செய்ய ஆணையிட்டவர் நமது முதலமைச்சர்தான்.
கி.ரா. அவர்களுக்கு மணிமண்டபம் உருவாக்கி இருக்கிறார். அதோடு வாழும் காலத்தில் சிறந்த தமிழ் அறிஞர் அல்லது விருது பெற்ற எழுத்தாளர் யாரும் சொந்த வீடு இல்லாமல் இருந்துவிடக் கூடாது என்று சாகித்திய அகாதெமி விருது பெற்ற தமிழ் எழுத்தாளர்களுக்கும் கலைஞர் செம்மொழி விருது பெற்ற எழுத்தாளர்களுக்கும் வீடு வழங்கக் கனவு இல்லத் திட்டத்தை உருவாக்கி இருக்கிறார் நமது முதலமைச்சர்.
இந்தியாவிலேயே மிகப் பெரிய விருதாகக் கருதப்படுவது கலைஞர் செம்மொழி விருதுதான். விருதுத் தொகை பத்து இலட்சம் ரூபாய். தொகையால் மட்டும் அது பெரிய விருது இல்லை. அந்த விருதைப் பெறுகிறவர்களுக்கும் சாகித்திய அகாதெமி விருதைப் பெறுகிறவர்களுக்கும் தமிழ்நாட்டில் எங்கு வேண்டுமானாலும் அவர்கள் வீடு கேட்டுப் பெறலாம் என்று ஆணையிட்டிருக்கிறார் தமிழ்நாடு முதலமைச்சர்.
இந்தியாவில் மட்டுமில்லை உலகில் எங்குமேஎழுத்தாளர்கள்,அறிஞர்கள் இப்படிமதிக்கப்படுவதற்கு முன்மாதிரி இல்லை. இதிலும் முன்மாதிரியை உருவாக்கியிருக்கிறார் நமது முதலமைச்சர்.
அதற்குச் சான்றாக இந்த மேடையில் பேராசிரியர் மறைமலை இலக்குவனார் இருக்கிறார். அவருக்கு அந்த விருதையும் வழங்கி வீ டு வழங்க ஆணையும் அளித்துள்ளார், நம் முதலமைச்சர். தமிழ்க் கவிஞர் தமிழ் ஒளிக்குத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் சிலை நிறுவப்படும் என்று அண்மையில் ஆணையிட்டிருக்கிறார். இதோ இன்று (23/9/23 )சிலம்பொலிக்குச் சிலையைத் திறந்து வைத்திருக்கிறார்.
இது தனிப்பட்ட சிலம்பொலிக்குக் கிடைத்த பெருமை மட்டுமில்லை ; தமிழுக்குக் கிடைத்த பெருமை.
நாமக்கல்லுக்கும் தமிழுக்குமான தொடர்பு எல்லோருக்கும் தெரியும். நமக்குத் தலைமைச் செயலகம் கூட நாமக்கல் கவிஞர் மாளிகைதான்.
கல்லுக்கும் தமிழுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. பொதிகை மலைக்கும் தமிழுக்குமான உறவு சொல்லித் தெரிய வேண்டியதில்லை. பொதிகை மலை அகத்தியருக்கும் தமிழுக்குமான தொடர்பை விளக்க வேண்டியதில்லை.
பொதிகை மலை தமிழ் மலை. தமிழ் வளர்த்த மலை.
மலையைக் குறிக்கச் சிலம்பு என்றும் ஒரு சொல் உண்டு. சிலம்பு என்றால் சிலப்பதிகாரம் மட்டும் இல்லை ; மலை என்றும் பொருள் உண்டு. சிலம்பொலி என்றால் மலையின் ஒலி ; மலையின் பேச்சொலி என்றும் சொல்லலாம்.
நாமக்கல் பேச்சொலியை நாம் சிலம்பொலி என்றும் கொண்டாடலாம்.
கல் சிலம்பைக் கொண்டாடி இருக்கிறது. நாமக்கல் சிலப்பதிகாரத்தைக் கொண்டாடி இருக்கிறது.
நாம் சிலம்பொலியைக் கொண்டாடக் காரணம் அவர் சிலப்பதிகாரத்தைக் கொண்டாடி இருக்கிறார்.
சிலப்பதிகாரம் காவிரியையும் கண்ணகியையும் கொண்டாடிக் கொண்டிருக்கிறது.
இரண்டுக்கும் ஒரு பொருத்தம் இருக்கிறது. முரண் இருக்கிறது. முரண் அழகு இருக்கிறது. காவிரி ஆறு குடகு மலையில் தோன்றி பூம்புகார்க் கடலை அடைகிறது. கண்ணகி பூம்புகாரில் பிறந்து மலையை வந்தடைகிறார். அது திருச்செங்கோடாக இருக்கலாம். குமுளியாக இருக்கலாம்.
காவிரி, மலையில் தோன்றிக் கடலுக்குப் போகிறது. கண்ணகி கடற்கரையில் பிறந்து மலை ஏறுகிறார். மலையிலிருந்து காவிரி கடலுக்குப் போகிறது. கடற்கரையிலிருந்து ஒரு பெண்மணி மலைக்குப் போகிறார். இப்படியாக மலையையும் கடலையும் தமிழால் இணைக்கும் பாலமாகச் சிலப்பதிகாரம் இருக்கிறது.
சிலம்பொலி சாதி , மதம் கடந்து தமிழர்களைத் தமிழால் இணைத்திருக்கிறார். நாமக்கல்லில் தோன்றி பூம்புகாரைப் போற்றியிருக்கிறார்.
பூம்புகாரைப் போற்றுகிறார் என்றால் சிலப்பதிகாரத்தை மட்டும் போற்றுவதாக எடுத்துக்கொள்ள முடியவில்லை. பூம்புகார் தந்த முத்தமிழ் அறிஞர் கலைஞர் அவர்களையும் போற்றுவதாகப் பொருள் கொள்ள முடிகிறது.
மூன்று தனித் தனி நாடுகளையும் தமிழ் எனும் மொழியால் இணைத்து ஒரு காப்பியம் ஆக்கியிருக்கிறார் இளங்கோ அடிகள்.
சிலப்பதிகாரம், சேர, சோழ, பாண்டியர் எனும் முடியுடை வேந்தர் மூவர்க்கும் உரியது. சிலம்பொலியாரும் அறிஞர் அண்ணா, முத்தமிழ் அறிஞர் கலைஞர் , எம்.ஜி.ஆர். எனும் மூன்று முதலமைச்சர்களுக்கும் வேண்டியவராக இருந்திருக்கிறார்.
நாமக்கல் கவிஞர் போன்று சிலர் ஊரால் பெயர் பெறுவார்கள். செம்புலப் பெயல் நீரார் போலச் சிலர் தமது பாடல் வரியால் பெயர் பெறுவார்கள். ஆனால் சிலம்பொலி என்று அவருக்கு ரா.பி.சேதுப்பிள்ளை அவர்கள் பட்டம் சூட்டியது 1953/ 54 ஆம் ஆண்டு. ஆனால் அவரது சிலம்பொலி என்ற நூலை முத்தமிழ் அறிஞர் கலைஞர் வெளியிட்ட ஆண்டு 1975. எனவே தன் பட்டப் பெயரில் தான் ஒரு நூலை எழுதியுள்ள பெருமைக்கு உரியவர் சிலம்பொலி.
நமக்காக வாழ்ந்து தியாகம் பல செய்து மறைந்த முன்னோருக்கு நடுகல் எடுத்து வழிபட்டுக் கொண்டாடும் பண்பாட்டுக்கு உரியவர்கள் நாம்.
இந்தச் சிலையும் அறிவகமும் சிலம்பொலியை மட்டும் நினைவுபடுத்தப் போவதில்லை.பொதுமக்களிடமும் தமிழைக் கொண்டு சென்று விழிப்புணர்வை ஏற்படுத்திய சிலம்பொலியின் உழைப்பை நினைவுபடுத்தும்.
நினைவைக் கொண்டாடுவது என்பது அவரைப் பற்றிய நமது நினைவைக் கொண்டாடுவது மட்டும் இல்லை.

அவர் நினைவில் இருந்த தமிழைக் கொண்டாடுவதாகவும் ஆகும்.
இப்படியான நினைவுகளைக் கொண்டாட, சிலையைத் திறந்து வைத்து சிறப்புரை ஆற்றியிருக்கிற மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களுக்குத் தமிழுலகம் நன்றிக் கடன் பட்டுள்ளது.
தமிழ் அறிஞராக வாழ்ந்து மறைந்த தந்தைக்குச் சிலை எடுத்துத் தமிழறிஞர்களுக்கும் தமிழகத்துக்கும் முன்மாதிரியைத் தொடங்கி வைத்திருக்கும் சிலம்பொலியார் குடும்பத்துக்கும் குறிப்பாகத் திரு கொங்குவேள் அவர்களுக்கும் இதை நிறைவேற்ற ஒத்துழைத்த அமைச்சர்கள், மாவட்டச் செயலாளர் நாடாளுமன்ற உறுப்பினர் திரு கே.ஆர்.என். ராஜேஷ்குமார் ,சட்டமன்ற உறுப்பினர்கள் குறிப்பாகத் திரு ஈ..ஆர். ஈஸ்வரன் மற்றும் இந்த விழாவைக் கொண்டாட ஆயிரக்கணக்கில் கூடியிருக்கும் பொதுமக்கள் உட்பட எல்லோருமே கொண்டாடப்பட வேண்டியவர்கள். ஏனெனில் ஒரு தமிழறிஞருக்கு அவர் குடும்பத்தினர் இப்படி ஒரு விழா எடுப்பதற்கும் அதற்கு அந்தப் பகுதி மக்கள் திரளாகக் கூடுவதற்கும் கொண்டாடுவதற்கும் தமிழகம் பின்தொடர வேண்டிய முன்மாதிரியாக இந்த விழா அமைந்திருக்கிறது வாழ்த்துகள்




தமிழறிஞர் ம.இராசேந்திரன்

பாமாலை சூட்டுகிறார்

எழுச்சிப்பாவலர் தமிழன் ராகுல்காந்தி

உடையினியர் சொல்லினியர்
உள்ளம் இனியர்
நடையினியர் எல்லோர்க்கும்
நண்பர் - கொடையினிய
செல்லப்பன் என்றாலே
சேர்ந்தெழுந் தெல்லோரும்
நல்லப்பன் என்பார்
நயந்து

புலம்புலி கேட்கும்
பொதுமேடை எல்லாம்
சிலம்பொலி கேட்கவைத்த
செம்மல் - நலம் பொலிந்த
அன்னைத் தமிழின்
அரும்பணிக்கே வாழ்க்கையென தன்னையே
தந்தார்
தழைத்து.

பொருள்பெற பேசும்
புலவர் இடையே
பொருள் தரப்பேசும்
புனிதர் - இருள்தரும்
எண்ணங்கள் இல்லார்
இதயங் களையீர்க்கும்
வண்ணங்கள் கொண்ட
மலர்.

சீறாப் புராணமெனும்
செங்கரும் பைப்பிழிந்து
சாறாகத் தந்த
தமிழாலை - வேறான
எம்மதம் என்றாலும்
ஏசாமல் அம்மதத்தை
எம்மதம் என்பார்
இசைந்து.

அணிந்துரை யென்றால்
அயராமல் ஏற்றுத்
துணிந்துரை நல்கிடும்
தூயர் - பணிந்து
சுவரைப்போல் சித்திரங்கள் தோன்றவே
நிற்பார்
இவரைப்போல் யாரும்
இலர்.

கலையாக சொற்பொழிவு
மலையாக சொற்செறிவு
அலையாக அவர் நினைவு
நிலையான புகழோடு சிலையாய் அவர்,
குமரியிலே வள்ளுவர் நிற்கிறார்
மெரினாவிலே கண்ணகி நிற்கிறார்
அறிவாலயத்தில் அண்ணா நிற்கிறார்
அருகாமையிலேயே கலைஞரும் நிற்கிறார்
அந்த வரிசையிலே இப்போது நாமக்கலில்
நயமாய் நிற்கிறார் சிலம்பொலி
செல்லப்பனார்...



தமிழ்த்தாய் வாழ்த்தோடும் , மங்கல இசையோடும் தொடங்கிய நிகழ்வில் பி.ஜி.பி.குழுமத்தின் தலைவர் பழநி.ஜி.பெரியசாமி அவர்கள் வரவேற்புரை வழங்கினார்.

"எங்கள் குடும்பத்தின் பெரியவராக வும் எனக்கு ஆசிரியராகவும் வழிகாட்டியாகவும் இருந்தவர் சிலம்பொலியார்.

நமது தமிழ்நா ட்டு முதலமைச்சர் அவர்கள் சிலம்பொலியார் திருவுருவச் சிலை மற்றும் அறிவகம் திறப்பது என்பது கலைஞரே திறப்பது போன்று உணர்கிறேன்.

தமிழுக்கும், தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் தொண்டு செய்பவர்களை அங்கீகரித்து , ஊக்கமூட்டி, பாராட்டி மகிழ்வதில் இன்பம் கண்டவர் முத்தமிழ் அறிஞர் , தமிழகத்தின் முன்னாள் முதல் அமைச்சர் மு. கருணாநிதி அவர்கள்.

அரியணையில் அவர் அமரும்போதெல்லாம் தமிழ் அன்னைக்கு சிறப்பு சேர்க்கப்படும் , தமிழ் வளர்ச்சிக்கு பாடுபடுபவர்கள் போற்றிப் புகழப்படுவார்கள் , சிறப்பு செய்யப்படுவார்கள்.

தந்தை வழியில் நடைபோட்டு வரும் நமது முதல் அமைச்சர் மு. க. ஸ்டாலின் அவர்களும் , இன்று மறைந்த தமிழறிஞர் சிலம்பொலி செல்லப்பன் அவர்களின் திருவுருவச் சிலையை காணொலி காட்சி மூலம் திறந்து வைக்க உள்ளார்கள். அவருக்கு எனது நன்றியையும், அன்பையும், பாராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.






பாவலர் தமிழன் ராகுல்காந்தி

தமிழின்
இனிமையைப்
பண்பென ஆக்கினார்
அமிழ்தச்
சுவையெலாம்
பொழிவினில்
தேக்கினார்
அறிவின் விரிவெலாம்
புலமையால்
நாட்டினார்
அருளும் அன்புமே
நெறியெனக்
காட்டினார்
பொதிகை மலையில்
பொலிந்த தென்றலை
கொல்லி மலைக்குக்
கொணர்ந்த
பெருந்தகை
ஓரியின் வில்லோ
உயிர்களைத்
துளைக்கும்
சிலம்பொலி
சொல்லோ
உள்ளம் ஊடுருவும்
வாரி வாரிப்
பொருளை வழங்கிய
ஓரி மன்னனின்
ஒப்பற்ற
கொடைத்திறம்
சிலம்பொலியாரிடம்
நிலைகொண்டதாலே
தமிழின் இலக்கியப்
பெருமித நூல்களின்
விழுமிய பொருளை
வாரி வாரி
வழங்கி மகிழ்ந்தார்.
உள்ளம் குடிகொண்ட
சிலம்பொலியாரின்
உயர்பண்பெல்லாம்
சொல்லச் சொல்லத்
தொடர்ந்து
சென்றிடும்
நெடுந்தொடராக
நீண்டுவிடுமே
நேரம் போதாது.
கல்வியினாலும்
கற்பித்ததாலும்
படித்ததனாலும்
பகிர்ந்ததனாலும்
எழுத்துகளாலும்
பொழிவுகளாலும்
அன்பினாலும்
ஆளுமையாலும்
இமயத்தை மிஞ்சிய
உயரத்தைக் காட்டிய
பெருந்தகை
சிலம்பொலி
என்றும் வாழ்வார்!
வணங்கிப்
போற்றுவோம்.

மறைமலை இலக்குவனார்



குறள்நெறி

மின்னிதழ்:54 மாசி-14--தி.பி.2054 பெப்புருவரி-26- பொ.ஆ.2023

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



## மாண்புமிகு தமிழ்நாட்டு முதல்வர் அவர்களின் எழுபதாம் ஆண்டு பிறந்தநாள் வாழ்த்துச் சிறப்பிதழ்



உலகத் தமிழர்களின் வாழ்த்துப் பூந்துணர்

## குன்றா நல்லறக் குன்றாய் விளங்கும் தொண்டறத் துறவியின் வாழ்த்துரை

**திலகவதியார் திருவருள் ஆதீனகர்த்தர்**
**தவத்திரு தயானந்த சந்திரசேகர அடிகளார்**

email:sivabrindadevi@gmail.com

25.2.2023

**மங்கையர்களுக்கு வழிகாட்டியாக விளங்கிய மாதர்குல மாணிக்கம்**

2010, ஜூலை 30 -ஆம் நாள், டாக்டர் முத்துலட்சுமி அம்மையாரின் 125-ஆம் ஆண்டு பிறந்த நாள் விழாவில் புதுக்கோட்டை ஆதீன முகப்பில் உள்ள திருவுருவச்சிலையினை மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு. மு.க.ஸ்டாலின் அவர்கள் திறந்து வைத்தபோது. அருகில் ஆதீன சந்நிதானம், மாண்புமிகு அமைச்சர்கள் திரு. எஸ். இரகுபதி, திரு. கே.ஆர். பெரியகருப்பன், திரு. கேஎன். நேரு, அருளாளர் இராம. வீரப்பன், ராணி சாருபாலா, டாக்டர் தம்பி குப்புசாமி செட்டி, திரு. பெரியண்ணன் அரசு ஆகியோர்.





திருச்சி மாவட்டம் பிச்சாண்டார் கோவில் கிராமத்தில் எளிய நடுத்தரக் குடும்பத்தில் பிறந்து, தஞ்சை மருத்துவக் கல்லூரியில் டாக்டராகி, அமெரிக்கா சென்று மேற்படிப்புப் படித்து, அங்கு பிரபல டாக்டராக விளங்குபவர் டாக்டர் சோம.இளங்கோவன். அவருக்கு 75 ஆம் ஆண்டு பிறந்த நாள் வாழ்த்துகள்! அவர் வாழ்விணையர் டாக்டர் சரோஜா மற்றும் குடும்பத்தினர் பெரியாரின் விழுதுகள். 30 ஆண்டுகளுக்குமுன் எனக்கு அமெரிக்காவில் இருதய அறுவைச் சிகிச்சை நடந்தபோது உடனிருந்து உதவி, எனக்கு மறு வாழ்வு அளித்தார். அவருக்கும், அவரின் உற்ற வாழ்விணையர் மற்றும் குடும்பத்தினருக்கும் வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்

-----திராவிடர் கழகத் தலைவர் ஆசிரியர் கி.வீரமணி அவர்கள் (சென்ற ஆண்டு மருத்துவரின் பவழவிழாவின் போது)

## தமிழரின் பொற்காலம்!

**--மருத்துவர் சோம.இளங்கோவன்**

தமிழரின் பொற்காலம் தொடங்கியுள்ளது. ஆம்! திராவிடச் சிந்தனைகள் செயல் வடிவம் எடுத்துள்ளதுதான் நமது பொற்காலம். தமிழன் என்ற பெருமை வரவேண்டுமானால் உள்ளத்திலே, செயலிலே திராவிடச் சிந்தனை வேண்டும். ஆரியத்தின் சூழ்ச்சிகளை உணர்ந்து திருவள்ளுவர் சொல்லியுள்ள பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும் என்ற எண்ணம் மனத்தில் வர வேண்டும். செயலில் காண்பிக்க வேண்டும். நமது மூளைகளில் இடப்பட்டுள்ள விலங்குகள் உடைத்தெறியப் படுவதுதான் திராவிட மாடல். அதைத் துணிவாகச் செயல் படுத்தும் மாண்புமிகு முதலமைச்சர் முத்துவேல் கருணாநிதி ஸ்டாலின் 70 வயது இளைஞர். சொல்வதைவிடச் செய்வது மிகுதி. துணிச்சல், ஆற்றல், சிந்தனை மிகுந்த செயல்கள்.

தான் குடித்து வளர்ந்தது திராவிடப் பால்! தந்தை பெரியார், அறிஞர் அண்ணா, கலைஞர் இவை வெறும் பெயர்களல்ல!திராவிடச் சிந்தனை ஊற்றுக்கள். அந்த ஊற்றில் தங்களது எண்ணங்களை வளர்த்துக் கொண்டவர்கள் மனித நேய மாண்பாளர்கள். அந்தப் படை இன்று தமிழ்நாட்டில் கொடி கட்டிப்பறக்கின்றது. அதன் முன் ஊளையிடும் , குரைக்கும் சில தமிழ்நாட்டின் அவமானச் சின்னங்கள். அதைப் பற்றி எள்ளளவும் கவலைப் படாமல் தமிழ், தமிழின முன்னேற்றமே கண்ணாகச் செயல்படும் இந்தக் காலம் அனைத்துவளர்ச்சிகளிலும் ஓங்கட்டும். தமிழறிஞர்கள் போற்றப் பட வேண்டும். இளைய தலைமுறை எண்ணங்களால், உழைப்பால் உயர வேண்டும், தொழில் படைப்புகள் வணிகம் சிறக்க வேண்டும். நாம் பொற்காலம் படைத்தோம் என்ற பெருமை சேர வாழ்த்துகின்றோம்!வாழ்க முதலமைச்சர்! வளர்க தமிழ்நாடு.

- சோம. இளங்கோவன்

பெரியர் பன்னாட்டமைப்பு அமெரிக்கா.

## வட அமெரிக்கத் தமிழ்ச்சங்கப் பேரவைத் தலைவர் வாழ்த்துகிறார்

முனைவர். பாலா சுவாமிநாதன்
தலைவர் - வட அமெரிக்கத் தமிழ்ச்சங்கப் பேரவை

தமது எழுபதாவது பிறந்தநாள் விழாவையும் தமிழர்க்கான பொது வாழ்வின் பொன்விழாவையும் காணும் மாண்புமிகு முதல்வர் மு. க. ஸ்டாலின் அவர்களுக்கு எனது நெஞ்சுக்கினிய நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.
ஆற்ற அறஞ்செய்து அருளுடையீர் ஆகுமின் என்ற நாலடியாரின் கூற்றினைப் போற்றி நல்லாட்சி நல்கி வருகிறீர்கள். பெண்களுக்கு இலவசமாக பேருந்துப் பயணம் மூலம் சமூக நீதிக்கு ஒளிவிளக்கேற்றியமைக்கு என் நெஞ்சார்ந்த நன்றி.
உலகின் பல நாடுகளில் பல்வேறு சூழ்நிலைகளில் வாழும் தமிழர்களின் குறைகளைக் களைவதற்காகவும், தமிழகத்தோடு உறவை வலுப்படுத்திக்கொள்ளவும் வெளிநாடுவாழ் தமிழர்களுக்கான ஒரு தனித்துறையே உருவாக்கி தமிழர்களின் ஒற்றுமைக்கும், பெருமைக்கும் புத்துணர்வு கொடுத்தற்கும் **உலகத்தமிழர்கள் அனைவரின் சார்பாகவும் வடஅமெரிக்க தமிழ்ச்சங்கப் பேரவை சார்பாகவும் நெஞ்சார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக்கொள்கிறேன்.**
தமிழ் மொழியை வளர்ப்பதற்கும் , தமிழர்களின் பண்பாடு, வாழ்வியல் முறைகள், கலைகள் ஆகியவற்றைப் பரப்புரை செய்வதற்கும்  சமூக ஊடகங்களைப் பயன்படுத்துங்கள் என்ற உங்களின் அறிவிப்பு என்னை நெகிழ்ச்சியுறச் செய்துள்ளது.
தமிழகத்தின் பொருளாதாரமுன்னேற்றத்திற்கும்,  தொழில்துறை வளர்ச்சிக்கும் -ஒரு வல்லுநர் குழு அமைத்து இதன்மூலமாக இலட்சக்கணக்கான இளைஞர்களுக்கு வேலைவாய்ப்புகள் உருவாக்கும் உங்களின் மகத்தான முயற்சிக்கு எங்களின் உளப்பூர்வமான பாராட்டுக்களையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக்கொள்கிறேன். தரணிக்கே நலம் விளைக்கும் தமிழ் மொழியையும், தமிழ் இனத்தையும் வளர்ப்பதற்கான உங்களின் இந்தச் சீரிய பணிக்கு எங்களின் பங்களிப்பும் இருக்கும் என்பதையும் உறுதி கூறுகிறோம்.
தமிழ்நாட்டில் உள்ள அனைத்துத் தனியார், அரசுப் பள்ளிகளிலும் 1 முதல் 12-ம் வகுப்பு வரை தமிழைப் பாடமாக வைப்பதை உறுதியாக்க வேண்டுகிறோம். மாணவர்கள் எந்தப் பள்ளியிலும் படிக்கட்டும், ஏன் பிரஞ்சு வழியாகக் கூடப் படிக்கலாம், ஆனால் தமிழ்நாட்டில் படிக்கும்போது தமிழை ஒரு பாடமாகப் பயிலவேண்டும். தமிழைப் பாடமாகப் பயின்றவர்களுக்கே கல்லூரிகளிலும் அரசுப் பணிகளிலும் முன்னுரிமை அளிக்கவேண்டும். இது தமிழை ஒரு வேலை வாய்ப்பு மொழியாக மேலும் வளம் பெறச் செய்யும். மேலும் நம் தமிழ்நாட்டுக் கல்லூரிகளில் பட்டம் பெறுவதற்கு அடிப்படைத் தமிழ்மொழி தேர்ச்சியும் தேவை என்பதைச் சட்டமாக்க வேண்டுகிறோம்.
எழுபது அகவை நிறையும் தாங்கள்  எழுநூறு அகவைகள் தமிழையும், தமிழரையும் இரு கண்களாப் போற்றி வாழ்வாங்கு வாழவேண்டும் என்ற என் உள்ள வேட்கையைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பாலா சுவாமிநாதன் மதுரையில் பிறந்து திருச்சியில் படித்து பின் செயிண்ட் லூயிஸ், வாஷிங்டன் பல்கலைக்கழகத்தில்1995-ல் கணினித்துறையில் முனைவர் பட்டம்  பெற்றவர்.1993-ல் "மதுரை" என்ற பெயரில் மென்பொருளைப் படைத்துக் கணினித்திரையில் தமிழில் செய்திகளை 27-ஆண்டுகளுக்கு முன்பே வாசிக்க வழிவகுத்தவர். குழந்தைகளின் தமிழ்ப்பெயர்த் தொகுப்பை உருவாக்கியவர்; அமெரிக்காவில் வாழ்ந்த ஊர்களில் எல்லாம் தமிழ்ச்சங்கங்களில் தமிழ்ப்பணி ஆற்றியவர். மிசௌரி மற்றும் டல்லாஸ் மெட்ரோப்ளெக்ஸ் தமிழ்ச்சங்கங்களின் நிர்வாகக்குழுக்களில் பணியாற்றியுள்ளார்.. நியூயார்க் தமிழ்க்கல்விக் கழகத்தை நண்பர்கள் துணையோடு 2011இல் நிறுவியதுடன் ஆசிரியராகவும் பணியாற்றியுள்ளார். ஹார்வர்டு தமிழ் இருக்கைக்காக நிதி திரட்டியவர்; அதன் செயற்குழுவிலும் பணிபுரிந்துவருகிறார். 2017ம் ஆண்டு நியூயார்க்கில் ஸ்டோனி புரூக் பல்கலைக்கழகத்தில் தனது பெற்றோரின் பெயரில் தமிழ் இருக்கையை அமைத்துள்ளார். அவரது குடும்ப அறக்கட்டளையும் கிராமப்புற மாணவர்களின் கல்விக்கு உதவி வருகிறது.   தமிழ்நாடு அறக்கட்டளை மற்றும் நியூயார்க் தமிழ்ச்சங்கம் மூலமாகவும் உதவி வருகிறார்.

"அமெரிக்காவின் திருக்குறளார்" முனைவர் பிரபாகரன் வாழ்த்துகிறார்

**Dr. R. Prabhakaran**
**1103 Bluebird Court East**
**Bel Air, Maryland 21015 USA**

*பெருமதிப்பிற்குரிய தமிழ் நாட்டு முதல்வர் மு. க. ஸ்டாலின் அவர்களுக்கு,*

*வணக்கம்.*

*தமிழ் நாட்டில் சனாதன தர்மத்தை மறுத்து, "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்று முழங்கிய வள்ளுவரின் வாக்குக்கேற்ப சமதர்மத்தின் அடிப்படையில் நல்லாட்சி நடத்திவரும் தங்கள் ஆற்றலைக் கண்டு உலகெங்கும் உள்ள தமிழர்கள் பெருமிதம் அடைகிறார்கள்; "இவன் தந்தை என்னோற்றான் கொல்?" என்று தமிழர்கள் வியப்படைகிறார்கள். "சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம் சொல்லிய வண்ணம் செயல்" என்ற வள்ளுவரின் குறளுக்கேற்ப, தேர்தலுக்குமுன் அறிவித்த வாக்குறுதிகளை நிறைவேற்றி, இந்திய அரசியல் தலைவர்களுக்கு எடுத்துக்காட்டாக நீங்கள் திகழ்கிறீர்கள். இன்னும் பல ஆண்டுகள் வாழ்ந்து, நீங்கள் தமிழ் நாட்டின் தனிபெரும் பெருமையையும், தமிழின் அருமையையும் உலகெங்கும் கண்டு வியப்படையச் செய்ய வேண்டும் என்று மனமார வாழ்த்துகிறேன்.*

*அன்போடும் வணக்கத்தோடும்,*

இர. பிரபாகரன்

*முனைவர் இர. பிரபாகரன்*
*Email: prabu0111@gmail.com*
*Phone: +1 (443) 752-0238*

முனைவர் இர.பிரபாகரன்



முனைவர் பாலா சாமிநாதன்



## ஆஸ்திரேலியாவிலிருந்து சிட்னி தமிழ் வளர்ச்சி மன்றத் தலைவர் முனைவர் சந்திரிகா வாழ்த்து

தமிழ் வளர்ச்சி மன்றம், சிட்னி

**வாழ்த்துரை**

தமிழக முதலமைச்சர் மாண்புமிகு முத்துவேல் கருணாநிதி ஸ்டாலின் அவர்களின் பணிகள் குறித்து வாழ்த்து செய்தியொன்றை அனுப்பி வைப்பதில் பெரும் மகிழ்ச்சி அடைகின்றோம்.

குறிப்பாக, தமிழர்க்கும் தமிழ் அறிஞர்களுக்கும் தமிழ் எழுத்தாளர்களுக்கும் கடந்த சில மாதங்களிலேயே பல நற்செயல்களை செய்து உலகெங்கிலும் இருக்க தமிழர்களை பெருமைப்படுத்திய பெருமைக்குரியவர் முதலமைச்சர் அவர்கள்.

தந்தை வழியிலே தனையன் என்பது போல, தமிழ் சார்ந்த பணியில் ஈடுபட்டிருந்தவர்கள் எல்லாம் தேடி அழைத்து அவர்களுக்கு தகுந்த விதத்தில் சிறப்புகளை செய்வதில் முதல்வர் அவர்கள் எடுத்த முயற்சிகள் வெகுவாகப் பாராட்டத் தக்கவை.

தமிழறிஞர்களுக்கு மரியாதையும் சிறப்பும் வீடு தேடி வந்து வாழ்த்தும் அளவுக்கு அவர்களை மகிழ்ச்சியில் ஆழ்த்திய முதல்வர் என்றால் மிகையாகாது.

அயல்நாட்டு தமிழர்களின் நல்வாழ்வுக்காக அயலக தமிழர் தினத்தை அறிவித்து அயல் நாட்டில் இருக்கக்கூடிய தமிழர்கள் தான் தமிழ்நாட்டுக்கு வரவைத்து சிறப்பு திட்டங்களை செயல்படுத்துவதாக உறுதி மொழி சொல்லி ஒரு புதிய நம்பிக்கையை ஊட்டிய முதல்வர் என்று நாம் பெருமைப்பட்டுக் கொள்ளும் அளவுக்கு முதல்வர் அவர்களின் செயல்வேகம் இருக்கின்றது.

இந்த நல்ல நாளில் ஆஸ்திரேலியா வாழ் தமிழ் மக்களின் சார்பாக முதல்வர் அவர்களை வாழ்த்தி வணங்கி நிற்கின்றேன்

**முனைவர் சந்திரிகா சுப்ரமண்யன்**
**வழக்குரைஞர் உச்சநீதிமன்றம் மற்றும் உயர்நீதிமன்றம் ஆஸ்திரேலியா**
**தோற்றுனர் தமிழ் வளர்ச்சி மன்றம் -சிட்னி ஆஸ்திரேலியா**
24 – 02 - 2023










முனைவர் திருமதி சந்திரிகா சுப்பிரமணியன்

வழக்கறிஞர்,இதழியலாளர்,மொழிபெயர்ப்பாளர்
தமிழ் & ஆங்கில நூலாசிரியர்,தமிழ் வளர்ச்சி மன்றத் தோற்றுநர், திருக்குறள் பரப்புரையாளர்,
Honorary Editor, Thirukkural Express.

அயர்லாந்துத் தமிழ்மைந்தனின் அன்பு வாழ்த்து








வாழிய நீ எம்மான்

தொழில் பெருக்கி மாநிலம்
சிறக்கத் திட்டம் வகுப்பார்
எத்திசையும் தமிழ் நிரவி
மணக்கும் வழி செய்வார்
மக்கள் சேவையே
மகேசன் சேவை என்பார்

பிரித்தாளும் எண்ணம்
எனும் கொடிய நோய்க்கு
கட்டம் கட்டுவார்

சமூகநீதி அடித்தளமிட்டு
சமத்துவச் சமுதாயக்
கட்டடம் கட்டுவார்

அன்பைப் பொழிவோருக்கு
அன்பராய்த் தெரிவார்
நல்லவை செய்வோருக்கு
நண்பராய்த் தெரிவார்
அவர்தான் எங்கள் முதல்வர்!
வாழிய நீ எம்மான்...
--தமிழ்மைந்தன் ஜான் ரிச்சர்டு
அயர்லாந்து.



**அயர்லாந்துத் தமிழர் சார்பில் இராசுகுமார் சம்பந்தம் வாழ்த்துகிறார்**

இராசகுமார் சம்பந்தம்
அயர்லாந்து

ஐயா 26/02/2023

வணக்கம்...

வரும் மார்ச் மாதம் முதல் நாள் வெளிவர இருக்கும் குறள்நெறி மின்னிதழுடன் சிறப்பு இணைப்பாக மாண்புமிகு முதல்வர் தளபதியார் எழுபதாம் ஆண்டு மலர் வெளிவர உள்ளதாக அறிந்தேன்.

வெளிநாடு வாழ் தமிழர்களின் நலனில் அக்கறையோடு வெளிநாடு வாழ் தமிழர் நலத்துறையின் மூலமாகப் பல்வேறு வகையில் முன்னெடுப்புகளையும் உதவிகளையும் புரிந்து செயலாற்றி எங்களுக்கு உறுதுணையாக நின்று உதவும் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களுக்கு அயர்லாந்துத் தமிழர்கள் சார்பில் எங்களது வாழ்த்துக்களையும் பகிர்ந்து கொள்வதில் பெரு மகிழ்ச்சி அடைகிறேன்.

வரலாற்றில் மிக முக்கியமான காலகட்டத்தில் ஆட்சிப் பொறுப்பேற்று நல்லாட்சி வழங்கி வரும் மாண்புமிகு முதல்வர் அவர்கள் நீண்ட ஆயுள், உடல் நலம் பெற்று மேலும் தமிழ்நாட்டுக்கும், தமிழுக்கும், தமிழர் வளம் பெறவும் பணியாற்ற வேண்டும் என்று வாழ்த்தி மகிழ்கிறேன்.

அன்புடன்

இராசகுமார் சம்பந்தம்

3. Flanagan Court.
Edenderry.
CO. Offaly,
Ireland



சிங்கப்பூரின் மூத்த தமிழறிஞர் சுப.திண்ணப்பன் வாழ்த்து

கலைஞரின் புதல்வர்

கன்னித்தமிழ்நாட்டின்

முதல்வர் பிறந்த நாள்

தமிழர் சிறந்த நாள்!

வாழ்க அவர் பல்லாண்டு!

சுப.திண்ணப்பன், சிங்கப்பூர்.



## தமிழோடு வாழ்கிறோம்

ஆர்ப்பாட்டமில்லா
அரசியல்
ஆய்ந்து
தமிழுக்கும்;
தமிழருக்கும்
செய்யும்
தனித்திறன்
விளம்பர
விளக்கொளியை
விரும்பாத விண்மீன்
சிரிப்பிலும் சரி
செலவிலும்சரி
சிக்கனம்
ஆர்ப்பாட்டத்தை
விரும்பாத
அதிசய அரசியல்
எடுத்தடி வைக்கும்
ஒவ்வொரு அடியிலும்
நிதானம்
தமிழ்நாட்டில்
அடிமைத்தனமில்லை
வார்த்தைக்
காவடிகளில்லை
காலடி வழிபாடு
கடுகளவுமில்லை
தமிழோடு
வாழ்கிறோம்என்ற
தனியுணர்வு பெறுகிறோம்
இவைதான்
இன்றைய முதல்வர்
கலைஞரின் புதல்வர்
ஸ்டாலின்

-- பிச்சினிக்காடு இளங்கோ

சிங்கப்பூரின் மூத்த ஊடகவியலாளர்
'மக்கள் மனம்' இதழ் ஆசிரியர்
கவிஞர் பிச்சினிக்காடு இளங்கோ
வாழ்த்து





## மலேசியா நாட்டின் மூத்த பாவலர்
## பாவேந்தர் விருது பெற்ற முதல் அயலகத் தமிழர்
## முனைவர் முரசு நெடுமாறன் அவர்களின் வாழ்த்து



**முதல் முதல்வர்**

இனவிடி வெள்ளி பெரியார் உணர்வும்

அருந்தமிழ்க் கதிரவன் அண்ணா ஒளியும்

ஆட்சி வல்லார் கலைஞர் திறனும்

ஒன்று கலந்த ஓரரும் பேறாம்

ஸ்டாலின் என்னும் தன்னிக ரில்லா

தமிழ்நாட்டு முதல்வர்!

இந்தியத் துணைக்கண்டம்

எங்கு தேடினும்

இத்திற முதல்வர் இல்லை என்கிறார்!

வடவேங் கடம்தொட்டுத்

தென்குமரி யோடு

பார்வை சுருங்கிப் பார்க்கவில்லை இவர்

பாரில் எங்கும் பரந்து கிடக்கும்

தமிழின உறவுகள் தலையை நிமிர்த்திட

தனக்கொரு தலைமை

தாய்நிலத் து(உ)ண்டென

நம்பிக்கை ஊட்டும் நற்றாய் இவராம்!

குருதித் தொடர்பு கொண்ட உறவுகள்

தைத்திங் களிலே தலைநகரில் கூட

உலகத் தமிழர் நாளறி வித்தே

ஒன்று கூட்டிய ஒருமுதல் முதல்வர்!

அரசு வழங்கும் அரிய விருதுகள்

புதுப்புது ஆக்கம் பூக்க வைக்கும்

பாவேந்தர் திருவிக பயன்மிகு விருதுகள்

அயலகத் தமிழர்க்கு

அளித்தார் கலைஞர்!

அந்த வழியில் இந்த முதல்வர்,

எண்ணம் விரிந்த

வண்ணம் காண்கிறோம்!

அகவை எழுபதில்

அடிபதிக்கும் முதல்வர்

அருஞ்செயல் இன்னும் ஆயிரம்

புரியபல் லாண்டு புகழுடன் வாழ்கவே!

***-முனைவர் முரசு நெடுமாறன்,***

***மலேசியா***

## ஆத்திரேலியாவிலிருந்து மருந்தியல் வல்லுநரும் தமிழ் வளர்ச்சி மன்ற நிறுவனருமாகிய முனைவர் அன்பு செயா அவர்களின் வாழ்த்து



அன்பு ஜெயா
நிறுவனர், தமிழ் வளர்ச்சி மன்றம், சிட்னி.
மக்கள் தொடர்பு அதிகாரி,
பாலர் மலர் தமிழ்ப் பள்ளிகள், சிட்னி.

Anbu Jaya B.Pharm, M.Med.Sc.,
17 Ringarooma Circuit
West Hoxton NSW 2171 Australia

தமிழக முதல்வர், திராவிட முன்னேற்றக் கழகத்தின் தலைவர் தளபதியாரின் எழுபதாம் அகவைத் தருணத்தில் அவர் சிறப்பான உடல் நலத்துடன், மக்கள் தொண்டினைத் தொடர்ந்து செய்து பல காலம் வாழவேண்டும் என்று வாழ்த்து கூறுவதில் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

ஆட்சிக்கு வந்து இரண்டு ஆண்டுகள் கூட நிறைவுறாத போதும், அவர் கொடுத்த வாக்குறுதிகளில் பலவற்றை நிறைவேற்றி, மக்கள் மனத்தில் நல்லிடத்தைப் பெற்றிருக்கிறார். பெண்களுக்கு அரசுப் பேருந்துகளில் கட்டணமற்றப் பயணம், பள்ளிச் சிறார்களுக்கு காலைச் சிற்றுண்டி, பெண்களின் கல்வி வளர்ச்சிக்காக அரசுப் பள்ளியில் பயில்கின்ற மாணவிகளுக்கு உதவித் தொகை, திருக்கோயில்கள் சீரமைப்பு என்று பல திட்டங்களை நிறைவேற்றி, போற்றுவார் போற்றட்டும் புழுதி வாரி தூற்றுவார் தூற்றட்டும், என் கடன் பணி செய்து கிடப்பதே என்று தொடர்ந்து மக்கள் சேவை புரிந்து வரும் தளபதியாரைப் பாராட்டி வாழ்த்து கூறுவதில் பெருமை அடைகிறேன்.

என் போன்ற அயல் நாடுகளில் வாழும் தமிழர்கள் நலனுக்காக தமிழக அரசின் கீழ் தனித்துறை ஒன்றை உருவாக்கித் தமிழர் நலம் காக்கப் பாடுபடும் தளபதியார் பல்லாண்டு பல்லாண்டு நலமுடன் வாழவேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

வாழ்க! வாழ்க வளமுடன்!

## கம்போடியா நாட்டிலிருந்து ஆங்கோர் தமிழ்ச் சங்கத்தினரின் வாழ்த்து

அங்கோர் தமிழ் சங்கம்
ANGKOR THAMIZH SANGAM

முதல்வருக்கு வாழ்த்துச் செய்தி

அமிழ்தினும் இனிய தமிழ்
திசையெங்கும் ஒலிக்கும் தமிழ்
செந்தமிழ் என்றால் உயிர் சக்தி பிறக்கும்
தெறிக்கும் விதையும் மரமென முளைக்கும்
தமிழ் மரபென தளிர்க்கும்
ஆழி பெருங்கடலும்,விரிந்த வான் வெளியும்
குவிந்த மலைகளும்,பரந்த பெருங்காடும்
தமிழாய் நிலை நிற்குமே
அன்னை மொழியாய்
தமிழன்னையின் புதல்வனாய் வந்தவனே
தமிழ் போற்றிய தந்தையின் மைந்தனே
அன்பின் நிறையாய் நிற்பவனே
தரணிக்கு பெருமை சேர்ப்பவனே
கொள்கை நெறி காப்பவனே
கொடுத்து கரம் சிவந்தவனே
முற்போக்கு சிந்தனை விதைத்தோமே
உயிரினும் மேலாய் போற்றினோமே
எல்லோருக்கும் எல்லாம் கிடைக்க
சமதர்ம சிந்தனை பயின்றோமே
தந்தை பெரியாரும், அறிஞர் அண்ணாவும்
காட்டிய வழியிலே
தந்தையின் போதனையும் சேர
மேகத்துள் வெட்டிய மின்னலாய்
எத்திக்கும் ஒளி வீச வந்தவனே

அங்கோர் தமிழ் சங்கம்
ANGKOR THAMIZH SANGAM

கொடு நோயும் உனைக் கண்டு அஞ்சியதே
உன் செயல் வேகம் எதிரியையும்
உன்னை திரும்பிப் பார்க்க வைத்ததே
விடுதலை,விடுதலை பெண் விடுதலை
பாலின பேதமென்ன
பால் வேற்றுமை என்ன
அக விடுதலை பாராட்டி
சமத்துவம் போற்றி
நாயகன் அல்ல நம்மை
நளியபந்து எடுத்து நல்கும் தாயென ஆனாயே
கம்பனின் வரிகளுக்கும் உடையவன் ஆனாயே
பாதுகாப்பாய் மகளிர் செல்ல இலவச பேருந்து
தகப்பனாக நின்று
குடும்பச் சுமைத் தாங்கும் கண்மணிகளுக்கு
ரூபாய் ஆயிரம் அளித்தாயே
கல்வியில் சமத்துவமும்
ஏழை,எளியோரின் உயர்கல்வியும்
இன்றே நனவானதே
தன்னிகரில்லா நாடான தமிழ்நாடு
தனிப்பெரும் அறிஞரின் தன்னிகரில்லா தியாகத்தாலே
விளைந்ததே நல்லறிவு என்னும் சுடரிங்கே
நல்லோர்க்கும்,தமிழ் வல்லோர்க்கும்
அளித்தாய் தகைசால் தமிழர் விருது
அயல் நாட்டுத் தமிழருக்கு
நீ எடுத்தாய் பெருவிழா
அயலகத் தமிழர் திருவிழா

அங்கோர் தமிழ் சங்கம்
ANGKOR THAMIZH SANGAM

தாய் வீட்டிற்கு வந்தடைந்து
பெரு மகிழ்வையும் அள்ளித் தந்தாய்
விழா எடுத்து சான்றோரை சிறப்பிக்க செய்தாய்
அன்னைத் தமிழின் ஆராய்ச்சிக்கு அடி கோலினாய்
தமிழாய்,தமிழனாய் நின்றால்
அங்கு சென்று நின்றாய்
என்ன வேண்டும் என்றாய்
ஆபத்தென்றால் மீட்டெடுக்கும் தோழனாகவும்
தமிழாராய்ச்சி என்றால் விரல் கொடுக்கும்
நேர திட்டம் வகுப்பவனாகவும்
பெரிதினும் பெரிதானாய்
உளிகள் இசைந்து தேர்ந்த சிற்பம் போல்
உன் உயிரான கழகத் தொண்டர்களோடு
நலமாய் நீயும் வலம் வர வேண்டும்
தனிப்பெரும் சுடராய் ஒளிர வேண்டும்
நீயோ கலைஞரின் முத்தான பிள்ளை
உனைத்தாங்க உன்னுயிராய் உன் இணையின் துணையோடு
சமத்துவமே போற்றி சூழ்ச்சிகளை உடைத்தெறிந்து
வெற்றியெனும் குடைத்தாங்கி
குடிகாப்பாய் தலைமகனே
தமிழ் போல நீ வாழ்த்து
குறள் போற்றும் பெருமகனாய்
மன்னன் கோல் நோக்க காத்திடுவாய்
உன் குடியை...

Mob & wapp: +855 969256458
Wapp: +91 9489562063
Mob & wapp: +855 83412179

கம்போடியா நாட்டில் திருவள்ளுவருக்குச் சிலை நிறுவியும் திருக்குறளை அந் நாட்டுக் கமோர் மொழியில் மொழிபெயர்த்தும் இயல்,இசை,நாடக விழாக்கள் நடத்தியும் அயராது தமிழ்த்தொண்டு ஆற்றிவரும் ஆங்கோர் தமிழ்ச்சங்கத்தினரின் அன்பு வாழ்த்து




கொரிய தமிழ்ச் சங்கம்
고려 타밀 창감 -Korea Tamil Sangam
*Registered as NGO under Chungcheongbuk-do Provincial Government of Korea*
*(Organization Registration Number (121-82-16687)*
*Membership at Ulaga Tamil Sangam (UTS/WD 012)*
*(UTS is a Tamilnadu Government Institution, Madurai, India)*

Ref: **KTS-GRE-03-2023** **தமிழ் வாழ்க!** Date: **2023-02-**

## மாண்புமிகு தமிழ்நாடு முதல்வர் முதல்வர் மு.க. ஸ்டாலின் அவர்களுக்கு கொரியவாழ் தமிழ் மக்களின் அகவை-70 நல்வாழ்த்துகள்

மாண்புமிகு தமிழ்நாடு முதல்வர் மு.க. ஸ்டாலின் அவர்கள் முதன்முதலாக அயலகத்த நலனுக்கென தனி அமைச்சகத்தை ஏற்படுத்தி மிக நேர்த்தியான ஒருங்கிணைப்பு ம வேலைத்திட்டங்கள் செயல்படுத்தப்படுவதை உறுதிசெய்து வருகிறார்.

போர்ச்சூழலில் உக்ரைனிலிருந்து நம் மாணவர்களை பாதுகாப்பாக தாயகத்திற்கு அ வந்தது, அரசின் தமிழ் இணையக்கல்விக்கழகம் மற்றும் மதுரை தமிழ்ச் சங்கம் உள் கட்டமைப்புகளை அயலகத் தமிழ்ச் சங்கங்கள் மற்றும் அமைப்புகளுடன் இணைப்பை ஏற்ப ஊக்குவித்து தமிழ் கற்கை மற்றும் பரப்புகை உள்ளிட்ட பணிகளை செவ்வனே முன்னெ வருவது, சிறந்த தமிழ் புத்தகங்களை அயல்நாட்டு மொழிகளில் மொழியாக்கம் செய்வ உதவுதல் மற்றும் கடந்த தமிழர் திருநாள் பொங்கல் நிகழ்வையொட்டி சென்னையில் சிற நடந்தேறிய முதல் அயலகத் தமிழர் மாநாடு ஆகியவை இதுகாறும் முதல்வர் கொண்டிரு அக்கறையின் வெளிப்பாடு;வரும் காலங்களிலும் முதல்வர் அவர்கள் இத்தகைய பணி தொடர்வார் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

முயற்சி திருவினையாக்கும்" என்ற திருக்குறள் வழியில் கொரிய மக்களின் உழைப்பின் பல இன்று வளர்ந்த நாடுகளில் ஒன்றாகியிருக்கும் தென்கொரியாவில், தமிழ்நாட்டைச்சே அறிவியல் மற்றும் தொழில்நுட்பம் என உயர்கல்வி பயின்ற இளையோர்களால் நீண்ட முயற்சிகளுக்குப் பிறகு, கொரிய மக்களின் ஒத்துழைப்புடன் உருவாக்கப்பட்டு, மக்கள் தொ கல்விவேலைவாய்ப்புகளை தமிழ்நாட்டு மாணவர்களுக்கு அறியத்தருதல், தமிழ்-கொரிய ெ பண்பாடு, சுற்றுலா மற்றும் வணிக பரிமாற்றம் உள்ளிட்ட பணிகள் முன்னெடுத்துவரும் ெ தமிழ்ச் சங்கம், தமிழறிஞர் அய்யா மறைமலை இலக்குவனார் அவர்கள் முன்னின்று நடத்தி "குறள்நெறி" இணைய இதழ் ஊடகத்தின் வாயிலாக மாண்புமிகு தமிழ்நாடு முத அவர்களுக்கு கொரியவாழ் தமிழ் மக்களின் அகவை-70 நல்வாழ்த்துகளை தெரிவிப் பெருமகிழ்ச்சியடைகிறது.

மிக்க நன்றி! தமிழ் வாழ்க!

**தங்கள் உண்மையுள்ள**

முனைவர் செ. அரவிந்தராஜா
தலைவர்

திருமிகு. தெ. விஜயலட்சுமி
துணைத்தலைவர்

திருமிகு. பா. சரண்யா
தாயக தொடர்பு செயலாளர்

திரு. இரா. சுவாமிராஜன்
தகவல் தொடர்பு செயலாளர்

திரு. சி. தாமோதரன்
பன்னாட்டு தொடர்பாளர்

பொறியாளர் பீ. சகாய டர்சியூஸ்
செயலாளர் - ஆளுமைப்பணி

முனைவர் ந. முத்துசாமி
பொருளாளர்

முனைவர் பீ. ஜெரோம்
இணைப்பொருளாளர்

திருமிகு. சாந்தி பிரின்ஸ்
மக்கள் தொடர்பாளர்

பொறியாளர் வே. ஹேமநாதன்
இணைப்பு செயலாளர்

முனைவர். பேரா. கோ. சரவண
செயலாளர் - செயல்பாடுகள்

இணைச் செயலாளர்கள்

முனைவர் இ. செலஸ்டின் ராஜா
முனைவர் இரா. இராஜா மணிகண்டன்
முனைவர் ஆ. சிவக்குமார்
திரு. ஹா. ஆஷிக் இலாஹி
திரு. ஜீ. சம்பத் குமார்
திரு. ஆ. பாரதி
திரு. தி. மணிகண்டன்
திரு. சந்தோஷ் குமார்

충청북도 청주시 흥덕구 오송읍 오송생명3로 31, 우신위브센터움
Chungcheongbuk-do, Cheongju si, osong-eup, Osongsaengmyeong 3 ro 31, S



 koreatamilsangamkts@gmail.com

 www.koreatamilsangam.o

முதல்வருக்குக் கொரியத் தமிழ்ச் சங்கத்தின் வாழ்த்துச் செய்தி

“மாண்புமிகு தமிழ்நாடு முதல்வர் மு.க. ஸ்டாலின் அவர்கள் முதன்முதலாக அயலகத்தமிழர் நலனுக்கென தனி அமைச்சகத்தை ஏற்படுத்தி மிக நேர்த்தியான ஒருங்கிணைப்பு மற்றும் வேலைத்திட்டங்கள் செயல்படுத்தப்படுவதை உறுதிசெய்து வருகிறார்.போர்ச்சூழலில் உக்ரைனிலிருந்து நம் மாணவர்களை பாதுகாப்பாக தாயகத்திற்கு அழைத்து வந்தது, அரசின் தமிழ் இணையக்கல்விக்கழகம் மற்றும் மதுரை தமிழ்ச் சங்கம் உள்ளிட்ட கட்டமைப்புகளை அயலகத் தமிழ்ச் சங்கங்கள் மற்றும் அமைப்புகளுடன் இணைப்பை ஏற்படுத்த ஊக்குவித்து தமிழ் கற்கை மற்றும் பரப்புகை உள்ளிட்ட பணிகளைச் செவ்வனே முன்னெடுத்து வருவது, சிறந்த தமிழ்ப் புத்தகங்களை அயல்நாட்டு மொழிகளில்மொழியாக்கம் செய்வதற்கு உதவுதல் மற்றும் கடந்த தமிழர் திருநாள் பொங்கல் நிகழ்வையொட்டி சென்னையில் சிறப்பாக நடந்தேறிய முதல் அயலகத் தமிழர் மாநாடுஆகியவை இதுகாறும் முதல்வர் கொண்டிருக்கும் அக்கறையின் வெளிப்பாடுஆகும்.வரும் காலங்களிலும் முதல்வர் அவர்கள் இத்தகைய பணிகளைத் தொடர்வார் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

முயற்சி திருவினையாக்கும்” என்ற திருக்குறள் வழியில் கொரிய மக்களின் உழைப்பின் பலனாய், இன்று, வளர்ந்த நாடுகளில் ஒன்றாகியிருக்கும் தென்கொரியாவில், தமிழ்நாட்டைச்சேர்ந்த அறிவியல் மற்றும் தொழில்நுட்பம் என உயர்கல்வி பயின்ற இளையோர்களால் நீண்டகால முயற்சிகளுக்குப் பிறகு, கொரிய மக்களின் ஒத்துழைப்புடன் உருவாக்கப்பட்டு, மக்கள்  தொண்டு, கல்வி/வேலைவாய்ப்புகளைத் தமிழ்நாட்டு மாணவர்களுக்கு அறியத்தருதல், தமிழ்-கொரிய மொழி, பண்பாடு, சுற்றுலா மற்றும் வணிகப் பரிமாற்றம் உள்ளிட்ட பணிகள் முன்னெடுத்துவரும் கொரிய தமிழ்ச் சங்கம், தமிழறிஞர் அய்யா மறைமலை இலக்குவனார் அவர்கள் முன்னின்று நடத்திவரும் "குறள்நெறி" இணைய இதழ் ஊடகத்தின் வாயிலாக மாண்புமிகு தமிழ்நாடு முதல்வர் அவர்களுக்குக் கொரியவாழ் தமிழ் மக்களின் அகவை-70 நல்வாழ்த்துகளைத் தெரிவிப்பதில் பெருமகிழ்ச்சியடைகிறது.

மிக்க நன்றி! தமிழ் வாழ்க!”

என்று கொரிய தமிழ்ச் சங்கம் தனது வாழ்த்துச் செய்தியில் குறிப்பிட்டுள்ளது.சங்கத்தின் பல்வேறு அலுவல் பொறுப்பாளர்களும் கையொப்பமிட்டுள்ளனர்.

**சிங்கப்பூர் எழுத்தாளர் திருமதி சிரீலட்சுமி வாழ்த்துரை**

## வாழ்த்துச்செய்தி

### முனைவர் எம் எஸ் ஸ்ரீலக்ஷ்மி, சிங்கப்பூர்.

என் தாய் தந்த வித்து தமிழ் உணர்வு. அவ்வித்தினை மரமாக்கி வளர்த்தது கலைஞரின் கற்கண்டுத்தமிழ் நூல்கள் . அழகுதமிழ்ப் பேச்சினால் தமிழக மக்களின் உள்ளங்களைக் கொள்ளைகொண்ட கலைஞரின் நூல்களை என் அண்ணன் தீபாவளிப் பரிசாக, பொங்கல் பரிசாக எனக்கு வழங்கிய 'அந்த நாள்களை' எண்ணிப்பார்க்கிறேன். என் கல்லூரிப்பருவத்தே மேடைத்தமிழிலும், எழிலார்ந்த எழுத்துத்தமிழிலும் வெற்றிவாகை சூடி நான் பரிசுகளை அள்ளிக்கொண்டுவரக் கலைஞரின் நூல்கள் காரணமாய் அமைந்தன. தமிழ்கற்று, தமிழாய்ந்து பல்கலைக்கழகப்பணியில் அயலகத்தில் அமர்ந்தபோதும் கலைஞரின் நூல்களைக் கற்பது எனக்குக் கழிபேருவகை தந்தது. தமிழுக்குச் செம்மொழித் தகுதி பெற்றுத்தந்து என் போன்ற தமிழ் அறிஞர்களின் உள்ளங்களில் என்றென்றும் நிரந்தரமாய் வாழும் கலைஞரின் திருமகனாய்த் - தமிழகத்தின் மாண்புமிகு முதல்வராய் நல்லாட்சி புரியும் தளபதி ஸ்டாலின் அவர்கள் எழுபதாம் அகவை நாளில் "நன்னீர்ப் ப..றுளி மணலினும்" பல்லாண்டு நீடூழி வாழிய! என்றும் சமூகநீதி காத்துத் தமிழ்மக்களுக்கு நற்றொண்டு பல செய்து, தந்தைபோல் மாளாப் புகழுடன் வாழிய என்றும் சிங்கைவாழ் தமிழ் உள்ளங்களின் சார்பில் என் இதயங்கனிந்த வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

நற்றமிழால் வாழ்த்தும் நன்னெஞ்சம்,

முனைவர் எம் எஸ் ஸ்ரீலக்ஷ்மி,

மேனாள் விரிவுரையாளர்,

சிங்கப்பூர்.



சென்னைப் பல்கலைக் கழகத்தின் முன்னைத் துணைவேந்தர்,மூத்த தமிழறிஞர்,குறள்நெறிச் சிறப்பாசிரியர் முனைவர் பொற்கோ அவர்களின் வாழ்த்துரை

இரண்டாம் ஆண்டினை நிறைவு செய்து குறள்நெறி மூன்றாம் ஆண்டில் அடியெடுத்து வைக்கிறது. அது நமக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது. இந்த நேரத்தில் தமிழை இந்திய ஆட்சி மொழி நிலைக்கு உயர்த்த வேண்டும் என்றும் கல்வி உலகில் தமிழுக்கு எல்லாப் படிப்புகளிலும் இடம் கிடைக்க வேண்டும் என்றும் முனைப்போடு முயன்று வரும் தமிழக முதல்வர் அவர்களுக்காக எழுபதாம் ஆண்டு சிறப்பு மலர் குறள்நெறி வாயிலாக வெளிவருவது மிகுந்த வரவேற்புக்குரியது .

தமிழகத்தில் உள்ள அலுவலகங்களிலும் கடைத்தெருக்களிலும் உள்ள பெயர்ப்பலகைகள் எல்லாவற்றிலும் தமிழுக்கு முதலிடம் தர வேண்டும் என்று அவர் மேயராக இருந்த காலத்திலேயே ஆணையிட்டுத் தமிழைத் துலங்கச்செய்தார் . இந்திய நடுவண் அரசு , மைய அரசு என்பவற்றையெல்லாம் மாற்றி ஒன்றிய அரசு என்ற உணர்வைத் துலங்கச்செய்தார். வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் தவறாது தமிழுக்குச் சிறப்பு சேர்க்கிறார் . மகளிர் மேம்பாட்டுக்கு வழி செய்து, பெண்கல்வியை ஊக்கப் படுத்துகிறார் . தமிழுக்கும் தமிழருக்கும் தமிழ் மண்ணுக்கும் உள்ள சுயமரியாதையை உயர்த்திப் பிடிக்கிறார்.

இந்தியாவில் உள்ள மற்ற மாநிலங்களிலும் உலக நாடுகளில் உள்ள பல்கலைக்கழகங்களிலும் தமிழுக்கு உள்ள நிலையை உயர்த்தியுள்ளார். இந்தி பேசாத மற்ற மாநிலங்களில் உள்ள இந்தியர்களின் தாய் மொழி பற்றிய உணர்வைத் தூண்டியிருக்கிறார்.

உலகளாவிய நிலையில் தமிழர்கள் பெருமிதத்தோடு நிமிர்ந்து நிற்க வழிவகை செய்கிறார். இந்த முதல்வர் தமிழுக்கும் தமிழருக்கும் தமிழ் மண்ணுக்கும் மேலும் மேலும் சிறப்பு சேர்க்கத் தக்க திறமும் மனமும் படைத்தவர்.

இன்னும் இவர் பல்லாண்டு பல்லாண்டு வாழக் குறள்நெறி வாயிலாக நாம் எல்லோரும் வாழ்த்துகிறோம்.

பொற்கோ

பொன் கோதண்டராமன்

## பாவேந்தரின் தலைமாணாக்கர் கலைமாமணி கவிஞர் பொன்னடியான் வாழ்த்துப் பா



### வாழும்போதே வரலாறாய் வாழ்பவர்!

**கலைமாமணி கவிஞர் பொன்னடியான்**
**புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் மாணவர்**
**'முல்லைச்சரம்' ஆசிரியர்**



நாளும் பொழுதும் நற்புக ழோடு
நடைபயின் றிருப்பவர் - நம்பிக்கை அளிப்பவர்
நாடும் உலகும் வியந்து பார்க்க
வெற்றி உலாவரும் விடியல் தலைவர்!
யாரே என்றால்? அவரே எங்கள்
அரும்புகழ் நாயகர்! ஆற்றல்கள் மிகுந்த தளபதி!
தன்னிகரற்ற தனிப்பெருந் தலைவர்
மு.க.ஸ்டாலின்
என்றே முழங்குவார் மக்கள்!
கலையுடன், இலக்கியம், அரசியல் என்றே
மூன்று துறைகளில் முதல்வராய் விளங்கி
ஐந்து முறைகள் நாடு போற்றிய
ஆட்சித் தலைவராய், முதல்வராய் விளங்கி
உலகின் வியப்புக் குறியாய்த் துலங்கிய
முத்தமிழ் அறிஞர், டாக்டர் கலைஞர்
மூச்சும் பேச்சும், செயல்களின் வீச்சும்
ஒருசேர இணைந்து, உலாவரு வதுபோல்
வலம்வந்து நாட்டுக்கு வழிகாட்டும் தலைவர்!
மு.க.ஸ்டாலின் ஒருவரே என்று - என்றும்
முழங்கிடும் மக்கள் முழக்கம் நாடெங்கும்
ஓயா உழைப்பின் சின்னம் தளபதி
உறுதி குலையா நெஞ்சின் திருமகன்
இந்திய அரசியல் வானில் இன்றும்
விந்தை விதைத்து வியக்க வைத்தவர்!
வீரியம் விதைத்த விடியல் நாயகர்
தன்னலம் கருதாது தன்னிக ரில்லாத்
தானைத் தலைவராய் உணர்வில் கலந்த
காவிய நாயகர், முத்தமிழ் அறிஞர்
ஆட்சிக் கட்டிலில் அமர்ந்து மக்களின்
அன்பு மனங்களில் அமர்ந்தவர் கலைஞர்
அவர்வழித் தோன்றல் தமிழ்மக் கள்தம்
நம்பிக்கை ஒளியாய் நாளும் பொழுதும்
ஒளிமுகம் காட்டும் ஒப்பிலாத் தலைவர்
தளபதி மு.க.ஸ்டாலின் வரலாறு என்றும்
உலகம் உள்ள வரையில் வாழும் !

**மாண்புமிகு தமிழ்நாடு அரசின் முதல்வர்**
**மு.க.ஸ்டாலின் அவர்கள் சட்டமன்ற எதிர்க்கட்சித்**
**தலைவராக இருந்த அந் நாளில் எழுதிய வாழ்த்துக் கவிதை**

மலேசியத் தமிழ்ப் பேராசிரியரின் மனங்கனிந்த வாழ்த்து

## அயலகத் தமிழர்களின் நலம் பேணும் தளபதியார் வாழிய பல்லாண்டு!



மன்னர் மன்னன் மருதை, மலேசியா

வரும் 01-03- 2023 ஆம் நாள், 70ஆம் ஆண்டு அகவை நன்னாள் காணும்முதல்வர் தளபதி மு.க.ஸ்டாலின் அவர்களுக்கு மலேசியா வாழ் தமிழ் உறவுகள் சார்பாக என்னுடைய இனிய அகவை நன்னாள் வாழ்த்துகளைப் புலப்படுத்துவதில் மட்டற்ற இன்பம் அடைகின்றேன்.

தலைவர் கலைஞரது முழக்கம் என்பது, 'சொன்னதைச் செய்வோம்; செய்ததைச் சொல்வோம்'என்பதாகும். ஆனால், தளபதியோ ஒருபடி மேலே சென்று 'சொல்லாததையும் செய்வோம்; சொல்லாமலும் செய்வோம்' என முழக்கமிடுவதுடன் ஆக்கமாகச் செயலாற்றியும் வருகின்றார்.

இல்லம் தேடிக் கல்வி, மக்களைத் தேடி மருத்துவம், எழுத்தாளர்களுக்குக் கனவு இல்லம், அன்னைத் தமிழில் அர்ச்சனைபோன்ற பல அரிய அற்புதமானதிட்டங்களைஒரே நேரத்தில் கல்வியிலும், நல்வாழ்விலும், தொழில்துறையிலும், குமுகாய மேம்பாட்டிலும் மேற்கொண்டு வருவது பிரமிக்கச் செய்கின்றது. எல்லாவற்றுக்கும் முத்தாய்ப்பாக அயலகத்தில் வாழும் தமிழ் உறவுகளையும்அமைச்சகம் அமைத்து அரவணைத்துச் செல்லும் பாங்குசிறப்புக்குரியது.. தமிழ்நாட்டிற்கு வெளியே வாழும் தமிழர்கள் நன்றிக் கடன் பட்டிருக்கின்றனர்.

மன்னர் மன்னன் மருதை,
மேனாள் முதுநிலை விரிவுரைஞர்,
மலாயாப் பல்கலைக்கழகம்,மலேசியா
நல்லுரையாளர், மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம்.

**மறைமலையடிகள் குடும்பத்தின் மனங்கனிந்த வாழ்த்து**

## மறைமலையடிகள்கல்விஅறக்கட்டளை

**Maraimalaiadigal kalviarakkatalai(Educational Trust)**

**Reg no-1612.**
Reged on-29-12-2000



பதிவுஎண்-1612

000.

மறைமலையடிகள்இல்லம்
28, தாமரைத்தெரு
பூம்பொழில்நகர்(ஆவடி)
சென்னை-600 062m.Ngrp 8939416182



அறங்காவலர்.மறை.திதாயுமானவன்.க.மு.ஆ.நி. மின்அஞ்சல்.maraitt@gmail.com
Managing Trustee. Marai.T.Thayumanavan.M.A ,M.Phil. அ.பேசி +919840988361 பேசி. 04426371643

இயக்குந்நர்கள். கு.ஆளுடையபிள்ளை,முனைவர்.சராதாநம்பியாரூரன்,முனைவர்.இ.மறைமலை,வரலாற்றாய்வாளர்.கோ.கண்ணன்,முனைவர்.பா.இறையரசன்,முனைவர்.மா.பூங்குன்றன் ,பாவலர்.,செ.அருட்செல்வன், சுதாரஞ்சித், மங்கையர்க்கரசிசிவசைலம். மோரிசு வில்லி,வடக்கு கரோலினா, அமெரிக்கா,

---

நாள்: 26.2..2023

ஆவடி. சென்னை-62

**முத்தமிழறிஞர்,முனைவர்,கலைஞர் அவர்களின் தவப் புதல்வர்,மாண்புமிகு முதல்வர், மு.க.ஸ்டாலின் அவர்களுக்குப் பிறந்தநாள் வாழ்த்து**

தமிழினத்தலைவர் முத்தமிழறிஞர் கலைஞரின் வழித்தோன்றல் வரலாற்று புரட்சியாளிரின் பெயரைக்கொண்ட தமிழினத்தின் வரலாற்று நாயகரும், தமிழக முதல்வர் மு,க.ஸ்டாலின் அவர்கள், தமிழ்மொழி, இனநல மேம் பாட்டிற்கு இமைப்பொழுதும் அயராது தொண்டாற்றிவரும், நம் தளபதியார் நலமுடன்,வளத்துடன் வாழ்கப்பல்லாண்டு என மறைமலையடிகள் கல்வி அறக்கட்டளையின் சார்பாக தமிழன்புடன் வாழ்த்துவதில் பெருமை கொள்கின்றோம்.

**மறை.தி.தாயுமானவன்**

## மராத்திய மாநிலத் தமிழ் எழுத்தாளர் மன்றத்தலைவர் வாழ்த்துக் கவிதை

திராவிட முழக்கமெனத் திகழ்ந்திடும்
தென்னகமே!



தந்தை பெரியாரும்
தகைமைசார் அண்ணாவும்
தனையீன்ற தந்தையவர்
தரணிபுகழ் கலைஞருமே
தன்னிடம் விட்டதனை
தரணிக்கு அளித்திட்டு
தன்னுயிர் மண்தனிலே
தோன்றிடும் கதிரவனாய்
மூழ்காது ஒளியுடைத்து
மாண்புடன் வெளிச்சமிட
அயராது உழைக்கின்ற
அன்புசார் தலைவருமை
அயலார் அண்டையவர்
அன்புக்கு அரணெனவே
அனைவரும் போற்றுகின்ற
அன்புசார் தளபதியே
திராவிட முழக்கமெனத்
திகழ்ந்திடும் தென்னகமே!
பன்மொழி ஆங்காங்கே
பற்பல வந்திடினும்
பைந்தமிழ்ப் பண்பாட்டு
பழமையின் விழுமியமாய்
எம்மொழி தவிர்த்திட்டு
எவரெமை முந்திடுவார்
என்றநல் எழுச்சிதனை
எண்ணத்து விளக்காக்கி
தன்னிக ரற்றோராம்
தந்தையின் வழிநின்று
திராவிட 'மாடலென்ற'
தீரத்தின் உயிர்மூச்சாய்
ஆட்சியை நடத்திட்டு
அவலங்கள் துடைத்திட்டு
அன்பார்ந்த வழியொன்றே
அவனியை வெல்லுமென
பருவத்து மனதோடு
பார்போற்ற வாழ்கின்ற
வண்டமிழ் வேந்துமக்கு
வந்ததோ புத்தாண்டு
எழுபத்து ஆண்டாக
ஏற்றமிகு நன்முத்தாய்
எந்தமிழ் மொழிகாக்க
எவருக்குந் தாழாமல்
தந்தையாம் கலைஞரவர்
நல்வழி சென்றிட்டு
தென்னகம் தழைத்தோங்க
தமையளிக்கும் தளபதியுமை
மாற்றாரும் வாழ்த்திடுவர்
வாழ்வாங்கு வாழ்கவென்றே!

---பாவரசு வதிலை பிரதாபன்
தலைவர் - மராத்திய மாநிலத் தமிழ் எழுத்தாளர் மன்றம்

தமிழ் இலெமுரியா அறக்கட்டளைத் தலைவர் மூத்த எழுத்தாளர் குமணராசன் வாழ்த்து

சு.குமணராசன்
S.Kumana Rajan

நிறுவனர்,இலெமுரியா அறக்கட்டளை,மும்பை.
தலைவர்,தமிழ் அறக்கட்டளை,பெங்களூரு.
முதன்மை ஆசிரியர்,தமிழ் இலெமுரியா(திங்களிதழ்)



**தமிழினத்தின் ஒளிஞாயிறு மு.க.ஸ்டாலின் வாழ்க!**

பண்டித அயோத்திதாசர் தொடங்கி நடேசனார்,தந்தை பெரியார்,பேரறிஞர் அண்ணா,முத்தமிழறிஞர் கலைஞர் ஆகியோர் போற்றிப் பாதுகாத்து வந்த மூத்த திராவிட இன அரசியல்,கருத்தியல்,கோட்பாடு மற்றும் பகுத்தறிவுச் சிந்தனைகளை உள்வாங்கி இன்று ஒளிவீசும் ஞாயிறு போல் நமக்குக் கிட்டியிருப்பவர்தான் தமிழ்மக்களால் அன்பொழுக 'தளபதி'என்றழைக்கப்படும் நம் தமிழ்நாட்டின் தலைமை அமைச்சர் மு.க.ஸ்டாலின் அவர்களாவார்.
1970களில் மாணவப் பருவத்தே தம் பொது வாழ்வைத் தொடங்கி தம் வசந்தகால வாழ்க்கைப் பயணத்திலும் எண்ணற்ற இன்னல்கள் தாங்கிதமிழுக்காகவும்,த்யமிழர் நலனுக்காகவும் தன்னை ஈகம் செய்த ஒரு தனிப்பெரும் அரசியல் தலைவர்.'எடுத்தேன் கவிழ்த்தேன்'என்றில்லாது அடக்கமும் அறிவும் கொண்டு பொறுமை காத்து பயின்றும் முயன்றும் தன்னை உயர்த்தி தமிழ்நாட்டையும் உயர்த்தியிருப்பவர் மு.க.ஸ்டாலின்.

எதிர்கால இந்தியாவின் ஓர் அரசியல் சிற்பியாக வளர்ந்துநிற்கின்ற நம் தலைமை அமைச்சர் மு.க.ஸ்டாலின் அவர்கள் மேலும் பல்லாண்டுகள் நலத்தோடு வாழ்ந்து புரையோடிக் கிடக்கும் இந்திய சனநாயகத்தையும்,தமிழினத்தையும் காக்கும் ஒரு போர்ப்படைத் தளபதியாக என்றும் பொலிவுடன் வாழ வாழ்த்தி மகிழ்கின்றேன்.
தமிழும் நாமும் வேறல்ல!தமிழே நம் வேர்!

அன்புடன்,
சு.குமணராசன்
26/2/2023

## வெல்க தளபதி. !

கவிக்கோ துரை வசந்தராசன்
அமைப்பாளர்,பண்ணைத்தமிழ்ச்சங்கம்
34/11,மூன்றாம் தெரு,வங்கிக் குடியிருப்பு,
மாதவரம் பால்பண்ணைசென்னை-600051



தீப்பந்தப் பெரியாரின்
திராவிடத்தின் வேர்க்கனிநீ !
மூப்படையா அண்ணாவின்
முறுவல்நகை வார்ப்படம்நீ!
விரல் நுனியில் சூரியனை
விரித்துவைத்த கலைஞரவர்
குரல் ஒலிக்கும் காவியம் நீ!
குனியாத தலைமலைநீ!
நுரைப்பூவாய்க் கடலலையில்
நொந்தலைந்த படகுகட்குக்
கரைசேரக் கிடைத்திருக்கும்
கலங்கரை விளக்கமும் நீ!
'மிசா' வையே திருப்பி வைத்துச்
'சாமி'யாடும் சாணக்கியம் நீ!
விசாவின்றி வந்தாலும்
விருந்தோம்பும் நாயகன்நீ!
இந்தியாவைத் தின்னவரும்
'இந்தி'யென்னும் சுனாமியை
முந்திவந்து தடுக்கின்ற
முத்தமிழர்த் தளபதிநீ!
விந்தியத்தின் தென்னிமயம்!
வீறுபடைப் போர்மறவன்!

செந்தமிழன் இன்றைக்குச்
செழிக்கவரும் பெரும்புதையல்!

நொந்துநிற்கும் தமிழகத்தின்
நோய்தீர்க்கும் மாமருந்தாய்
வந்துவெல்க தளபதியே!
வாழவேண்டும் தமிழரினம்!

பொருப்புக்கே அஞ்சாத
நெருப்புக்குப் பிறந்தவன் நீ!
நெருப்பினிலே பழுத்துவந்த
நிமிர்கடரின் கொள்கையன்நீ!

கொடுங்கால இருள்போக்கி!
கோலோச்சும் திராவிடத்தின்
நெடுங்கால வரலாற்றின்
நிகழ்காலம் நீதானே!

புழுக்கைகளால் காற்றுடலம்
புழுங்கித் தவிக்கிறது!
கொழுப்பெடுத்த சிலந்திவலை
கோட்டைக்கு விரிக்கிறது!

இழுக்குகளின் வாலறுத்து
இந்நாட்டை நேர்படுத்த
அழுக்கெரிக்க வேண்டும்!எம்
அடுப்பெரிய துணைவேண்டும் !
வரும்போது அண்ணாவாய்
வந்தபின்னர் கலைஞராய்நீ
நிரந்தரமாய்ப் பெரியாராய்
நீடுவெல்க தளபதியாய்..!



## மன்பதை போற்ற வாழ்க!

பாசுரப் பாவலர் வேணு குணசேகரன்

மேனாள் வங்கி அலுவலர்,பாவலர்,புதினப் படைப்பாளர்

சென்னைப் பெரம்பூர் எழில் கலை மன்ற நிறுவனர்

அரசாண்ட சோழநிலம் பிறந்தான்; மெள்ள
அங்குலம்அங் குலமாக வளர்ந்தான்; வெற்றி
முரசாண்டே முன்னிலையில் உயர்ந்தான்; தானே
நெம்புகோலாய் முயற்சிசெய்து தலைவ னானான்!
மரியாதை, பண்பாடு பிறர்க்க ளிப்பான்;
மானமென வந்துவிட்டால் வேர றுப்பான்!
பெரியார்,அண் ணா,கலைஞர் பாச றையில்,
பேராசான் வழிநடக்கும் தலைமைத் தொண்டன்!

எழுபதாண்டின் அகவையினைத் தொட்டு விட்ட
என்றுமுள தென்றமிழ்போல் இளைஞன்; இன்னும்
விழுமியங்கள் நாட்டிற்காய் ஆக்கித் தந்து
வாழ்நாளை அர்ப்பணிக்கும் பொதுந லத்தான்!
அழைத்தவுடன் ஓடிவரு வான்மு தல்வன்,
அன்பாலே மேன்மைபெறும் ஸ்டாலின்! வானின்
மழைத்துளிபோல் குளிர்நலங்கள் தீட்டி நின்று
மன்பதையே தினம்போற்ற முதல்வர் வாழ்க!

------------------



சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகத் தலைவர் வாழ்த்து

முதல்வருக்குப் பிறந்த நாள் வாழ்த்து

தமிழ் நாட்டு முதலமைச்சரும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் தலைவருமான திரு. மு.க. ஸ்டாலின் அவர்களுக்குப் பிறந்த நாள் வாழ்த்துக் கூறுவதில் பெருமையும் மகிழ்ச்சியும் அடைகிறேன். கலைஞர் அவர்களால் தமது அரசியல் வாரிசு என அறிவிக்கப்பட்ட திரு. ஸ்டாலின் தமிழ் நாட்டு முதலமைச்சராகி இருப்பதன் மூலம் அவருக்குப் பெருமை சேர்த்துள்ளார்.

தந்தை மகற்காற்று நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்

என்னும் குறளுக்கிணங்க தந்தையான கலைஞர் மகன் ஸ்டாலினை அவையத்தில் முந்தியிருக்கச் செய்தார்.

அதே வேளையில்

மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன் தந்தை

என் நோற்றான் கொல் எனும் சொல்

என்னும் குறளுக்கிணங்க திரு. ஸ்டாலின் அவர்களும் தமது தந்தைக்குப் பெருமை சேர்த்துள்ளார்.

இதனை இதனான் இவன் முடிக்கும் என்று ஆய்ந்துஅதனை அவன்கண் விடல்

என்னும் குறளுக்கேற்ப பொருத்தமான, நேர்மையான அதிகாரிகளையும் பம்பரமெனச் சுற்றிச் சுழன்று செயல்படும் அமைச்சர்களையும் தேர்வு செய்ததன் மூலம் தமது ஆட்சி எப்படி இருக்கும் என்பதைக் கோடிட்டுக் காட்டிவிட்டார்.

முதல் முறையாக அயலகத் தமிழர்களின் நலன் காக்க ஓர் அமைச்சரையும் நியமித்ததுடன் உலகத் தமிழர் நாள், பன்னாட்டுப் புத்தகக் காட்சி போன்றவற்றை நடத்தி அயலகத் தமிழர்கள் மேல் அக்கறையுள்ள ஓர் அரசு இருக்கிறது என்பதை மெய்ப்பித்துள்ளார்.

எழுபது வயதை எட்டியிருக்கும் திரு. மு.க. ஸ்டாலின் அவர்கள் இன்னும் பல்லாண்டு நோய் நொடியின்றி வாழ்ந்து தமிழ் நாட்டு மக்களுக்கும் அயலகத் தமிழர்களுக்கும் சேவையாற்ற வேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

அன்புடன்

நா.ஆண்டியப்பன்
தலைவர்
சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகம்
27.2.23

உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகத்தின் இணை இயக்குநரும்

'குறள்நெறி' பொறுப்பாசிரியருமாகிய முனைவர் தமிழியலன் வாழ்த்து

# பேராசிரியர் தமிழ்இயலன்

## (எ) ச.தனசேகரன்

பி.இ., எம்.ஏ. (தமிழ்), எம்.ஏ. (ஆங்கிலம்), பிரவின் (இந்தி)

**தமிழ்நாட்டரசின் மாற்றுத்திறனாளிகள் நலவாரிய உறுப்பினர்**

இயக்குநர் / நான் ஓர் ஐஏஎஸ் - அகாடமி ● நிறுவனர், திறன் மேம்பாட்டு இயக்கம்

<u>முதன்மையரே நீடு வாழ்க!</u>

தளபதியின் தமிழ்ப்பணிகள்
வாழ்க வாழ்க!

அளப்பரியா அரும்பணிகள்
வாழ்க வாழ்க!

களப்பணியில் கலைஞராக
மாறி எங்கள்

விளக்கானாய்! விடியலேநீ
வாழ்க வாழ்க!

***

மாற்றுத்திறன் மாந்தர்களை
மாண்பாய் நோக்கும்

ஆற்றல்நிறை எம்தலைவா
வாழ்க! வாழ்க!

கூற்றமாகி சனாதனத்தின்
வேர றுத்தே

ஏற்றம் தந்தாய்! ஏந்தலேநீ
வாழ்க வாழ்க!

--பேரன்புடன்--

3362பி, ஏஇ பிளாக், எட்டாவது தெரு,
பத்தாம் முதன்மைச் சாலை, அண்ணா நகர், சென்னை – 600 040
9443019087 / 9841619087 / thamizhiyalan@gmai.com



**மாண்புமிகு தமிழக முதலமைச்சர் ஸ்டாலின் அவர்களுக்குப் பிறந்தநாள் வாழ்த்துக்கள்**

சோதனைகளைச் சாதனையாக்கிச் சரித்திரம் படைத்த சான்றோன்
கண்துஞ்சாது கடமையாற்றி மக்கள் மனங்கவர் மாண்புடையோன்
மகளிர் மனமுவந்து பாராட்டும்
கட்டணம் இல்லாப் பேருந்து பயணம் தந்த மாமனிதர்.
கல்லூரி மாணவர்கள் கவலை போக்கி
மாதந்தோறும் ரூபாய் ஆயிரம் வழங்கும் திட்டம்.
கல்வி நிலை உயரச்செய்யும் காலத்தால் அழியாத்திட்டம்
கல்விக் களஞ்சியம் பெருக்கும் திட்டம்
தமிழ்நாடு தலைநிமிரத் தரணி போற்றும் திட்டங்கள் வெல்க!
தமிழுயர்ந்தால் தாம் உயர்வோம் என்று
தளராமல் தமிழுக்குப் புரியும் திட்டங்கள்
தெவிட்டாத் தேன்தமிழாய் வாழ்க!
பூந்தளிர் மலராய் உன் புகழ் மணக்க வாழ்க!
சுடரொளியாகச் சுழலும் சூரியனே வாழ்க!
நல்லோர் போற்றும் நாயகனே வாழ்க!
எல்லா வளமும் எல்லா நலனும் பெற்று
நீடு வாழ்க!
என்று மனங்கனிந்து வாழ்த்தும்
அன்பன்
அரிமா த.கு. திவாகரன்







கலைஞரின் ஆசான் செந்தமிழ் அரிமா சி.இலக்குவனார் நிறுவிய ‘குறள்நெறி’ மாண்புமிகு முதல்வர் தளபதி அவர்களின் எழுபதாம் ஆண்டுப் பிறந்தநாள் பெருமங்கல வாழ்த்துச் சிறப்பிதழ் வெளியிடுவதில் பெருமிதம் கொள்கிறது. மிகக் குறுகிய காலத்தில் – கேட்டதுமே-வாழ்த்துப் பாக்களையும் வாழ்த்துரைகளையும் ஒரு கணமும் காலந்தாழ்த்தாமல் உடனே அனுப்பிய உலகத் தமிழர் பெருந்தகைகளுக்கு நன்றி. மின்னிதழ் தொடங்கி மூன்றாமாண்டில் அடியெடுத்துவைத்துள்ளோம்.

**இது ஐம்பத்துநான்காம் மின்னிதழ். ஆண்டுக் கட்டணம் வேண்டாம்.விளம்பரங்கள் வேண்டாம். எவ் வகைப் பொருளுதவியும் வேண்டாம்.இதழைப் படியுங்கள்;பகிர்ந்திடுங்கள்.**